உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாமாத்தூர்த் தலபுராணம்

## (தேவாரம் முதலியன)

ஆசிரியர்

மகான் - வண்ணச்சரபம்

திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்

எனவழங்கும்

**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**

திருவாமாத்தூர்.

அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்

**நூல் வெளியீட்டுக் குழுவின்**

**முதல் வெளியீடு**

திருவாமாத்தூர் கௌமார சபை பதிப்பு - 76.

15—12—1965

முதற் பதிப்பு: 1875
இரண்டாம் பதிப்பு: 1965.

**கிடைக்குமிடம்:–**

நிர்வாக அறங்காவலர்,
ஸ்ரீ அபிராமேசுவரர் தேவஸ்தானம்,
திருவாமாத்தூர், விழுப்புரம் P. O.



தலைவர்,
கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர், விழுப்புரம் P. O.

**பதிப்பித்தது:**
ராஜேஸ்வரி பிரஸ், விழுப்புரம்.

# உள்ளுறை.



திருவாமாத்தூர் - மகான் - வண்ணச்சரபம்

**அருள்மிகு. தண்டபாணி சுவாமிகள்**

தோற்றம்: 1839 திருவருட்பேறு: 1898

சிவமயம்.

# முன்னுரை.

வெண்பா

ஆவினினம் பூசைபுரி ஆமாத்தூர் வாழ்பரமன்
பூவிணைத்தாள் போற்றும் புராணமதை – நாவினல்
வாழ்த்து மவர்தம் மலர்ப்பாத பங்கயத்தில்
தாழ்த்துவது மேலோர் தலை.

**திருவாமாத்தூர்த் தலபுராணம்** என்னும் பெயரானது ஆறும் வேற்றுமைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய், இந்நூற்குக் காரணக்குறியாயிற்று. திருஆமாத்தூர் என்னும் தலத்தினது பழமையான சரிதத்தைக் கூறுங் காவிய நூல் என விரியும்.

'திரு' என்பது தெய்வத்தன்மையையும், ஆமாத்தூர் என்பது பசுக்களுக்குத் தாயாகிய சிவபிரான் அமரும்பதி என்னும் பொருளையும் விளக்கி நின்றன. இதனை வட மொழியில் "கோமாதுருபுரம்" என்பர்.

ஆதி காலத்தில் பசுக்கள் கொம்பில்லாமலே படைக்கப்பட்டிருந்தன. பின் இடைக்காலத்தில், திருவருள் இயக்கத்தால் அவற்றிற்கு மனக்கிளர்ச்சி தோன்றி, நந்திதேவரையும், காமதேனுவையும், கருதித்தவம் புரிந்தன. அத் தவமுதிர்ந்தபோது, அவ்விரண்டன்றி விட்டுணு புவனத்துப் பசுக்களும் வருந்தும்படி தவச்சூடு தாக்கியதால், அவையனைத்தும் பூவுலகிற் பசுக்களுக்கு எதிரில் விளங்கி, எம்மை நோக்கி நீவிர் ஏன் தவம் செய்தீர்களென வினவின. இவை சிங்கம், புலி முதலிய தீய மிருகங்கள். வந்தெதிர்ப்பினும், பாய்ந்து அவற்றை அழிக்கத்தக்க கொம்புகளிரண்டைப் பெற விழைந்தோம் என்றன. அம்மொழி கேட்ட அவை உங்களினமான எமக்கும் அப் பயன் உரியதே என்று கூறின. நந்திதேவர், சிவபெருமானை நோக்கி நாம் விரும்பித் தவம் புரிதல் கடன் என விதித்தனர். எல்லாப் பசுக்களுடனும், பம்பாநதிக்கரையிலுள்ள வன்னி வனத்திலிடத்து, அநாதியே முளைத்து விளங்கும் சுயம்புமூர்த்தியாகிய அபிராமேசுவரரைப் பணிந்தனர். பன்னாள் தவம்புரிந்து கொம்பு பெற்ற காரணத்தால் "ஆமாத்தூர்" பசுக்கட்குத் தாய் ஊர் என்னும் பேரமைந்ததென இந்தப் புராணத்தின் பசுக்கள் வழிபட்டது (பக். 48) என்ற பகுதியில் ஆசிரியர் கூறுகிறார்.

சைவ சமயக் குரவர் மூவர், திருப்பதிகங்களில் ஆமாத்தூர் என்றே வழங்கியுள்ளனர். பிந்திய காலத்தில், அருணகிரிநாத சுவாமிகள், அதனைத் திரித்துச் செய்யுள் இயைபு பற்றி "மாதை" என்று குறித்தனர். அதன்பின்னர் கலம்பக நூல் இயற்றிய இரட்டைப் புலவர்கள், இருவிதமும் கலந்து பாடியுள்ளனர். இந்தக் கோமாதுரு புரத்தின் சிறப்பானது மகா ஸ்காந்தத்தில் நாகர காண்டத்தில் ஏழு சருக்கங்களால் விளக்கப்பெற்றுள்ளது என்று நூல் முகப்பிற் கூறுவ தாலறியலாம்.

இந்தப் புராணத்தை வட மொழியிலிருந்து தமிழில் மொழி பெயர்த்துச், செய்யுள் வடிவாக இயற்றிய ஆசிரியர், மகான்-வண்ணச் சரபம், திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள் எனவழங்கும், அருள்மிகு **தண்டபாணி சுவாமிகளாவர்.** வடமொழி நூலிலிருந்து தமிழாக்கம் செய்ய உதவியவர், ஆமாத்தூருக்கு அண்மையிலுள்ள வெங்கந்தூர் - ஸ்ரீ கணபதி சாஸ்திரியவர்களாகும்.

சுவாமிகள் திருநெல்வேலியில் சைவவேளாண்மரபில் கலியுகம் 4941 ஆகிய (28—11—1839) விகாரி வருடத்தில் ஸ்ரீ செந்தியைகம் பிள்ளை என்னும் புண்ணிய சீலரது தவப் புதல்வராய் அவதரித்தவர். முருகனருட் செயலால் எட்டாவது வயதிலேயே அருந்தமிழ்க் கவிகள் பாடும் தகுதியமையப் பெற்றவர். சதுர்வேத சித்தாந்தத்தைச் சேர்ந்த சண்மதங்களையும், சுப்பிரமணியத்தின் சண்முகங்களாகக் கண்டு, சண்மத சமயாதீத பரமாகப் பல்லாயிரங் கவிகள் பாடியவர் குரு வடிவை நிட்களபரத்தின் கருணைச் சகளம் எனக்கொண்டு வழிபடும் கௌமார நிச்சயத்தில் ஈடுபட்டு, அருந்தவ நிட்டை இயற்றி விளங்கினர். பல தலங்கள் தெரிசித்து அரியபல செயல்களாற்றி, கலி ஐயாயிரமாகிய விளம்பி 5—7—1898-ம் வருடத்தில் இத் திருவாமாத்தூரில் அருட் சமாதிகொண்டு விளங்குகின்றனர். தமது ஐம்பத்திரெண்டாவது வயதில், இப் புராணத்தைத் தெய்வீகம் காரணமாகத் துவக்கிப் பாடியதாக வரலாற்றுப் பகுதி கூறுகிறது.

முதல் நூல் ஆதாரமுள்ள செய்திகளைப் பூருவகாண்டமென 700 கவிகளாலும், இடைக் காலத்தில் உண்டான செய்திகளை உத்தரகாண்டமென 300 கவிகளாலும், அதனீற்றில், தன்னநுபவப் படலமென்னும் பகுதியில், மாதைப் பெருமான் தமக்கருளிய குறிப்புகளை அமைத்தும் பாடி முடித்திருப்பது மிக்க நயமாயுள்ளதென்க

மற்றும், புராண ஆசிரியர்கள், சூத முனிவரின் கூற்ருக வைத்துக்கூறிச் சென்ருங்கு வரலாற்றுப் பகுதியில் 10-வது பாடலில்

எப்புரா ணமும்முன் சூதன் எழில்கொள்நே மியங்கா னத்தில்
ஒப்புர வுடைய மேலோர்க்(கு) ஓதல்என் றுரைக்கை தொன்மை,
அப்புகழ் இதற்கு முண்டுண்(டு), ஆதியாம் காந்தம் தன்னுட்
செப்புநா கரகாண் டத்தில் தெரிதரும் பாற்ற தாமே

எனக்கூறி நூல் தொடக்க முதல் முடிவுவரை தம் கருத்துக்களையும் இடை இடையே கூறிச்சென்றனர் உரிய இடங்களில் முக்கிய மான பகுதிகளை நன்கு தம் அநுபூதியோடிணைத்துப். பின்வரும் அறிஞர் கட்குதவும்படி விளக்கியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

நாட்டுச் சிறப்பு, நகரச்சிறப்புகளிலும், ஏனைய இடங்களிலும் மலை, கடல், நகர், வயல், வாவி, மகளிர் ஆடல், பாடல் முதலிய வற்றை வருணித்துக் கூறும் கற்பனைகளைத் தமது காவியத்தில் கொண்டாள்வதற்கு இவர் விரும்பிலர், கருணை, பத்தி, வைராகம் ஞானம், உபாசனை, சித்தி, முத்தி ஆதிய ஆன்மீக நலங்களைச் சமயம் நேர்ந்துழி எல்லாம் அழுந்த வற்புறுத்திக் கூறிப், பயில்வோர்க்கு நன் னிலை அமைவிப்பதே குறிப்பாகக் கொண்டிருந்தனர் என்பது வெள்ளிடைமலை. வரலாற்றுப் பகுதி பாடல் 11-ல்

முந்துகா வியத்தி னேரோர் முறைகொடே மொழிந்து ளார்,ஊன்
வெந்துணல், கள்ளுண் டாடல், மிகச்சொலல், சுருங்கக் கூறல்,
செந்துநோ விரித்தல், ஆதித் தீமையும், உவந்தார் பல்லோர்
இந்துநேர் நிறத்தி னுள்ளற்(கு) ஈந்தவா றிசைக்கின் றேனே.

என்றும், நாட்டுச்சிறப்பு 2-வது பாடலில்

அளவில் பற்பலர் புகல்மொழித் தொகை குறித் தறைந்திட்(டு)
இளமைச் செம்மறிப் பழிப்புறுப் புலவர்நேர் எழிலி.

என்றும் கூறியவாற்ருல் இவர் கொள்கை விளங்குவதாகும்.

நகரச் சிறப்பில் முன்னோர் கூருத பலவித நயங்கள் அமைந் துள்ளமை காணலாம். முதற்கவியில்:

முத்தமிழ்ப் பனுவற் கூட் டில் முதல்ஒலிய லந்தா திக்கே
ஒத்தது, தெய்வங் கட்குள் உமைகண வனையே போன்ற(து),
உத்தம நெறிகள் தம்முள் உயிர்கொலா விரதம் ஏய்ந்த(து),
அத்தமா தியமுச் சீரும் அவிர்தரு திருவா மாத்தூர்.

என்றும், 9-வது கவியில் வேதியர் வீதியில்,

சுக்கிரன் புரையும் சில்லோர் சொல்வழி சுழலாப் பண்பால்
மிக்கியல் கருணை தானும் விரதமா யிரமும் மேவும்

என்றும், 19-வது கவியில்

இந்திரப் பதம்வந் தாலும், யாதொர்சிற் றுயிரும் கொன்று
வெந்தினி(து) அருந்தொண் ணு(து)என் மெய்ம்மொழி விளம்பி
தந்தியன் னவரே வாழும் தனித்திரு வாமாத் தூர்ப்பால் [ஆர்க்கும்
மந்திர மாட கூட வளனெலாம் வகுப்ப அன்றே.

என்றும், 24-வது கவியில்

பயனில்சொல் கற்கின் றூர்க்கும், பாவநூல் படிக்கின் றூர்க்கும்,
வியனுறும் பொய்க்கே ஆர்வம் மிகக்கொள்வல் வினையு ளார்க்கும்
மயல்படும் வாதே நண்ணி மாதவம் இழக்கின் றூர்க்கும்,
புயல்மகிழ் திருவா மாத்தூர்ப் புலவர்பேர் இகலா வாரே.

என்றும், 29-வது கவியில்

பிரமனும் வியாசன் தானும், பிறந்தசங் கரனும், பேசும்
சிரமசித் தாந்தந் தேறிக் கிளரு(ம்)மா தவர்கொண் டாடும்
வரமலி பசுக்கள் வாழ்வால், வாட்படை அணிந்த வீரர்
பரமர்ஆ மாதை யூரிற் பற்பலர் வாழ்கின் றூரே.

என்றும், 30-வது கவியில்

கணிகையர்ப் புகழ்ந்திட்[டு] உண்மைக் கற்புடை மகளிர்த் தாழ்த்தல்
அணிஎனப் பகர்ந்திட் டாலும் ஆர்வமிக் குறும்சில் மாந்தர்
பணிலவார் செவியார் மாதைப் பதிவளம் அறியார், பத்தித்
துணிவொடு தொண்டு செய்யும் தூயவர் உணர்வார் மாதோ.

என்றும் கூறுவதால் ஆசிரியரின் கருத்தை நன்கு அறிய முடிகிறது.

தலச் சிறப்பு முதற்கவியில்,

பத்திநெறி தனிற்சென்று பரகதிவேட் கையராகிப் பாவம் நீங்கிச்
சித்திபெற முயல்வார்க்கே திருவாமாத் தூர்மகிமை சிறிது தோன்றும்
நித்தியராம் அழகேசர் நேர்வரினும் மனிதன்என நினைக்கும் மூடப்
புத்தியுளார்க்[கு] எத்தனைசொல் லிடினும்என்ன பயன்படுமோ
[பொய்என் பாரே.

என அதிகாரி, அநதிகாரி இலக்கணங்கள் விளக்கியும், தீர்த்தச் சிறப்பு, மூர்த்திச்சிறப்புகட்குப் பின், விருத்தசிலை என்ற திருவட்டப் பாறையானது, சத்தியத்தை நிறுவவும், அசத்தியத்தைப் போக்கவும் செய்யும் தகுதியினதென்னும் விவரத்தை விளக்கியதோடு, ஓர் உண்மைக் கதையுடன், தமது முன்னிலைக் காலத்தில் நடந்த ஒரு சிறு கதையையும் இணைத்து இனிது கூறி உள்ளார்.

பசுக்கள் வழிபட்ட பகுதி 4-வது கவியில், பசுக்கள் நந்தி தேவரை நோக்கி,

அவனும் அவனுக்கினிய தாம்தவஞ்செய் தடைதருநெறி யாம்அறியேம், எவண் உரைக்குதியோ அவண் நடக்கு தும்என்றியம்பின......

எனக்குறித்ததானது, உத்தமசீடர்கள், வேதாகம, புராண சித்தாந்த மான விதிகளைப் பொதுவாக வைத்து தமது குரவன் கூறும் திரு மொழிகளைச் சிறப்பாகப் பற்றி, நடப்பதென்ற தருமத்தைக் காட்டி நின்றது

11-வது கவியில் நந்திதேவர், விடையுருவாய் நின்று காமதேனுவை நோக்கி,

என்மிசை யிருந்தும் உமக்கெலாம் ஒளிக்கும்
இறைவனோர் திகழ்தரும் அளவும்
நன்மைசால் பூசை முயன்றிடச் சலியேல்!
நானென நீயிருந்(து) இவற்றை
இன்முகங் காட்டிப் புரத்தி! ............

என்பதாகக் குறித்த நயமானது சாத்திய நிலையடைந்த குரு, சாதக நிலையிலுள்ள தனது முதற் சீடனை நோக்கி, உபதேசிக்கும் திறத்தைக் காட்டி நிற்பதுடன், தன்பயன் மட்டும் கருதிப்பாடுபடுந் தன்மை, கொடுங்குணம், ஆதிய தீமைகூடா வென்பதையும்,

"யான்பெறுங் கோ(டு)இரண்டும் நோக்கினை கொலோ"

என்பது, எதிர்காலத்திற் பயன்பெறுதல் உறுதியாதலின், சலிப்பின்றி முயலுக என்ற நுட்பத்தையும் விளக்கி நின்றது அறிக.

அஃதன்றி, நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமுனை, என்னும் ஐந்து தெய்வப் பசுக்கள் பூசித்த சரிதம் கூறுகையில்,

மேவிஓர் வருடம் அசுரவே தியர்தாம்
வெட்குறக் கவாமயம் எனும்ஓர்
தாவில்சீர் வேள்வி முடித்(து)இது கருமச்
சழக்கென விடுத்(து)அரன் தனது
கோவிலுட் புகுந்து, பணிந்துபோற்[றி] இசைத்துக்
குளிர்மலர்ப் பூசைசெய்[து] உன்னி
ஆவியும், உடலும், தளர்தவம் ஐந்நான்(கு)
உகமுடித்(து) அறச்சலித் தனவே.

எனக் கூறியதால், கருமம், பத்தி, ஞானம் என்ற மூன்றனுள், கருமத் தினும் பக்தி சிறந்தவாறும், கருமமானது, தேவகருமம், அசுர கருமம்

என்றிரு பகுதியாதலும், பசுவேட்டல் ஆதியன அசுர கருமமெனவும், அப்பசுக்கள் செய்த வேள்வியானது ஊன் கலப்பில்லாது, அடை பொரி, கனிகளாதியவற்ருல் ஆக்கப்பெற்ற தேவ கருமம் எனவும் பின் அதையும் கடந்து பத்தியாற் பூசைபுரிந்து, தியான நிட்டை இயற்றின எனவும் எடுத்துக் கூறியது. அன்பர்களுக்குச் சாதக முறையை உணர்த்தியதாயிற்று

விநாயகர் வழிபட்ட பகுதியில், அநாதியாயுள்ள வேத நிச்சயத்திலிருந்து, பிரிந்துதோன்றிய மூர்த்தி இலக்கணமும், அருட்பேற்ருல் தவமுதிர்ந்தோர் பெறும் மூர்த்தி சாரூபமாகிய சொரூப சித்தி இலக்கணமும், அவர்கள் செய்யும் சிறப்புச் செயல்களும் விளக்கிக் கூறப் பட்டுள்ளன.

முருகப் பெருமான் வழிபட்ட பகுதியில் நாளடைவில் முருகன் கலைபெற்று விளங்கும் சொரூப சித்திமூர்த்திகளின் பாகுபாட்டை விளக்கிக் காட்டியும், அவர்கள் செய்யும் ஆடல்கள் பொல்லாரை அழித்து, நல்லோரைப் புரத்தல். என்பதைத் துலக்கியும், தனக்கு மனவெளி நிட்டையில் விளக்கிய உண்மையைக்கொண்டு, விட்டுணு கமலயோகி என்பாரொருவர் முருகன் கலை பெற்றுலகில் இயற்றிய செய்கைகளைப் பகர்ந்தும், முருகன் கலை இன்ன தன்மையதென்று குறித்தும், ஆராய்ந்தறிவோர்க்கு இன்ப ஊற்றுப்போல் இனிக்குமாறு இயற்றியுள்ளார்.

பிரிங்கி முனி தவம் செய்த பகுதியில், சிவம், சத்தி, வெவ்வேறெனக்கொள்ளும் பேத உணர்ச்சிக்கும், ஒன்ருகக் கண்டமையும் அபேத ஞானத்துக்கும், அதிகாரிகள் இன்னூர் என்பதும், அவ்வவர் பெறும் பேறுகள் இன்னவை என்பதும், அகத்திய முனிவர் முன்னிலையில் உணரும்படி சிவபிரான் அருளியவாறும், உபாசனை மார்க்கத்திலுள்ளவர்கட்கு மேனிலையேறுதற்குரிய பொன் ஏணியைப்போல் வனவாக அமைக்கப்பட்டுள்ளன.

மதங்க முனி முதலோர் வழிபட்ட பகுதியில் மதங்கன் என்னும் சொல்லுக்கு, அறுவகையான பொருளை. ஆறு பாடல்களில் விளக்கி அவர் வழிபடும்போது, ஏழு முனிவர்கள் சீடராய் வந்தடைந்ததும், பின்பு மதங்க முனிவர் நீங்கிப் பிரமனுலகை அடைந்ததும், அபிராமேசரைச் சீடர்கள் நியமத்துடன் பூசை செய்திருந்த சிறப்பும், சபர குமாரியாகி வந்து, முனிவர் தொண்டிற் சிறந்து நின்ற, சபரி என்னும்

தவப் பெண்ணின் சிறப்பும், செய்தபணிப் பெருமையும், காய சித்தி வலிமையும், அவள் பின்னொருநாள் முனிவர் சாபமேற்று மான்முக மானதும், உய்திபெற்ற விபரமும். முனிவர்கள் முத்தியும், சபரி அபிராமேசரை வழிபட்டதும் ஆகியவற்றை விளங்கக் கூறியுள்ளார்.

மகாகாளன் வழிபட்ட பகுதியில், அவன் உற்பத்தியும், சாத்தாவின் படைத்தலைவன் என்பதும், இந்திராணியின் துன்பம் நீங்கும் நிமித்தம் சூரனது தங்கையாகிய அசமுகியின் தோளைத் துணித்தது முதலிய பெருமையும், கலியுகத்தில் மூட மக்களால் இடப்படும் கொலைப்பூசை யேற்று, அவன் நீசத் தன்மையுற்றதும், அது தெரிந்த அரிகர புத்திரர் சினந்ததும், அவன் பணிந்து பரிகாரம் பெற்று, மாதையம்பதியடைந்து அழகேசனை வழிபட்டுத் தூய்மையானதும், உலகின்கண் அறிவில்லாத ஈனர்கள் செய்யும் உயிர்க்கொலையும், புலையுணவும் சிறிதுமில்லாமல் மாற்றி ஐயனாரிடம் அமைந்ததும் இந் நிகழ்ச்சிகள் முந்திய கலியில் நடந்தன என்ற விபரமும் கூறித் துலக்கியிருப்பது மிகவும் பொருத்தமாகும்.

ஷை 16-வது பாடலில்

"வெண்கோழி முட்டைத் தகர்ப்பார்கள் கருஇற்று வீழச்செய்தான்,
வண்கோழி ஆ(டு)னம் முதலாய கொலைசெய்யு மாபாதகர்க்
கண்கோடி யுடையான் எனக்கண்டு கொன்றான், கரும்பேய்எலாம்
எண்கோடி கோடுமுன்னை ஈனந் தவிர்ந்திட்ட, இகமுய்ந்ததே"

என்றும். 19-வது பாடலில்

"சகுணத் தியானப் பழக்கம் செயாதுள்ள தவர்பற்பலோர்
மிகுமற் கறுப்பன் தனைப்பேய்கள் தமையோதில் மெய்யன்றெனு
வெகுதர்க்கம் இடுவார்கள், அதைநம்ப வேண்டாம்என் மேலோர் [பொலான்
தகுதிப் பிழைப்பட்ச மாநின்றும் விட்டான்பல் தரம்வந்ததே."

என்றும் சொல்லியுள்ள அருமையும், உரிமையும் அன்பர்களை இன்புற வைப்பனவாகும்.

இராமபிரான் வழிபட்ட பகுதியில், இராமபிரான் அவதாரம் முதலியவற்றைத் தொகுத்து 13 கவிகளாற் கூறியபின், தாம் கூறப் போகின்ற செய்திக்கு ஆதாரம் காட்டி அகத்திய முனிவர் இராமனுக்கு உபதேசித்து வில்லொன்றைக் கொடுக்கும்போது

" இத் திவ்வியவில் உனையனைய ராமன்முன்னாள்
கொண்டதென்றும் செப்பினனே "

என்று 18-வது கவியிற் குறித்துள்ளதை நோக்குக அம்முனிவரது நீண்டகால அநுபவமும், பெருமையும், இராமாவதாரம் பல என்ற விபரமும் அறியக் கிடக்கின்றன

"என்னுரிமைத் தேயத்தோர் பம்பைநதி
உளததன்பால் ஏகி, யார்க்கும்
முன்னுதித்தான் தனைப்பூசித் தவம்செறற்காம்
வரம்பெறலின் முடுகென் றனே"

என்று கூறிய 19-வது கவியால் தமிழ்நாட்டிலுள்ள பம்பைநதியாகிய இத்தலத்து நதியே கூறப்பட்டவாறும், அவ்வாறே சென்ற இராமர், இலக்குமணர் இருவரும், அங்குள்ள ஓர் ஆலமரத்தினடியில் தங்கி அநுமாரைச் சந்தித்து உரிமை கொண்டதும், அப்போது மான்முகம் கொண்டு சிவபிரானை வழிபட்டிருந்த சபரி என்பாள், அவர்களைக் கண்டவுடன் சாபம் நீங்கித் தன்முகம் பெற்றதும், அவர்களுடன் அபிராமேசராகிய சுயம்பு லிங்கத்தின் அருகெய்த, அங்கொரு பெருஞ் சோதி தோற்றலும், அதிற் சபரி கலந்து முத்தியுற்றவாறும், பின், இராமர் அபிராமரைப் பூசித்ததும், வரம் பெற்றுச் சென்றதும், இராவணனை அழித்துச் சீதையாருடன் மீண்டு மாதையம்பதி சேர்ந்து இரண்டாம் முறையாக அழகேசரைப் வழிபட்டுக்கொண்டு சிலகாலம் தங்கி ஆலயப்பணி, உற்சவ மூர்த்தி நிறுவுதல், முதலியன புரிந்து களித்ததும் கூறப்பட்டுள்ளது. ஐந்துமுக அநுமார் சரிதமும், உரையாடலும் கூறி, 95-வது பாடலில்

" உலகினுக் கிடர்செய் கின்றோர் ஒருங்[கு] இரா வணன்தன் கூறே
இலகதற் கிதம்செய் கின்றோர் இராமனங் கிசத்தினோரே"

என்றும், 98-வது பாடலில்

" மயிலிரா வணனும், நூறு வதனரா வணனும் போலப்
பயில்பலர் இருந்தா ரென்று பாருல குரைப்ப துண்டு"

என்றும், 99-வது பாடலில்

" குறைபடு தவமுள் ளார்கள் கொடுமைசெய் திடுவா ராகில்
நிறையருள் பெற்றோர் தம்மால் நீக்குதல் வழக்க மே,யான்
அறையுமவ் விருவர் தாமும் அசுரர்க்கோ அமரர் கோவாம்
மறைமுத லியபன் னூல்கள் வகுத்திடப் படுவார் அன்றே "

என்றும், உண்மை விளக்கம் காட்டி முடித்துள்ள விசேடம் அளவிலாச் சிறப்பைத் தெரிவித்து நிற்கிறது.

தெளிவு - ஞானப் பகுதியில், இராமபிரான் அழகேசரை வழிபட்டெழுந்தசமயம், ஆங்குக் குழுமியிருந்த தவ முனிவர்கள், தெய்வ நிச்சயத்தைப்பற்றி ஐயுற்று வினவியவற்றிற்கு, இராமனாகிய அவர் விடைகூறத் தொடங்குந்தருணம், முனிவர்கள், "நீ, தசரத குமாரனாக இருந்து சொல்வது முறையன்றாகும், உனது உண்மை வடிவுடனின்று கூறுக" என்றலும், சங்கு, சக்கர, அபய வரதங்கள் அமைந்த நாற்புயங்களும், பொன்னனலான உடையும், சூரிய ஒளி போன்று துலங்கும் திரு முடியும் தோன்றக், கருட வாகனத்தில் ஆகாயத்தில் நின்று, தெளிவு பிறத்தற்கேற்ற உண்மைகளைப் பல வாறாக எடுத்துக் கூறி, சிவனென்றும், விட்டுணு என்றும் இரண்டுபட எண்ணுதல் கூடாதென்றும், ஒரே பொருளின் காரண, காரிய முறை யாகுமென்றும், விளக்கியருளியவாறு கூறப்பட்டுள்ளது.

11-வது பாடலில்,

"யாமும்அவன் றானும்அயல் அல்லம் என்றே
எண்ணிறந்த பலவேதம் இசைக்கு மேனும்
தீமுகவன் கணர்அறிய மாட்டார் அந்தோ!
சேகம்வேறு யான் வேறுஎனக்கச் சிவன்வே [றென்னும்
பாமுழக்கம் பலசெய்து வாதமிட்டுப்
பகலிரவா உள்ளமிகப் பதைத்து வாடிக்
கோமுகமும் இலிங்கமுமா நின்ற உண்மை
குறியாராய்ப் பவக்கடலிற் குலைவார் அன்றே."

என்பதுபோல்வனவாய் விளக்கியதை நூலிற்காண்க.

இப்புராணத்தை இயற்ற இவர் துவக்கிய மறுதினத்தில், திருமால் இவரது மனவெளியில் வைணவ வேதிய வடிவாகத் துலங்கி தெளிவு - (ஞானப்பகுதி) என்னும் இதன் விசேட நுட்பங்களைத் தெரிவித்தனரென்னும் செய்தியை முதற் கவியில் வைத்துக் கலை மகளின் திருவடிகளைச் சான்றாகக் கூறியுள்ளதானது, தமது கற்பிதக் கதை என்று ஏனையர் விபரீதமாகக் கருதாதிருத்தற் பொருட்டென்க. அல்லாமலும், அடுத்த கவியில், உரியரல்லாதார இலக்கணம் விளக்கி

தக்கமறு சமரசப்பே ரானந் தத்தால்
தண்ணருட்சீர் பொருந்தாப்பொய்த் தவத்தி னோர்க்கும்
இக்கவியிப் பிரபந்தத் தினுக்காம் என்னும்
இயல்பறியாப் புன்புலமை யிசைந்துள் ளார்க்கும்
கைக்கனக மேதுணைஎன் றுவக்கின் றார்க்கும்
கவினுமாத் தூர்ப்பெருமை கழறி னலும்
மிக்கதெளி வாமிதுசொற் றிடலா கா(து)என்
விதிவிதித்தார் வியாசன்முதல் மேலோர் தாமே.

32-வது ஈற்றுக்கவியின் மூன்றும் அடியில்

''செவ்வரிக்கட் கலைமகளைக் கொஞ்ச மேனும்
தெரிந்தவர்க்கே என்கவிகள் தித்திப் பாகும் ''

என்றும் உறுதிகூறியது, மற்றவர்களை இகழ்ந்து கூறிய பொருளன்று எழுத்தின் வரி வடிவமும், சொல்லின் பொருளுமாய் தெளிந்து மகிழ் வோரைக் குறிப்பாயொதுக்கி, அவற்றின் உட்பொருளாய் வியாபித்து, ஆன்மாக்களின் அறிவுக்கு முன்னிலையாய்க் கலந்துநின்று, ஆனந்த அநுபவத்தையளிக்கும் அருட் சத்தியாகிய, அவளது கருணைத் திறத்தைக் கண்ட, அன்பர்களுடைய உள்ளத்தின் தகுதியைச் சிறப்பித்ததாகும்.

இம் மட்டில் பூருவ காண்டத்தை முடித்து, உத்தர காண்டம் துவக்கி, முதலில் இலக்குமி, சரசுவதி வழிபட்ட பகுதியில் அமைத்துள்ள செய்திகள், அருமையானதாகவும் விவகார நுட்பங்களை உள்ளடக்கியதாகவும் உள்ளன.

தக்கன் யாகத்தில், கலைமகளுக்கு, நாசிபங்கம் நேர்ந்தசெய்தி வெளிப்படை, பின் பலகாலம் கடந்துழி, அவளது மாமியான திரு மகளுக்கும், தென்மொழிச் சங்கரர் என்பாரின் தவ முயற்சியின் காரணமாக. அவ் வீரபத்திரரால் மூக்கு அறுபட்டவாறும், பின் அவ் இருவரும் மிகவருந்தி, இறுதியில் உமாதேவியின் ஆணைப்படி இப்பதி வந்து இறைவனை வழிபட்டுப் பயன் பெற்றதும், அபிராமேசர் வரங் கொடுத்த விபரமும் விளக்கி, நீதி, கருணையின் தகுதியைப் பெரிதும் விளக்கியுள்ளார் *

திருநாவுக்கரசு சுவாமிகள் அருள்பெற்ற பகுதியில் அவர் இப்பூவுலகில் அவதாரம் செய்தமைக்குரிய காரணத்தையும். இராவணன் கயிலைமலையைப் பெயர்த்த நிகழ்ச்சியையும், அவர் தமது தேவாரப் பாக்களில் கூறியுள்ள விபரத்தையும் விளக்கியிருப்பதோடு அபிராமேசர் அவர் கனவில் தோன்றி, அருளிய செய்தியை 12-ம் கவியில்

வந்தவனுக்(கு) அத்தினமே மணிகண்டத்(து) அழகேசர்
சிந்தனையி னிடைத்தோன்றித் திருவதிகைச் சிவனேநாம்
சொந்தமென எண்ணுதி!சொற் றுதிக்கடன் தீர்த்(து) உடன்போகேல்!
செந்தமிழ்த்தொண்(டு) உழவாரத் திருப்பணியோ(டு) இயற்றென்றுன்

---

* இதுவரை சுமார் 25-ஆண்டுகட்குமுன் திருவருட்பேறெய்திய நூலாசிரியர் குமாரர் சந்தப்புலமை - தவத்திரு. தி. மு. செந்திநாயக அடிகள் அவர்களால் எழுதி வைக்கப்பெற்றது.

எனவும் 20-ம் கவியில், அப்பர் பெருமானுடனிருந்த சிவனடியார் எண்ணுயிரவர் சமண முனிவரும் எண்ணுயிரவர் ஆவர், கழுவேறி இறந்த சமணர் யாவரும், இவர் சமண் சமயம் விட்டுச் சைவ சமயம் சேர்ந்ததினுல், அவர்களும் சிவனடியாராகி, இவருடன் இருந்ததுபோ லாயிற்று என்று, இவர் கூறியிருப்பது சிறப்பாக உள்ளமை காண்க.

திருஞான சம்பந்தர் அருள்பெற்ற பகுதியில் சம்பந்தர் அடியார் பலருடன் ஆமாத்தூருக்கு எழுந்தருளி, பம்பா நதியில் நீராடி, வழிபட்டுப் பாடியபின், காலங்கடந்த நிலையில் அடியார்கள் பசியால் வாடினர். அதுகண்ட சம்பந்தப்பெருமான் “குன்றவார்” என்று தொடங்கும் பதிகம் பாடியபோது அதில் “தொண்டர் வந்து” என்ற 5-வது பாடல் கூறியதும், வேண்டிய உணவு வகைகள் இறையருளாற் கிடைக்கப்பெற்றன உண்டபின் அபிராமப்பெருமான் பெருமைகளைத் ‘துன்னம் பெய்...’ என்ற பதிகமூலம் பாடி, அவரை வாழ்த்தாத வாய், கண், வாழ்க்கை முதலியன பயனில்லை என்பதைக் குறிப்பிட்டதாக இவர் 19 முதல் 23 கவிகள்வரை விவரித்திருப்பது மிக்க நயமாயுள்ளது.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருள்பெற்ற பகுதியில் பெரிய புராணத்தில் சுந்தரர் வரலாற்றில் கூறப் பெருத சில விஷயங்களைக் கூறுகின்றுர். சுந்தரர் வருகையறிந்த, மாதைப் பரமன் பொன் கேட்பான் என எண்ணி, ஆலயத்தினின்று வெளிப்போந்தார் என்று பூதம் கூறிய மொழியைக் கேட்டு. அவர் இருக்குமிடம் தேடிச்சென்று கண்டபோது, இறைவன் இவர்பால் விளம்புவதாக வரும் 10-வது பாடலில் எங்கும் நீக்கமற நிறைகின்ற பரம்பொருளாகவுள்ளோம் என்று கூறுகின்ற கருத்து, கற்பார் இதயம் களிக்க அமைத்துள்ள தாகும். மேலும், சுந்தரர் விருப்பத்தை நிறைவு செய்யும் வகையில், இவ்வூர் தல விருட்சமான வன்னி மரத்தின் காய்களைத், தமது நான்கு கைகளாலும் அள்ளி எடுத்து “முன்தானையிற் கொள்” எனக் கொடுத்தபோது அவை பொன்னுக மிளிர்ந்தமைகண்டு மனம் பூரிப்பு அடைந்து வேண்டுவார் வேண்டியபடி அருளும் திருவுளம் கொண்ட சிறப்பை உணராது இவ்வாறு சென்றது என் இயற்கையாயிற்று என்று கூறிப் “பொன்னவன் பொன்னவன் ......” என்று பாடினுர் என்பதை 13-ம் கவியில் வியந்து கூறியிருப்பது காண்க.

இரட்டைப் புலவர் முத்தியுற்ற பகுதி இத் தலத்துக்கே உரிய நிகழ்ச்சிபற்றியது. கச்சியிற் பனுவல் பாடி இறைவனிடம் முத்தி

வேட்டனர். ஆமாத்தூரிற் பெறுக என்ற ஆணைப்படி இவ்வூர்க் கலம்ப நூலை இருவருமாகப்பாடி வந்தனர் அக்காலத்து அரசியல் புரிந்த அச்சுத தேவப் பல்லவன் உரியவாறு அந்நூலை அரங்கேற்றுவித்தான் பல்விதச் சிறப்பினை அறிந்து பலரும் வியந்தனர். அந் நூலின் ஓர் பாடலில் இயல்பாக ஊரின் மேல்புறமாயும், கோயிலைக் கீழ்க்கரையில் கொண்டதாயும், இடது பக்கமாயும் ஓடுகின்ற பம்பை நதியை, இவர்கள் மேற்கரையில் கோயில் உடையதாயும். வலதுபுறம் ஓடுவதாயும் பாடினர். இவர்கள் நதியின் இயல்பை அறியார். உள்ளம் வருந்தி இறைவனை வேண்டினர். இரவு பெருமழை பெய்து இவர்கள் பாட்டின்படி சென்றது. அரசன் வியந்தான். பின் முத்திபெற்றனர் என்ற வரலாறு தெய்வீகத்தை விளக்கிய முறையில் இன்றுமுள்ள காட்சி வியப்பூட்டவல்லதாகும்.

சதானந்தர் வரலாற்றில் அம்மறையவரது உள்ளப் பண்பை விளக்கி உயிர்கள்பால் அவர் கொண்ட இரக்கத்தையும், பரமன்பாற் கூறி அவர்களை எமன் வசப்பட்ட தீமையை விலக்கி இன்ப வாழ்வில் அமைத்த கருணையையும் கூறித் தன் கருத்தை விளக்கினர்.

பின் அரசன் ஆளுகைப் பகுதியில் அபிராமேசர்க்காக பல பணிகளைப் பலர் இயற்றியதுமுதல் தற்போதுள்ள நிலைவரையும் கூறினர். ஆங்கிலேய அரசு எதுவரை நீளுமோ என்று கூறியவாறு அந்த அரசு மாறிய நிலையை நாம் இன்று காண்கிறோம்.

தன் அநுபவம் என்ற பகுதியில் தம்பால் பெருமான் செய்த அருளாடல்களும், பிறவும் தெள்ளிதின் விளக்கியிருத்தல் எப் புராணத்து மில்லாத தொன்ருகும். இந் நூலன்றி திருவாமாத்தூர்ப் பெருமான்மீது ஆயிரம் ஆயிரமாகவும் சிலேடை, திரிபு. யமகம் என நூறு நூருகவும், பதிகங்களும், கீர்த்தனைகளுமாகப் பல பாடினர்.

இவர் எல்லா உயிர்களையும்விட, பசுக்களின் பாதுகாப்பில் மிகக் கருத்துடையவராயிருந்தார். அதற்கேற்றபடி திருப்புகலூரில் இவர் இறைவனைப்பாடி அருள்வழங்காமை கருதியிருந்தனர். அப்போது அபிராமேசர் மன நிட்டையில் விளங்கிப் பசுக்கட்குக் கொம்பு தந்தது போன்ற சிறப்பினைக் கூறி ஆமாத்தூர் வருவதற்குரி விருப்பை விளைவித்தனர். அதன்பின்வந்து அப்பேறு பெருதவரை இவ் வூரின் எல்லை தாண்டுவதில்லை என்ற நியதியுடன் தங்கித் தவம்புரிந்தனர். அக்கால் நிகழ்ச்சிகள்பல பெருமான் தன்னை இவ்வூர் வரும்படி விருப்புண்டாக்கியதை பாயிரப் பாடலான 'கயிலையும் வெறுத்து...'

என்றபாடல் இனிது கூறும். இவ்வரிய நூலைப்பாடி முடித்த பின் பதித்து முற்காலத்தில் முதல் வெளியீடு செய்துள்ளனர் அப்பிரதிகள் தற்போது கிடையாதாயிற்று. ஆகவே இரண்டாம் பதிப்பாகப் பதித்து இஞ்ஞான்று வெளிவருகின்றது. சந்தி பிரித்தும், சிறு குறிப்புகளும் அரும்பத விளக்கங்களும் அமைத்து இந் நூல் விளங்குவதால் பொருள்காண வாய்ப்பாகும்.

இந் நூலை வெளியிட விரும்பி - முன்னுரையிற் பெரும் பகுதி, பதிப்புப்பாயிரத்தில் பதிப்பாகும் நிகழ்ச்சி தவிர முற்பகுதி ஆதியவற்றைச் சுமார் 30 ஆண்டுகட்குமுன்பே நூலாசிரியரான சுவாமிகள் குமாரரும், மாணவரும், அடியேனது பாட்டனருமாகிய சந்தப்புலமை தவத்திரு. **தி. மு. செந்திநாயக அடிகள்** எழுதிவைத்தனர். அவர்கள் பெருவிருப்பு நிறைவெய்தத் திருவருளும், அன்பர்கள் பெரு முயற்சியும் துணைசெய்தது. எனவே **ஸ்ரீ அபிராமேசுவரர் ஆலயத்திலிருந்தும்** பேரன்பர்கள் சிலரது பொருளுதவியும் சேர்ந்து இந்நூல் வெளியிடப் பெறுகிறது.

ஷை ஆலயத்து அறங்காவலர்கள் ஆதரவினாலும், விழுப்புரம் நகராட்சி மன்றத் தலைவர், டாக்டர் - **து. தியாகராசன்** அவர்களின் முயற்சியாலும், அருள்மிகு. தண்டபாணிசுவாமிகள் நூல் வெளியீட்டுக்குழுவின் முதல் வெளியீடாகத் 'திருவாமாத்தூர்த் தலபுராணம்' வெளி வருவது மிகச் சிறப்பாகும். சென்னை அறநிலையப் பாதுகாப்புத் துறைத்தலைவர் திரு **M. S. சாரங்கபாணி முதலியார் B. A., B. L.,** அவர்கள், அருள்மொழி அரசு - திருமுருக - **கிருபானந்த வாரியார் சுவாமிகள்** அவர்கள், சிரவணபுரம் கௌமார மடாலயத் தலைவர் தவத்திரு. **சுந்தர சுவாமிகள்** அவர்கள், பேரூர் - சாந்தலிங்க சுவாமிகள் மடாலயத்தலைவர் தவத்திரு, **இராமசாமிஅடிகள்** அவர்கள் சென்னை தென்னிந்திய சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகத் தலைவர் **வ. சுப்பையா பிள்ளை** அவர்கள் ஆகியோர் உடனிருந்து அருள்மிகு **தண்டபாணி சுவாமிகள் 126-வது 'திரு அவதார விழாவைக்'** கொண்டாடியபோது வெளியிட்டுச் சிறப்பித்தார்கள் இவ் வெளியீட்டை நடத்திக்கொடுத்த பெரியோர்கட்கும், பொருளுதவிசெய்த அன்பர்கட்கும், பதித்துதவிய விழுப்புரம் "இராஜேஸ்வரி அச்சகத்தினருக்கும்" என்றும் எம நன்றியுரியதாகுக. வணக்கம்.

அன்பன்,

**தி. மு. சங்கரலிங்கம்,**

தமிழாசிரியர், கௌமார மடாலயம்.

திருவாமாத்தூர்.
விழுப்புரம் P. O.
15–12–65

சிவமயம்.

# நன்றியுரை.

திருவாமாத்தூர்த் தலபுராணம் என்ற இந்த அரியநூலை இயற்றி அருளிய ஆசிரியர் மகான் – வண்ணச்சரபம் – அருள்மிகு. தண்டபாணி சுவாமிகளாவர். அவர்கள் இதை அபிராமேஸ்வரர் திருவருள் உணர்த்தியவாறு வட மொழி நூலிலிருந்து தமிழில் பாடினர் என்பதை அறிகின்றோம்.

இரண்டாம் பதிப்பு இயற்ற விரும்பி முன்னுரை, பதிப்புப்பாயிரம் இவற்றை 25 ஆண்டுகட்குமுன்பே தம் ஆர்வமிகுதியால் ஷை சுவாமிகள் மகனும், மாணவருமான சந்தப்புலமை தவத்திரு. செந்தியைக அடிகள் அவர்கள் எழுதி வைத்தனர். அவர்கள் நல்லெண்ணமும், முயற்சியும் திருவருள் தூண்டுதலால் இன்று இரண்டாம் பதிப்பாகப் பதித்து வெளியாகிறது.

அன்றியும், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோரின் ஐந்து தேவாரப் பதிகங்களும், அருணகிரிநாதர் திருப்புகழ் நான்கும், இரட்டைப் புலவர்கள் கலம்பகப் பாடலிற் சிலவும் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் பாடிய வாரத் திருப்புகழும், நவரத்தினத் திருப்புகழில் இரண்டும், கல்வெட்டும் இத்துடன் சேர்த்துப் பதிக்கப் பெற்றுள்ளன.

குறிப்புரை, அரும்பத விளக்கம் எழுதிய ஷை சுவாமிகள் பெயரர் திரு. தி. செ. முருகதாச ஐயா அவர்கட்கும், ஒப்பு நோக்குதல் முதலியவற்றில் ஆர்வத்துடன் பணியாற்றிய அவரது குமாரர் வித்துவான் திரு. தி. மு. சங்கரலிங்கம் அவர்கட்கும், இந்நூல் பதிக்க மனமுவந்து நன்கொடை வழங்கிய அன்பர்கட்கும், அறநிலைய நிதியிலிருந்து நிதி வழங்கிய அறநிலைய ஆணையாளர் அவர்கட்கும், இதைப்படித்துப் பொருளறிந்து நூலின் அருமையையும், அபிராமேசப் பெருமான் அருட்சிறப்பையும் அறியும் பேரன்பர்கள் அனைவருக்கும் ஸ்ரீ முத்தாம்பிகை சமேத அபிராமேசுவரர் திருவருள் நிறையுமாறு வேண்டுகிறேன்.

ஆமாத்தூர் அம்மான் அடிமை,
**M. D. இராமசாமி ரெட்டியார்,**
நிர்வாக அறங்காவலர்,
15—12—65.

அபிராமேசுவரர் தேவஸ்தானம்
திருவாமாத்தூர்.
விசுவாவசு ஹு கார்த்திகைமீ 30உ

# அணிந்துரை.

திரு. M.S. **சாரங்கபாணி முதலியார்** B.A. B.L. அவர்கள்
ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை சென்னை-34.

சென்ற பத்தொன்பதாம் நூற்றாண்டு பல சிறந்த தமிழ்ப் பெருஞ்சான்றோர்களும், அரும்பெரும் கவிஞர்களும் வாழ்ந்திருந்த மாட்சிமையுடையது. வடலூர் **இராமலிங்க அடிகள்** மகாவித்வான் **மீனாட்சிசுந்தரம் பிள்ளை**, யாழ்ப்பாணம் ஸ்ரீலஸ்ரீ **ஆறுமுக நாவலர்** போன்ற பல பெருஞ் சான்றோர்கள் தமிழகத்தில் வாழ்ந்திருந்தனர். அத்தகையவர்கள் பலருள் மகான் - வண்ணச்சரபம் அருள்மிகு. **தண்டபாணிசுவாமிகள்** (கி.பி. 1839-1898) அவர்களும்ஒருவராவர். திருப்புகழ்ச் சுவாமிகள் எனவும் முருகதாச சுவாமிகள் எனவும் இவர் போற்றப்படுவர்.

இப்பெரியார் முருகப்பெருமானிடத்தில் எல்லையற்ற பேரன்புடையவர். முருகனையே தம் வழிபடு தெய்வமாகக்கொண்டு வாழ்ந்துவந்தவர் என்றாலும் இவர், சமய சமரச உள்ளம் கொண்ட சான்றோராகத்திகழ்ந்துவந்தார். **பழனித் திருவாயிரம், திருவரங்கத் திருவாயிரம், தில்லைத்திருவாயிரம்** போன்ற இவர் தம் அரும்பெரும் நூல்கள் பத்திச் சிறப்பினையும், பண்பாட்டு மேன்மையினையும் விளக்குவனவாகும். இவர் பாடியருளிய நூல்கள் பற்பல. அவற்றுள் **புலவர் புராணம்** என்பது பண்டைத் தமிழ்ப்பெருங் கவிஞர்களின் வாழ்க்கை வரலாற்றைச் சுவைமிக விளக்கும் சிறந்த இலக்கியப் பெருநூலாகும். அதனால் இந்நூல், தமிழறிஞர்கள் அனைவராலும் சிறப்பாகப் போற்றப்பெற்று வருகின்றது. சுவாமிகள் தம்முடைய வரலாற்றைக் **குருபரதத்துவம்** என்னும் பெயரில் அநுபூதியுடன் கலந்த ஓர் அழகிய இலக்கிய நூலாக இயற்றி யிருக்கின்றார்கள். அந்நூலின்வாயிலாகச் சென்ற நூற்றாண்டின் தமிழக நிலையினையும், தமிழ்ப்பெரும் புலவர்கள் பலரைப் பற்றிய செய்திகளையும் அறிந்து பயன்பெற முடிகிறது.

இங்ஙனம் சுவாமிகள் இயற்றிய நூல்கள் பலவற்றில் **திருவாமாத்தூர்த் தலபுராணம்** என்னும்நூலும் சிறந்ததொன்றாகும். இந்நூல் இரண்டு காண்டங்களாக, ஆயிரம் பாடல்கள் கொண்டது. நாடு, நகரம், தலம், தீர்த்தம், மூர்த்தி, திருவட்டப்பாறை ஆகியவற்றின் சிறப்பைச் சுவாமிகள் முதல் ஆறு பகுதிகளில் விளக்கியுள்ளார். பின்னர் திருவாமாத்தூர் என்னும் பெயருக்கேற்பப்

பசுக்களும், அம்பிகை, விநாயகர், முருகன், நாரதர், பிருங்கி, மதங்கர், நான்முகன், பன்னிருசூரியர், அட்டவசுக்கள், இராமபிரான், கலைமகள், திருமகள், முதலினோரும் வழிபட்ட வரலாறுகளை விளக்கி யுள்ளார். அடுத்து **அப்பர், சம்பந்தர், சுந்தரர், இரட்டையர்** முதலியவர்கள் வழிபட்டு மகிழ்ந்த செய்திகளும் பிறவும் இதன்கண் அழகுறக் கவிதைச்சுவை அமைய விளக்கப்பெற்றுள்ளன.

திருவாமாத்தூர், தமிழ்ப்பாடல்களில் ஒலியல் அந்தாதியையும் தெய்வங்களுள் சிவபிரானையும், விரதங்களில் கொல்லா விரதமும் போன்ற தனிச்சிறப்புடையது என்கிறார்.

முத்தமிழ்ப் பனுவற் கூட்டில் முதல்ஒலிய லந்தா திக்கே
ஒத்தது, தெய்வங் கட்குள் உமைகண வனையே போன்ற(து)
உத்தம நெறிகள் தம்முள் உயிர்கொலா விரதம் ஏய்த்த(து)
அத்தமா தியமுச் சீரும் அவிர்தரு திருவா மாத்தூர்

திருவாமாத்தூர் புலவர்கள் பலர் வாழ்கின்ற புனித நகரம். அவர்கள் பயனில் சொல்கற்போர் பாவநூல் படிப்போர் பொய்மை யையே விரும்பும் தீவினையோர், வீண்வாதம் செய்தலையே மேற் கொண்டு வாணாளை வீணாக்குவோர் முதலியவர்களுக்கு மாறுபட்டு நிற்கும் சிறப்புடையவர்கள்.

பயனில் சொல் கற்கின் றார்க்கும் பாவநூல் படிக்கின் றார்க்கும்
வியனுறும் பொய்க்கே ஆர்வம் மிகக்கொள்வல் வினையு ளார்க்கும்
மயல்படும் வாதே நண்ணி மாதவம் இழக்கின் றார்க்கும்
புயல்மகிழ் திருவா மாத்தூர்ப் புலவர்பேர் இகலா வாரே.

என்றெல்லாம் இதன்கண் சுவைமிகுந்த பலசிறந்த பாடல்கள் 'தொட்டனைத்தூறும் மணற்கேணிபோலக் கற்றனைத்தூறும் அறிவுக்கு' இன்பம் பயப்பனவாக அமைந்துள்ளன.

இத்தகைய சிறந்த தலபுராணத்தினைத் **திருவாமாத்தூர்க் கௌமாரசபையின் சார்பில் அருள்மிகு-தண்டபாணி சுவாமிகள் அவதார விழா-நூல்வெளியீட்டுக்குழுவினரால் வெளியிட்டிருப்பது** மிகவும் பாராட்டி மகிழத்தக்க செயலாகும். செய்யுட்களைப் பதம் பிரித்தும், குறிப்புரை வரைந்தும், திருத்தமாகப் பதிப்பித்திருப்பது படிப்பவர்கட்குப் பெரிதும் உதவும். இந்நூல் வெளியீட்டுக்கு உதவிய அன்பர்கள் அனைவருக்கும் நம் நன்றி உரியது. இதனை அன்பர்கள் வாங்கிப்படித்துப் பயன் பெறுவார்களாக.

சென்னை
26—7—66 } (ஒ-ம்) **மா. சே. சாரங்கபாணி.**

உ

குருவே துணை.

# சாத்துக் கவிகள்.

திருவாமாத்தூர்
திரு. **கிருட்டிண ஐயங்கார்** அவர்கள்
இயற்றியது.

**வெண்பா**

கோவுமுற்றும் கொம்புமுன்னுள் கொள்ளநல்கி ஆமாத்தூர்
மேவுபரன் காதை விளம்பினன் – காவுடைய
அண்டரூர் மெச்சும் அழகியநெல் வேலிவளர்
தண்டபா ணிச்சரபம் தான்

**இரட்டையாசிரிய விருத்தம்.**

திருமாதை யூரினிற் றண்டபா ணிப்பெயர்ச்
செந்தமிழ்ச் சரபம் வந்தும்
தீனரட்ச கனை அபிராமன் மான்மியம்
தெரிதர விரும்பு பல்லோர்
அருளால் வெளிப்படுதல் கருதிமுயல் வுறுநாளில்
அனைவரும் வியப்பெய்தவே
அந்தரின னதுகனவில் ஒருசிறிய கன்னியாய்
அவனால் அதைச்செய் எனலும்
கரவிட மிலாமல் இவள் அவளெனத் தேறினேன்
ககனத்தின் வழியேகினாள்
கண்விழித் ததிவிரைவில் அவனுடன் அவ் வுண்மை
கழறினேன், உவகைமலிவாய்ப் [யைக்
பரமன்விளை யாடலங்(கு) ஒன்றியல்வ தும்சொலிப்
பழுதறு புராண மாகப்
பாடிநல் கினன்உலகில் வாழ்வீர்!எ நாளும்மெய்ப்
பத்திசெய் துய்வீர்களே.

---

குறிப்பு:— நூலாசிரியர் காலத்தில் வெளியிட்ட பதிப்பிலுள்ள சாத்துக்கவி பாடல்கள்.

இந் நூலாசிரியரிடத்துப் பேரன்புள்ள

சோழவந்தான் - தவத்திரு. **கந்தசாமி சுவாமிகள்** அருளியது

அறுசீர் விருத்தம்

புலவர்சிகா மணி,எமது திருப்புகழ்த்தே
சிகன்எனும்சீர்ப் பொன்வாழ் மார்பன்
மலயமுனி வயினுதித்த வண்டமிழ்த்தீம்
பாற்கடலை மதனம் செய்து
நிலமனித விபுதர்களுக்(கு) இன்னலொழிந்(து)
இன்பமெல்லாம் நிலைபெற் றோங்கக்
குலமலிசீர் ஆமாத்தூர் மான்மியமாம்
புத்தமுதம் கொடுத்தான் மன்னோ.

எத்தலம்மங் களகரம்சேர் கோவினங்கள்
இடர்நீங்கி இன்பம் எய்தும்
அத்தலமே தலம்,அதனின் மான்மியமே
மான்மியம்,அம் மான்மி யத்தை
இத்தலம்நன் குணரும்வண்ணம் இயற்றினன்,கைம்
மாறறியா எழிலி போல்வான்
கைத்தலஞ்சங் காழிகொண்டு கழைவனத்தே
வந்தபெருங் கருணை யானே.

ஆதலின்இம் மான்மியத்தை அழுக்காறு
முதல்அனர்த்தம் அனைத்தும் நீக்கிக்
காதலினுற் படிப்போர்,கேட் போர்,எழுதி
மைக்காப்புக் கவினச் செய்வோர்,
பூதலத்திற் பெருஞ்செல்வம் புத்திரப்பே(று)
ஒளிவீசும் புகழ்மை யாதி
ஓதரிய பேறுபதி னாறும்எய்திப்
பேரின்பத்(து) ஓங்கு வாரே.

வவளனூர் - குமாரபுரி

திரு **அப்பாசாமி உபாத்தியாயர்** அவர்கள் இயற்றியது

அறுசீர் விருத்தம்

கந்தவே ளோஅலது கலைமகளோ
அருணகிரிக் கவிவல் லோனோ
சந்தவேய் வனத்திலுயர் தமிழ்க்கரசாய்
வருமுருக தாசப் பேரோ(டு)
எந்தவேளையும்அடியார் பதத்துகள்கொண்(டு)
ஆமாதைக் கிறைவன் சீர்த்தி
முந்தவே யிருந்தவட மொழியதனைத்
தென்மொழியால் மொழிந்த தன்றோ.

### இரட்டையாசிரிய விருத்தம்

முழுமதி தனைக்கண்ட கயலினம், கயரோகி
முற்றும் குறைந்த ழியும்நீ
முத்தாம் பிகைத்தாய் முகத்தினுக்(கு) ஒப்பெனவும்
முன்வருதல் மதிகுறைந் தென்(று)
இழிவுசொல் லிப்பாய்ந்த(து) ஆதலால், கதிர்முழு
திறைந்திடும் உடுக்கண மென
இடருறச் சிதறிமோ திக்களித் தங்குள்ள
இனியவான் நதியில் ஆடிப்
பழுதற்ற பம்பைமா நதியிற் குதித்தநீர்
பழனமார் மாதை நகரிற்
பசுவினத் தைக்காத்த சிவபிரான் புகழ்தமிழ்ப்
பாவிற் புராணமாக
விழுமியோர் புகழ்முருக தாசனெனும் நாமமொடு
மிளிர்தண்ட பாணிஎனுமால்
மிகுமதுர கவியமுது புலவருண முத்தமிழ்என்
வேலைகள் கடைந்தன னரோ.



இந் நூலாசிரியர் மாணுக்கரும், இளைய துணைவருமான
திருநெல்வேலி
**தி. செ. சித்திர புத்திர பிள்ளை** அவர்கள் இயற்றியது.

### அறுசீர் விருத்தம்.

சமரசா னந்த வாழ்வைத் தனைவணங் குநர்க்கீந் தாளும்
குமரநா யகனே கங்கை குலத்திலோர் குருவாய்த் தோன்றிக்
கமலநான் முகத்தோன் வேதங் கழறிய நெறியோர் ஆறும்
தமதென வேயுட் கொண்டு தரணியி லுள்ளோ ரெல்லாம்

நல்லுண வருந்தி வாழும் நலம்பெற நாட்ட முற்றுப்
பல்லுயிர் களும்மெய் யின்பம் படைக்கவும், பசுக்கூட் டத்தைக்
கொல்லுவோர் கெடவும் கொள்ளும் கோரமும் உடையோ ளுகி
அல்லுடன் பகலும் நீங்கா அருந்தவம் மிகவும் செய்தே.

அருள்பெறு முருக தாச ளும்திருப் புகழோ ளுகிச்
சருவநன் னலமும் தோயும் தண்டபா ணியுமாய் மற்றும்
பொருவில்பன் ளுமம் பூண்டும் பொலிவுறும் நெல்லை யூரான்
திருவக லாத மாதைச் சிவபிரான் சரிதம் தன்னை.

அந்தநாள் வியாசன் சூதன் ஆரியத் தறைந்த வாறே
இந்தநாட் கதையும் சேர்த்(து)ஆ யிரத்தொடெண் கவிகளாகச்
செந்தமி ழதனுற் சொன்னுன், திசைமுகன் பகரும் வேதம்
சந்ததம் புகலும் ஆறு சமயமும் தழைக்கத் தானே.

கும்மி.

தான தனனதன தான தனனதன—தனதானு
தூல வுடல்வளர — ஊனை நுகர்கொடியர்
சோக முடனழிய — நிதநேர்குவோன்
சோலை மலிதிருநெல் — வேலி அதனிலொரு
தூய னதுதவசில் — உருவாகினுன்
ஞால மகள்மனது — வாடல்இலதுமகிழ்
ஞாய முளஅரசர் — கொடிநீடவே
நாடு மெழில்முருக — தாசன் உலகுயஇ
நாளி லுயர்தமிழ்கொ — டினிதோதினுன்
காலன் உயிர்கவரும் — ஈசர் மலர்கொடெதிர்
காம னுடல்பொடிய — முனிபார்வையார்
காளை முதுகிலுமை — யாளும் நடுவிலொரு
கான்மு ளையும்நிலவ — வருசீர்கொள்வார்
ஆல மரஅடியின் — நால்வர் களும்உணர
ஆதி மறைமுடிவை — அருள்வார்,முனுள்
ஆவின் இனமகிழ மாதை நகரில்விளை
யாடல் களைஎவரும் — எளிதோரவே

---

இந் நூலாசிரியர் மாணுக்கர்
கழுகுமலை
திரு ***இராமகிருஷ்ண பிள்ளை*** அவர்கள் இயற்றியது.

---

எண்சீர் விருத்தம்

கலையேறுந் தவத்தினர்பா வலர்பலர்எத் தலத்தும்
கழறுதொல்பு ராணவிளக் கந்தொகுத்தோர் கரையா
நிலையேறும் ஒருதட்டில் அமைத்தனுக்(கு) இடையா
நேரொருதட் டினில்வைத்து நிகழ்போத நெறியாம்
துலையேறும் தரத்தில்உயர்ந் தோருரைத்து நிறையில்
தூக்கியகால், மாற்றுயர்ந்த சொலும்கனமும் தோன்றத்
தலையேறும் திருப்புகழ்மா தவனுவல்ஆ மாத்தூர்த்
தலபுரா ணத்திறமே தழைக்கவியந் தனரே.

அறுபத்திநான்கு கலை வண்ணப்பா.

தனதனத் தனதந்த தனதனத் தனதந்த
தனதனத் தனதந்த - தானனு

திருவருட் செயல்கொண்ட சமரசப் பதிதங்கு
தெளிவினர்க் குணர்வொன்று — வேதமோ
தினமும்நற் றவமிஞ்சு நெறியினிற் குடிகொண்ட
திணியருக் குளமுந்து — போதமோ
திடமிகுத் துளசிந்தை யொடுபல்சித் தியடைந்த
திறமையார் குயர்பஞ்ச — பூதமோ
சிவகதிக் குமுயன்ற விரதநற் பிடியன்பு
செறியுநர்க் கொருதஞ்ச — நீதமோ
செழுமலர்க் குவிகொண்டு புரியருச் சனைகொண்டு
செயுமவர்க் கணியங்கம் — ஆவதோ
சினகரப் பதியெங்கும் நணுகிமெத் தவணங்கு
செயலினர்க் குமுனின்ற — தேவதோ
திகழ்திருப் பணியும்பொய் கையுமலர்ப் பொழிலும்செய்
திருவினர்க் குவளைந்த — காவதோ
திரிவின்மெய்த் தருமங்கள் முழுதெணிப் புரிகின்ற
திதியினர்க் கினிதின்பம் — ஈவதோ. $\frac{1}{8}$

செகமிகப் பரவும்தென் மொழியினைப் பொழிகின்ற
திரளினர்க் கருள்பொங்கு — சீலமோ
தெருள்கலைத் தொகைகொண்டு சுருதிவிற் பனர்தங்கள்
சிரசினிற் புனைகின்ற — கோலமோ
செழியனைத் தவிர்துங்க மலிபுகழ்க் குலமன்கள்
செலுமுறைத் துறைகொண்ட — பாலமோ
செயல்விரித் திடுமுந்து கதைமுழுக் கவிழுங்கு
சிவபரத் திறமென்கும் — மூலமோ
சிறிதிரக் கமுமின்றி உயிர்செகுத் துணும்வம்பர்
திகிலுறக் கிரமங்கள் — ஆடுமோ
சினமுகக் கொடுவஞ்ச மிகுபுறச் சமயங்கள்
சிதைவுறத் தகுவென்றி — சூடுமே
சிலவழக் கினிலன்பர் மொழிகளைப் பிழைஎன்ற
திருடர்உட் கிடநன்று — நீடுமே
திசைவகுப் புலகின்கண் எவர்துதிக் கினுமிங்கு
செயமுறப் பலிதங்கள் — பாடுமே. $\frac{1}{4}$

மருவுசட் சமயங்கொள் சதுமறைக் கணிஎன்ற
வரிசையிற் கிளருஞ்ச - மூகமே
வருபிறப் பறவென்ற துறவிகட் கறமுஞ்சொல்
மதிகுறிப் பிடவந்த - யூகமே

மயிலுகைத் தருள்கந்தர் சரிதமுற் சொலுமந்த
வழியுமுற் றுவிரிந்த - பாகமே
மகபதித் தருமன்ற ஞெடுதனித் தனியும்பர்
மகிழ்விருப் புறவிஞ்சு - யாகமே
மரைமலர்ப் பிரமன்றன் விதிமினைத் தழுவும்பல்
மறையவர்க் குயர்பண்ப - தாகுமே
வயிணவத் தரும்நெஞ்சம் உருகிநிச் சயநண்பின்
வழிபடப் புரிசந்தி - காணுமே
மதனைமுற் பொடிபண்கண் விமலனுக் கமையும்பொன்
வரையையொத் துவிளங்கு - பீடமே
வழவழப் பணுவின்றி நிலைபெறப் பெரிதென்பர்
மனமொருப் படநின்ற - சீர்மையே 38

வடமொழித் தொடர்பின்பன் முதுமொழிக் குமியைந்த
மகுடமொத் திலகும்தெய் - வீகமே
வலவரித் தரையின்கண் இதுவரைக் கும்இயம்பு
வகையடக் கமிதொன்று - போதுமே
மதிதலத் தினிலென்றும் அனகநித் தனடஞ்செய்
மணிகொள்சிற் சபைதுன்றும் - ஊரினோர்
வடபுலத் துநிமிர்ந்து சுரநதிச் சிவகங்கை
வரவெனப் படர்பம்பை - யாறுசூழ்
வளனுறப் புகல்பண்டை யிடமெனப் பலதொண்டர்
வளைசிவத் தலமென்கும் - மாதையூர்
மகிமைபற் றியல்விந்தை குலவுமெய்ச் சரிதம்கொள்
வரமிகத் தழையும்பு - ராணமே
மறுவில்சித் தையுணர்ந்தி வுலகரெப் பயனுங்கை
வசமுறக் கதிகண்டு - தேறவே
மதுரவித் திகனிந்த நிறைதமிழ்க் கடலுண்டு
வளரருட் டிறல்கொண்டு - கூறினேன் 1/2

அருமறைத் தமிழ்தந்து பொதியவெற் பிலுறைந்தெண்
அரியபொற் பவிர்கும்பன் - ஆவலோ(டு)
அவன்வளர்க் கவளர்ந்து புதுமைபற் பலதங்கி
அவனருட் கைவழங்கு - பூதியால்
அதிசயக் கவிவிண்டோர் பெரியசித் தனைவென்றும்
அறிஞர்மெச் சவதிந்த - நாய்,பினே
அமுனிகட் கடைதந்த பெருமையிற் சசிமங்கை
அணையவிட் பதிகொண்ட - போகியாய்,
அடுசமர்ப் பகைசிந்த முனிவிறற் சிலைஅங்கை
அடலருச் சுனன்என்ற - வீரனாய்,
அரனிடத் துருகுந்தன் விழிபறித் திடுமன்பின்
அறுதினத் திலுய்ந்த - வேடனாய்,

அலைகைவெற் பொடுபொன்ற முருகனட் புறுசங்கம்
அதில்மதிப் பொடுயர்ந்த – கீரனாய்,
அழல்சுரத் திடைகண்டு குகனைமுட் டையதென்றும்
அணிகவித் துவனென்றோர் – வாணனாய், 5/8

அருணையிற் குமரன்தன் அருள்விளக் கஉரங்கொள்
அவனுவப் புறுசந்த – மாரியாய்,
அளவில்மெய்ப் பிரபந்த நுவல்சிறப் புநிரம்பி
அசைவில்கற் பொடிலங்(கு) அ – நாளில்வாய்
அதிரிசைக் கவியந்தர் செவியறுத் தகமிஞ்சொர்
அதிகன்வெட் கிமடங்க – மோதி,யோர்
அமணனுற் றகல்வம்பின் முடிவில்அக் கிரமங்கொள்
அவன்வினைப் படியஞ்சி – மாயவே
அரையனுக் கிருகண்கொள் தெரிசனைப் பரிவும்,பின்
அமரர்பொற் பதிசென்று – வாசமார்
அலர்தனைக் கொடுவந்த புகழுமிக் கவிர்துங்கம்
அமைதமிழ்க் கிளியென்று – தோணியே
அறுமுகத் தனிஎந்தை புயவரைக் கழகென்க
அமர்தவப் புனிதன்,பின் – ஆடலால்
அவனிபெட் புறவந்து கழைவனப் பதியின்கண்
அவதரித் துலகெங்கும் – மேவினன் 3/4

இருதிறத் துமுதிர்ந்த தவமியற் றியறஞ்செய்(து)
இருளறத் திகழ்பொங்க – வாழ்வினுல்
இமயவர்க் கரசென்கை முதல்மதிப் பதுமின்றி
இசைபெருக் கமிசைந்த – மேன்மையால்
எழுகடற் பருகுந்தென் முனிவனைத் துமிளிர்ந்த
இயல்இலக் கணம்என்ற – நூல்செய்தான்
இளமையிற் பதிகம்ப கரும்உரித் தொடுசண்பை
யினிலுதித் தவன்முன்சொல் - நால்வர்போல்
இடையறக் குளிர்தொண்டன் மழைஎனப் பொழி
இடமனைத் துநிறைந்து – மீதியாம் [செஞ்சொல்
இசைவகுப் பொடுசந்த மலிதிருப் புகழும்பின்
எணில்கவித் தொடையும்பல் - நீதிநூல்
இனவருக் கமும்நன்கு நவில்கணக் கிடுசங்கை
யினர்கலைப் பிடியன்றி – யாவரே
இகல்குதர்க் கர்நடுங்க முறைவிளக் கிமுழங்கும்
இடியெனக் கெழுசிம்புள் – வீறுளான். 7/8

இணையில்வெற் பிலுருண்டும் உடல்வடுப் படலின்றி
எழுமனக் கதிகொண்ட – தீரனே!
இனன்முதற் கழறும்சண் மதமுமப் புறமுந்தன்
இயல்பெனத் துதிவிண்டு – நாடுவான்

எவரெதைச் செயினும்ச(ம்) மதம்உயிர்க் கொலையொன்றும்
இலையெனிற் கதியுண்டென் – வாதியே!
இணைமலர்ப் பிதநம்பு தனதுபத் தரினங்கள்
இடர்தவிர்த் தருளுந்த - யாளனே!
இசையும்அக் கமும்அங்க முழுதணிப் பொடியுங்கல்
இலகுநற் கலையுங்கொள் – வேடனே!
இவன்விலைப் படுசொந்த அடிமையுற் றவன்என்றன்
இருதயத் துள்வயங்கு – நாயனே!
எரிவிழிப் பரன்நன்று தருமுழுப் புலவன்றன்
எதிரினிற் றினம்வந்து – பேசுவான்
இகமதிக் கவிஞந்த சருவசித் திபொருந்தும்
எழில்படைத் தொளிர்தண்ட – பாணியே. 1

---

அட்டாவதானம் - பூவை

திரு. **கலியாண சுந்தரயதீந்தரர்** அவர்கள் இயற்றியது.

---

**பதினறடிப் பேராசிரிய விருத்தம்.**

மணிகதிர் விரித்திலகு செஞ்சூட்(டு) அராமுடியில்
வைகும்இப் பூதலத்தின்
வயிறகழ்ந்(து) உரகலோ கத்திழிந் துந்தியே
மலிதரும் அலைக்கரத்தால்
வார்கரைக ளிற்கூல மெறிசரயு நதிபுனைய
வளர்துடவை சூழ்அயோத்தி
வருமிரா மற்றொடரும் உறுகண்முழுதும்தவிர
மாற்றியாண்டருள்செய்வள்ளல்

பணியுமணி தருசடில மருவும்அழ கியநாதர்
பத்தர்மலி தொண்டைநாட்டிற்
பம்பைநதி நடுவில்முத் தாம்பிகையோ டுற்றுப்பல்
பசுமகிழ அருள்செய்மாதைப்
பதிமகிமை வாதராய ணமுனிவன் வடமொழிப்
பனுவலிற் பகர்தல்ஓர்ந்து
பழுதில்தென் மொழியிலோர் ஆயிரங் கவிகளாப்
பாடியுல குயவுதவினன்,

திணிகுலவு பொதியைதரு பொருநையின் கரையில் நிகழ்
திருநெல்லை நகரில்வந்தோன்
செய்யகல் லாடைமுழு நீறுமுத லியகவின்
திருமேனி வாய்ந்தயோகி
சிற்றெறும் பாதிய வருந்தினும் சகியாத
சீவகா ருணியமூர்த்தி
செறிபசுக் குலம்வாழல் செய்வதன் நிமித்தமே
திடதவம் உளுற்றும்ஞானி

அணிகொள்செந் தமிழ்வண்ணம் அளவறப் பாடிஅவை
அமையுமர்விதி களும்விதித்தோன்
அருமைத் திருப்புழ்க் காரனென் றும்,பொருவில்
அருள்முருக தாசன்என்றும்,
அவிர்தண்ட பாணிஎன் றும்,பின்னும் இவ்வண்ணம்
அறைதருபல் பெயருமுடையோன்
அருணகிரி நாதனனை யான்என்றும் அவன்என்றும்
அமையுமொரு குருநாதனே.



அரன்வாயில் – மகாவித்துவான்

திரு. **தங்கவேலுப் பிள்ளை** அவர்கள் இயற்றியது.

**எழுசீர் விருத்தம்**

பையணி மணிமா மகுடம்ஆ யிரங்கொள்
பணியர சநுதினம் பரிக்கும்
மையணிப் பாரா வாரம துடுக்கும்
மகிதல வனிதைஆ னனமாம்
மெய்யணி நடுநாட் டொருதிரு வாமாத்
தூரென விளம்புமா நகரில்
ஐயணித் தமிழ்ச்சீர் உணரும்நீர்ப் பம்பை
ஆற்றின்மேற் கரைத்திருக் கோயில். 1

தன்னிடை இமயா சலம்பயந் தருளும்
சாமளக் கோமளக் குயிலாம்
மின்னிடை முத்தாம் பிகையொடு மருவி
விண்ணகம் மண்ணகம் உய்வான்
மன்னட லருட்பே ராடல்கள் அனந்தம்
வளம்பெற நடவிவீற் றிருக்கும்
வின்னெடு மாலை யாண்டருள் அபிரா
மேசர்என் றிடும்அழ கேசர். 2

மான்மியம்சூத மாதவன் வடநூல்
வயின்குயிற் றலும்உணர்ந் தினிக்கும்
தேன்மிகப் பிலிற்றும் பங்கயா தனத்துச்
செந்தமிழ் வெண்கொடி வாழும்
வான்மிளிர் நாவில் வளகைமீக் கூர்ந்து
மதுரித நவரசம் துளும்பக்
கான்மிரு தளிசேர் பூம்பொழிற் பொதியைக்
கலசன்நேர் முனிவரர் வியப்ப. 3

தாயிரங் குதல்போன்(று) ஆண்டநா யகனார்
தண்ணருட் சாகரம் பொதுளும்
வாயிரந் தருளும் அங்ஙனம் காண்ட
வகையிரண் டெனப்பிரித்[து] அந்நூற்
பாயிர முதற்றன் அனுபவம் ஈரும்
படலம்முப் பானிரண் டினிலோர்
ஆயிரத் தெட்டுக் கவிகளா இசைத்(து)ஈண்டு
அருளினன் திசைஇசை மலிய. 4

அத்தகை யாளன் நெல்லையம் பதிவந்(து)
அருந்தமிழ் மகுடநூல் மாரி
சத்தமைப் புயல்போற் பொழிந்தெழில் மாதைத்
தலத்திலுற்(று) அருள்நெறி ஓங்கப்
புத்தமு தின்சொற் றுதியொடும் தெய்வப்
புலமைவேட் டருந்தவம் புரியும்
முத்தமிழ் முருக தாசன்என் றேதும்
முனிவன்எம் குருபரன் அம்மா. 5

---

இந் நூலாசிரியர் மாணவரும், மருகருமான
கோபாலசமுத்திரம்
திரு. **ச. சண்முகதாச பிள்ளை** அவர்கள் இயற்றியது.

**கும்மி.**

தந்தத்தா னனதன தானதன தானதன – தந்ததானா
அண்டத்தார் வாழுமக வான்அயன்வி ணோர்கரிய
கொண்டற்கேழ் மாயன்முத லாநிகழ்பல் சீரியரும்
அன்புற்று ராதனைசெய் மாதைவள மாநகரில்
– இன்பமோவா

அம்மைப்போ லேயிலகு கூர்மைவிழி ஆர்கவுரி
யின்பொற்றோள் சேரும்அழ கேசர்விளை யாடலினை
அந்தப்பீ டார்தருபு ராணமென நீள்பொதியை
— யின்கண்வாழ்கோ

பண்டற்பா ஈயுநல மேவுதமி ழானிய
பொங்கத்தே ஞரமுத மாவனவும் நாணமுறு
பண்பிற்பூ லோகரும்ள ளாதுணர வேமிகவி
— ளம்பலாலே

பைம்புற்று னேநுகர்ப வாமறைசொல் பான்மைமரு
வும்பொற்பார் ஆவினமும் ஊறுபடு தீயவினை
பந்திக்கா தார்வமுறு மாதவம்வி டாருவகை
— கண்டுளானே

கண்டப்பால் ஆருமணி மாலைமுழு நீறுசிறி(து)
அங்கத்தூ டார்தருக லாடைசிவ நேசரது
கஞ்சப்பூ நேருமிரு பாததுகள் மேவுதலை
— யொன்றுதேவே

கந்திக்கா நீடுமொழி லார்திருநெல் வேலிவரு
சந்தப்பா வாணர்அர சேயருணை யூரினிடை
கன்றிப்போ காதுகளி கூர்கிளிய தாம்வியன்அ
— மைந்தகோவே

மண்டப்போ ராடுமயில் வேலணிகு கேசனடி
சிந்தித்தே மேருவரை போலுமலை யேறிவடி
வஞ்சற்று ஞலும்நலி யாமலதி வீரமொடு
— ருண்டுய்வோனே

மஞ்சுற்றோ வாதமலர் போலுமொரு பாணிபுனை
தண்டத்தோ டேதிகழ மாமுருக தாசகுரு
வந்திப்பா ரூடும்வரு நேயனதி காருணியர்
— தம்பிரானே. 1

அறுசீர் விருத்தம்.

நலமலிநெல் வேலியிற்கங் காகுலத்தில் உதித்தசெந்தி ஞய கன்சேய், பலதவமும் உமைமாது திருவருளும் பொருந்தியொரு படிவ மாகி, நிலமிசைதோன் றிச்சிவன்போல் வெண்ணீறுங் கையிற்றண்டும் நில வப் பூண்டு, கலசமுனி எனத்திகழ்ந்து திருப்புகழ்நா மமுந்தரித்த கருணை வள்ளல். 2

எத்தலத்தும் உயர்வெனக்கண் டுயுமாறு பசுக்கூட்டம் இனிது போற்றி. உத்தமமா மருப்புமுதற் பெற்றதிரு வாமாத்தூர் உற்று மேகம், ஒத்தருட்பெய் திடுமுத்தாம் பிகைப்பிடியைத் தனக்கெதிரில் ஒளிர வைத்துச், சத்தமுனி வரர்முதலோர்க் கருள்செய்அபி ராமேசர் சரித்தி ரத்தை. 3

வடமொழியிற் சூதமுனி மாமுனிவர்க் குரைத்துள்ள வழியைக் கொண்டு, நடமுறுபூ தலத்தோர்சொல் கதைகளையும் தழுவிநறுந் தமிழிற் றீம்பாற், கடலனைய பொருள்மதுரச் சுவைமுதலா வனவு மிகக் கனிறு மாறே, மடவரல்நேர் கலைவாணித் தாயும்வியந் திடத் திருவாய் மலர்ந்தான் மாதோ. 4



இந் நூலாசிரியர் அடியவருள் ஒருவரான
உரத்தூர்
திரு. ***மு. சின்னு ரெட்டியார்*** அவர்கள் இயற்றியது.



**அறுசீர் விருத்தம்**

உம்பர்களும் நாடுதிரு வோங்குபுகழ்
நடுநாட்டில் உமைமண ளன்
வெம்புதழற் கிரியான அருட்பதிக்குக்
குணதிசையில் வேட்கை யாவும்
அம்புவியிற் பசுவினங்கள் அடையவன்னி
வனத்திலிங்க மாகித் தன்னை
நம்பியடைந் தோர்க்கீந்த நலம்பலவும்
வடமொழியால் நவின்றார் மன்னே. 1

பல்லுயிர்க்கும் பசுபதியாம் பழஞ்சரிதம்
உணர்ந்தவர்,அப் பதிக்கு நாமம்
சொல்லிய(து)ஆ மாதையெனும் காரணகா
ரியந்தேர்ந்து தொண்டர் போற்றும்
வல்லியொடு வாழ்பரமன் தன்புகழைத்
தென்மொழியால் வரைதல் வேட்டு
நல்லிசைச்சொற் றிருப்புகழை முருகனுக்கு
முனமொழிந்த நாதன் தன்னை. 2

பொன்னிறச்சொல் அமைந்தசந்தப் புகழ்மாலை
தானுமிகப் புனைதல் ஓர்ந்தே
நன்னிலைதேர் வோர்வசித்தற் கிடமாய
திருநெல்லை நகரிற் கீர்த்தி
மன்னியவே ளாளர்சிகா மணிச்செந்தி
லையகற்கு மகவாய் ஈந்தான்
முன்னிலைகொண் டறுமுகற்குச் செந்தமிழாற்
கவிமாலை மொழியும் நாளில். 3

வானேறும் பொழிற்றில்லை தனிலழைத்து
நடம்காட்டி மகிழ்சிற் றண்டி
தானேவந் தளித்தருளி ஆயிரம்பாச்
செந்தமிழாற் சாற்றப் பெற்று
மானேயம் பொலிமாதை யினில்வரச்செய்(து)
அவன்சமய மறையோன் தன்னால்
நானேவந் துரைப்பதன்(று)இந் நகர்மாட்சி
புராணமாய் நவில்என் றோதி. 4

சரபமென உலகேத்தத் திகழ்முருக
தாசனெனச் சகத்தோர் முற்றும்
பரவுபுகழ்க் காந்தகவில் ஆமாத்தூர்ப்
புராணம்நன்கு பகரச் செய்தான்
நரர்பலரும் தேவரமு(து) அருந்திடல்போற்
றமிழ்மதுரம் நனியுண் டுய்ந்தார்
இரவுபகல் எம்மனத்தில் இலங்குமவன்
மலர்ப்பதங்கள் இறைஞ்சி வாழ்வாம். 5

குருபாதமே கதி.



குருவே துணை.

# பதிப்புப் பாயிரம்.

எழுசீர் விருத்தம்

திருமலி பொதியைத் தமிழ்நயம் பொலியும்
தெய்விகத் தொண்டைநாட் டணித்தாம்
உருமலி நடுநாட் டுளசிவ தலங்கள்
ஓரிரு பத்திரண்(டு); அவற்றுள்
குருமலி தரளம் கொழித்தநீர்ப் பம்பைக்
குளிர்நதிக் கரைகொள்சீர் மாதை
தருமலி பொதும்பர் தழைத்துபூ மணத்தில்
தன்னிகர் சிறப்பின தாமால். 1

அத்தலப் பெருமை வியாதன்மா காந்தத்
தமைந்தநா கரகண்டம் அதனில்
மெத்தவோர் ஏழு சருக்கத்தில் அமைத்து
விளம்பினன், அதனைப்பின் னுளில்
முத்தமிழ் வண்ணச் சரபதே சிகன்எம்
முருகதா சப்பெயர் முனிவன்
சித்தர்கள் புகழும் தண்டபா ணிப்பேர்
திருப்புகழ்ப் பேருடன் திகழ்ந்தோன். 2

பசுக்கொலை, மேடக் கொலைபல விதமாம்
பறவையின் கொலை,பல்சிற் றுயிரை
நசுக்கிடு கொலை,நீர் வாழுயிர்க் கொலை முன்
நவில்கொலை வகையிலா தறுப்பான்
முசுக்கலை முகன்போல் அவிர்இறை வரவே
முன்னிநோற் றிடுதொழில் முதிர்ந்தோன்
வசுக்கள்ஆ தியர்போற் றியஅழ கேசன்
வகுத்தவுத் தரவினை மதித்து. 3

தலவிசேட மும்,தீர்த் தத்தின்மான் மியமும்,
தழுவுமூர்த் தியின்மகி மைகளும்,
நலமலி விருந்த சிலையின்மெய்ந் நிலையும்,
நந்தியும், தேனுவே முதலா
நிலவுபல் புவனப் பசுக்களும். பூசை
நிறைத்தணி மருப்புறும் சீரும்,
குலமயி லுறழும் உமையவள் முனிவர்
கோடிபே றிருடிகள் எழுவர் 4

கணபதி, முருகன், நாரதன், அருட்சீர்
கவினும்நல் உரோமசன், பிரீங்கி
தணவரும் தவத்து மதங்கன், மாணுக்கர்
சபரி, நான் முகன்முந்நான்[கு] அருக்கர்
குணமலி அட்ட வசுக்கள், மா காளன்,
குளிர்தச ரதன்சுதன் முதலோர்
மணமலர்ப் பூசை இயற்றிநல் வாழ்வு
வாய்ந்தநற் கதைகளின் வகையும். 5

அந்தரா கவன்மா முனிவர்பால் ஐயம்
அகலவே அரிஅரன் என்னும்
பந்தமார் இரண்டு பகுதியின் கலப்பு
பகர்ந்திடு தெளிவதும், சேர்த்துச்
சொந்தமார் பூர்வ காண்டமென் றமைத்தும்
தூய்க்கலை வாணியும், திருவும்
வந்தனை இயற்றிப், பயன்பெறல் புனித
மலியும்நா வரசர், சம் பந்தர், 6

நம்பியா ரூரர், இரட்டையர் வந்து
நற்றமிழ்ப் பனுவல்செய் திறமும்,
கும்பிடும் தவமார் சதானந்தர் பெருமை,
குறைதவிர் வீசித்திர லீலை,
தம்பிராற் கரசர் செயும்வழி பாடு,
தன்னநு பவத்திறம் இவற்றைக்
கம்பித மிலதாய் உத்தர காண்டக்
கதைஎனப் பகுத்தும்வண் டமிழில். 7

பாயிரத் தொடுநூல் பகர்வர லாறு
பைந்தகைப் பொதும்பர்சூழ் நடுநாட்(டு)
ஏயிரும் பெருமை மாதையம் பதியின்
இனியசீர் நால்முகத் துறச்சேர்த்(து)
ஆயிரத் தொருபான் விருத்தமா முடித்திட்(டு)
அரியஏட் டெழுதிமை தீட்டி
வாயினுற் படித்துப் பொருள்விரித் தனன், தன்
மடத்தின்நல் லிடத்தினில் அமர்ந்தே. 8

அதன்பினுள் சிலசென் றன்பினர் முயன்றே
அரும்பொருள் ஈட்டிஅப் புராணம்
சுதந்தர அச்சிற் பதித்துல குணரத்
துலக்கினர், இந்தநாள் அதனை
நிதம்படித் துவக்க விரும்புநகர்க் கந்த
நிகரில்புத் தகமிலா மையினுல்
இதம்பெறச் சைவ சமயமா குரவர்
இயற்றுசெந் தமிழ்மறை என்னும். 9

அரியதே வாரப் பதிகம்ஓர் ஐந்தும்,
அருணையூர்க் கிளிதிருப் புகழ்ப்பா,
உரியவோர் நான்கும், இரட்டையர் மகிழ்வாய்
ஓதுநற் கலம்பகச் சிலபாவும்,
பெரியகௌ மாரத் திருப்புகழ்க் குரவன்
பேசும்வா ரத்திருப் புகழும்,
தெரியலாம் நவரத் தினத்திருப் புகழிற்
றிகழ்ந்தவிர் பாடலில் இரண்டும். 10

முதலுறச் சேர்த்துப் பின்திரு மாதை
முதல்வனுர் இசைபகர் புராணம்
இதமுற அமைத்துச் சிறந்தபுத் தகமாய்
இனியஅச் சினிலமைத் திடற்காம் *
உதவியாய் அன்பர் தமதுநற் பொருளும்
ஓங்கபி ராமேசர்தம் கோயில்
முதலிடத் திருந்த பொருளுமுற் றிந்நூல்
முறைப்படி பதிக்கநேர்ந் ததுவே 11

அறநிலை யத்தின் ஆணைய ராகும்
அண்ணல்சா ரங்கபா ணியனுர்
திறமுயர் கிருபா னந்தவா ரியார்ச்,சீர்ச்
சிரவண புரந்திருப் பேரூர்
உறவரு மடால யங்களின் முதல்வர்,
உயர்சைவ சித்தாந்த நூல்கள்.
திறமுற அச்சிட் டிடும்கழ கத்துச்
சீர்ச்சுப்பை யாபிள்ளை முதலோர், 12

முன்னிலை தன்னில் மாதையூர்க் கோயில்
முதிரறக் காவலர் தலைமை
மன்னிய உரத்தூர் இராமசா மிப்பேர்
வாய்ந்தவர், விழுப்புரத் தாட்சி
துன்னிய டாக்டர் – தியாகரா சப்பேர்த்
தூயவன், அன்பர்கள் பல்லோர்
நன்னிதி வழங்கிப் பதிக்கவும், விழாவை
நடத்தவும் முன்வரல் நலமே 13

தண்ட பாணிப்பேர் முனிவனே தியநூல்
சார்வெளி யிட்டுநற் குழுவின்
விண்டசீர் முதலா வதுவெளி யீடாய்
மிளிர்திரு மாதையூர்ப் புராணம்

---

* இதுவரை சுமார் 25–ஆண்டுகட்கு முன் திருவருட்பேறெய்திய நூலாசிரியர் குமாரர் சந்தப்புலமை – தவத்திரு. தி. மு. செந்திநாயக அடிகள் அவர்களால் பாடி எழுதிவைக்கப்பெற்றது.

கொண்டநல் வெளி யிடாயமைந் ததுமேற்
குலவுபல் விதத்தமிழ் யாவும்
தொண்டரா வாரும் புலவரும் கொள்ளத்
துலங்கும்அச் சேறுக தொடர்ந்தே. 14

வருடநல் விசுவா வசுவிற்கார்த் திகையாம்
மதிமுப்ப தானநாள் புதனும்
மருவிய நாளில் தண்டபா ணிப்பேர்
மாதவன் தோன்றவ தாரத்
திருமலி அத்த வுடுதிகழ் நூறு
சேர்இரு பத்தாரும் ஆண்டு
தரும்நினை வாக மாதையூர்ப் புராணம்
தனைவெளி யிட்டனர் வாழி. 15

இன்னணம்
நூலாசிரியர் சுவாமிகள் பெயரர்
**தி: செ. முருகதாச ஐயா,**
கௌமாரமடாலயத் தலைவர்.

திருவாமாத்தூர்
விழுப்புரம் P O.
15—12—65



# தலத்தைப்பற்றிய குறிப்புகள்.

| | | |
|---|---|---|
| 1 | தலம்: | திருவாமாத்தூர் |
| 2 | இறைவன் பெயர்: | அபிராமேசுவரர், அழகியநாதர், ஆண்டநாயகர் |
| 3 | இறைவி பெயர்: | முத்தாம்பிகை, அழகியநாயகி. |
| 4 | தீர்த்தம்: | 1. ஆம்பலம் பூம்பொய்கை (குளம்)<br>2. தண்ட தீர்த்தம் (கிணறு)<br>3. பம்பை (ஆறு) |
| 5 | தலவிருட்சம்: | வன்னிமரம். |
| 6 | போற்றிப் பாடியவர்கள்: | 1. திருஞான சம்பந்த சுவாமிகள்<br>2. திருநாவுக்கரசு சுவாமிகள்<br>3. சுந்தரமூர்த்தி சுவாமிகள்<br>4. இரட்டைப் புலவர்கள்<br>5. அருணகிரிநாத சுவாமிகள்<br>6. இராமலிங்க சுவாமிகள்<br>7. தண்டபாணி சுவாமிகள்<br>8. சுந்தரத்தம்மையார்<br>9. செந்திநாயக அடிகள்<br>10. முருகதாச ஐயா<br>11. அசலாம்பிகையம்மாள்<br>12. கிருபானந்த வாரியார்<br>13. சுந்தர சுவாமி |
| 7 | நிர்வாகம்: | தமிழக அறநிலையப் பாதுகாப்புத்துறை. |
| 8 | வட்டம்: | விழுப்புரம் |
| 9 | மாவட்டம்: | தென்னாற்காடு. |
| 10 | புகைவண்டி நிலையம்: | விழுப்புரம் |
| 11 | தலமிருக்கும் இடம்: | விழுப்புரத்திற்கு வடமேற்குத் திசை மூன்றுமைல் அளவு. |
| 12 | ஆலய அமைப்பாளர்: | அச்சுத தேவப் பல்லவர்.<br>கோப்பரகேசரிவர்மன் ஆகியோர் |
| 13 | குடமுழுக்கு: | (1) 70 ஆண்டுகட்கு முன் |
| | ,, | (2) 20—8—1960 |

# திருவாமாத்தூர்



அபிராமேசுவரர்





முத்தாம்பிகை

உ
சிவமயம்

# திருவாமாத்தூர்த் தலபுராணம்.

பாயிரம்,

விநாயகர் காப்பு - அறுசீர் விருத்தம்.

திருவளர் திருவா மாத்தூர்ச் சிவபிரான் புராணந் தன்னை
மருவளர் கொன்றைச் செம்பொன் மாலிகை என்னப் பாடத்
தருவளர் கரங்கள் ஐந்தாற் சகலலோ கமும்காத் தாள்வோன்
குருவளர் கமலப் பூந்தாள் கும்பிட்டுக் கருது கின்றாம்.

## அழகியநாதர் துதி.

எழுசீர் விருத்தம்

பழகிய தொழிலாம் தமிழ்த்துதி புரியப்
பணித்திடா் தவரென விளங்கிக்
கழகியும் திருவும் பரவுசீர் உமையாற்
கரியமா யவன்றனுற் றூண்டும்
குழகியல் மதிச்செஞ் சடிலநா யகனுர்
கோவெலாம் கோடுறக் கொடுத்த
அழகிய நாதர் அவர்தம்ஆ மாத்தூர்
அணிசொலற்(கு) அவரருள் துணையே. 2

## முத்தாம்பிகை துதி.

எண்சீர் விருத்தம்

தேவரும்மா முனிவோரும் நரரும் போற்றத்
திகழ்திருவா மாத்தூரின் சீர்த்தி யாவும்
நாவரும்மாண்(பு) யானடையப் பெறுமா(று) இந்நாள்
நடத்தியதோர் விளையாட்டை நன்கு பேசிப்
பூவரும்மங் கையர்இருவர் தாமும் தாழும்
புனிதையைமுக் கண்ணன்முதற் புகல வாழும்
மூவரும்நம் பியமுத்தாம் பிகையைப் போற்றி
முண்டகத்தாள் மலர்த்துணையை முன்னி வாழ்வாம். 3

---

திருவளர் என்ற சொல்லை, திருவாமாத்தூர், சிவபிரான், புராணம் என்ற மூன்றுக்கும் தனியாகவும், சேர்த்தும், தொடர்புபடுத்திக்கொள்க. திரு - செல்வம், தெய்வப்பண்பு, அழகு முதலிய பலபொருள் தரும். ஆயினும், இந்த மூன்றுக்கும் உரியது. மரு - மணம். கொன்றைமாலை சிவபிரானுக்கு உவந்தது. அதுபோல உவப்புடையதாக இதைப்பாடுகின்றேன். தரு - ஐந்தென்ப. விநாயகர் கைகளும் ஐந்து. குரு - சிவப்பு. தாமரைமலர்போன்ற திருவடி. கும்பிடுதல் காயத்தின் செயல், கருதுதல் மனத்தின் செயல், வாக்குக்குரிய செயல் இதைப்பாடுதல் என, மூன்றுகரணமும் செயல்படுவதறிக.

2 கழகி - கலைமகள்; சடிலம் - சடை; கோடு - கொம்பு; இத்தலம் பசுக்களுக்கு, கொம்பு கொடுத்த தென்ற குறிப்பு; பரமன்தான்நேரே இதைப் பாடச்செய்யாமல், கலைமகள், உமையவள், திருமால், ஆதியோர்களைக்கொண்டு பாடச்செய்தார் என்றதாம்.

3 பூவரும் மங்கையர் - திருமகள், கலைமகள். முண்டகத்தாள் - தாமரைபோன்ற திருவடிகள்.

## தல விநாயகர் துதி.

கொச்சகக்கலிப்பா.

ஆறுமதிச் சென்னியுளார் ஆமாத்தூர்ச் சீர்முழுதும்
வீறுதமிழ்ப் பாடல்களால் வேண்டியவா(று) ஓதுதற்கு
நாறுமலர்க் கொன்றையணி நால்வாயை ஞாலமகிழ்
மாறுயரந் தீர்த்தானை வணங்கிமிக வாழ்த்திடுவாம். 4

## சபாநாதர் துதி.

எண்சீர்த் தாழிசை.

வஞ்சமற்ற தொண்டர்வந்து வந்துபோற்றும் மாதையூர்ச்
செஞ்சரித்தி ரங்களூடு சிறிதுணர்ந்து செப்பவே
அஞ்சனக்கண் மங்கைமுன் அரக்கன்மீதில் ஆடுவான்
பஞ்சகிர்த்தி யப்பதங்கள் பாடியன்பில் நாடுவாம். 5

## தட்சணாமூர்த்தி துதி.

கொச்சகக் கலிப்பா,

அருந்தவருக்(கு) ஆரமுதாம் ஆமாதை யூர்ச்சரிதம்
திருந்தருமைத் தமிழ்க்கவியாற் செப்பிடநான் சிந்தித்தேன்
பெருந்தகையார் ஒருநால்வர் பேறெனக்கல் லால்அடியில்
இருந்தபடி இருந்தார்வந்(து) என்மனத்தும் இருந்தாரே. 6

## முருகர் துதி.

அறுசீர் விருத்தம்.

வேலுமயி லுந்துணைஎன்(று) உரைக்குமவர்
வினைமுழுதும் விலக்கு வானை
நாலுமறை உணர்பிரமா நடுநடுங்கப்
புடைத்தானை நண்ணு கின்றும்,
சேலுறழ்கண் மங்கையொரு பங்கிருப்ப
விடையுகைக்கும் சிவன்ஆ மாத்தூர்ச்
சாலுமகத் துவம்பலவும் தமிழ்க்கவியாற்
பகரும்நலம் தருதி என்றே. 7

---

4 நால்வர் - சனகர்; சனற்குமாரர் - சனந்தரர், சநாதரர்.

5 அஞ்சனக்கண் - மைதீட்டிய விழி; அரக்கன் - முயலகன்; பஞ்சகிர்த்தியம் - ஐந் தொழில். அவை, சிட்டி-திதி; சம்மாரம்-திரோபவம், அநுக்கிரகம் என்பன.

6 நால்வாய் - தொங்குகின்றவாய் எனவே யானையின் தும்பிக்கையைக் குறிக்கும்.

7 நாலுமறை - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன
சேல்உறழ் - மீன்போன்ற, விடை உகைக்கும் - இடபத்தை வாகனமாகச் செலுத்தும்; சாலும்மகத்துவம் - மிகுந்தசிறப்பு.

## தண்டீச்சுரர் துதி.

கலிவிருத்தம்

கண்ண னேஎனக் காலியி னம்புரந்(து)
அண்ணல் ஈசனுக்(கு) ஆகிய பூசைசெய்(து)
எண்ணம் இன்றிய தாதைதன் ஈடழித்(து)
ஒண்ண லங்கொள் ஒருவரை உன்னுவாம் 8

## இராமர் துதி.

அறுசீர் விருத்தம்.

நந்தியாய் உமையவளாய் நாகவிற்கோர்
கணையாகி ஞாலங் காப்பான்
வந்திரா கவனும்மால் ஒருக்காற்போற்
றியசேது வருந்த அன்பால்
அந்திவான் அனையசிவன் தனைஇருக்காற்
றெழுந்திருவா மாத்தூர்ச் சீர்த்தி
சிந்தியா நுவன்றிடும்நான் அவற்பரவா
விடில்மனமும் சிரிக்கும் அன்றே. 9

## சரசுவதி துதி.

அறுசீர் விருத்தம்

கூந்தல்நிகர் இயற்றமிழும், குமுதவாய்
நிகரிசையும், கோலம் போல்வ(து)
ஆந்தகைய நாடகமும், அறிந்துவக்கும்
புலவர்சிலர் அகிலத் துள்ளார்
காந்தழுக்காற் றிளங்கவிஞர் பலருளரால்
எனைக்கருணைக் கடலிற் றோய்த்தாள்!
மாந்தர்சிலர் நாவில்நின்றும் அரிபிரமர்
தொழிற்செய்கலை வாணித் தாயே 10

---

8 காலியினம் - பசுக்கூட்டம், கண்ணபிரான் பசுக்களைக்காத்ததுபோல, சண்டேசரும் பசுக்களைக்காத்தனர் என்பதாம். ஒருவன் - ஒப்பற்றசண்டேசர்.

9 நந்திவாகனமாகவும், மேருமலைவில்லாகவும், கொண்டபோது அம்பாகத் திருமால் விளங்கியதுபோல, உலகநன்மைக்காக இராமனுகவும் வந்தார். அந்தஇராமர், இலங்கைக்குச்செல்லும்போதும், வெற்றியுடன் திரும்பும்போதும் வணங்கியதலம் திருவாமாத்தூர் என்பதை விளக்க ''இருக்கால்தொழும்'' என்று குறித்தார்.

10 கலைமகளின், கூந்தலைப்போன்ற கருமைநிறம் இயற்றமிழ், வாயின்செம்மை போன்றது இசைத்தமிழ், திருமேனியைப்போன்ற வெண்மைநிறம் நாடகத்தமிழ் என்று சரசுவதியின் திருவுருவத்திலே மூன்று உவமை கூறிய நயம் காண்க.

## அடியார் துதி.

எண்சீர் விருத்தம்

நரிக்குதிரை கண்டுவந்த முனியைப் போற்றி!
நாவாய்போற் கல்மிதப்ப நவின்ருற் போற்றி!
எரிக்கும்என்(பு)ஓர் பெண்ணுகப் படித்தார் போற்றி!
இடங்கர்வாய் மகப்பெறுமா(று) இசைத்தாற் போற்றி
தரிக்கும்வெண் ணீ(று)அக்கமணி வடமுன் ஞன
சாதனமுற் ரேரைஎல்லாம் தாழ்ந்து போற்றிச்
சிரிக்குமுனி வாற்புரமூன்(று) எரிந்த நாதன்
திருவாமாத் தூர்மகிமை செப்பு வேனே. 11

## அவையடக்கம்.

எண்சீர் விருத்தம்

வணங்கினரை இகழ்வாரும் வைதாரை நன்கு
மதிப்பாரும், சிற்சிலர்இம் மாநிலத்தில் இருப்பார்
மணங்கமழ்சந் தனக்கிரிமா முனிவன்நுவல் கவிக்கும்
வழுப்பகர்வார் உளரெனுமோர் வார்த்தையும்கேட் டுளஞல்
அணங்கொருபா கத்துடையார் ஆமாத்தூர்ச் சரிதம்
அதுகுறித்[து]யான் எங்ஙனம்ஈண்[டு] அவையடக்கம் பகர்வேன்
இணங்குமறி[வு] அளவில்எவர் இகழ்ந்தாலும் புகழ்ந்திட்[டு]
இன்புறினும் எனக்காகா[து] எனையசைப்பாற் காமே. 12

## அதிகாரி, அநதிகாரி இலக்கணம்.

குழிப்பு

தனதன தானன தனதன தானன தனஞ தாத்தாஞ

சிவனுமை மால்கண பதிகுகன் ஆதியர் திகழ்சீர் வேட்டிடார்
தடமுயல் பாவலர் உவகையின் மூழ்குவர் தமிழ்நூல் வாய்ப்போரார்
அவலம தாய்நனி இகழ்வர்மெய், வானவர் அமர்ஆ மாத்தூர்மாண்
நுவலித ஞலிது வருமொரு காரணம் நுதல்வாம் மேற்பாலே. 13

பாயிரம் முற்றிற்று.

---

11 நரிக்குதிரைகண்டவர் - மணிவாசகர். தெப்பம்போலக் கடலிற்கல் மிதக்கவந்தவர் அப்பர், எலும்புபெண்ணுகப்பாடியவர் ஞானசம்பந்தர். முதலே விழுங்கிய மகவை மீட்டவர் சுந்தரர். அக்கமணிவடம் - உருத்திராகமாலே. சாதனம் - சமயச்சின்னம்.

12 சந்தனக்கிரிமாமுனிவன் - பொதியமலேயில் இருக்கும் அகத்தியர்.

# நூல் வரலாறு.

அறுசீர் விருத்தம்.

1

செந்தமிழ்ப் பாண்டி நாட்டுத் திருநெல்வே லியிலோர் சேயாய்
வந்தனன் என்பேர் மூன்று வகைபட உலகம் சொல்லும்
கந்தவேள் அருளால் வேதம் கழறும்நன் னெறிஓ ராறும்
சொந்தமாப் பெற்றுப் பற்பல் தலந்தொறுந் துதித்துச் சூழ்ந்தேன்.

2

செந்திலான் தில்லை யூரான் திருவரங் கத்தான் ஆதி
உந்திசைக் கடவு ளாரும் உன்னிய பயன்நல் காராய்த்
தந்திரத்[து] எனைஏமாற்றித் தமிழ்க்கவி பலபெற் றுய்த்தார்
இந்திரர் தொழும்ஆ மாத்தூர் இறைவனும் இலிங்க மூர்த்தி

3

திருப்புக லூரான் தன்பால் திருப்புகழ் முதற்பல் பாடல்
விருப்புடன் பாடி, யாதும் வேட்டுள பயன்எய் தாமல்
நெருப்புறு புழுப்போற் சோரும் நேரம்வந்[து] என்னைப் பற்றி
மருப்புற ஆன்கட்[கு] ஈந்த வண்மையா தியகூ ணர்த்தி

4

கயிலையும் வெறுத்துத் தன்னூர் காணியா வசிப்ப ஈர்த்து
மயிலுறழ் உமையும் சொந்த மக்களும் சிற்சி லாடல்
பயிலவும் செய்வித்[து] இன்சொற் பாடல்வேட் டிலன்போற் றேற்றி
வயிணவப் பனவன் தன்பால் மலைமகள் பகர்ந்த வார்த்தை

5

கேட்டுவப் படையக் கண்டு கிளர்தனூர்ச் சரித முற்றும்
பாட்டுரு வாக்கும் தொண்டிற் படிந்தியற் றிடச்செய் கின்றான்
நாட்டுறு மிருகம் போலும் நரரும்ஓர்ந் துரைக்கும் சீர்ப்பேர்
ஆட்டுஞற் றுவனேல் பின்னும் அவன்துதி அனந்தம் சொல்வேன்

---

1 மூன்று வகை: திருப்புகழ்ச்சுவாமி, முருகதாச சுவாமி, தண்டபாணி சுவாமி யென்பன. நெறி ஓராறு - சௌரம், சைவம், சாத்தேயம், வைணவம், காணபத்தியம், கௌமாரம் என்ற சண்மதங்கள்.

2 தந்திரத்து - அருளும் பொருளுந்தருவதாய்ச் சொல்லி, பாடலைப்பெற்று ஏதுந்தராது விட்டதாம்.

3 மருப்புஉற ஆன்கட்கு ஈந்தவண்மை - இவர் திருப்புகலூரிற்பெருமான்மீது பாடல் இயற்றி அருளைச் சிந்தித்திருந்த சமயம், ஆமாத்தூர்ப்பரமன் இவர் மனவெளியிற் சென்று, பசுக்கட்கு, கொம்புதந்த சிறப்புடையது ஆமாத்தூர் அங்குவருக என்றருளினர். பசுக்கள் நலம் கருதியே தவமியற்றிய காரணம்பற்றி, அதன் சிறப்பைக் கூறிவரச்செய்தனர் என்பது.

4 தன்னூர் - திருவாமாத்தூர்; காணியா - சொந்தமாக; ஈர்த்து - வலிந்து தன்பாற் சேர்த்து. இவர், மூவாயிரம் பாடல் பாடுவதாகத் தொடங்கிய சமயம், பாடவேண்டாம் தவம்செய் என்றனர். உமையவள், பின்னர் வைணவ அந்தணர் முதலியோர்மூலம் இதைப் பாடத் தூண்டினர் என்பதாம்.

5 கொலை, புலை, ஆதிய தீச்செயலுடையோரை "நாட்டுறு மிருகம்" என்பது வடிவம் மனிதத்தன்மையில் நாட்டில் வசிப்பதொன்றுமே மாறுபாடு என்ற கருத்திலாகும்.

6

வேதம்ஆ கமம்முன் னும்நூல் விதிகளும் விண்ணும் மண்ணும்
ஏதமற்[று] இன்பம் எய்தும், எவரும்ஊன் அருந்தா ராவர்,
மாதமும் மாரி பெய்யும் மன்னெறி வழுவான் ஆவான்
சாதலுற் றவர்சில் லோரும் தரையின்மீண்[டு] ஒளிர்வா ரன்றே.

7

அருள்வலி உணர்ந்து தோய்தற்(கு) ஆசையும் கொள்ள மாட்டா
இருள்கவிப் புலவ ரெல்லாம் யான்மகி ழினர்அல் லாரே
தெருள்வட லூர ணுதிச் சிலர்நிலை தெரிய மாட்டார்
பொருள்விழைந் தொருவர் முன்சொல் பொய்சொலிப் புழுங்கு வாரே.

8

ஒண்மைய உணர்வான் ஓர்ந்தோர்ந்து உரைத்தகற் பனைகள் மற்றோர்
திண்மைசால் புலவன் பாட்டிற் றிகழ்தலும் பழமை, தீரா
வெண்மையோர் இகழ்வர் வீணே, விரகுளார் வித்தை வேண்டில்
பெண்மைஆண் மைகள்மாற் றிடும் பெறமுயன் றுழைக்கை நன்றே

9

தன்னுயிர் உய்கை வேட்டுத் தனிக்கதி அடைந்தோன் தன்னில்
மன்னுல கினர்ஈ டேறும் வாஞ்சையுற் றிறந்தோன் மேலே
என்னும்மூ தறிஞர் பொற்றுள் இடுதுகள் புனைந்த மாண்பால்
முன்னுள கதையோ(டு) யானும் மொழிகுவேன் சிறிது மாதோ,

10

எப்புரா ணமும்முன் சூதன் எழில்கொள்நே மியங்கா னத்தில்
ஒப்புர வுடைய மேலோர்க்(கு) ஓதல்என் றுரைக்கை தொன்மை
அப்புகழ் இதற்கு முண்(டு)உண்(டு) ஆதியாம் காந்தம் தன்னுள்
செப்பும்நா கரகண் டத்தில் தெரிதரும் பாற்ற தாமே

11

முந்துகா வியத்தின் ஓரோர் முறைகொடே மொழிந்து ளார்,ஊன்
வெந்துணல் கள்ளுண்(டு) ஆடல் மிகச்சொலல் சுருங்கக் கூறல்
செந்துநோ விரித்த லாதித் தீமையும் உவந்தார் பல்லோர்
இந்துநேர் நிறத்தி னுள்எற்(கு) ஈந்தவா(று) இசைக்கின் றேனே

நூல் வரலாறு முற்றிற்று.

ஆகக் கவி 24

---

8 ஒண்மைய உணர்வு - தெளிந்த அறிவு; வெண்மையோர் - ஆராய்வற்றமனத்தினர் விரகுஉள்ளோர் - அறிவில் மிகுந்தவர்.

9 முன்உளகதை - வடமொழியில் உள்ள வரலாறு. யானும் . . . சிறிது - அதன்பின் நடந்த வரலாறுகளையும் கட்டி இந்நூலையியற்றப்போகின்றேன் என்பதாம்.

10 நேமியங்கானம் - நைமிசவனம்; மேலோர் - தவமுடைய முனிவர்கள்

11 இந்து நேர்நிறத்தினுள் - சந்திரன்போன்ற வெண்ணிறக் கலைமகள்,

உ
சிவமயம்.

# பூர்வகாண்டம்
(முதற்பகுதி)

# முதலாவது நாட்டுச்சிறப்பு.

கலிவிருத்தம்.

1

கடல்வ ளைந்தபார் முகமெனும் கவின்தமிழ்த் தேயத்(து)
அடல்கு லாவுநற் றெண்டைமண் டலத்(து)அணிநடு நாட்(டு)
இடம்வி ராவுசீர் இயம்பிடின் முற்றுரு தெனினும்
நடவும் நூல்முறை நிமித்தமோர் சிறி(து)இங்ஙன் நவில்வாம்.

2

அளவில் பற்பலர் புகல்மொழித் தகைகுறித் தறைந்திட்(டு)
இளமைச் செம்மறிப் பழிப்புறுப் புலவர்நேர் எழிலி
களவு ருநடு நாடெனும் பெயர்ப்பொருள் கருதி
வளம ருமல்எம் மதியினும் மும்மழை வழங்கும்

3

நந்து லாம்பணை மருதமே குலவுநீர் நாடோ
உந்தும் ஐந்நிலம் பொலிநடு நாடதோ உயர்வில்
முந்து தன்மையா தெனிற்பெயர் எழுத்துறு முறையால்
கந்து கம்பயில் இளைஞரும் கழறுவர் கடிதே

4

நடுவெ னுந்தொடர் புடையதே நாடெனு நாமம்
கொடு விளங்குதற்(கு) உரியதாம், ஏனைய கொள்ளல்
கடுவின் மாய்நதிலான் ஈசுரப் பெயர்,கொடும் காரி
கெடும்இ ராவணன் முதலினர் பெறல்புரை கிறியே

---

2 இளமைச் செம்மறி - செம்மறியாட்டுக்குட்டி. புழிப்பு - ஒருவர்போன வழியியே தானும் பாடும் செயல். புலவர்நேர்எழிலி - குரங்கு, யானை, சிங்கம், சரபம், மேகம் என்ற ஐந்தும் புலவர்கட்கு உவமை. அப்படி மேம்பட்ட புலவர்கட்குஒப்பான (கைமாறுகருதாத) மேகம் எனக் கூறியதறிக.

3 மருதம் என்ற வயல்வளம் மிக்க நீர்நாடு சிறந்ததா; குறிஞ்சி, மருதம், முல்லை, பாலை நெய்தல் என்ற ஐவகை நிலங்களும் உடைய நடுநாடு உயர்ந்ததா? என்று வினவினல் அந்த இரண்டு நாட்டின் பெயர் எழுத்தின் வரிசைகொண்டு, பந்தாடும் சிறுவரும் விரைவில் சொல்வார் என்றுர். நீர்நாடு, நடுநாடு என்பதில், ந-முதலிலும், நீ-பின்னுலும் வருகிறது. ஆகவே ந முதலாகும். 'நடுநாடு' முதன்மை என்று குறிப்பிட்ட நயம் அறிக. நந்து-சங்குகள்; பணை - வயல்

4 நடு என்ற தொடர்புகொண்டே நாடு என்று நீட்டிக் கூறும் பண்பினைக் கொண்டது நடுநாடு ஒன்றேதான். ஏனைய நாடுகள் நாடு என்ற பெயர் கொண்டது எத்தன்மைத்தெனில் சனி-ராவணன் என்ற இருவரும், சனீச்சுரன், இராவணேச்சுரன் என்ற ஈச்சுரப் பெயரை கொண்டுள்ளதுபோல, கேலிக்குரியது ஈச்சுரன் விடமுண்டும் மாயாதவன், இவ்விருவரும் விடம்போன்ற கொடியவர் என்று கூறிய சிறப்பினை உன்னுக.

5

திடத்த வாத்திறம் பாதுறத் தன்பல சீரும்
நடத்த குந்ததென் பொருள்தரும் பெயர்நடு நாட்டால்
இடத்த கன்றசில் நாடும்ஒல் குறும்விதம் ஏமக்
குடத்த கைக்குமட் சால்பல நாணல்ஒக் குமரோ.

6

நட்டல் என்விருப் புணர்த்துசொல் எச்சமாய் நாமந்
தொட்ட போதிஙன் ஆமெனும் தெளிவுடைத் தூயோர்க்[கு]
அட்ட திக்கினர் வானவர் பிலத்தினர் ஆர்க்கும்
இட்ட மிக்கநா[டு] இந்நடு நாடெனல் இலங்கும்

7

வலஞ்செய் வார்விழை வுடன்தரு மாதைநா யகனூர்
பொலஞ்செய் மேருவும் நாணுற வளர்கனற் பொருப்பாய்ச்
சலஞ்செய் மால்அயன் சமரொ ழிந்[து] உலகுயத்தக்க
நலஞ்செய் வான்நடு நின்றதும் இந்நடு நாடே

8

முந்த ஆகுவும் முடிபெறக் கொடுத்தமா மூர்த்தி
சொந்த மால்விடை யுலகமுற் றளந்திடத் துணிந்[து]ஓர்
மைந்த ளுகிவந் தாடலாம் மாதையின் மகர்நேர்
அந்தண் ஊர்பல திகழ்நடு நாடதாம் அம்மா.

9

பொய்ப்பொ ருட்டிறத் தினர்தமக் கஞ்சுருப் பொறியால்
மெய்ப்பொ ருட்டகை யுணர்ந்தொரு நிலைபெறும் வேந்தன்
எப்பொ ருட்கும்மே லாயவீ டடைந்தநா[டு] எதெனிற்
கைப்பொ ருட்கொடை யினர்நடு நாடெனல் கடனே.

---

5 உறுதியாயும் மாறுபடாததுமான பல சிறப்புகளை, தன்னிடத்து நடத்தகுந்தது நடு(ம்) நாடு என்ற தன்மையிலமைந்தது நடுநாடு ஆகும். மற்றைய நாடுகள் நாடு என்ற பெயர் பெற்றது, பொற்குடத்தின் சிறப்புக்கு மண்குடம் நாணுவது போலாகும் என, மேலும் ஒரு சிறப்பு இதில் விளம்பினர்.

6 நள்,தெல்:நட்டல் - விருப்பமடைதல். எட்டுத்திசையினரும், பாதாளலோகத்தாரும், வானுலகத்தவரும் விரும்புந்தன்மையினது இந்த நடுநாடுஎன்பதை,அறிஞர்கள் அறிவார்கள்

7 பொலம்செய்மேரு - பொன்னுலானமேருமலை, கனற்பொருப்பு - நெருப்புமலை (திருவருணையில்உள்ளது) பிரமவிட்டுணுக்கள் போரிட்டசமயம் அவ் வடிவில் விளங்கினர். அந்தத்தலம் நடுநாட்டிலே உள்ளது.

8 ஆகு-எலி முடிபெற - அரசபதவியைஅடைய, மால்...ஆடல் - திருமால் உலகத்தை அளந்து, வாமனுகவந்து, மாபலிமன்னனிடம் மூன்றடிமண்பெறவந்த திருக்கோவலூர் உள்ளது நடுநாட்டிலேதான்.

9 அழியும் உலகப் பொருளை மதியாமல், உண்மைப்பொருள் இறைவனருளென உணர்ந்து அரசனுகி வாழ்ந்து முத்திபெற்ற, மெய்ப்பொருள் நாயனுர் நடுநாட்டிலிருந்தவரே யாம்.

10

வைத வன்தனைத் தடுத்(து)இனி தாளவல் வழக்குச்
செய்த ரன்பெரி தாடல்வாய்த் திடும்நடு நாட்டிற்(கு)
எய்த வேள்சிலைக்(கு) எதிர்கழை மலிவய் லினத்தைப்
பெய்த நெட்டிருற் சோலையைப் புகழ்வதோர் பிழையே.

11

ஊழி வல்வினைச் சமண்மதத் தொடக்கற வொழித்திட்(டு)
ஆழி யிற்கருங் கற்பெருந் தோணியுய்த்(து) அணிசால்
ஏழி சைத்தமிழ் பாடிய முனிவன்வந் திடலால்
வாழி நன்னடு நாட்டின்மாண்(பு) யாவரே வகுப்பர்.

12

அடைக்க லம்புகு புறவினைப் புரப்பதற் காத்,தன்
துடைக்கண் மாமிசம் தொட்டுடற் றசைஎலாம் சொரிந்தோன்
விடைக்கொ டிச்சிவன் தனைப்பனை நிழற்றெழா விதிகை
படைக்கை தீர்கதி பெறல்நடு நாட்டுள்ஓர் பதியே

13

இந்தி ரன்பிர மாநெடு மால்முத லினரும்
நொந்தி டைந்திட மதிளொடு திரிந்தவர், நொடியில்
வெந்தி டச்சிவன் சிரித்தெரித் திட்டவென் றியது
மந்தி பாய்பொழில் மலிநடு நாடதன் வரமே.

14

நரலைக் கல்லுடன் அமிழ்ந்திடா(து) அன்றுநா வரசர்
அரனைக் கண்டினி(து) இறைஞ்சிய பதிமுதல் அனந்தம்
கரவற் றோர்தொழத் திகழும்நன் நாட்டிசை கருதிப்
பரவற்[கு] ஒல்கும்ஓர் ஆயிரந் தலைத்தலைப் பணியும்.

15

உந்தி கட்பல வாவியை, வயல்களை ஒளிர்பூங்
கந்தி தென்னைவண் கதலிமாப் பலாஅடர் காவைப்,
பைந்தி னைக்குறிஞ் சியை,முத லியபொருள் பலவால்
முந்தி ஓதினர் பொய்யெலாம் மெய்ப்பட மொய்க்கும்

---

10 பித்தன் என்றிகழ்ந்த சுந்தரமூர்த்தியை, தடுத்தாண்ட சிறப்புடையது நடுநாடு. வேள்சிலை - கரும்பு. கழை - மூங்கில். கரும்பு, மூங்கில்போல வளர்ந்து செழித்துள்ள வயல்; இருல் - தேன். தெய்வத் தன்மையுள்ள நடு நாட்டை, சோலைகளாற் புகழ்வது தவறாகும்.

11 ஊழிவல்வினை - தொடர்ந்துவந்த தீவினை. முனிவன்-திருநாவுக்கரசர்; தோன்றிய நாடு நடுநாடு.

12 சொரிந்தோன் - சிபிச்சக்கரவர்த்தி, பனைமரம் தலவிருட்சமாகவுள்ள புறவார் பனங்காட்டூர் நடுநாட்டில் உடையது.

13 இடைந்திட - மனம் வருந்த; மதிலொடுதிரிந்தவர் - திரிபுரத்தசுரர். திருவதிகைத் தலம் நடுநாட்டில் உள்ளதென்பதாம்.

14 நரலை - கடல்; பதி - கரையேறவிட்ட நகர்; கரவு அற்றோர் - வஞ்சமில்லாதவர் தலைப்பணி – பாம்புகட்கு தலைமையான ஆதிசேடன்.

15 கந்தி - கமுகு; கதலி-வாழை; காவை-சோலைகளை. மெய்ப்பட - நிசமாகவே.

16

வேத வித்தகர்க்[கு] இகலவ னும்ஒரு வேந்தன்
சாத லுக்கொர்வெண் பாட்டுரைத் தான்முதற் றவர்தம்
ஆத ரக்கிரி ஆதிய சிலவுள, அவற்றின்
பாத பத்திரள், ஆனைகள், முதல்வளம் பலவே.

17

கந்த னேநிகர் குமரர்பற் பலர்பெருங் களிப்பும்
பைந்த கைக்குற வள்ளிநேர் சிறுமியர் பயிற்பும்
அந்த ரத்தினர் வந்துவந் தாடும்நல் அணியும்
இந்த நாட்டுறு குறிஞ்சிதோ றென்றுமுள் ளனவே

18

சீயம், வேழம்,வல் லியம்,மரை, மான்,முயற், செறிவால்
ஆய பல்வளங் களும்எடுத் தோதல்நல் அறம்அன்[று]
ஏய முல்லையிற் கண்ணனை அனையநல் இடையர்
வேய வாய்க்குழல் ஓசை,பால் தயிர்மணம் மிகுக்கும்

19

முல்லை வெண்முகை நகல்முத லாயசீர் முன்னி
எல்லை யில்லன பகர்ந்தனர் பற்பலர், யான்அத்
தொல்லை வேட்டிலன், இடியுறழ் ஓசையும், துணர்ப்பூங்
குல்லை யன்னசொல் நிறமும்ஓர் கிலர்வசை கொளவே

20

ஆலை யங்களிற் றிருடுநர் முதற்கொடி யவர்தம்
காலைக் கைகளைத் தறித்திடல், உடற்கழு வேற்றல்,
ஓலைத் தூதர்பால் உயிரைஒப் பித்திடல், உஞற்றும்
பாலை என்றுமோர் சிறிதிடம் உளதெனப் பகர்வார்

21

மழைபெய் யாமை,கள் ளியிற்கனல் பற்றிடல், வன்பாம்(பு)
உழையிற் சிற்றெலி ஒதுங்கிடல், நாயின்நா உகும்நீர்
விழைவு மென்முயற் குருளைகொண் டிடல்,முதல் வியன்கள்
பழையர் பாலையிற் கியம்பினர் யானவன் பகரேன்.

22

காளி யூட்டமும் அலகையின் ஆட்டமும் கள்வர்
வாளின் வன்மையும் பகர்வதாற் புண்ணியம் வருமோ?
வேளில் மிக்கவர் மருதமாம் பகுதியை விண்ணோர்
ஆளி வேட்டனன் எனில்அதன் வளப்பம்ஆர் அளப்பார்

---

16 வேந்தன் - அகித் என்ற மிலேச்ச மன்னன். பாட்டு உரைத்தான் - குகை நமசிவாயர்; ஆதரக்கிரி - ஆதரவாயிருந்த திருவண்ணாமலை; பாதபத்திரள் - மரச்சோலை.

17 குறிஞ்சி - மலையும் மலைசார்ந்த இடமும் உடையது நடுநாடு.

18 சீயம் - சிங்கம்; வேழம் - யானை; வல்லியம் - புலி; மரை - மிருகம்; முல்லை - காடும், காடுசார்ந்த இடமும் உள்ள பகுதி; வேய் - மூங்கிலால் ஆகிய குழல்.

21 உழை - வளை; நாஉகும்நீர் - நாயின் வாயிலிருந்து சொட்டும் நீர். குருளை-குட்டி.

22 விண்ணோர் ஆளி - தேவருலகை ஆள்பவனான இந்திரன், மருதநிலத் தலைவன்.

23

வயல்வ ரம்பினில் அன்னம்வந்(து) உறங்கலும், மள்ளர்
இயல்பிற் கட்குடித் தாடலும், கயற்றிர ளேர்பும்,
புயலே நேர்குழற் கடைசியர் கிறிப்பெரும் பொலிவும்,
செயலும், பேசிநாட் கழிப்பவர் சிலரலர் பலரே

24

நெட்டி லைப்பசுந் தாழையங் கான்மலி நெய்தற்
பட்டி னங்களும் சிற்சில உள்ளன. பார்த்தேன்
மட்டில் சீர்வரு ணனைத்திறற் கொற்றியை வணங்கிக்
கொட்டில் ஈழரும் பரவரும் நனிகுடி கொளவே.

25

புன்னை யும்,கரும் பனைகளும், புளினமும், புகழ்ச்சேய்
அன்னை காதுறழ் வள்ளையும் குமுதம்ஆ தியவும்,
மின்னை வெல்லெழிற் பரத்தியர் ஆடலும் விரவும்
தன்னை நேர்நடு நாட்டுறும் நெய்தலந் தலத்தே

26

சிலைகொள் வேளுடற் றீய்த்தவர் தம்திரி கூட
மலையிற் பொங்குமா கடலும்,மைந் நாகம்வா ரியினும்,
அலையு மாறுணர் புலவர்,ஓர் நிலத்தைஐந் நிலமென்
கலைஞர் நூல்விதிக் கட்டுணர் கலைமகள் கரியே

27

பருவ தங்களிற் பனைகளும், வாழையும், பணைசால்
மருதந் தன்னில்முட் டாழையும், புன்னையும், மற்றும்
ஒருநி லப்பொருள் வேறொரு நிலத்தும்உற் றுளவே
வெருவிச் சிற்சிலர் பொருத்தமில் பொய்சொல்வார் வீணே.

வேறு

கலித்தாழிசை.

28

போகரும் அவாவும்நனி பூசைசெயு மாற்றல்
மாகரும் அவாவுதல் மறந்தபதிச் சூழல்
ஏகரும் அவாவுடையர் இட்டமுற வேண்டி
நாகரும் அவாவுமிசை நண்ணும்நடு நாடு.

---

24 தாழையங்கான் - தாழைச்செறிவு; நெய்தற்குரியது, நெய்தல் - கடலும் கடல் சார்ந்த இடமுமான பகுதி நடுநாட்டுண்டு; கொற்றி - துர்க்கை; ஈழர் - பரவர், கடற்கரை வாசிகள்.

26 திரிகூடமலை - குற்றாலம்; அங்கு பொங்குமாகடல் என்ற இடமுள்ளது. கடலுள் மை நாகம் என்ற மலை யுள்ளது. மலையிற்கடலும், கடலில்மலையும், கலந்துள்ளவியன்.

28 போகர் - இச்சையில் விருப்பமுடையவர்கள் வழிபடுவதனால், தேவர்களும் அன்பு மயமாவர். அத்தகைய திருவாமாத்தூரானது பாதாள லோகவாசிகளான நாகரும், தேவர் களும் விரும்புகின்ற சோலைவளமுடையது நடுநாட்டினது.

29

மானசிவ யோதிகம்வ ரப்பெறுமுன் மாயார்க்[கு]
ஆனசிவ யோசனைசெய் அன்பர்மலி தானம்
ஊனசிவ யோடுறழ்கண் ஒள்ளிழையொர் பாகன்
ஞானசிவ யோகநிலை நல்கும்நடு நாடு

30

எல்லவன் உவாமதி யிலங்குகனல் கண்ணும்
வல்லவன(து) ஆடல்மலி மாதைநகர் வாழ்கை
பொல்லவ ருடன்பழகு புன்மையில ரேயாம்
நல்லவர்எ லோருமிக நாடும்நடு நாடு

31

வண்ணநிலை யும்தெரியும் வண்புல வராணர்
எண்ணல்பொரு ளாதலின், இளங்கவிஞர் பேசும்
கிண்ணமதி யேன்,அருள் கிளர்ந்தநடு நாட்டில்
விண்ணவரும் மெச்சிய வியன்சிறிது சொன்னேன்.

32

மான்மழு அணிந்துமலை மங்கையொடு செங்கை
வேன்மதலை பாலுற விடைப்பரி உகைப்போன்
கான்மலர் நினைந்தவர் கடைக்கணருள் தன்னால்
ஆன்மகிழும் மாதைநக ரத்தின்அணி சொல்வாம்.

நாட்டுச்சிறப்பு முற்றிற்று

ஆகக் கவி 56



29 மானசிவயோதிகம்-மால்நசிவயோதிகம்: இச்சைதவிர்ந்த கிழப்பருவம். மாயார்க்கு ஆன,சிவயோசனை - இறப்பற்றவர்க்குரிய தவ எண்ணம்; ஊன்அசிவை - ஊனில்பாய்கின்ற வாள்போன்று கூர்மை; உறழ்கண் - ஒத்தகண்ணினையுடைய உமைபொருபாகன். ஞான சிவ யோகநிலை - மெய்யறிவுதரும் தியானசெபவழிபாடு.

30 எல்லவன் - சூரியன், உவாமதி - முழுச்சந்திரன், கனல் - நெருப்பு; பொல்லவர் கொலையுடையார், புன்மை - இழிநிலை.

31 “ வண்ணநிலையும் தெரியும் மாண்புலவர் ” என்றதால், மற்ற இலக்கணத்துடன் வண்ணமும் தெரிந்த என்னும் பொருளில்வந்த இறந்தது தழீஇய எச்சவும்மையாம்.

32 விடைப்பரி-இடபமாகியவாகனம்; உகைப்போன்-செலுத்தும்பரமன்; கால்மலர்-திருவடியானபூ; ஆன்மகிழும்மாதை - பசுக்கள் கொம்புபெற்றுக்களித்த திருவாமாத்தூர்.

இரண்டாவது

## நகரச் சிறப்பு.

அறுசீர் விருத்தம்.

முத்தமிழ்ப் பனுவற் கூட்டில் முதலொலி யலந்தா திக்கே
ஒத்தது; தெய்வங் கட்குள் உமைகண வனேயே போன்ற(து);
உத்தம நெறிகள் தம்முள் உயிர்கொலா விரதம் ஏய்த்த(து);
அத்தமா தியமுச் சீரும் அவிர்தரு திருவா மாத்தூர். 1

நீண்டஆ யுளும்பல் வாரும் நிகமஆ கமஞ்சொல் வீறும்,
காண்டகு பம்பை யாற்றங் கரைப்பெருந் திருவும், கங்கை
வேண்டவார் சடையிற் றங்கி வெற்(பு)அணங் கினையோர் பாகத்(து)
ஆண்டநா யகன்பே ராட்டும் அமைந்தது திருவா மாத்தூர். 2

கடிகமழ் கொன்றைச் சென்னிக் கவின்முதற் பிறவும் நெஞ்சிற்
குடிகொளச் சிவவே டத்திற் குறைவிலா நிறைவோ ராகிக்
கொடியவர் தம்மை வென்று குணநலம் உலகிற் காட்டும்
அடியவர் குழாத்தைத் தன்பால் அழைப்பது திருவா மாத்தூர். 3

இப்படிப் பலபல் பாடல் இயம்பினும் இயம்ப லாகும்
அப்படிப் பகர்தல் இந்நூற்(கு) அடுத்ததன் றுத லால்ஈண்(டு)
எப்படி உரைத்திட் டாலும் இனிதெனும் இளைஞர் நாண
ஒப்படிக் கவிகள் தம்மால் ஓதுதும் உவந்த வாறே. 4

அந்தணர் தன்மை

நான்முகப் பிரமன் ஊரில், ஞாயிறூர் இரதத் தட்டில்,
மான்முத லினர்சூழ் வெள்ளி மலைநெடும் சாரல் தன்னில்,
வேன்முனை வயவர் தாமும் வெருளும்வீ றுடுவாழ் மேலோர்
போன்முதற் குலத்தோர் பல்லோர் புனிதராய்ப் பொலிகின் றுரே. 5

---

1 பனுவற்கூட்டம் - தமிழ்ப்பிரபந்தவகை தொண்ணூறு. அவற்றுள் ஒலியலந்தாதி, சிறப்பினது-வண்ணமென்ற சந்தப்பாட்டு முப்பதுகொண்டு அறுபத்துநான்கு கலையுடைய தாய் அந்தாதித் தொடர்பிற்பாடப்பெறுவது. இதுவரை யாருமே பாடாதது. சுவாமிகள் அந்தநூலை முதலொலியலந்தாதி, பேரொலியலந்தாதியென இரண்டுபாடினர்.பிரபந்தத்தில் ஒலியலந்தாதி சிறப்பிடம் பெற்றதுபோல, தலங்களுள் திருவாமாத்தூர் சிறந்ததென்றுர். ஏய்த்தது - ஒப்பானது. அத்தம் - பொருள்; முச்சீர் - அறம், பொருள், இன்பம் என்பன.

2 நிகம ஆகமம் - வேதமும் ஆகமமும். ஆகமம் இறைவன் கூறியது. வேதம் பிரமன் கூறியது. வார்சடை - நீண்டசடை, வெற்பு அணங்கு - இமயமலையிற்றோன்றிய உமாதேவி. ஆண்டநாயகன் - அபிராமேசர் என்றும், உமையவளைப் பாகத்திற்கொண்ட என்று கொள்க. ஆண்டநாயகன், அபிராமேசர், அழகியநாதர் என்று மூன்று பெயருண்டு.

5 பிரமன் ஊர் - சத்தியலோகம். ஞாயிறு ... தட்டு - சூரியன் செல்கின்ற தேர்த்தட்டு வெள்ளிமலை – கயிலாயத்தின் சாரல். இங்கு வீரரும் போற்றும் நியதியுடைய அந்தணர் பலர் வாழ்வார்கள்.

பார்ப்பன மகளிர்பண்பு

அன்னவர் மனைவி மாரும், அருந்ததி, அநுசூ யைத்தாய்,
முன்னவிர் தகைஉ லோபா முத்திரை, கவுரி யாதி
நன்னய மடவார் போலும் நலமொடு குலவி நாமக்
கன்னல்வில் மதனும் அங்கிக் கடவுளும் வெருள்மாண் புற்றார். 6

ஷை ஆண்மக்கள்இயல்பு

ஆயவர் மனைச்சி றாரில் ஆண்மகர் அன்னம் ஏற்றுண்(டு)
ஏயசாத் திரபா டங்கள் இயம்பிவெள் ளியபல் லோராய்த்
தாயர்தந் தையர்பேர் ஆர்வச் சலதியிற் குளிப்பக் கண்டு
தூயவாம் மனமார்க் கண்டத் தொகைஎனக் கவின்றார் மாதோ. 7

ஷை சிறுமியர்நிலை

பார்ப்பனச் சிறுமி மார்தாம் பழகுகைக் கழங்(கு)ஓர் ஏழும்,
சீர்ப்படும் மூன்றே யாகித் திகழும்அம் மனையும் கோலும்,
கார்ப்பரும் பாந்தள் போலும் கருஞ்சடைச் சுருட்பூஞ் சீரும்
நீர்ப்படிந் திடச்சோம் பாநன் னெறியுமுற் றுயர்வார் மன்னோ. 8

அந்தணர்வீதி இயல்பு

அக்கிரா கரத்தில் வேதத்(து) ஆரவா ரமும்,நெய்த் தூம
முக்கிய மணமும், முந்நூல் முறைப்படி முறுக்கும் கோலும்,
சுக்கிரன் புரையும் சில்லோர் சொல்வழி சுழலாப் பண்பால்
மிக்கியல் கருணை தானும் விரதம்ஆ யிரமும் மேவும். 9

மன்னவன் மாட்சி

புன்னகை ஒன்றால் ஒன்னார் புரமெரித் தவர்,ஆ மாத்தூர்
மன்னவன் தன்மை யாவும் வகுத்திடின் முடியா; வான்தோய்
மின்னவிர் வேல்வாள் மாட்சி, விதிமுறை விலக்கா நீதி
ஒன்னலர்ப் பணியா வீரம் உயர்தயைக் கொடையும் சாலும் 10

---

6 அருந்ததி - வசிட்டர் மனைவி. அநுசூயை - அத்திரி மனைவி. உலோபாமுத்திரை - அகத்தியர் மனைவி; கவுரி - உமையவள் (திருவிளையாடலில் வரும் கவுரியையும் கொள்க) இத்தகையார் போல, அந்தண மாதர்கள் மன்மதனும் அக்கினியும் நாணவிளங்குவார்கள். நியம விரதகாலத்தில் மன்மதன் கணை ஏவான், கற்பு நெறியில் அக்கினி தனது வன்மை குறைவான் என்க.

7 அந்தணச் சிறுவர்கள், குருகுல வாசமுடையராய், பிச்சை யமுதுண்டு, சாத்திர பாடம் பயின்று, வெண்மையான பல்லினராய் (தாம்பூலந்தரியாமல்) மார்க்கண்டேயர் போல, தாய்தந்தையர் மகிழ வாழ்வார்கள்.

8 அந்தணச் சிறுமியர்கள், கழற்காய் ஏழும், அம்மனை மூன்றும் கையிற் கொண்டு, கோலாட்டம் பயின்று, கரும்பாம்பு போன்ற சடையினராய்ப் பூச்சூடி, குளிர் நீரில் முழுகச் சோம்பலின்றிய நியதியினராய் உள்ளனர்.

9 அந்தணர் வீதி, வேதஒலி, யாகப்புகை, பூணூல் முறுக்கும் கருவி, அசுர குருவான சுக்கிரன் போன்றவர் கூறுமுறைப்படி கொலை வேள்வி செய்யாத சீவகருணையுடையராய் வாழ்கின்ற சிறப்புடையது.

10 ஆயுதப் பயிற்சி, நீதி தவறாத ஆட்சி, பகைவரிடத்துப்பணியாத வீரம். ஈகை இரக்கம், உடையவனாக அரசன் விளங்குகின்றான்; மேலும்.

அமைச்சர் பண்பு

வருவன உணர்ந்து சொல்லும் மந்திரி, வணங்கா மன்னர்ப்
பொருதழித்(து) உவக்கும் சேனை, பொன்,மணி, பூண்,பட் டாடை
இருநிலத் தினர்எல் லோரும் ஏத்திசை, முனிவோர் தொண்டு
கருவிநூற் கழகம், மாதைக் காவலன் கொடுவாழ் வானே. 11

வணிகர் தன்மை

மாயன்நேர் மாதை மன்னன் மதகரி முதற்பல் சீரும்
ஏயஇங்(கு) உரைப்பார் பல்லோர் எழில்நகர்க்(கு) அணிபூண் என்னப்
பாயஆ வணத்திற் பற்பல் பண்டமும் விற்கும் நாய்கர்
தீயதாம் திருட்டொன் றின்றிச் செப்புசொற் பிழையா(து) உள்ளார். 12

களவில்சீர்ப் புகார்வெண் காடன், கரியமா ணிக்க செட்டி
அளகையா திபன்நேர் செல்வத்(து) அருமைவா ணிபர்மிக்(கு) உற்றார்
இளமையிற் கலிப்பட் டார்க்கும் ஏனைஆ துலர்க்கும் ஈந்(து)ஈந்(து)
உளமகிழ் உதாரப் பண்பால் உரியதம் உலோபம் நீப்பார். 13

உழவின் மேன்மை

உழுதொழி லன்றி ஒன்றும் உயர்ந்ததன் றெனநன்(கு) ஓர்ந்து
விழுமிய பைங்கூழ்ச் செய்வார் மேழியங் கொடியின் மேன்மை,
அழுதகை மறந்து பாடும் ஔவை,வள் ளுவரும் சொன்னார்
எழுதரு மறையின் முன்னைச் சடங்கும்ஏர் அதனா லாமே. 14

வயல்வளம்

கன்னலும் நெல்லும் சேம்பும் காமர்மஞ் சளுந்தோய்ந் துள்ள
நன்னலக் கழனி தன்னால், நால்வகைப் பயனும் எய்தும்
வன்னமா னிடராற் சீர்த்த மாதைமா நகரில் என்றும்
இன்னல்வெங் கலிநோய் சேரா(து) என்பது திண்ணம் தானே. 15

வேளாளர் சிறப்பு

அந்தணர் ஆதி யோருக்(கு) ஆவன முழுதும் நல்கி
வந்தமு(து) இரக்கின் றோர்க்கும் வளம்படும் உணவிட்(டு) அன்பாற்
சந்ததம் தலைமேற் கொண்டு தக்கவர்த் தெரிந்தும் ஈவார்
கந்தமார் குவளைப் பூந்தார் கவின்தரு மார்பி னோரே. 16

---

11 'மந்திரிக்கழகு வரும்பொருள் உரைத்தல்' என்றவாறு அமைச்சரும், திறைசெலுத் தாத குறு மன்னரை வெற்றிகொள்ளும் சேனையும்,உலகம்புகழும் கீர்த்தி-தவசிகளிடத்திற் பணிவு. ஆயுதப்பயிற்சிச்சாலை. பொன், பட்டாடை முதலியனவும் அரசன்பால் உண்டு.

12 ஆவணம் - கடை. நாய்கர் - வாணிபமுடையோர்; திருட்டு - பொய்.

13 புகார்வெண்காடன் - பட்டினத்தார்; அளகையதிபன் - குபேரன்; ஆதுலர் - இரப்பவர்.

14 விழுமிய - மேலான; பைங்கூழ் - பயிர்; மேழிக்கொடி - வேளாளர்க்குரியது; முன்னைச்சடங்கு-யாகசாலைக்கு முதலில் ஏரினால் உழுது பின்வேள்வித்தானம் அமைத்தல்

சாலியும் கழையும் நல்கும் தரளம்ஆ தியஅ ளாவும்
காலினம், பொலப்பூண் நாழிக் கணம்,பல கலப்பை தாற்றுக்
கோலினம், பகடும் ஏறும் குலவிய கொட்டில், கட்டில்
போலிரும் பூதனேகம் பொலியும்வே ளாளர் வீட்டில் 17

மற்றுள குலத்தி னோர்தம் வாழ்க்கையும், தொழிலும், வாய்ப்பப்
பெற்றுறு திருவும், உள்ள பேசிடும் பிரியம் இல்லேன்.
முற்றுலங் கினர்யாம் மேலென் மொழிவழி கலகம் உண்டாய்ச்
சொற்றுள எனையும் ஏசித் துயரொடு சுழல்கை ஓர்ந்தே 18

நகர்வலம்

இந்திரப் பதம்வந் தாலும் யாதொர்சிற் றுயிரும் கொன்று
வெந்தினி(து) அருந்தொண் ணு(து)என் மெய்ம்மொழி விளம்பி
தந்தியன் னவரே வாழும் தனித்திரு வாமாத் தூர்ப்பால் [ஆர்க்கும்
மந்திர மாட கூட வளனெலாம் வகுப்ப அன்றே 19

விண்டொடும் மேடை தோறும் விதுவுலா விடலும், வேற்கண்
ஒண்டொடி மடவார் ஆடல் உளுற்றுபே ருவகைப் பண்பும்,
கண்டொகு கலாப மஞ்ஞை களிமலி பொழிற்பல் சீரும்,
பண்டொரு கோடி கோடி பாவலர் பகர்ந்துள் ளாரே. 20

வீதி உயர்வு

மருவளர் கொன்றைச் சோலை மலியும்ஆ மாத்தூர் மன்னும்
தெருவளங் கருதும் தோறும் தெற்றியா தியமுந் தாமல்
ஒருவள்அன் றென்பிற் றேன்ற உரைத்தவன் முதலோர் பாதத்
திருவள வியதூள் ஓர்வார் பதங்கள்என் சிரத்தின் பூணே. 21

மடங்களின் மாண்பு.

பொன்னும்நன் மடவார் தாமும் பூமியும் விரும்பா தாராய்
பன்னும்ஏ டணையை வெல்வான் பரிந்துழைப் பவராய்ப் பத்தி
என்னும்ஆற் றொழுகு வோராய் இரக்கவை ராக ஞானம்
மன்னுமெய் யடியார் வாழும் மடங்கள்பற் பலவாம் மன்னே. 22

கற்றோர் சிறப்பு.

**அழகனூர் ஆமாத் தூரின் அணிநெடும் தெருக்கள் தோறும்**
**பழமறை ஆக மங்கள் பைந்தமிழ்ப் பனுவல் கற்போர்**
**குழலிசை யாழ்கற் கின்றோர் கொற்றவில் வாட்போர் கற்போர்**
**கழகம்ஆ யிரம்எந் நாளும் கவின்தருங் கண்கள் போன்றே.** 23

---

17 சாலி - நெல், கழை - கரும்பு; தரளம் - முத்து; பொலப்பூண் - பொன்னுலான பூண்கட்டிய; நாழி - படிபோன்ற அளவு கருவிகள்; தாற்றுகோல் - உழவுகோல். பகடு - ஆணெருமை; ஏறு - காளை; இரும்பூது - வியப்பு

19 ஆர்க்கும்-ஆரவாரிக்கும்; தந்தி அன்னவர் - யானை போன்ற பெருமிதமுடையவர்.

20 மஞ்ஞை – மயில்கள்; பொழில் - சோலைகள்.

21 தெற்றி - வீட்டின் அழகு. ஒருவள் - பூம்பாவை; திருஞான சம்பந்தர் போன்ற அருளாளர்கள் பலரது திருவடி ஊன்றிய சிறப்புள்ள திருவீதி என்று கருதிப்போற்றும் அன்பினர் பாததூளி என் சிரசுக்கு ஆபரணம்.

22 ஆற்று - வழியில்; ஒழுகுவோர் - தவ முயற்சியில் ஈடுபடும் பெரியோர்கள்.

புலவர்மேன்மை

பயனில்சொல் கற்கின் றூர்க்கும், பாவநூல் படிக்கின் றூர்க்கும்,
வியனுறும் பொய்க்கே ஆர்வம் மிகக்கொள்வல் வினையுள் ளார்க்கும்,
மயல்படும் வாதே நண்ணி மாதவம் இழக்கின் றூர்க்கும்,
புயல்மகிழ் திருவா மாத்தூர்ப் புலவர்பேர் இகலா வாரே. 24

கல்வியால் அடையும் பேறு, கண்ணுதற் பெருமான் அன்பால்
வல்வினைத் தொடர்பு நீங்கி, வாஞ்சித்த வண்ணம் ஆடிச்,
செல்விகோன் வியப்ப வாழ்ந்து, சிவகதி பெறலென்(று) ஓரார்
நல்விதி யினர்சேர் மாதை நாவலர்க்(கு) இனியர் ஆகார். 25

இசைவல்லார்

மாதையூர் வீணை வல்லார் வளம்பட இசைக்கும் தோறும்
சூதைநேர் முலைப்பைந் தோகைத் தொகையுறழ் சுரமின் னூரும்,
ஏதையும் பிறர்பாற் சொல்வான், இவுளியா னனன்போல் வாரும்
பேதையேம் இருந்தென் என்னப் பெரிதுளம் வருந்து வாரே 26

வீரர்கள்

மின்றிகழ் சடிலத் தம்மான் விளங்கும்ஆ மாதை யூர்வாழ்
வென்றிவேல் வீரர், தம்பேர் விளம்பினும் வேற்றார் வேந்தர்
நன்றியைந்(து) அநீதி யாவும் நழுவவிட் டொழுகு வார். தாம்
பொன்றிடப் பொருது விண்ணூர் புகும்படி புரிவார் என்றே 27

குராவணி குகன்பிற் றேன்றும் குழகனை, முசுக்கோ மானை,
இராகவன் தன்னை, வீமற்(கு) இளையனைப் போல்வில் வீரர்
அராவமர் சடிலத் தால்ஆ மாதையுற் றவிரும் பண்பார்
தராதலத் தொடுவிண் ணூரும் தானவர் பகைதீர்ந் துய்யும் 28

பிரமனும் வியாசன் றனும் பிறந்தசங் கரனும் பேசும்
கிரமசித் தாந்தந் தேறிக் கிளரு(ம்)மா தவர்கொண் டாடும்
வரமலி பசுக்கள் வாழ்வான், வாட்படை அணிந்த வீரர்
பரமர்ஆ மாதை யூரிற் பற்பலர் வளர்கின் றூரே. 29

---

24 பயனில் சொல் - உயிர்க்கு நலந்தராத மொழி. பாவநூல் - கற்பனைக் கதையாதி யன கற்பவர்; மாதைப்புலவர்க்கு இகலாவார்கள்.

25 வல்வினை - பிறப்பு இறப்பு; செல்விகோன் - திருமால்; வியப்பு – உலகநன்மை கருதித் தவம்புரிதல்.

26 சூதைநேர் – சொக்கட்டான் காய்ஒத்த; சுரமின்னூர் - அரம்பையாதியர். ஏதையும் பிறர்பாற் சொல்வான் - நாரத முனிவர்; இவுளி ஆனனன் - குதிரை முகமுடைய தும்புரு முனிவர். இத்தகையோர், இசைவல்லவர்கள். இவர்களும் மாதைவாழும் இசைப் புலவரைக்கண்டு நாணுவார்களாம்.

28 குகன்பின் தோன்றும் குழகன் - வீரவாகுதேவர். முசுக்கோமான் - முசுகுந்த அரசன்; இராகவன் - இராமபிரான்; வீமற்கு இளையவன் - அருச்சுனன் போன்ற வீரர்கள் மாதையில் வசிப்பபதால். மண்ணுலகமும் விண்ணுலகமும் பகையின்றியிருக்கும்

29 பிறந்த சங்கரன் - சங்கராசாரியர். கிரம சித்தாந்தம் - தெய்வம் ஒன்று, பாவனைப்படி பலவா விளங்கும் என்பது. காலடிச் சங்கரன் பிறந்தவர் - கயிலைச்சங்கரன் பிறவாதவர்.

கணிகையர்ப் புகழ்ந்திட்(டு) உண்மைக் கற்புடை மகளிர்த் தாழ்த்தல்
அணிஎனப் பகர்ந்திட் டாலும் ஆர்வமிக் குறும்சில் மாந்தர்,
பணிலவார் செவியார் மாதைப் பதிவளம் அறியார், பத்தித்
துணிவொடு தொண்டு செய்யும் தூயவர் உணர்வார் மாதோ 30

வேறு

## கலித்தாழிசை.

முன்ன வின்றவர் தம்முறை முன்னிடா(து)
இன்ன வா(று)இசைத் திட்டதற்(கு) ஏங்குறும்
சின்ன நெஞ்சின ருங்களிப் பச்சிறி(து)
அன்ன வண்ணம் அறையலுற் றுமரோ 31

மதிலின் உயர்வு

வீழ்ந்த செஞ்சடை வித்தகன் மாதையூர்ச்
சூழ்ந்த மாமதிற் றேற்றம்நன்(கு) ஓர்ந்திடில்
வாழ்ந்த கற்பு மடந்தையர் தானையும்
காழ்ந்த வீரர்தம் சேனையும் காட்டுமே 32

மாதை மாநகர் வான்மதில் வான்தொடல்
ஏதை ஒக்கும் எனச்சிறி(து) எண்ணிடில்
சீதை கேள்வனும் தேனுவும் சீர்பெறும்
காதை மான்மியம் என்னக் கவின்றதே 33

ஞாயில் தோறுறை யும்கண நாதர்தாம்
வாயில் நீத்துவிண் வாய்வரும் வண்சுடர்ப்
போயி ருதுபொ றுத்திருக் கின்றவா(று)
ஆயின் மாதை அழகர்கண் என்னவே. 34

மன்னும் சக்கர வாளம காமலை
என்னும் சூழ்ச்சி எழில்மதில், மாதைவாழ்
பின்னும் வார்சடைப் பிஞ்ஞகன் பெய்கழல்
மின்னு மாறு விளங்கொளி மேயதே. 35

---

30 கணிகையர் - பொதுமகளிர். பணிலவார் செவி - சங்குகுண்டல முடையகாது பரமனுக்குண்டு.

32 திருவாமாத்தூரில் மதில் உயர்ந்திருப்பதானது, கற்புமாதர்பரல் ஒழுக்கமும், வீரர் களிடத்தில் வெற்றிமிக்க சேனையும்போல் சிறந்துள்ளது. மேலும்

33 சீதை கணவரான இராமபிரானும், காமதேனுவும், சிறப்படைந்த இதிகாசமான இராமாயணத்தையும், சிறந்த மான்மியங்களையும்போல உயர்ந்துள்ளது.

34 மதில்கள் மீதுள்ள பூத வீரர்கள், வாசல்வழி செல்லாமல் வான்வழி செல்கின்ற சந்திர சூரியர்களைத் தாக்காமலிருக்கிறார்கள். ஏனெனில் சிவபெருமான் இருவிழிகளல்லவா அவை என்ற பண்பு காரணமாக. கணநாதர் - பதுமைகள்; ஆயின் - ஆராய்ந்தால்

35 சக்கரவாளகிரிபோன்று உயர்ந்தது மதிற்சுவர், அந்த மதில்களின்மீது அவை செல்லும்போது பின்னிய சடைப் பரமன் அணிந்துள்ள வீரகண்டைபோல ஒளிவிட்டுத் திகழ்வனவாம்.

ஈசன் மாதையில் என்கணன் செய்ததோ
வாச மாலைத்தெய் வத்தச்சன் வைத்ததோ
நாச மின்றிவிண் ணுட்டினர் கண்டுளம்
கூச நீடும் கொடுமதிட் குன்றமே. 36

கருணை, பாசக் கழிவு,முக் கண்ணன்அன்(பு)
ஒருமை ஞானம்,ஒக் கும்பெரு வாயில்நான்(கு)
இருளில் முத்திவந் தெய்தினர்க்[கு] ஈவதாம்
அருமை மாதை அணிமதிள் உற்றவே 37

கதவமைப்பு

கொலையும், கா்மமும், குன்றவில் லாற்ருெழா
நிலையும், நானென நீடகங் காரமும்,
தலையிற் கங்கை தரித்தவர் மாதைசூழ்
அலைவில் ஆரைக் கதவங்கள் ஆயவே. 38

மேகம், மாமதி வெஞ்சுடர் ஆதியாம்
மாகம் ஏகுவ வந்திளைப் பாறிட
நாக பூடண நாதர்தம் மாதைவாழ்(வு)
ஆக நீடும் அணிமதிட் சென்னியே 39

அரண் சிறப்பு

வாத வூர்முனி அன்பும்,நல் வாக்கிறை
தாத மார்க்கமும், சம்பந்தர் ஆண்மையும்,
போதச் சுந்தரர் போகமும், பூதர்சூழ்
நாதர் மாதையில் நால்அரண் போல்பவே 40

சரியை முற்படச் சாற்ருெரு நால்நிலைப்
பெரியர் செய்தவம் பெய்கல மேஎனத்
தெரியு மாதைச் சிகரியின் சீர்சொலற்[கு]
உரிய நாவுர கேசன்உற் ருனரோ 41

---

36 பிரமன் படைத்ததா - அல்லது, தேவதச்சன் உண்டாக்கியதா, என்று தேவர்கள் கண்டு கண்கூசும்படி ஒளியையும் உயர்வையுமுடையது மதில்கள்.

37 சிவகருணை, பாசநீக்கம், இறைவன் பத்தியான ஞானம், முத்திவீடு, என்றவாறு மதிள்களின் நாற்புறமும் நான்கு வாயிலமைந்துள்ளன.

38 சிவகொலை - இச்சை, அகங்காரம், மமகாரம் இவை கதவுகளாய் உள்ளன. இறைவனைக் காணவொட்டாமல் மறைத்து நிற்பன இவை என்பதாம்.

39 மேகமும், சந்திரனும், சூரியனும் பிற உடுக்களும், வான்வழியே செல்லும்போது இளைப்பாறித் தங்குதற்குரிய இடமாக மாதையூரின் மதிலினது உச்சி உயர்ந்திருக்கிறது.

40 மணிவாசகர் அன்பும், நாவுக்கரசர் அடிமைத்தன்மையும், ஞானசம்பந்தர் வீரமும் சுந்தரர் இன்பப்பேறும் ஆகிய நான்கும் அரண்களாக நாற்புறமும் உள்ளன.

41 சரியை, கிரியை, யோகம், ஞானம், என்ற நான்கு நிலைகளையுற்ற மேலோர்களது தவத்தின் சேமிப்புபோல உயர்ந்த மாதையின் கோபுரத்தின் சிறப்பைக் கூற, ஆதிசேடன் ருன் உள்ளான். எனவே மற்ருேர் கூற இயலாதென்பதாம்.

வேறு

கலிவிருத்தம்.

அகழியின் மேன்மை

உலகைச் சூழ்கடல் உவர்மிக் குள்ள(து)ஈண்(டு)
இலகு மாதைசூழ் அகழி யின்சுவைத்(து)
அலகில் செல்வமுற் றுலும் ஈகிலார்
கலகக் கள்வராற் கலக்குண் பார்களே 42

கடலிற் சென்(று)அது கலங்கத் தாக்கியுண்
டிடல்வி டாமுகில், என்றும் மாதையூர்த்
தடம திற்புறத்(து) அகழித் தண்புனல்
கெடலு றுதுபெய் கேண்மை தோய்ந்ததே 43

மாது பாகர்ஆ மாதை சூழ்அகழ்க்
காதும் வன்றெழிற் கருங்க ராவெலாம்
ஓது பாக்கொடு மகவு யிர்த்தல்த
ஞது கேளெனும் அகம் கரத்தவே 44

மின்படும் சடைப்பிரான் விழாஅ ருமையின்
மன்பதை மலிதரு மாதை மாண்அகழ்
இன்பம்விற் றுறுமினர் இதய வாரியும்,
அன்பர்பே ரறிவும்ஒத்(து) ஆழம் ஆயதே 45

அங்கணர் மாதைசூழ் அகழி மேல்மலர்
செங்கம லத்திரட் செறிசெங் காலனம்
துங்கமா யவன்உரம் தோய்ந்து நீங்கலா
மங்கள மலிதிரு மகளிர் போன்றவே 46

---

42 கடல் நீர் உப்பு மிகுதியாயுள்ளது. திருவாமாத்தூர் அகழியின் நீர் இனிமையுடையது. பெருஞ் செல்வமுடையவர் ஈகையில்லாவிட்டால், கள்ளர்களாற் பறிக்கப்படுவது போல கடலில் மேகம் வந்து முகந்து செல்கிறது. ஈகையுள்ளவர் செல்வம்போல அகழி நீர் மக்கட்குப் பயனுடையதாயிருக்கிறது.

43 மேகம் கடல்நீர் கலங்கவந்து உண்கிறது. அகழியின் நீர்வளம் குறையாதபடி மேகம் நல்ல நீராகப் பெய்து காக்கும் நட்புடையதாயுள்ளது.

44 மாதுபாகர் - உமையொருபங்கிலுடைய சிவன். அகழியின் முதலைகள், சுந்தரர் பாடலுக்காக விழுங்கிய மகவை வளர்ச்சியுடன் உதவியது எங்கள் இனமென்ற செருக்கில் வாழ்கின்றன.

45 திருவிழா என்னாளுமுள்ள ஆமாத்தூரின் அகழியானது, பொது மாதரது மனத்தையும், அன்பர்களது விசால அறிவையும்போலக் காண முடியாத ஆழமுடையதாயிருக்கிறது.

46 அகழியில் உள்ள செந்தாமரை மலரில் அன்னங்கள் தங்கியுள்ளன. அது, திருமாலின் மார்பில் வசிக்கும் திருமகள், பல தாமரை மலரில் வாழ்வதுபோல அவிர்வனவாம்.

வெண்கம லந்தொறும் மேய வெள்வளை
ஒண்கம லாதனத்(து) ஒருவன் தோய்பல
பெண்களே எனத்திகழ் பீடு மாதையூர்க்
கண்கவின் தரும்எயில் காக்கும் நீரதே. 47

அகழியின் மீன்கள்.

கும்பமா முனிமுதற் குரவர் தாள்தொழா
வம்பர்புன் கவியென மருளும் மாதர்கண்,
நம்பனும் மாதைமா நகரைச் சூழ்புனல்
உம்பர்பாய் கயலினத்(து) உருக்கண்(டு) ஒல்குமே. 48

ஷ அலைகள்

சந்திர சேகரத் தலைவர் மாதையில்
உந்திய மதிட்புறம் உடுத்த நீர்மிசை
பந்திகள் படநனி பாயும் வெண்திரை
இந்திரர் ஊர்ப்பரி இனங்கள் போன்றவே. 49

அன்னவா கனத்(து)அயன் அனையர் கூறினும்
இன்னவா றுளஇயல் யாவும் முற்றுரு
என்னபே சினும்இளங் கவிஞர் இன்புறூர்
சொன்னமட் (டு)அடக்கிவே(று) இயல்பு சொல்லுவாம் 50

தென்மொழிப் புலமையின் சீர்செய் தாம்,இனி
முன்மொழிச் சூதன்நூல் முறைமை நாடியே
இன்மொழிக் கதைகள்செப் பிடலில் முந்துற
நன்மொழித் தலவிசே டங்கள் நண்ணுவாம். 51

நகரச்சிறப்பு முற்றிற்று
ஆகக் கவி 107.



---

47 அகழியில் வெண்தாமரை மலரில்மீது, வெண்சங்குகள் தங்கி வாழ்கின்றன. அது, பிரமன் தேவியான கலைமகள் பலரைப்போல அழகு செய்கின்றன. மதிலுக்கு ஆதாரமாயிருக்கிறது.

48 அகத்தியர் முதலிய தவசிகளை வணங்காத சிறு புலவர் பாடல்களைப்போல, மருட்சி தருகின்ற மாதர்கண்கள் அகழியின் நீரிடத்து கயல்மீன்கள் மேலெழுந்து பாய்வதைக்கண்டு நாணமடைகின்றன.

49 அழகிய நாதரது மாதையிடத்து அகழிநீர் அலைகள் வெள்ளையாக வருகின்றன. அவை இந்திரனுடைய வெண்குதிரை பல வருவதுபோல் விளங்குகின்றன.

50 அயன் – பிரமன்; முற்றுரு - முடிவுபெருது நகரச்சிறப்பாக எவ்வளவு கூறினலும் அதன் சிறப்பைக் கூறிமுடியாது. இத்துடன்நிறுத்தி மற்றென்றின் இயல்பைக்கூறுகிறேன்.

51 இதுவரை புலமை இயல்பு கூறினேன். முதல்நூல் முறைப்படி சூதமுனிவர் கூறியவாறு தல விசேடங்களை முதலிற் கூறுகின்றேன்.

மூன்ருவது

## தலச் சிறப்பு.

அறுசீர் விருத்தம்.

பத்திநெறி தனிற்சென்று பரகதிவேட்
    கையராகிப் பாவம் நீங்கிச்
சித்திபெற முயல்வார்க்கே திருவாமாத்
    தூர்மகிமை சிறிது தோன்றும்;
நித்தியராம் அழகேசர் நேர்வரினும்
    மனிதன்என நினைக்கும் மூடப்
புத்தியுளார்க்(கு) எத்தனைசொன் னலும்என்ன
    பயன்படுமோ பொய்என் பாரே. 1

ஆமாத்தூர்த் தலத்தினது கீழ்எல்லை
    யோசனைமூன்(று) அளக்கர் மட்டும்;
நோமாற்றும் காவிரிதென் எல்லை,யோ
    சனைபத்தாம் நுவல்மேல் எல்லை;
தீமாக்குன் றுறும்அருணை யோசனை நான்
    காகும்;வட திசையின் எல்லை
தேமாத்தண் ணிழற்காஞ்சி யோசனை எட்
    டாகும்இவை சிவன்சொல் லாமே 2

பிறந்தவர்க்கே வீடுதவும் திருவாரூர்;
    கண்டுதொழப் பெற்ருர் கட்கே
சிறந்தமுத்தி தரும்தில்லை; அருணை நினை
    வார்களையே சேர்க்கும் வானில்;
இறந்தவர்க்கே இனிப்பிறவா நிலையளிக்கும்
    • வடகாசி; இந்த நான்கும்
அறந்தழைக்கும் திருவாமாத் தூர்செயுமால்
    இதன்பெருமை அறிவார் யாரே 3

---

1 பக்திநெறி – உபாசனைவழி; பரகதி வேட்கை - முத்திவிருப்பம். பாவம் - உயிர்க் கொலை. சித்தி-உலகநன்மைக்கான திருவருளாடல்; கடவுள் நேரே காட்சிதரினும் மனிதனுக எண்ணுவது அறியாமை; மனிதன் அந்த வேடத்தில் வந்தாலும் தெய்வமாகவே மதிப்பது தவத்தின் பண்பு என்பதை விளக்கினுர்.

2 திருவாமாத்தூருக்குக்கீழ் எல்லை மூன்று யோசனைகடல் வரையாகும். தென்எல்லை காவிரிவரை யோசனை பத்தாகும். மேல் எல்லை திருவருணை வரை நான்கு யோசனை யாகும். வடஎல்லை இறைவன் மாமரத்தின்கீழ் உள்ள காஞ்சி; எட்டுயோசனை தூரமாகும் இவை வடமொழியிலேயே கூறப்பட்டவுண்மை.

3 திருவாரூர் பிறக்கமுத்தி, கண்டுவணங்கினுல் முத்தி தருவது தில்லை (சிதம்பரம்) நினைத்த அளவிலேயே முத்தியளிப்பது திருவண்ணுமலை. இறந்தால் முத்தி தருவது காசி. திருவாமாத்தூர், இந்த நான்கு முறையிலும் இனிய முத்தியுதவுவது ஆகும்.

இத்தகைய குணம்நான்கும் பெறும்இதனை
எதனாலோ எழிலார் காசிக்(கு)
ஒத்த(து) என்றும், இதன்இறைவன் அதன்கடவுட்
போல்வன்என்றும், இவ்வூர்ப் பம்பைச்
சுத்தநதி அதன்கங்கைத் துணைஎன்றும்,
மனந்துணிந்து சொன்னார் அந்தோ!
சத்தசுரச் சுருதிநிலை உணர்வியாச
னும்,சூதன் தானும், மாதோ 4

நால்வகையில் முத்திதரும் ஒருதலத்தை
ஒருவிதத்தே நல்கும் ஓர்ஊர்
போல்வதென்ற(து) அறிகில்லேம் எனவினவத்
துணிந்தில்லார், பொருவில் சூதன்
கால்வணங்கி எவ்வகைய தொடர்பாலும்
தருந்தலம்நீ கழறு[க] என்னச்
சால்வளத்து நைமிசா ரணியமதில்
இரந்தோராம் தவத்தி னோரே. 5

மாயைவரு காரணமும், கருமமுதல்
தோற்றமதும், வகுத்துச் சொல்வான்
தாயைநிகர் குரவனிடம் வினவினர்இன்[று]
ஆதலின்அத் தவத்தோர் தாமும்
வேயைவென்ற தோட்கவுரி கணவன்அருட்
பயன்அதனை விகற்பி யாமற்
சேயைஒக்கும் பக்குவராய்க் கொண்டனர்என்[று]
எண்ணுகின்றேன் செகத்துள் ளோரே. 6

மதித்தாங்கு முனிவர்பிரான் அன்றுரைத்த
ஒருநான்கு வகையும், அன்றித்
துதித்தாரா யினும்ஒருவர் சொல்லிடக்கேட்
டாலும்,மற்(று)ஓர் தொடர்புற் றாலும்

---

4 நான்கு முறையிலும் முத்திதருவதான ஆமாத்தூர் தலத்துக்கு ஒப்பது காசி, விசுவ நாதரைப்போல்பவர் அழகியநாயகர்; கங்கையை ஒப்பது பம்பைநதி என்பதாக மனந் துணிந்து சூதர் ஏன் சொன்னாரோ என ஏழிசை வேதவல்லவரான சூதரும், பின்பு வியாசரும் என்ற முனிவர்கள் சிந்தித்தற்குரிதாயிற்று.

5 நான்கு வகையில் முத்தி தருவதான திருவாமாத்தூர்த் தலத்துக்கு இணையாக, ஒருவகையில் முத்தி தருவதான காசியென்ற ஒரு ஊரைச் சூதர் ஏன் சொன்னாரென்று, முனிவர்கள் வினவவில்லை, முனிவர்கள் எப்படியும் முத்திதரும் தலம் சொல்க என்று கேட்டனர். ஆகவே மறுத்துக் கேட்க ஒப்பிலர்போலும் என்பதாம்.

6 மாயை தோற்றிய விதமும், கருமம் முதலில் உயிர்கட்கு ஏற்பட்ட விதமும் சொல் லும்படி. ஆசானிடம் மாணவர் கேட்பது கூடாது, முறையுமல்ல, அதுபோல இறைவன் அருட்பெருமையை எண்ணி முனிவர்கள் ஏற்றனர்போலும் என, எண்ணுகின்றேன் என்று தன் கருத்தை விளக்கினர் ஆசிரியர்.

திதித்தாய்பெற் றிடும்புதல்வர் புரம்மூன்றும்
எரித்தபிரான் திருவா மாத்தூர்
கதித்தாழ்ச்சி வாராமற் காக்குமெனப்
பலகாலும் கழற லாமே 7

எவ்வுயிரும் தனதுவலச் செவிவழிபோய்ப்
பரகதியில் எய்து மாறும்,
வௌவுகொலைச் சமன்தூதர் தமைமறந்(து)ஓர்
கனவினிலும் வாரா மாண்பும்,
இவ்வுலகத் தன்றிமற்(று) யாண்(டு)எவ்வுலகத்
தேனும்மற்(று)ஓர் இணையில் வாழ்வும்,
செவ்வுருவத்(து) அழகேசர் திருவாமாத்
தூர்த்தலத்தின் சீர்த்தி யாமே 8

முன்னுரைத்த எல்லையொரு நான்கினுக்குள்
உற்றதலம் முழுதும், இந்நூல்
பன்னுதிரு ஆமாதைப் பரமரது
சொந்தமெனப் பகர்வார் பல்லோர்;
பின்னும்அவ்வூர்ச் சூழ்ஐந்து குரோசம்அதி
மேன்மைஎன்றும் பேசும் முன்னூல்;
என்னுளத்தின் சம்மதம்எல் லாவுலகும்
அவர(து)என இசைப்ப தாமே 9

வருகோடிக் கதிதரத்தீர்ந்(து) இன்புறுதல்
வேட்டுமிக வணங்கு வார்தம்
அருகோடி அருள்புரியச் சலியாராம்
மாதைநகர் அபிரா மேசர்
பெருகோடி யம்புகல்வன் பிழையினருக்(கு)
இரங்காத பெட்பும் உள்ளார்
ஒருகோடி முதலியசிற் சிலதலத்திற்
பெயரொடுற்றும் ஒளிர்கின் றுரே. 10

---

7 நைமிசவனத்து முனிவர்கள் சூத முனிவர் சொல்லை மதித்ததுபோல, பிறத்தல், நினைத்தல், வணங்கல், இறத்தல், என்ற நான்குடன், புகழ்ந்தாலும், கேட்டாலும், வேறு எவ்விதத் தொடர்புகொள்வாராலும் திருவாமாத்தூர் நல்ல நிலையிலே சேர்க்குமென்பது உண்மை.

8 உயிர் நீங்கும்போது எவ்வுயிரும் வலது செவிவழியே பிரிந்து முத்திசேரும். எம தூதர் மறந்தும் கனவிலும் வரமாட்டார்கள். எவ்வுலகத்துமில்லாத சிறப்பு இத் தலத்துக்கு உண்டு.

9 முன் சொல்லிய நான்கெல்லையுட்பட்ட எத்தலமும் இவ்வூருக்கு உரியதாம். மேலும் ஐந்து குரோசத்துள் உள்ள தலமும் இதைச்சேர்ந்ததென்று வடமொழிநூல் கூறுகிறது.

10 தீய கோள்வசப்பட்டவர் நலம்பெற அருளும் அபிராமேசர், கேலிபேசுபவர்கட்கும் நன்மையே செய்பவர். ஒருகோடியென்ற பக்கத்தூரினும் தன் பெயருடன் விளங்கின்றுர். ஒருகோடி முனிவர் வணங்கிய தலம் என்ற சிறப்புப்பற்றி அப்பெயர் பெற்றது. அருகுஓடி – அருகிற்சென்று; பெருகுஓடியம் - மிகுந்த பரிகாசம்.

பெரும்பாக்கம், மேற்கருணை, அரியலூர்,
அகரமுதற் பின்னும் சில்லூர்
தரும்பாரக் கோயில்களின் இடத்தினும்தன்
பேரொடுவாழ் தகைமை யுள்ளார்
வரும்பானு, மதி,அழல்கண் ணுடையபிரான்
எழில்திருவா மாத்தூர் அம்மான்
இரும்பாய வன்மனத்தோர் தங்களையும்
உருக்கும்வலி ஏய்ந்துள் ளாரே 11

மிக்கபுகழ்த் திருவாமாத் தூர்த்தலத்(து)ஐம்
பொறியேபோல் விளங்(கு)ஐந் தூர்ச்சீர்
ஒக்கமொழிந் திடல்இயல்பன்(று); ஒவ்வொன்றோர்
காவியம்போன்(று) ஒளிரும்; அவ்வூர்ப்
பக்கலுறும் அகரத்தோர் பழையஅர(சு)
உள(து)அதிலோர் பரம யோகம்
தொக்கமுனி அதனடிவாழ் தும்பிமுகப்
பெருமானைத் தொழுதுள் ளானே, 12

அவன்சரிதம் முதற்பிறவும் விரித்துரைத்தற்(கு)
என்போல்வார் அறிய மாட்டார்;
சிவன்புரையும் சூதமுனி யாதியரே
அறிவர்,அங்கு சென்றால் வன்பேய்
கவந்தம்அனை யனபிடித்த மாதரழு(து)
ஏங்கலின்றும் காண்பார் பல்லோர்
தவந்தனைப்போல் அரியபொருள் வேறிலைஎன்
றிடற்(கு)அதொரு சான்றும் அன்றே. 13

தன்னிடம்பட் டொழுகியநீர் அருந்தினர்க்கும்,
வேற்றாரிற் சதாவாழ்ந் திட்டும்
மன்னிடம்பப் பொருட்டால்தன் பெயருரைத்திட்
டார்க்கும்,மலை மகளாம் மங்கை

---

11 பெரும்பாக்கம், மேற்கருணை, அரியலூர், அகரம் இவற்றிலும் வேறு தலத்திலும், அபிராமேசர், முத்தாம்பிகை என்ற பெயருடன் விளங்குகின்றனர். சூரியன், சந்திரன். நெருப்பு என்ற கண்ணுடைய அவர், இரும்பு போன்றவர்களையும் தன் வசப்படுத்த வல்லவராவர்.

12 மேலே கூறிய தலம் ஐந்தும் இவ்வூரின் ஐம்பொறிபோல் உள்ளன. அவற்றின் சிறப்பைக் கூறில் அது ஒரு புராணமாகும். அண்மையில் உள்ள அகரத்தில், பழைய அரச மரத்தில் முனீச்சுரன் தங்கி, அடியில் உள்ள விநாயகரைப் பணிந்து வாழ்கின்றான்.

13 அந்த முனீச்சுரன் மிகப் பெருமையுடையவன். பேய், பில்லி, முதலிய தொடர் புற்றவர் அங்கு வழிபாடு செய்து நலமடைவார்கள். தவம் செய்வதுபோன்ற உயர்வு, வேறில்லை என்பதற்கு அது ஒரு சான்று.

துன்னிடம்பச் சுருவானூர் பதம்தரும்மா
தையின்மகிமை, துணிந்(து)யான் ஈண்டு
பன்னிடம்பல் புகழாதற்(கு) ஆவனசெய்
திடுவர்அருட் பாவல் லோரே. 14

ஆயிரத்(து)எண் சிவாலயத்துள் மற்றெல்லாத்
தலங்களையும் அணிசா(ல்) தொய்யில்
வேயிணைத்தோட் கவுரிமண வாளன்அடி
யவர்தாமே விரும்பு வார்கள்
ஏயிருகொம்(பு) ஆன்இனத்திற்[கு] அளித்துளஇம்
மாதையினை இருமூன் றுகிப்
பேயினம்போற் பிணங்குமதத் தினர்எவரும்
எந்நாளும் பேணு வாரே. 15

ஆனினத்தின் மாதாவாம் இத்தலத்தை
மதியாதார் ஆரா னலும்
தேனிழிதண் மலர்ப்பீடத்[து] அயன்மறைகட்[கு]
அன்னியரே திண்ணம்! திண்ணம்!
பானிறநீற் றணிகாணில் மூன்றுநாட்
பட்டினியாற் பதைக்கின் றோரும்
மேனிலையாம் ஆசார நலங்கருதிக்
கோமயத்தை விரும்பு வாரே. 16

வயிணவரும், சவுரவரும், காணபத்
தியரொடு,கௌ மாரர் தாமும்,
பயில்வெறிச்சாத் தேயரும்,செம் பருந்து,பச்சைக்
குதிரை,நிலம் பறிக்கும் ஆகு
மயில்,வயமா, எனும்இவற்றின் மலம்எடுத்துப்
பழகாமல் மாதை மேவிச்
சயிலவில்லார் அருள்கொடுய்ந்த ஆனினத்தின்
பின்தொடர்தல் சரதந் தானே. 17

---

14 மன்இடம்பப்பொருட்டு-வேற்றூரில் வசித்தாலும், புகழ்விரும்பி திருவாமாத்தூரி விருப்பவராகக் கூறுபவராகும், உமையவளின் பசுமை நிறம் தனது திருமேனியிலும் அமையுமாறு, ஒரு பாகத்திற்கொண்ட சிவபிரான் அருள் புரிவாரென்பதாம். பன்னிடு அம்பல் – யான்சொல்லுகின்ற பழிமொழிகளும்.

15 இருமூன்றுகி - ஆறு வகையான சமயம். தன் சமயம் உயர்வு பிற சமயம் தாழ்வு என்று வாது புரிபவார்களைப் பேயினம் என்றார். மதம், சமயம், ஆணவமெனவும் கொள்ள லாம். ஆகவே அவர்களும் இத்தலத்தை விரும்புவார்கள். ஆன்ஐந்து-ஆறு சமயத்திற்கும் உரியவை. அவை அருள் பெற்ற தலம் என்பதுபற்றி.
தொய்யில் – சாந்தினல் மாதர்கட்கு மார்பில் எழுதும் கோலம். சாந்து - சந்தனம்.

16 பசுக்களின் தாயான இப்பதியை மதியாதார் எவராயினும், வேதவிதிக்குப் புறம் பாவார். திருநீற்றையணிந்தவரைக் கண்டால் மூன்றுநாள் உண்ணாதாரான சமணரும்கூட, பசுவின் சாணம் முதலியவற்றைக் கொள்வார்கள்.

17 வைணவர், சவுரர்(சூரியவழிபாட்டினர்) விநாயக வழிபாட்டினரான காணபத்தியர் முருகன் வழிபாட்டினரான கௌமாரர். சத்திவழிபாட்டினரான சாத்தேயர் என இவர்கள் ஐவரும், தங்கள் கடவுளின் வாகனமான, கருடன், பச்சைக் குதிரை. பெருச்சாளி, மயில், சிங்கம் என்பவற்றின் மலங்கொண்டு தூய்மை புரியாமல், ஆமாத்தூரில் தவஞ் செய்த பசுக்களின் சாணம் முதலிய வற்றையே விரும்பிக்கொள்வர், என்று நகைச்சுவைபடச் சிறப்புக்கூறியதறிக.

சத்திமனை யாய்த்,திருமால் சாயகமாய்க்,
கணபதியும், தனிவே லானும்
புத்திரராய்ப், பரிதிவிழி யாய்,மாதைப்
பதிபுரக்கும் புனிதற் சார்ந்த
உத்தி,அவன் அடியார்போல் தம்மடியார்
களும்பசுக்கட்(கு) உரிமை யோராய்ச்
சித்திமுத்தி பெறும்பொருட்(டு)என் றுணர்ந்துளமா
தவர்,உலகிற் சிலர்தாம் அன்றே 18

செங்கமலக் கண்ணனும், சண்டேச
நாயனுமே தெரிந்த தான
துங்கமுறு பசுக்கூட்டத்(து) அருமைஒரு
சிறிதென்உள் ளுந் தோற்றக் காட்டி
எங்கவிர்எத் தேவரையும் தலங்களையும்
வெறுத்திடச்செய்(து), எளிதாட் கொண்ட
சங்கரனூர் ஆமாதைப் பதியினையே
கயிலைஎனச் சாற்ற லாமே 19

எவ்வகைய தெய்வமும்ஓர் ஐந்தெழுத்தால்
உண்டாமா(று) எளிதோர் வார்க்கே
செவ்வழற்குன் றெனமாதைச் சிவன்கனவி
லேனும்வந்து திகழ்வான்; உண்மை!
அவ்வளவு பக்குவருக்(கு) அத்தலத்தின்
பெயரேமாண்(பு) அனைத்தும் காட்டும்
கௌவகல்வாய் நாயனையார்க்(கு) எங்ஙனம்சொன்
னலும்மனம் கலங்கு வாரே 20

எத்தனையோ சதுரயுகம் கண்டதிரு
ஆமாத்தூர் இசையும், சீரும்,
உத்தமச்சற் குருபரனுக்(கு) ஆளாகிச்
சமரச்சீர் ஒருங்கு வாய்ந்து
பத்தர்பதத் துகள்சூடும் தலையினராய்த்
தவம்புரிவார் பலர்க்கும் தோன்றும்,
அத்தகைய தலத்திலுறும் தீர்த்தமான்
மியங்கள்சிறி(து) அறைய லுற்றும் 21

தலச் சிறப்பு முற்றிற்று.

ஆகக் கவி 128.

---

18 பரமன்உமையை மனையாயும், திருமாலை அம்பாயும்; விநாயகர், முருகன் இருவரை மைந்தராயும், சூரியன் கண்ணையும் கொண்ட காரணம், சிவனடியர்போல; மேற்கண்ட ஐவகை சமயத்தாரும், பசுக்கட்கு உரிமைகொண்டு, நற்பயன் பெறும் பொருட்டென்றுர்.

19 கண்ணனும், சண்டேசரும் புரந்தருளிய பசுக்காப்பு சிறந்தது. அச்சிறப்பினை அடியேனுக்கும் அறிவித்து எத்தலத்துக் கடவுளரையும் விரும்பாதபடி இவ் வூரில் தங்கும்படி செய்த அபிராமேசரது இப்பதி கயிலாயம்போலாகும்.

20 பெயர்மாண்பு-திருவாமாத்தூர் என்பது ஐந்தெழுத்தால் ஆயது; ஒற்றுநீங்கலாக கொள்வது மரபு

நான்காவது

## தீர்த்தச் சிறப்பு.

கலிவிருத்தம்.

மேகத்தின் வெண்ணிறம்

ஈச னேறும்வெள் இடபமும், பரைகொள்வல் ஏறும்,
பாச அங்குசன் வலக்கைவெண் கோடும்,வேள் பரிக்கும்,
பூசல் வாரணக் கொடியும்,நான் முகனிவர் புள்ளும்,
நேச முற்றெழுந் தெனமுகிற் றிரள்நிமிர்ந் தனவே 1

மேகம் கடலில் நீரை முகத்தல்

இந்தி ரன்திசை நாடுபு சென்றுசென்(று) இரங்காப்
புந்தி யோர்பெருஞ் செல்வம்நேர் கடலிடை பொருவாள்
வெந்தி றற்கொடும் படையெனப் புகுந்துநீர் மிகக்கொண்(டு)
உந்தி வானகத்(து) எழுந்தன சென்றவா(று) ஒருங்கே. 2

மேகம் இருண்ட வியன்

ஆல காலமும், அரியும்,மா காளியும், அரனூர்
பாலர் வாகனத் துணையும்,எட் டாயகோட் பாம்பும்,
கால னும்,கொடும் காரியும் சாத்தனும், கலந்தாற்
போல வான்முக(டு) எங்கணும் மறைத்தன பொலிந்தே. 3

மின்னலின் ஒளி

திருவும், வாணியும், தெய்வயா னையும்பொனூர் சிறப்ப
மருவும் மாதரிற் பலரும்,வேல் வாள்புரை படையும்,
பருவ மில்லவர் ஞானவை ராக்கியப் பண்பும்,
பொருவ மின்னின இருள்நடுங் கிடும்படி போழ்ந்தே. 4

இடிச்சிறப்பு

வண்ண ஓசையும் மாதைநா யகன்விடைத் தொனியும்,
அண்ணல் வால்அயி ராவணம் பிளிறலும், அலர்பூங்
கண்ணன் ஊதுகம்[பு] ஆரவா ரமுங்கலந் தாங்கே
எண்ண நாகரிற் பலர்மடிந் திடஇடித் தனவே. 5

---

1 வல்ஏறு - ஆண்சிங்கம்; கோடு - கொம்பு; வாரணக்கொடி - சேவல்; புள் - அன்னம்; நேசம் உற்று - உரிமையோடு ஒன்று கூடி; இவையாவும் வெண்ணிறமுடையன அதுபோல, மேகங்கள் வெண்மையாக வானில் எழுந்தன

2 இந்திரன் திசை - கிழக்கு; இரங்காப்புந்தியோர் - லோபிகள், பொருவாள் - போருக்கு உரிய வாளாயுதம்; படை - சேனை; உந்தி - மேல்எழும்பி; செல்வமிகுதி யிருந்தும் லோபிகள் பிறருக்கு உதவமாட்டார். அதுபோலக் கடல்நீர் மிகுதியிருந்தும் பிறர் உண்ணற்கு உரியதல்ல! அரசர், கள்ளர்போன்றவர், அவரது பொருளைப் பறிப்பர். அது போல மேகங்கள் கடல் நீரைச்சென்று முகந்தன.

3 விடம், திருமால், காளி, விநாயகரது பெருச்சாளி, முருகனுடைய மயில்,எட்டாவது கிரகமான ராகு, எமன், சனி, ஐயனர், ஆதியன கருப்பு, அதுபோல மேகங்கள் கருமை நிறத்தோடு விளங்கின.

4 பருவமில்லவர் ஞானம் - திடீரெனத் தோன்றி விரைவில் மறையும், அதுபோல மின்னின மேகம் போழ்ந்து இருளைப் பிளந்தது.

5 விடைத்தொனி - இடபத்தின் ஓசை, இறைவனது அயிராவணம் என்ற யானை யின் ஓசை, கண்ணன் ஊதுகின்ற சங்கமுழக்கம் போல இடித்தன.

மழை பெய்தல்

கள்ளம் இன்றிய திருவருட் புலவர்வாய்க் கவியும்,
வள்ள லாம்எழு மூவரும் வழங்குகைக் கொடையும்,
எள்ளல் தீர்சிவ யோகியர் தொகையுமே இணையாக்
கொள்ள நீர்மழை பொழிந்தன பாரெலாம் குளிர. 6

ஆறு வருதல்

அந்தண் வாரியும் களிப்புறப் பெய்தநீர் அனந்தம்
சந்த மாநதி தந்த(து)அன் னவற்றினுள் தலையாய்ப்
பைந்த கைச்சிவை முலைதரு பாலெனக் கிளர்ந்து
வந்த(து) ஒன்றுநம் மாதையூர் அருகினில் மன்னோ 7

பம்பை நதி மூவர் தன்மையது

கொம்பு, மான்,அரா, இதழி,கூ விளங்கொடு சிவனுய்க்
கம்பு, பைந்துழாய், வில்,கணை, கதைகொடு மாலாய்
அம்பு, பைம்புல்,சந் தனம்,கலை மான்புணர்ந்(து) அயனுய்ப்
பம்பு பம்பையென்(று) அதன்பெயர் பற்பலர் பகர்வார். 8

ஷ

விரித்த செஞ்சடைப் புனலெனும் பெருந்தகை விழைந்தோ
சரித்த முல்லையின் பறைபல கொணர்தலி ஞலோ
சிரித்த வால்உடுப் படலம்நேர் நுரைச்செறி வாலோ
பிரித்(து)அ கற்றெணுப் பம்பைஎன் றெருபெயர் பெறலே. 9

ஞான சம்பந்தர் நவின்ற சிறப்பு

அந்த ரத்தரும் வியக்கும்அந் நதிப்புகழ் அனைத்தும்
வெந்த என்பினிற் பெண்ணழைத் தான்முதல் மேலோர்
வந்த நாள்பகர் பனுவல்ஆ யிரங்களில் வயங்கும்
எந்த நாவலர் இனித்துதிப் பினும்இழி வுறவே. 10

---

6 எழுமூவர், கடைஇடைதலை என்ற மூவித வள்ளல்கள். மேகம் மழை மிகுதியாகப் பெய்தன

7 பால்என - அம்பிகையின் பால் அமுதமாகி ஞானம் தருவதுபோல் பம்பையாறு சிறந்து வந்தது.

8 பன்றியின் பற்கொம்பு, மான், நாகம், கொன்றை, வில்வம், ஆற்றில் வருவதால் சிவனுகியும். சங்கு, துளசி, வில், அம்பு, கதை, இவற்றைக்கொண்டு வரலால் திருமாலாகியும், கலசநீர், தருப்பை, சந்தனமரம், மான்போன்றன காணப்படுவதால் பிரமனையும், நிறையப் பெற்றதால் பம்பையாயிற்று; பம்பு - நிறைவு; பம்பியுள்ளது பம்பை என்பதாம்.

9-1 சிவனது சடை பரந்தது – பம்பைத்தலை என்பர். அதுபோல விரிந்த நீர்ப்பெருக்கையுடையது. 2. முல்லை நிலத்தின் பறை பம்பை. அதை அடித்து வருவது வெள்ளம் 3. வெண்மையான நட்சத்திரங்கள் போல, நுரைகள் காணப்படுகிறது. இவ்விதத்தால் பம்பையென்ற பெயருடையது. பம்பை - நட்சத்திரங்களின் கூட்டமுற்ற பை ஒத்தது பம்பை.

10 ஞான சம்பந்தர் கூறியதைவிட, புலவர்கள் கூறுவது சிறப்புடையதாகாது.

மங்கைக்கு ஒப்பாதல்

சைவ லங்குழல், கமலமாம் முகம், திரைதடங்கை
நெய்வ ழிந்தலர் குமுதம்வாய், முத்தினம் நிரைப்பல்,
மைவ னக்கண்மீன் எனச்சொலிப் பம்பையை மகளாச்
செய்வ(து) அன்றருட் சூதமா முனிபகர் சிறப்பே 11

சந்து காரகில் முதலிய கொடுவரு தகையும்,
உந்து நீர்சிறி[து] ஊரினை வெருட்டலும், உமையாள்
பந்து நேர்முலைப் பால்நுகர் பார்ப்பன மதலை
சிந்து தேன்மழை யெனப்பொழி பதிகம்ஒ தினவே. 12

இந்த வாறுநா வுக்கர(சு) ஆதியர் இயம்பும்
அந்தம் நாடுபு பகரினும் அவைபல கவியாய்
வந்த கூலிசித் தித்திட வழங்கினர் தம்பால்
வந்த நாவலர் விரித்துரைத் திடுதலை மானும் 13

அதனில் வந்துவந்(து) அறுபதிற் றுறுகோ டியெனு
முதலில் நூல்பகர் தீர்த்தம்எல் லாம்முழு கிடலில்
பதகர் வந்துளத்(து) அன்பில ராய்ப்படிந் திடினும்
சதம கன்பெறற்(கு) அரியபே(று) அடைகுவர் தாமே 14

இன்ன நாளில்இவ் வாறுமூழ் கிடும்பயன் இதெனப்
பன்னல் நீத்தமை சோம்பலென்(று) எண்ணன்மின் படியீர்!
என்ன நாளில்எங் ஙனம்முழு கிடினும்எப் பயனும்
துன்ன லாம்என நம்புமின் மயலறத் துணிந்தே 15

ஆயி னும்சிலர் ஆதிரை, பூசநாள், அமரர்
தாயி னிற்றிகழ் சந்திரன் நாள்,பிர தோடம்,
பேயி யம்பிய விதிப்படி மூழ்குபுண் ணியத்தால்
காயி ரும்பில்நீர்த் துளியெனப் பவமறக் கழிப்பார் 16

---

11 சைவலம் - பாசி; கூந்தலாகவும்; கமலம் - தாமரை முகமாகவும், திரை - அலை; கைகளாயும், நெய் - தேனையுடைய; குமுதம் - செவ்வல்லி வாயாகவும்; முத்துக்கள் பற்களாயும், மீன்கள் கண்ணுகவும் கொண்டு பம்பை ஒரு பெண்ணுகக் கூறும்படி சூதர் பெயரையமைத்தனர்.

12 பார்ப்பன மதலை - ஞானசம்பந்தர். கரவில்மாமணி, பொன், கொழித்திழி சந்துகார் அகில்தந்து பம்பைநீர், அருவிவந்தலைக்கும் ஆமாத்தூர் அம்மானே என்பது சம்பந்தர் தேவாரம் அதைக்குறிப்பதாம்.

13 அந்தம் - அழகு. மந்தநாவலர் - தாம்பேசிய கூலிக்காகப் பாடலை விரிப்பவர். மானும் - ஒப்பாகும்.

14 பதகர் - பாவிகள்; சதமகன் - நூறு வேள்வி செய்த இந்திரன்.

விண்ட கன்மநூல் விதிப்படி தக்கநாள் விழைந்திட்(டு)
அண்ட நாயகர் மாதையூர்ப் பம்பைநீர் அதனில்
பிண்டம் இட்டவர் இருவகைப் பிதிர்களும் பிழைதீர்
தொண்டர் சேர்கதி சேர்வரென்[று] உரைத்தனர்.தொல்லோர் 17

அந்தண் பம்பையும், கங்கையும், பொருனையு மாகும்
இந்த மூன்றுமே வடதிசை நோக்குப; இவற்றுள்
முந்த ஓதிய தேமுதல் எனும்முறை முனிவோர்க்[கு]
எந்த ஞாயமும் பகர்முதற் புராணம்நன் கியம்பும் 18

வேறு

கொச்சகக்கலிப்பா

அந்நதியின் கீழ்கரையில் ஆம்பலம்பூம் பொய்கைஎனச்
செந்நலமார் தமிழ்பாடும் திருஞான சம்பந்தர்
தந்நவைதீர் பதிகத்திற் சாற்றியதோர் வாவியுள[து]
எந்நகரில் உள்ளாரும் இனிதுகரு திடுமாறே. 19

மன்னுமந்த வாவிக்கு வடநூலார் குமுதவதி
என்னுமொரு திருநாமம் இட்டதன்றி அதனூடு
துன்னுபுனல் கங்கையென்றும், துகளறுசீர் மாதைநகர்
தன்னுள்அரன் தனைநாடும் தவத்தனென்றும் சாற்றுவரால் 20

அத்தடத்திற் படிந்தாரும் அகமுழுதும் அறமாறிச்
சித்தமதிற் கருதுபவாம் சீர்பலவும் நனிஎய்தி
முத்தலத்தில் உள்ளாரும் மொழிந்துவக்கும் புகழோராய்
வித்தகரே மதித்தறியும் மெய்வீடும் பெறுவாரே. 21

அளப்பரிய புகழ்சாலும் அவ்வாவி வடபாலில்
தளப்பதும மலர்போலும் தடங்கண்ணன் பிரளயத்தில்
கொளப்படும்நித் திரைக்கான குளிர்தளிர்கள் பலவாய்ந்த
வளப்பமொடு நனியோங்கி வளர்ஆல்ஒன் றுளதம்மா. 22

புள்ளிமலி தோலுடுத்த புனிதர்ஆ மாத்தூரின்
உள்ளியலும் திருக்கோயில் உமிஎழுமா முனிவோர்செய்(து)
அள்ளியுச்சிப் பெய்தார்க்கும் அரியமுத்தி தரத்தக்க
தெள்ளியநீர் மலிதண்ட தீர்த்தம்ஒன்றும் உளதாமால் 23

---

18 முந்த - முதலிற் கூறியதான பம்பை.

19 " ஆம்பலம்பூம் பொய்கை ஆமாத்தூர் அம்மான் " சம்பந்தர் பாடிய திருவாமாத்தூர்த் தேவாரம்.

20 குமுதவதி - வடமொழிப் பெயர்; குமுதம் - ஆம்பல்மலர். வதி - உடையது என்க.

21 தடம் கண்ணன் - திருமால். ஆல் - ஆலமரம்

வண்டலம்பு மலர்க்கூந்தற் சபரிபணி வம்பாகும்
பண்டர(வு)எல் லாம்வருந்தப் பாதாளம் விட்டுவரும்
துண்டரிகக் கங்கையினைத் தொடுதலின்றிக் கண்ணுரக்
கண்டவர்க்கும் வினைப்பேயும் கலிப்பேயும் நடுங்குறுமே. 24

செய்யவார் சடைப்பரமர் திருவாமாத் தூர்வடமேற்(கு)
ஐயனுர் கோயில்எதிர் அணிவாவி யொன்றுளது
வெய்யசூ னியம்,பில்லி, பேய் இவற்ருல் வெருள்மாந்தர்
துய்யநீர் முழுக்காடிற் சுகம்விளைக்கும் தொழிற்செய்தே. 25

அதிமேன்மைத்(து) என்றுரைத்த ஐந்துகுரோ சத்தினுக்குள்
பதிவாம்ஆன் குளப்படியிற் பைம்புனலும் கங்கைஎன்னும்
துதிமுனிவோர் சொற்றுளரால் தொண்டுடையார் இனித்துணிந்(து)
புதிதாய குளஞ்செயினும் புனிதமலி தீர்த்தமதே. [ஓர் 26

கார்த்தவீ ரியன்முதலோர் கணங்களைஓர் சிறுபார்ப்பான்
சீர்த்தபர சறுக்கவருள் திருமாதைச் சித்தர்பிரான்
மூர்த்தம்,அள வறுகோடி மொழிவரிய ஆனுலும்
ஊர்த்தலத்தில் உள்ளவற்றில் ஒருசிறிதீண்(டு) உரைசெய்வாம். 27

## தீர்த்தச் சிறப்பு முற்றிற்று.

ஆகக் கவி 155



24 சபரி . . . கங்கை, இவ்விவரம், அடுத்துவரும் மதங்க முனிவர் பூசித்த வரலாற்றுட் காண்க.

26 குரோசம் - கூப்பிடும் தூரம்; ஆன்குளப்படி - பசுவின் கால் அழுந்திய குழி.

27 சிறு பார்ப்பான் - பரசுராமர்; தமது மழுவினல், பல அரசர்களைக் கொன்ருர் என்ற குறிப்பு.

ஐந்தாவது

## மூர்த்திச் சிறப்பு.

கலிவிருத்தம்.

தேன்றுளித் தனையசொற் செல்வி நாயகன்
மான்றுணை நிகர்விழி மலர்மின் காதலன்
ஊன்றும்வேற் படையுமாம் உமைம ணாளன்என்
மூன்றுதே வரும்ஒரு முதல்வன் தானரோ. 1

அம்முதல் எதுவெனில் அகண்ட மாம்வெளி
செம்முவா யுவும்அதிற் சேர்ந்த சத்தியாம்
இம்முறைச் சகளம்யா தெனில் இலிங்கமே
செம்முகம் ஐந்தொடும் திகழல் உண்டரோ. 2

அத்திரு உருவம்ஆ யிரத்தெட்(டு) ஆலயம்
பத்திசெய் பவர்உயப் பரிந்து கொண்டது
சத்தியம் அவற்றினுள் தலைமை யாவது
புத்தியுள் ளவர்உணர் புனித மாயதே. 3

எவ்வகைப் புனிதமும் எங்கள் மாதையாம்
அவ்வயிற் கோடுபெற்[று] அடர்த்த அஞ்சுறும்
வெவ்வலி யடைந்தஆன் அன்றி வேறிலை
இவ்வழக்[கு] அறிகிலார் ஈனர் ஆவரே 4

ஆதலின் அந்தவூர் நடுக்கொள் ஆலயத்[து]
ஏதமில் இலிங்கமா முளைத்த ஈசனே
மூதறி வினர்உணர் முதன்மை யாவன்மெய்
ஈதலாம் முறைசொலின் எமக்[கு]ஒவ் வாததே. 5

---

1 சொற்செல்வி - கலைமகள்; நாயகன் - பிரமன்; மலர்மின்காதலன் - இலக்குமி கணவரான திருமால்; உமைமணாளன் - பார்வதிநாதனான சிவன், இம்மூன்று கடவுளரும் ஒரே பொருள்.

2 முதல் – இம்மூவரும் தோன்றுவதற்கு ஆதாரம் பரவெளி. வாயு-பரத்துக்குச்சத்தி. இவை ஒன்றான வடிவம் சிவலிங்கத்திருவுரு. சத்தி-உருவம், வெளி–அருவம் எனவே அருவுருவம் சிவலிங்க வடிவம். செம்மு–நிறைந்த.

4 அவ்வயின் - திருவாமாத்தூரான பதியில் கொடுபெற்று, அடர்த்த–எதிர்த்து வந்த புலி முதலியவை. அஞ்சுறும் – பயமடையும்படி வலிமைபெற்றதான. ஆன்-பசுக்கூட்டம் ஆகவே சிவத்தலம் பலவற்றினும் இப்பதி உயர்வென்பதாம்.

அதுமுளைத்[து] எழுந்தநாள் அதனை ஆய்ந்திடில்
சதுமுகன் முதலினர் தாமும் தேர்கலார்
இதுமுதல் மொழியினுக்[கு] இகலென் என்மினே
பொதுநிலைக் கலையொரோர் உயிரைப் புல்லுமால் 6

அவ்வகை மொழிவழி அறியத் தக்கதன்[று]
எவ்வகைத் தேவரை யேனும் நாடிநின்[று]
ஒவ்வரும் தவம்நனி உஞற்றி உண்மைகண்[டு]
இவ்வணம் இருப்பவர்க்[கு] இயங்கற் பாலதே 7

இண்டைசூழ் சடைமுடி இறைவன் எண்ணிலார்
மண்டைகங் காளம்,என்(பு) அணிந்த வாய்மைகள்
பண்டைநான் மறைத்திரள் பகர்வ(து) ஓர்ந்[து]அவன்
அண்டையில் அணுகுநர்க்[கு] அனைத்தும் ஆவனே 8

எப்படி யார்நினைத் திடினும் ஆங்கவர்க்[கு]
அப்படித் திகழ்தரும் அரன்மெய் யன்பினால்
மூப்படி யினர்தொழும் மாதை முன்னவன்
மெய்ப்படி உணர்ந்தவர் வினையை வெல்வரே 9

கோடிமா முனிவரும், கோவின் கூட்டமும்,
ஈடில்சீர் இராகவன் முதலி னோர்களும்
நாடிய சிவன்புகழ் நான்சொல் கின்றதோ
பாடிய மறைகளும் பகர்ந்து சோர்ந்தவே. 10

சாம்பொழு(து) ஒருவன்'ஆ' என்று சாற்றிடில்
பாம்பொருங்[கு] அணிஅபி ராமப் பண்ணவன்
தேம்பொரு பெயர்சொலச் சிந்தித் தானதால்
யாம்பொரேம் எனச்செல்வார் இயமன் தூதரே 11

இன்னசொல் முனிவரன் இசைத்த தேளனில்
என்னவென்(று) யானவன் இசைகள் ஏத்துவேன்
அன்னமார் வயல்கொளும் மாதை யான்அருட்
பின்னமா மூர்த்திகள் பெட்பும் உள்ளவே 12

மற்றையூர் அம்மன்மார் அனையள் அல்லள்,வண்
பொற்றைவிற் சிவன்றன்ஆ மாதைப் பொங்கர்போல்
கற்றைவார் குழல்கொள்முத் தாம்பி கைப்பிடி
எற்றையும் அன்பருக்[கு] இரங்கும் ஆயியே 13

---

6 சதுமுகன் - பிரமன்; பொதுநிலைக்கலை - பரம்பொருளின் அருட்கலை. ஒவ்வொரு உயிர்களில் தாக்கியதால் வருபவர்கள்தான் பிரமன் முதலியோர். இத் தலத்துள்ள சிவலிங்கப்பெருமான் தோன்றிய காலம் அவர்களறியார்.

12 பின்னமாம் மூர்த்தி - அபிராமேசரது அருளால் வேறுயுள்ள தெய்வவடிவம்.

சத்தியக் கல்லொடு தனைநள் ளாமுனி
பத்திசெய் திடும்பெரும் பரிவும் எய்தலால்
நித்திய ரிடம்உறல் நீத்து நேரெதிர்
நத்தியன் னவர்வர நாளும் வாழ்ந்துளாள் 14

அருள்வளத்[து] இராகவன் அழைத்த[து] ஆதியாம்
பொருவில்பல் இலிங்கமும் புகலில் முற்றுரு(து)
ஒருமருப் புடைப்பிரான் உருவும் அங்ஙனே
கருமயிற் குகனதும் கணக்கில் லாதவே 15

வேறு

கொச்சகக்கலிப்பா

ஆயிரத்[து]எட்(டு) இலிங்கமும்தன் அருள்உருவின் உறுப்பாக
மேயிலிங்கம் ஒன்றுளது விடைக்கொடிசீர் மிகுமாதைக்
கோயிலிடம் அதைநாளும் கும்பிட்டுச் சிந்தித்து
வாயிகமுஞ் செய்வார்பால் வாராத வாழ்விலையே 16

உத்தமப்பக் குவச்சனகன் முதல்நால்வர்க்(கு) உபதேசம்
வைத்தபடி ஓரேழு மாமுனிவர்க்[கு] அருள்செய்து
சித்தர்பலர் தொழுதேத்தத் தெக்கணா மூர்த்தியொன்று
பத்தமலி தருமாதைப் பதிக்கோயில் இடத்துளதே 17

ஆராதித் திடுந்தம்தே வதுமேலென்(று) இறுமாந்து
போராடித் தளர்வாரும் போதமுறச் செயும்நிமித்தம்
பாராய தேர்உகைத்த பரன்மாதை ஆலயத்தில்
சீராரும் திரிமூர்த்தி சிலைஒன்றும் உளதம்மா. 18

கயமுரித்துப் போர்த்தபிரான் கவின்மாதைக் கோயிலிடை
தயரதன்சே யாகியமால் சனகியொடும், தம்பியொடும்,
வயமுறுமா ருதியோடும், சபரியெனும் மங்கையொடும்,
இயலுமிடம் சிறிதுளதால் இளஞ்சைவர் துயருறவே 19

---

14 சத்தியக்கல் - வட்டப்பாறை. தனைநள்ளாமுனி - சத்தியை வணங்காத பிரிங்கி முனி; நித்தியர் - அபிராமேசர்; எதிர்-நேர்முகமாக; அன்னவர் - அபிராமப்பெருமான்.

15 இராகவன் அழைத்தது - இராமர் பூசனைக்கெனக் கொணர்வித்த சிவவுரு, வாயு மூலையில் உள்ளது. பின் அநுமார் பூசை செய்தது, அநுமத்நீஸ்வரர்.

16 சகஸ்திரலிங்கம் - 1008 சிவலிங்கம் சேர்ந்தவுரு.

17 நால்வர் - பிரமபுத்திரரான சனகர், சனக்குமாரர், சனந்தரர், சனாதரர் என்பதாம்

18 திரிமூர்த்திசிலை - சிவ, விட்டுணு, பிரமன் என்ற மூவருருவும் அமைந்த சிலை.

19 இயலும் இடம் - ராமர் கோயில்; இளம்சைவர் – திருமாலை வேருவெண்ணுபவர்.

கன்னிமார் ஒன்பதின்மர், கருணைமலி சண்டேசன்,
முன்னிகழும் அறுபத்து மூவர்,நவக் கிரகங்கள்,
மின்னிமழை பெயச்செய்யும் வியன்திகழ்பா தாளநந்தி,
என்னிவையல் லாதனவும் இசைக்கரும்பற் பலவுளவே. 20

இம்மைநிலை உணரார்சென்(று) எமக்கொர்வரம் ஈகெனினும்
செம்மையுறு கெவுளிமுதல் சிலகுறிப்பால் செப்பியருள்
அம்மைமுத்தாம் பிகைவாழும் ஆலயத்தும் பலவுளவாம்
மும்மைவினைத் தொடக்கறுத்து முத்திதரத் தக்கனவே. 21

பம்பைநதிக் கீழ்கரையிற் பனைவனப்பி டாரிஎன்றோர்
அம்பையுளாள்; சிறிதேனும் அசுத்தஉண(வு) அருந்தர்தாள்;
கொம்பையும்வா லையுங்கொள்சில உயிர்களையும் கொன்றயில்வார்
வம்பைஅறத் தொடைத்திடுவான் மாதவஞ்செய்(து) உள்ளாளே 22

தன்சூலத் தலையில்வதி தரும்ஆமாத் தூர்ப்பரமன்
வன்சூலப் படையொடருள் வரத்தால்அம் மாகாளி
முன்சூலை யாற்பிழைத்த முனிவன்அடி யவர்க்கெல்லாம்
இன்சூல்கொள் முகிலேபோன்(று) ஏன்றஅருள் பொழிவாளே 23

நிருதிமூலையில்மயிடன் நிர்த்தூளி படச்செற்றாள்
ஒருவளுளாள் அவள்பெருமை உணராதார் ஊன்படைத்துக்
கருமவலைப் பட்டுழல்வார்; கற்றுணர்ந்தோர் ஆன்பாலால்
பொருவருஞ்சீர்ப் பொங்கலிட்டுப் புனிதபலம் அடைவாரே. 24

வாயுமூலையில்ஒருவன் மதகரிவா கனத்தோனாக்
கூயுறுக்கும் ஆண்டலைப்புட் கொடிகுகனிற் கொள்வோனா
மேயுளன்அன் னவன்சிவனும் விட்டுணுவும் பெறுபாலன்
தேயுறுமென்(று) உருத்தேய்க்கில் சினவுகுணம் உடையானே. 25

எங்கேனும் இருந்தடியார் எழின்மாதைப் பதிநாடில்
அங்கேபோய்ச் சேர்வதன்முன் அருள்செயுமா(று) ஈதென்று
சங்கேத மாய்த்தொகுத்துத் தனதன்ப ரொடுபகர்வோன்
கொங்கேய்ந்த மலர்ப்பூசை குயவரிடம் கொள்ளானே. 26

---

22 பிடாரி - காளி.

23 தலையில் – மூன்று முனையுள்ள சூலத்தின் நடு முனையிலுள்ளது ஆமாத்தூர். சூலையாற் பிழைத்த முனிவன் - திருநாவுக்கரசர்.

24 செற்றாள் – துர்க்கை.

25 ஒருவன் - ஐயனார்; ஆண்டலைப்புள் - சேவற்கொடி. அபிடேகத்தின் போது அழுத்தித் தேய்க்க ஒப்பாதவர்.

26 சங்கேதம் – விரிவாக; பெரும்பாலும் ஐயனாரைப் பூசிப்போர், குயவரென்பதாம்.

கண்ணாரச் சிலகாட்சி காட்டிஉமை யவள்பாதப்
பெண்ணார்ஒன் பதின்மர்பெறும் பிள்ளைகள்வங் கிசத்தோரால்
விண்ணாடர் களும்போற்றும் வியன்பூசை கொண்டுள்ளான்
பண்ணார்சொல் வேதன்முதற் பலர்வணங்கும் பதத்தானே. 27

நாயேவா கனமாக்கி நாம்உணரும் ஞாலமுற்றும்
பேயேஎன்(று) எளிதுணர்த்தும் பெருங்கருணை வடுகேசன்
ஆயேயென்[று] இனி(து)அளிக்கும் ஆமாத்தூர் எல்லையினுள்
தோயேதோர் சிறுமணலும் சுயம்புலிங்கம் போல்வதுவே, 28

அட்டமூர்த் தியுமான ஆமாத்தூர் அழகேசற்(கு)
இட்டமாம் மூர்த்திவகை இவ்வளவே ஈண்டுரைக்கப்
பட்டதினித் திருவட்டப் பாறைஎன்(று)ஒன்(று) உள(து)அதனைத்
தொட்டவுட னேமெய்பொய் துலங்கும்விதம் சொல்கின்றாம். 29

சொல்லுருசி உணராமற் சுயப்பொருட்கும் அயற்பொருட்கும்
மல்லுயர்த்தும், கவிவேட்டும், மனமிளைக்கும் அகப்புலவீர்
கல்லுருவாம் அதன்பெருமை கழறிமுடி யா(து)எனினும்
வில்லுறழ்வாள் நுதற்கலைமின் விளக்கியவா விளம்பிடுவாம். 30

மூர்த்திச் சிறப்பு முற்றிற்று.

ஆகக்கவி 185.



---

27 ஒன்பதின்பர் – நவ கன்னிகையர்; பிள்ளைகள் – வீரவாகு முதலியோர்; வங்கிசத்தோர் – செங்குந்தர்கள்.

28 வடுகேசன் – வயிரவர்; அளிக்கும் அவரால் காக்கப்படுவது ஆமாத்தூர்.

ஆறுவது

## * திருவட்டப்பாறைச் சிறப்பு.

அறுசீர் விருத்தம்

எழுதொ ணாதநால் வேதத்தின்
மகிமையும், இரட்சிக்கும் தொழிற்பண்பில்
வழுவு றுன்சுழற்(று) ஆழியின்
கூர்மையும், மழவிடைப் பரியூர்வான்
மழுவின் வீரமும், மற்றைய
வானவர் வண்படை வலியாவும்,
பழுதில் மாதையூர்க் கோயிலில்
திருவட்டப் பாறையா யதுபோலும். 1

இன்ன நாளில்இன் னார்பொருட்டு
இன்னதே[வு] இயற்றிய(து) எனமுன்னூல்
பன்ன வில்லை,யான் அதற்கொரு
பொய்க்கதை பகர்ந்திட வெருள்கின்றேன்
அன்ன கற்புகழ் எழுகடற்
புனலினும் அதிகமேயாம்; ஆர்க்கும்
நின்ன யம்தெரி விற்பதற்(கு)
ஒருதுணை நீள்நிலத்(து) அதுதானே 2

பொய்சொ லார்களைக் கனற்குழி
விழுசிறு புழுவெனக் கொலுமாற்றல்
மெய்சொல் வார்களும் வெருளுறத்
திகழ்தரு விருத்தவான் சிலைமேன்மை
செய்சொற் சூதரும் விரித்திலர்,
சூகரத் திரள்புரை தீமாந்தர்,
வைசொற் சொல்லினும் பொறுத்திடும்,
பொய்சொனல் வருத்திடும் பெருங்கேடே 3

---

* விருத்தசிலை என்பதையே திருவட்டப்பாறை என வழங்குவர். சத்தியம் (உண்மை) கூறாமல் பொய்கூறுபவர்களைத் தண்டிக்கும் இயல்பை உடையது இப்பாறை நாம் காணும்படி தற்போதில்லை. என்றாலும் இதன் தொடர்பாக நாம் காணஇருப்பது, நாக வடிவில் இவ்வூரை யடுத்து 4 கல் தொலைவிலுள்ள, நாகாம்பிகை என்று மக்கள் வழிபடுகின்ற சுயம்புத்தோற்றமான நாகவடிவமேயாகும்.

---

1 நால்வேதம் - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. வேதம் கேட்டுக் கற்கும் தன்மையதுபற்றி எழுத ஒண்ணாது என்பதாம் அந்த வேதத்தின் பெருமையும், திருமாலின் சக்கராயுதத்தின் கூர்மையும், சிவனது மழுவாயுதத்தின் வெற்றியும், மற்றைய தேவர்களின் ஆயுதவலிமையும் என்றுசேர்ந்தது போல்வது, திருவட்டப்பாறை என்பதாம்.

2 கற்புகழ் - திருவட்டப்பாறைச் சிறப்பு; நின்னயம் – உண்மையென்பதை. விருத்தவான் சிலை – வட்டவடிவமான சிறப்புக்கல். வருத்திடும் – வரும்படி செய்யும்.

சாட்சி ஆயிரங் கேட்டும்ஓர்
வரியவாத் தயக்குபொய் வழக்கெல்லாம்
காட்சி யால்தெரிந் தாங்(கு)உணர்த்
திப்,பல காவலர்க்(கு) உவப்பாக்கும்
மாட்சி தோயும்அச் சிலையெதிர்
பொய்சொல்வார், வானவர் ஆனாலும்
மீட்சி யின்றிய துயர்ப்பெருங்
கடலினுள் வீழ்ந்(து)உழன்(று) இறப்பாரே 4

தெய்வம் உண்டென நம்பினர்
அங்குபோய்ச் சிறிதுபொய் உரைத்தாலும்
உய்வதின்(று) இனியிவர் எனத்
தகுந்துயர் ஒருங்[கு]உட னுடன்நல்கும்,
பொய்வ ழக்கராம் அநீசுர
வாதரும் போல்பவர் களும்சொன்னால்
ஐவ ரன்றிஇவ் அகிலமும்
அறிதர அவரையும் கொலும்அன்றே 5

வெண்ணி றம்பொலி மதிச்சடைச்
சிவபிரான் மேயசீர் ஆமாதைக்(கு)
உள்நி ரந்தரம் உறும்வட்டக்
கல்லெதிர் ஓதொணா தனஓதிக்
கண்ணி ழந்தவர்; தலைவெடித்
தவர்;அராக் கடிப்பமாய்ந் தவர்போல்வார்
எண்ணி லார்நிசம் புகன்றுதம்
துயரொழிந் திட்டவர்களும் ஆங்கே 6

வேதன் ஆயுளின் குறைவற
வித்தசீர் மேயவர் தாம்ஓர்பொய்
ஓதல் எய்தினும், ஒருவரு
டத்தில்அவ் உரனறக் கொலும்என்னச்
சூதர் ஓதினர், பலதல
புராணமும் சொன்னவர் இதற்கன்றே
நீதம் காட்டுமெய்க் கற்புகழ்
விரித்[து]இடர் நீங்குமா(று) அமைத்தாரே 7

---

4 ஆயிரமான பொய்ச்சான்றுமூலம் தீராத வழக்கையும் கூடி, இந்த வட்டப்பாறையின் தெய்வீகச்செயலால், கண்முன் உண்மை கண்டனர்

5 அநீசுரவாதர் – நாத்திகர்; ஐவர்அன்றி - ஐம்பொறிகள் அல்லாமல். அன்றே - அப்போதே

6 நிரந்தரம் - எப்போதும்; ஓதஒண்ணாதன – சொல்லக்கூடாத பொய்; ஆங்கே – அதுபோல் அளவில் அடங்காத பலர்.

7 குறை அற – நிறைந்த ஆயுள் உடையவரானாலும்; உரன்அற - அதன் வலிமை நீங்கும்படி; நீதம் காட்டும் - உண்மையை விளக்கத்தக்க; கற்புகழ் - திருவட்டப்பாறையின் சிறப்பு.

விடந்த வாமிடற்(று) இறையவன்
பார்வையும், வெற்பர சதன்சென்னி
இடந்த ழைத்தகொம் பனையவள்
நோக்கமும், இடைவிடா துறும்அக்கல்;
நடத்த மெய்பொய்மாத் திரம்தெரித்
திடும்என நவிலன்மின்! நடத்தற்கா
உடந்தை யாமவர் தாமும்ஆங்(கு)
ஒருசிலர் உறுவதுண்(டு) உலகோரே 8

வாலி யைக்கொலு முன்இரா
கவனும்,அவ் வானரற்(கு) இளையோனும்,
காலின் சேயறி தரும்உடன்
பா(டு)அந்தக் கல்லின்முன் செய்தார்என்று
ஓலிடுஞ் சொலுண்(டு) அங்ஙனம்
முன்பின்ஆங்கு உஞற்றினர் ஆராரோ
நாலி ரண்டுதிக் கினரும்ஓ[து]
ஒருகதை உள[து]அதை நவில்கின்றும் 9

வடக்கிற் காசியும், தென்திசைக்
காசியும், மற்றிரு முனைமீதும்
கிடக்கத்; தான்சிவன் சூலத்தின்
நடுத்தலை கிளர்திரு வாமாத்தூர்
இடத்தில் சத்தியக் கல்லினைச்
செயிக்குமா[று] எண்ணி,ஓர் கொடும்பாவி
தடத்தில் மாய்ந்தவா[று] உரைக்குதும்
உலகினோர் தாமும்உணர்ந்(து) உயுமாறே 10

மாதை யூர்வட திசையிலுள்
ளான்ஒரு மனிதன்,அன் னவன்;என்றும்
சூதை யேமுயல் பவன்;தனக்(கு)
இளையனும் துணைவனை வஞ்சித்திட்(டு)
ஊதை யில்துரும் பெனச்சுழன்
றிடவிடும் உலுத்தன்; உள்ளனவற்றுள்
ஏதை யும்பிறர் காணவை
யாதுவிற்(று) இரத்தின வடிவாக்கி 11

8 விடம்தவாமிடற்று இறையவன் - விடம் நீங்காத கழுத்தினனை சிவபிரான். வெற்பு அரசு - இமயம். தழைத்த கொம்பு - இமயமலையிற்றோன்றியபார்வதி. கல் - வட்டப்பாறை; உடந்தையாம் அவர்-பொய்ச்சான்று கூற உதவியாயிருப்பவரும் துயரடைவர் என்பதாம்.

9 இராகவன் - இராமபிரான்; இளையோன் - சுக்கிரீவன்; காலின்சேய் - வாயு குமாரனை ஆஞ்சனேயர்; உடன்பாடு - வாலியைக் கொன்று, சுக்கிரீவனுக்கு முடிசூடு வேன் என்பதாக, ஆஞ்சனேயர் அறியும்படி, வட்டப்பாறையின்முன் உறுதி செய்து கொண்டனர் என்பதாம்.

10 நடுத்தலை - சிவனது சூலம் மூன்று தலையினது. வடகாசி ஒருமுனை, தென் காசி ஒருமுனை, நடுமுனை யினது திருவாமாத்தூர் என்ற சிறப்பு.

11 ஊதையில் துரும்பு என - பெருங்காற்றில் புல்லைப்போல் அலையும்படி. உலுத்தன் - பேராசைக்காரன்.

தண்டம் ஒன்றினுள் அடக்குபு
        கைக்கொடு தருக்கொடு திரிந்தானை,
மண்ட லத்தினர் மொழிவழி
        பகைத்து,நல் வாலிப னும்பின்னேன்
கொண்ட என்பொருள் உளதெனில்
        தருதி!இன்றேல் அங்ஙன் குளிர்மாதை
அண்ட நாயகர் சத்தியக்
        கல்லெதிர் அறைதி!யென்(று) அழைத்தானே. 12

கேட்ட போ(து)அவன் மறுத்திடா(து)
        ஒப்பியே கிளர்சில ருடன்ஆங்குற்(று)
ஈட்ட தாகும்அக் கல்லெதிர்
        தெண்டனிட்(டு) இருகையால் தொடுமாறு
வேட்ட பாவனை யாய்த்,தடி
        தம்பிகை விரைந்துபற் றெனநல்கிப்,
பாட்ட னூர்பொருள் முதலவும்
        அவன்கொளப் பட்டஎன்(று) உரைத்தானே. 13

சொன்ன போதுகண் கெடவிலை,
        வாய்வழி சோரிகக் கவும்காணூர்,
என்ன காரண மோஎன
        மலைந்தனர் யாரும்;அவ் இளையோன்தான்,
உன்ன(து) உண்மையும் பொய்த்ததோ
        எனச்சொலி உருண்டழு(து) எழுந்தப்பால்,
அன்ன தண்டினை அண்ணனுக்(கு)
        அளித்தலுத்(து) அனைவர்தம் மொடும்போனுன். 14

இருகு ரோசமட்(டு) ஏகலும்
        தடியினுல் இன்புறும் வன்பாவி,
திருவட் டக்கலின்தேவதை துரத்தியே
        சீறிக்கொத் திடுமோ என்[று]
அருகுள் ளாருடன் ஆசியப்
        பொலிவுதோய் அசத்திய செயம்சொன்னுன்,
ஒருக ரும்பெரும் பாம்[பு]உதித்(து)
        அவன்றன[து] உயிரையுண் டதுமன்னே. 15

---

13 ஈட்டதாகும் - வலிமையுள்ள, வேட்டபாவனை - விரும்பியதுபோல.

14 சோரி – இரத்தம். ஆசியப்பொலிவு – கேலிமொழி. மலைந்தனர் – மலைவும், வியப்பும் கொண்டனர்.

15 தேவதை – தெய்வம், அசத்திய செயம் – பொய்கூறி செயித்ததாக.

அந்தப் பாம்பின்வால் அம்பிகை
இடத்துள[து] அதன்தலை அக்காட்டோர்
சந்தக் கல்லுரு வாய்க்குறிப்
பவிர்தரச் சமைந்தது சுயம்பாயே,
இந்தப் பாரினர் எழில்கொள்நா
காம்பிகை எனப்பெயர் இட்டன்பால்
முந்தக் கல்லதன் பிரதிவிம்
பம்,இதென மொழிந்துபூ சிக்கின்றார். 16

அன்று தொட் டவண்நடந்துள
கதைகளோர் ஆயிரமென லாகும்
பொன்று தீமையில் சிவபிரான்
மாதையூர்ப் புகழ்மரத் தொருகொம்பாம்,
இன்று ளார்பலர் அறிதரு
கதையுமொன்[று] இயம்புதும், இதைச்சின்னாள்
சென்று தோன்றுநர் பொய்யெனில்
அதற்கும்அத் தெய்வமே சான்றாமால். 17

வேறு

எண்சீர்த்தாழிசை.

அந்த நாகக்கல் அருகி லோர்செவ்வாய்
ஆகு நாளில்மிக்[கு] அன்பர் கூடியே
சொந்தப் பொன்கொடு கொலையி லாதவாம்
தூய பண்டமே தொகுத்[து] இறைஞ்சினர்
சந்தக் கூத்தர்சிற் சிலரோர் ஊர்வழித்
தடத்தில் ஏகுவார் தம்முள் ஓர்பொலான்
இந்தக் கல்லும்ஓர் தெய்வ மோஎனா
எள்ளல் கூறினன் எண்ணி லாதவே. 18

கூறல் கேட்டஅத் தொண்டர் யாவரும்
குணமொ ழிந்தனர் கொட்டிலார், அவன்,
சேறல் எய்தினன் சிறிதுசெல் லுமுன்
செங்கண் வாள்அரா ஒன்று தீயெனச்
சீறல் வெஞ்சினம் கொண்டு வேறுழிச்
சென்றி டாமலும் திசைய டைத்த[து]ஆங்[கு]
ஆறல் உற்றதோர் கிழவனால் உணர்ந்[து]
அனைவ ரோடும்உற் றதைவ ணங்கினன். 19

---

16 சந்தக்கல் - அழகிய பாறையாய் நாகத்தின் வடிவில், மேல்புறம் ஆமாத்தூரை நோக்கியபடியுள்ளது. முந்து அக்கல் – பழைமையான அபிராமேசர் திருவுருவான சுயம்பு வடிவத்துக்கு; எதிர்உருவமாக, அல்லது முத்தாம்பிகையின் திருவுருவுக்கு ஒப்பாக.

17 இன்று உளார் அறிதருகதை - தமது காலத்தில் பலர் காண நடந்தது என்பதாம்.

18 சந்தக் கூத்தர் - நாடகத்துக்குச் செல்பவர்; எள்ளல் – இகழ்தல்.

19 குணமொழிந்தனர் – அவன் கூறிய இழிசொல்லைக் கண்டித்து, அறிவுரை கூறினர். கொட்டிலார் – அடிக்காமல் விட்டார்களே என்ற குறிப்பு. சேறல் – செல்லுதல் வேறு உழி – வேறுபக்கம் போகாதபடி. அதை – நாகாம்பிகையின் வடிவத்தை.

சென்று வந்துசெய் பணிகு றித்ததாற்
சிறிது நீறுபெற்[று] அதுபுனைந்து போய்,
அன்று சென்றவூர்த் தொழில்செ யாமலே
அரிய வெஞ்சுரத் தால் அயர்ந்து,மீண்[டு]
ஒன்று சொன்னதற்[கு] எண்மடங் குசெய்(து)
உயிர்பி ழைத்துளான் உண்மை, இன்னமும்,
பின்து லங்குபல் கதையுமாம், மெய்யைப்
பிழையெ னச்சொலில் பீடை நீடுமே. 20

அம்மை அப்பனுக்[கு] அணியள் அல்லள்என்[று]
அகமலிந்து மூன்[று] அடியும் எய்தினன்,
இம்மை யிற்பலோர் கண்கள் காணவேர்
இயலும் வன்னியாம் எழிலுருக் கொளா
வெம்மை தண்மைமாற் றிடு,நி ழற்செய்தே
மிகவெ றுத்ததாய் மேய கோயிலில்
செம்மை மாதவஞ் செயலும், மாதையூர்த்
திருவட் டக்கலின் திகழ்வ லத்தரோ. 21

கல்லி னைப்பெரும் பாறை யென்னவே
கழறல் மெய்ப்படக் காட்டொர் ஆடலைச்
சொல்லி மற்றொர்சிற்[று] ஆடலும் சொனும்,
தூயர் கொள்வர்,வன் துட்டர்கொண்[டு] உயார்,
புல்லி[டு] ஊர்ப்பெயர்க் கார ணம்பெறப்
புனித ஆனினம் பூசை செய்தவா[று]
இல்லி டத்தரும் துறவர்தாமும் மற்[று]
எனைய ரும்இன் புறவி ளம்புவாம். 22

திருவட்டப்பாறைச் சிறப்பு முற்றிற்று.

ஆகக் கவி 207

---

20 சென்றுவந்து - - - பிழைத்துளான், தான் சென்ற இடத்தில் நாடகத்தை முடித்து திரும்பி இங்கு வந்து, வழிபாடு செய்து நாடகமும் நடத்துவதாக வேண்டிக்கொண்டான். திருநீறுபெற்று அணிந்து சென்றான். ஆனாலும் சென்ற இடத்தில் நடிக்க முடியாமல் சுர நோயுற்றான். மீண்டுவந்து வேண்டியதைவிட எட்டுப்பங்கு அதிகமாகவே தொண்டுசெய்து உயிர் வாழ்ந்துகொண்டிருக்கின்றான் என்றார். அந்த நிகழ்ச்சி இற்றைக்கு காலங்கடந்ததாயினும், இன்னும் வாழ்வதாகவே ஆசிரியர் கூறுகின்றனர்.

21 தாயான சத்தி, தந்தையான சிவனுக்கு நெருங்கியவளல்ல, என்ற பேதம் கொண்டார் பிரிங்கிமுனிவர், அந்தக் குற்றத்துக்காக உலகமறியும்படி வேருடன் கூடிய வன்னிமரமாகி, தன்னால் வெறுக்கப்பட்ட அம்பிகை ஆலயத்திலிருந்து வட்டப்பாறைக்கு வலப்பக்கத்தில் அவர் தவம் செய்கின்றார்.

சத்தியும் சிவமும் ஒன்றென்ற உண்மைக்கு மாறுபட்ட பொய்மையால்,தவமிருந்தும்கூட மரமானார் முனிவர். அப்பிழைக்கு மன்னிப்பு வேண்டி அம்பிகையருகே தவம் புரிகின்றார் ஆயின், நம் போன்றவவர் பொய்மை செய்தால் என்னாகும் என்று அறிவுறுத்தியதாகும்.

22 தூயர் - அன்புடையவர். துட்டர் – நாத்திகர். புல்லிடு – பொருந்திய. ஊர்ப்பெயர் - ஆமாத்தூர் என்ற பெயர். இல் இடத்தவர் - குடும்பமுடையவர். துறவர் - பற்றற்றவர் எனைஅனார் - இந்த இரண்டிலும் தொடர்புடைய என்போன்றவர்.

# திருவட்டப்பாறைச் சிறப்பு.
## (உரைநடை)

எழுதொணாத நான்மறையின் பெருமையும், காக்கும் தொழில் பூண்ட திருமாலின் ஆழிப்படையின் கூர்மையும், இளமைதங்கிய காளையை வாகனமாகக் கொண்ட சிவபிரானுடைய மழுப்படையின் ஆற்றலும்,இந்திரன் முதலிய ஏனைய தேவர்களின் வளப்பம் பொருந்திய படைகளின் வலியும் ஆகிய இவைகளெல்லாம் ஒன்று சேர்ந்து ஓர்உருக் கொண்ட தன்மையை உடையது மாதை நகர்க் கோயிலின் கண் உள்ள திருவட்டப்பாறை என்னும் தெய்வத் தன்மையுடைய கல்லுருவம்.

திருவட்டப்பாறைஎன்னும் பெயரினை உடைய அப்பாறை இன்ன காலத்தில், இன்னார் பொருட்டாக, இன்ன தேவரால் இயற்றப்பட்டதென்னும் செய்தி தெரியவில்லை. அப்பாறையின் தோற்றத்திற்கு யான் ஈண்டொருபொய்க் கதையைப் புகல்வதற்குத் துணியவில்லை. அப்பாறையின் புகழ் ஏழுகடல் நீரினும் அதிகமாகும். உண்மையை உணர்தற்கு அஃது உலகத்தில் ஒரு சிறந்த துணையாக விளங்குவதாகும்.அப்பாறை பொய்ம்மொழி புகன்றவர்களைத்தீக்குழியில் விழுந்த புழுவை அத் தீ வருத்திக் கொல்லுதலைப் போல், தான் வருத்திக் கொல்லும் தன்மையுடையது. அப்பாறையின் தன்மையை அறிந்த மெய் சொல்லுவோர் கூட, அப்பாறையினிடம் செல்லுவதற்கு அஞ்சுவர். இழிந்த மக்கள் இழித்துரைத்துத் தன்னைப் பழித்தாலும் அதுபொறுத்துக்கொண்டிருக்கும். பொய்சொன்னால் சிறிதும் பொறுக்க மாட்டாது. மிகக்கடுமையாக வருத்தும்

ஆயிரம் சாட்சிகளைக் கேட்டும்கூட உண்மையை உணரமுடியாத பொய்வழக்குகளை எல்லாம் அப்பாறை நொடியில் தீர்த்து, அரசர்கட்கு மிகுந்த மகிழ்ச்சியை உண்டாக்கும். அப்பாறையின் முன்னர்ப் பொய் சொல்வார் தேவர்களானாலும் மீளாத துன்பப் பெருங்கடலில் வீழ்ந்து வருத்தி இறப்பார்கள்.

தெய்வம் உண்டென்னும் நம்பிக்கையுடையவர்கள் அங்குபோய்ச் சிறிது பொய்ம் மொழிபுகன்றாலும், இனிமேல் இவர்கள் உயிர் வாழார் என்று கண்டவர் கூறுமாறு கடுமையான துன்பத்தை உடனே ஒரு சேரக் கொடுக்கும். பொய்ம்மையான கொள்கைகளை உடைய அநீசுர வாதியைப் (கடவுளில்லை என்பவர்) போன்றவர்களும் அங்கு சென்று பொய்ம்மொழி புகன்றால் அவர்களையும் அப்பாறை உலகத்தார் எல்லோரும் உணருமாறு கொல்லும்.

அத்திருவட்டப் பாறையின் எதிரே பொய்ம் மொழிகளைப் புகன்று கண்ணிழந்தவர்களும், தலைவெடிக்கப் பெற்றவர்களும், பாம்பு கடிக்க மாய்ந்தவர்களும் எண்ணற்றவர்களாவர். உண்மை புகன்று தமது துன்பத்தை ஒழித்தவர்களும் பலராவர்.

அத் திருவட்டப்பாறையின் எதிரே பொய்ம்மொழிகளைப் புகன்று கண்ணிழந்தவர்களும், தலைவெடிக்கப்பெற்றவர்களும், பாம்பு கடிக்க மாய்ந்தவர்களும் எண்ணற்றவர்களாவர். உண்மை புகன்று தம் துன்பத்தை ஒழித்தவர்களும் பலராவர்.

நீண்ட வாழ்நாளை நான்முகனூற் பெற்ற பெருமையுள்ளவர்களாக இருந்தாலும், அவர்கள் அவ்வட்டப்பாறையின் முன்பு பொய்ம்மொழி புகன்று விடுவார்களாயின் அவர்களுடைய வாழ்நாளின் ஆற்றல் தொலைய அவர்களையும் ஓராண்டுக்குள் கெடுத்துவிடும். அப்பாறையினிடத்தில் இறைவன் பார்வையும், இறைவி பார்வையும் இடைவிடாது அமைத்திருக்கும்.

வாலியைக் கொல்வதற்கு முன் இராமபிரானும், சுக்ரீவனும் அநுமான் சான்ருக நட்பானபோது உடன்படிக்கையை அப்பாறைக்கு முன்னர்ச் செய்துகொண்டனர் என்று அறிந்தோர் புகல்வர். இவ் உண்மைக்கல்லினிடத்து நிகழ்ந்த நிகழ்ச்சியொன்றையும் இங்கே கூறுவாம்.

திருவாமாத்தூருக்கு வடக்குத் திக்கிலே ஒரு மனிதன் இருந்தான், அவன் மிகவும் பொல்லாதவன்; நாளும் சூதாடுபவன்; பொய்ம்மொழி புகல்பவன். அவன் இந்த உண்மைக்கல்லை (சத்தியப் பாறையை) வென்றுவிட எண்ணினன். அவனுக்கு ஓர் இளைய தம்பியாக உடன் பிறந்தான் இருந்தான். அவர்களுடைய முன்னோர்கள் அவர்கட்கு மிகுந்த பொருள்தேடி வைத்திருந்தனர். கொடியவனுகிய மூத்தோன் தன் தம்பிக்குத் தன் முன்னோர்கள் தேடிவைத்த பொருளில் பங்கு கொடாமல் வஞ்சித்து எல்லாவற்றையும் தானே கவர்ந்துகொள்ள எண்ணினன். இருந்த பொருள்களை எல்லாம் விற்று இரத்தினமாக மாற்றினன். பொருள்களைத் தன்னுடைய தம்பியோ, மற்றவர்களோ காணுமாறு சிறிதும் விட்டுவைக்கவில்லை. நீண்ட தடியொன்றை உள்ளே துளையுடையதாக அமைத்து இரத்தினத்தை அத்தடிக்குட் பொதிந்து தன்னுடைய கையிலே வைத்துக்கொண்டு திரிந்தான்.

ஊரார்கள் இளையவனைப் பார்த்து "உனக்குரிய பொருள்களையெல்லாம் உன்னுடைய அண்ணன் கவர்ந்துகொண்டான். நீ பேசாமற் பார்த்துக்கொண்டிருக்கிருயே! உனக்குரிய பொருளைக் கைப்பற்றுவாயாக" என்று அறிவுரை புகன்றனர். ஆகவே பின்னவன் முன்னவனைப்பார்த்து "நம்முடைய முன்னோர்கள் தேடிவைத்த பொருள்கள் எங்கே? என்னுடைய பாகப்பொருள் உன்னிடம் உளதாகில் கொடு! இன்றேல் திருவாமாத்தூர்த் திருக்கோயிலின்கண் உள்ள திருவட்டப் பாறையின் முன்பு வந்து நான் உன்னுடைய பொருள்களைக் கைப்பற்றிக்கொள்ளவில்லை என்று உறுதிமொழி கூறு" என்று சொல்லி அழைத்தான்.

முன்னவன் பின்னவனைப் பார்த்துத் தம்பி! என்னிடம் பொருள் இல்லை. எல்லாவற்றையும் நீதான் கைப்பற்றிக்கொண்டாய்! திருவட்டப்பாறை இடத்திற்கு வா! நான் உண்மையைக் கூறுகிறேன் என்றுரைத்தான். இருவரும் சாட்சிக்குச் சிலரை அழைத்துக்கொண்டு திருக்கோயிலில் உள்ள திருவட்டப்பாறை இடத்திற்குச் சென்றனர். முன்னவன் ஒரு சூழ்ச்சியை உள்ளத்தில் எண்ணிக்கொண்டுதான் இந்த வஞ்சனையில் இறங்கினன். மூத்தவன் திருவட்டப்பாறையைத் தொட்டுக் கும்பிட்டு உண்மை மொழியை உரைக்கத் தொடங்குவான் போல் நடித்து, தன் கையில் இருந்த பொருள் பொதிந்தத் தடியைத் தன்னுடைய தம்பியிடம் நீட்டித் தம்பி! இத் தடியைக் கையிற் பிடி, " நான் பாறையைத் தொட்டுக் கும்பிட்டுச் சத்தியம் செய்கிறேன் " என்றான். சூழ்ச்சியை உணராத இளையவன், அவ்வாறே தடியைத் தன்னுடைய கையில் வாங்கி வைத்துக்கொண்டான். மூத்தவன் பாறையைத் தொட்டுக் கும்பிட்டு " முன்னோர்கள் தேடி வைத்த பொருள்கள் எல்லாம் என்னுடைய தம்பியிடம்தான் இருக்கின்றன. என்னிடம் சிறிதும் இல்லை " என்றுரைத்துச் சத்தியம் செய்தான். பிறகு தடியைத் தான் பெற்றுக்கொண்டு அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்டான்.

மூத்தவன் பொய்ம்மொழி புகன்றபோது அவனுடைய கண்கள் கெடவில்லை, வாய்வழியாக உதிரத்தைக் கக்கவும் இல்லை. இதற்குக் காரணம் யாதோ என்று உடனிருந்தவர்கள் திகைத்தனர். இளையவனே திருவட்டப்பாறையைப் பார்த்து " உன்னுடைய உண்மையும் பொய்யாகப் போய்விட்டதோ "? என்று சொல்லிக் கீழே விழுந்து புரண்டு அழுதான். பிறகு மற்றவர்களோடு அவ்விடம் விட்டுப்போனன்.

மூத்தவன் இரு குரோச தூரம் போயிருப்பான். அவன் தன்னோடு இருந்த மற்றவர்களைப் பார்த்து " திருவட்டப்பாறைத் தேவதை சீறிக்கொத்திவிடுமோ " என்று நகைச்சுவையோடு பேசினன். அப்பொழுது ஒரு பெரிய கரியபாம்பு அவ்விடத்தே தோன்றி அவனைக் கொத்தியது. அவன் அக் கணமே கீழே விழுந்து மாண்டொழிந்தான். அப்பாம்பின் வால் அம்பிகையின் திருமேனியில் உள்ளது. தலை ஒரு கல் வடிவாகியது. இக் கல்லையே முந்திய வட்டப்பாறையின் துணை வடிவமாகவும், அந்த நாக வடிவை நாகாம்பிகை எனவும் தற்போது வழங்குகின்றனர்.

அன்றுதொட்டு அங்கு நடந்துள்ள கதைகள் ஓராயிரம் உரைக்கலாம். அண்மைக் காலத்தே அங்கு நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றையும் ஈண்டு இயம்புகின்றும். இதைப் பிற்காலத்தார் பொய் என்பாராயின் அதற்கும் அத் தெய்வமே சான்றாகும்.

மாதையூர் வட்டப்பாறை நினைவாக இக் காலத்தே நாகாம்பிகை என்ற சிலையின்பால் அன்பர்கள் பலர் ஒரு செவ்வாய்க்கிழமையில்

தம்முடைய உரிமைப் பொருளைக் கொண்டு கொலையிலாதனவாகிய தூய பண்டங்களைத் தொகுத்து வழிபாடு செய்தார்கள். அப்பொழுது அவ்வழியிலே மக்கள்சிலர் நாடகத்தில் நடிக்கச்சென்றனர். அவர்களில் தீயவன் ஒருவன் "இந்தக் கல்லும் தெய்வமாகுமோ" என்று எள்ளி நகையாடியதோடு இழிசொற்கள் பலவற்றைப் புகன்றான்.

இழித்துரையாடியதைக் கேட்டோர் மனந்திகைத்தனர். இகழ்ந்துரைத்த தீயோன் அவ்விடத்தைவிட்டுச் சென்றான். சிறிது தொலை செல்வதற்குள் கொடிய பாம்பொன்று சினமிக்கதாய்ச் சீறித் தீயோன் செல்லும் வழியைத் தடுத்தது. அப்பொழுது அங்கு வந்த முதியவர் ஒருவர் நிகழ்ந்ததை அறிந்தார்; அவன் இகழ்ந்ததைக் கடிந்தார். வட்டப்பாறையின் பெருமையை அவனுக்கு விளக்கினார். அத்தீயோன் மக்கள் வழிபட்டுக்கொண்டிருந்த இடத்திற்குச்சென்று அன்போடு அதனை வணங்கினான். திருநீறுபெற்று அணிந்தான். பிறகு தான் செல்லவேண்டிய ஊர்க்குச் சென்றான். ஆயினும் அன்று தான் செய்ய வேண்டிய நடிப்பிற்குரிய வேலையைச் செய்து நடிக்க முடியவில்லை. கொடிய காய்ச்சல் நோயோடு தன்னுடைய ஊருக்குத் திரும்பினான். அதனால் பலநாள் வருந்தினான். தான்புரிந்த தீவினைக்கு எண்மடங்கு பரிகாரங்கள் செய்து உயிர் பிழைத்தான்.

முற்றிற்று.



ஏழாவது

## பசுக்கள் பூசித்தது.

எழுசீர்விருத்தம்.

ஆதியாம் பிரம சிருட்டியிற் பசுக்கட்(கு)
அணிமருப் பின்றியே அமைந்த(து)
ஏதில்பன் மிருகத் தொகுதியால் இளைப்புற்(று)
இரையெனச் சிலகொளப் பதைத்துச்
சோதிவான் கயிலைப் பதிபுரந் தருளும்
தொழில்பெறும் நந்தியைச், சுவர்க்க
மீதியல் காம தேனுவைக் குறித்த
விரதமா தியில்மெலிந் தனவே 1

அத்தவம் முதிர்கால் அவ்இரண் டன்றி
ஆழியும், சங்கமும் அடற்கை
வைத்தவன் உலகிற் பசுக்களும் நோவா
மாற்றருஞ் சூடிழைத் ததனுல்
இத்தரை மீதவ் இனமொருங் குற்ற,
ஏன்எமைக் குறித்திவ்ண் நீவிர்
சுத்தமா தவஞ்செய்(து) இளைத்துளீர் எனலும்
தொழு(து)இவை அவற்றெடு சொல்லும் 2

சீயம்வல் லியமா தியஎதிர்த் திடினும்
செகுத்துயர் வலியொடு திகழ்சீர்
ஏயகோ(டு) இரண்டுயாம் ஒருங்குறல் வேட்டேம்
என்றலும் எமக்கும்அப் பெரும்பே(று)
ஆயதே யெனக்கொண்(டு) அவையுமிக் குழுவோ(டு)
அமைந்தன; நந்தியம் பெருமான்
வேயளா வியதோட் கவுரிகேள் வனைநாம்
விருபலே கடனென விதித்தான். 3

அவனையும் அவனுக்(கு) இனியதாம் தவஞ்செய்(து)
அடைதரு நெறியும் யாம்அறியேம்,
எவண் உரைக்குதியோ அவண்நடக் குதுமென்(று)
இயம்பின இணையில்சீர் நந்தி,

---

1 அணிமருப்பு–அழகியகொம்பு, நந்திதேவரும், காமதேனுவும், தம் இனமானதுபற்றி அவற்றைக் கருதித் தவத்தை இயற்றி வருந்தின பசுக்குலங்கள்

2 அவ்இரண்டு – நந்தியும், காமதேனுவும், ஆழிவைத்தவன் உலகு - சக்கரத்தை அணிந்த திருமால் உலகில் உள்ள பசுக்களும் தவமியற்றின. மாற்றரும் சூடு - தவஅக்கினி தாக்கியது. அவ்இனம் – பசுவினமான அவை முன்னிலைப்பட்டன.

3 சீயம் - சிங்கம், வல்லியம் - புலி, கோடு - கொம்பு, வேய்அளாவிய – மூங்கில் போன்ற தோளையுடைய (பார்வதி) நாயகன்.

சிவனருள் வடிவாம் இலிங்கமொன் றேஇச்
செகத்(து)நாள் உள்ளது இபின்னுள்,
இவளவென் றுரைத்தற்(கு) அரியன உண்டாம்
என்பின்நீர் வருதிர்என் றேகி. 4

முழுகினர் தமக்கு முக்கணும் சடையும்
முகிழ்த்தவெண் நிலாமுதற் பிறவும்,
வழுவறக் கொடுக்கும் பம்பைமா நதியின்
வடகரை வன்னிமா வனத்தில்
எழுதரும் வேத சாரமே திரண்டாங்(கு)
எற்றையோ முளைத்த(து)அதன் எதிர்போய்த்,
தொழுதனன்; உடன்வந்[து] அவைகளும் மனத்தின்
துரிசறப் பணிந்தன தொக்கே. 5

அனந்தநா ரணர்உண் டாதலின் விதையாய்
அவிர்தரும் நந்தியம் பெருமான்,
மனந்தனிற் களிமிக்(கு) ஆகம விதியால்
மலர்முத லியகொடு பூசித்(து)
இனந்தனை யனைய கோக்களின் நிமித்தம்
யானும்வேட் டுளன்மருப்[பு] என்னத்,
தினந்தினம் இரந்தாங்[கு] இருந்தனன் அந்தோ
திருக்கயி லாயத்தின் கோயில் 6

வாயிலின் காவல் காத்திடத் தக்க
வல்லவர் இன்மையில் மகிழ்ந்து,
பேயினம் வரைசொல் கணம்பதி னெட்டும்
பிறழ்ந்தொரு கணம்எனக் குழுமிப்
போயின; அரன்ஆங்(கு) இருந்துழி நந்தி
புகுந்தவா(று) உணர்ந்(து)ஒரு விமானத்(து)
ஆயிழைக் கவுரி தன்னுடன் இவர்ந்தே
அக்கணம் அவனெதிர் அவிர்ந்தான். 7

---

4 பசுக்கள், இறைவனையும், தவஞ்செய்யும் முறையையும் நாங்களறியோம். நீ விர் சொன்னபடி நடப்போம் என்றன. எனவே நந்தி தேவரைக் குருவாகக்கொண்டு வினவிய தென்று கொள்க.

5 முழுகினர் தமக்கு -- வழுவறக் கொடுக்கும். சிவசொருபான மூன்றுகண், வெண் பிறை முதலிய வடிவம். வடகரை - பம்பையாற்றுக்கு வடக்குக் கரையில் சிவ வடிவம், வன்னிக்காட்டுள் இயல்பாய் முளைத்திருந்தது. அங்கு போய் வணங்கின.

6 நந்திதேவர், இடபமாவர். இடபம்-அறவடிவம், அறத்தைக் காப்பவர் திருமால், பல வடிவம் திருமால் கொள்வர். ஆகவே, பல நாரணர் தோற்றுதற்கு, விதைபோல்பவர் நந்தி யென்ற கருத்தால், 'அநந்த நாரணர் உண்டாதலின் விதை - - - நந்தியெம்பெருமான்' அத் தகை நந்தி தேவர் இனம்பற்றி. கொம்புதானும் பெறுவது கருதித் தவம் புரியலானுர். அதனல், கயிலாயத்திடம் பாதுகாப்பு அற்றது.

7 பதினெட்டுக் கணங்களும் பிறவும் இறைவன் பக்கம் ஏகின. நந்தி இல்லாமை யறிந்தார். விமானத்தில் கவுரியுடன் நந்திக்குச் சேவை யருளினர்.

அருச்சனை முடித்துக் கண்களை மூடி
அரையிலில் யோகபட் டிகையிட்(டு)
உருச்செபித் திருந்த பசுமுகத் தொருவன்
உணர்வெனும் விழியெதிர் உமையும்,
குருச்சிவன் தானும் விளங்கினர்; வணங்கிக்
குறையிரந்(து) ஓரிரு கோடும்,
திருச்சிரப் பணியும் விடையுருக் கொண்டும்
திகழ்தரு திறமையும் பெற்றன் 8

பெறுதலும் விழித்தான், விழித்தும்ஆங்(கு) அவர்நேர்
பிறங்கினர்; பின்னுள பசுக்கட்(கு)
இறுதியில் அவர்தம் வடிவமோர் சிறிதும்
இலங்கிட வில்லைவீழ்ந்(து) எழுந்து
மறுவில்சீர் முன்னைச் சேவகம் செயநீ
வருகெனல் வினவிமால் விடையாய்க்
கறுவுமாக் கொலியும் இட்டனன், உடன்அக்
கடவுளர் அதன்மிசை இவர்ந்தார், 9

சந்திரன் தனக்குத் தாம்கொடு வரும்அத்
தனிவிமா னத்தினைக் கொடுத்தார்,
முந்திளத் தவமாங்(கு) அவன்செய்துற் றதே
முனிவரன் தனைவிணுய்த் தெளிமின்
பந்திய பசுக்கள் தம்இறை தமைநேர்
படிவமுற் றமைதெரிந்(து) உவந்த
அந்திவா னிறத்தான் ஆணையில் அடங்கி
அவ்விடை தேனுவிற்(கு) அறையும். 10

என்மிசை யிருந்தும் உமக்கெலாம் ஒளிக்கும்
இறைவனோர் திகழ்தரும் அளவும்,
நன்மைசால் பூசை முயன்றிடச் சலியேல்!
நானென நீயிருந்(து) இவற்றை
இன்முகங் காட்டிப் புரத்தி!யான் பெறுங்கோ(டு)
இரண்டும்நோக் கினைகொலோ! வென்(று)ஓர்
மின்மறைந் தாங்கே கயிலைமேல் அவரை
விடுத்துமுன் உருவம்மே வியதே. 11

---

9 முதலில் அகக்கண்ணில் இறைவனைக் கண்டார். பின் முகக்கண்ணாலும் கண்டார் மற்றைய பசுக்கள் காணவில்லை. கொம்புகள்சிரசில் அமையக் கண்டார். கயிலைக்காவலுக்கு இறைவன் ஆணைப்படி செல்ல, இடபமானர். கடவுளர் - சிவனும் உமையும்; நந்தி - காமதேனுவுக்குச் சொல்லுவதானர்.

10 தம் இறை - தமக்கு முதலாயுள்ள நந்திதேவர்; தம் நேர் படிவம் - இடப வடிவம் எனவே இதுவரை மனிதவுடலோடு முகமட்டும் காளைப் படிவிலிருந்தார் என்பது காண்க.

11 நான் என - சிற்றறிவுடைய பசுக்களை என்னைப்போல இனமாயிருந்து காப்பாய் எனக்குக் கொம்பு ஏற்பட்டதைக்காண்! எனவே உனக்கும் பின்அமையும் என்பது காண்க

அன்றுதொட்(டு) அரன்யாண்(டு) அருள்செயச் செலினும்
அடன்மலி நந்தியோர் விடையாய்
நின்றுதங் கிடும்ஓர் வழக்கமா கியது;
நெடியனூர்ப் பசுக்களும் பிறவும்
குன்றுல வாமற் சிற(கு)அரிந் திடும்வெண்
குலிசன்ஊர்க் கோச்செலும் நெறியிற்
சென்றுநோற் றிடலால் பூவுல[கு] அன்றித்
தேவுல கனைத்தும்மாழ் கினவே 12

கோசலத் தொடுகோ மயம்,நெய்,பால், தயிரில்
கொடுமையாற் கொண்டன்மே னியனூர்,
ஆசகல் பிரமன் ஊர்,மக பதியூர்
அனையன முழுதும் ஆசாரம்
நாசமுற் றிழிந்து பொலிவுகுன் றினவால்
நாகரும், முனிவரும் பசுக்கள்
நேசமுற் றிடற்காம் தவஞ்செயத் துணிந்தார்
நீலகண் டேசனும் நினைத்தான் 13

தாஞ்சொரி தருபால் திரண்டொரு நதியாய்ச்
சலதியிற் புகலின்அத் தேயத்(து)
ஆஞ்சல நதியொன் றினுக்கும்அத் தனிப்பேர்
அமைந்திடப் பசுக்கள்செய் தவத்தின்,
வாஞ்சையால் அந்த வனத்தினில் அவிரும்
மகாலிங்கத்[து] உதித்தும்வான் வழிமுற்
போஞ்சின விடைமேல் உமையொடு நின்றான்
பொருவில்சேய் நனந்தலை பூப்ப. 14

அழகிய வதன தாமரைப் பொலிவும்,
அலர்ந்தமுக் கண்களும், சடைமேல்,
மழநிலாக் கீற்றும், கொன்றையும், தும்பை
மலரும்,மான் மழுவணி கையும்,
பழகரும் புலித்தோல் உடையும்வெண் நீறு
பரந்தொளிர் பவளமே னியும்ஒண்
கழலணி திருத்தாள் மலர்களும் கண்டு
களித்தன பசுக்குலங் களெலாம். 15

---

12 நெடியன் – திருமால். குலிசன் ஊர்க்கோ - தேவலோகத்துள்ள காமதேனு, பூலோகம் செழித்தது, தேவலோகம் வளமற்றது.

13 நாகர்–தேவலோகர். பலரும் தவஞ்செய்தனர், இறைவனும் திருவுளம்பற்றினன், என்றமையால், சீவ முயற்சியிருப்பினும் திருவருட்சம்மதமும் உண்டானலன்றிப் பலன் அமையாதென்ற கருத்தை விளக்கினர்.

14 அத்தேயத்து - நடுநாட்டில்; சலநதி - தண்ணீர் ஆற்றுக்குப்பாலாறு என்ற பெயர் வந்த காரணம்; மகாலிங்கத்து உதித்தும் - சுயம்புவாய் அமைந்த இலிங்கத்திருந்து தோன்றினன்.

காண்டலும் பலகாற் பணிந்தெழுந்(து) அன்பாற்
கண்கள்நீர் கலுழ்ந்திடக் கதறி,
ஆண்டநா யகனே! அப்பனே! பரமா
னந்தவா ரியில்எழும் அமுதே!
நீண்டவன் வருந்த நிமிர்ந்தநீ எமக்கா
நேரெளி வந்தனை என்று
வேண்டலும் அவற்றின் தலைதொறும் முளைத்து
மிளிர்ந்தன விறற்றுணை மருப்பே. 16

ஆங்கவற்[று] உவகை மலிதலும் புரமூன்(று)
அடர்த்தவாய் மலர்ந்துமெய் யன்பார்,
நீங்களே எமக்கும் எமதுசத் திகளாம்
நெடியவன் உமைமுத லோர்க்கும்,
தீங்கறும் வேகா கமமுதற் பகர்நூற்
றிரட்கும் ஆருயிரெனத் திகழ்வீர்!
ஈங்கவிர் இலிங்கத் தலையில்நும் கவைக்கால்
எழிற்சுவடு இலங்குளந் நாளும். 17

உம்மது மலமும், சலமும்நேர் புனிதம்
ஒருபொரு ளினுக்கும்இன்(று), இனிநீர்
நும்ம[து]ஊர் தொறும்போய் வாழலாம் எனுஞ்சொல்
நுவன்றுடன் இலிங்கமுட் புகுந்தான்,
மைம்மலை அனைய மாயனும், சுவண
மலைநிகர் தேவன் ஆதியரும்,
அம்மகா வனத்தை விசுவகம் மியனால்
அணிநகர் ஆக்கினர் அன்றே 18

வடமொழிப் புலமைப் பாணினி இதுகோ
மாதுரு புரமென்றான், மன்னும்
திடமலி தென்சொற் குறுமுனி ஆமாத்
தூரெனச் செப்பினன், முன்னாள்,
நடனநா யகன்தென் முகத்தனு உடுக்கை
நவிற்றும்நல் ஒலிவினைய் இவர்தம்,
கடமதுள் உணர்ச்சி யளவில்நூல் வகுத்த
காரணம் கவின்தரும் படியே. 19

---

16 வான்வழியே சென்ற இடபமீது, பசுக்கள் தெரிசனம் பெற்று மகிழ்ந்தன. கொம்புகள் சிரசில் முளைத்தன.

18 சுவணமலை - பொன்மலை; பிரமன் பொன்னிறம். மைம்மலை – கரியமலை; திருமால் கருமை என்ற குறிப்பு. விசுவகம்மியன் – தேவகம்மியனை சிற்பி.

அந்தரத்(து) உலகம் முழுமையும் விடுத்திட்(டு)
அகிலமே அனைத்துமா விளங்க
வந்தவா னவரும் முனிவரும் பலவா
மலர்சொரிந் தேத்துபு வணங்கித்,
தந்தம(து) அறிவாற் கருதியே சதுர
யுகம்பல தவஞ்செய்தார் தவள
மந்தரம் அனைய விடைமிசை வழக்கப்
படிஅரன் வந்தவிர்ந் தானே. 20

வருதலும் வணங்கித் துதித்துநின் றுடி
வசமறக் களித்தனர், வந்தோன்
திருநெடு மாலே முதலினர்ப் பார்த்(து)உம்
சிந்தையின் வேட்கையா(து) என்றுன்
அருள்குறிப்(பு)அ ன்றி வேறிலேம் என்றார்;
அதனிலை உள்ளவா[று] அறைந்திட்(டு)
ஒருவரும் புகழ்ச்சீர் மாதையூர் இலிங்கத்
துள்உருக் கரந்தனன் மன்னே 21

ஆங்கவர்க்(கு) அறைந்த வகையிதே என்ன
அறைகவித் தொகைமிகற் பொருட்டால்,
ஈங்கயல் படுமோர் நூற்பொருட் பகர்பண்(பு)
எனக்கிலை இயற்றமிழ்ப் புலமைப்
பாங்கதிற் சிறந்தோர் அருவருப் படையும்
பழமைநன்(கு) அறிந்துளேன், பலரும்
தாங்கள்தம் பதிக்குத் தந்தம்ஊர்ப் பசுக்கள்
தம்மொடு சார்ந்தனர் மாதோ. 22

மேனிலப் பசுக்கள் அனைத்தும் ஏகியபின்
விழியிமைக் கின்ற ஏனையவை,
ஆனியில் உவகைப் பொலிவொடு பெருகி
ஐந்நிலத் தூர்தொறும் பரவிப்
பானிறத் திருநீ(று) ஆதிய புனிதப்
பண்டங்கள் யாவையும் பயந்து
போனிகழ் பொருளில் மாதையூர்ப் பரமன்
புகழினை நனிவிளக் கினவே. 23

எந்நிலத் தெவ்வூ ரிடத்[து]எவர் பசுக்கள்
இளைப்பினும், நோய்ப்பிணிப் புறினும்
முந்நிலத்[து] உளவூர் முழுமையின் தலையாய்
முக்கண்ணன் புரக்கும் ஆமாத்தூர்ச்

23 மேல்நிலப்பசு – தேவலோக, வைகுந்தத் திருந்துவந்தவை. அவை விழியிமைப்ப தில்லை, கண் இமைப்பவை பூவுலகப்பசுக்கள். ஐந்நிலத்துஊர் – குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் பாலைஎன்பன.

செந்நிலப் பசும்புல் அருந்துபு கங்கை
சேடியர் பலரொடு மூழ்கும்,
அந்நிகழ் பம்பை நதிப்புனல் குடிக்கில்
அண்டரூர்ப் பசுக்கள்ஒப் பாமால். 24

சூளிய சிங்கா தனத்து(று)ம் ஒருவன்
தோன்றிடக் கண்டதும், சோழன்
வானிடத்[து] அமரர் அறிதரத் தேர்க்கால்
வயிற்றனோர் மகனையிட் டதுவும்,
சேனிகழ் கழனி மலிதரு மேலச்
சிதம்பரம் சீர்மையுற் றதுவும்,
மானியல் கரத்தார் மாதையிற் கோடு
வழங்கிடப் பெற்றஆன் வரமே. 25

அந்தநாள் துவக்கி ஆனினப் பெருக்கம்
அமைதரத் திகழும் ஆமாத்தூர்,
வந்தமா தவரும், வசித்தபுண் ணியரும்,
வாழ்த்துபா வலரும் எண்ணிலராம்
எந்தமான் மியமும் அவைபெறக் கோடன்(று)
ஈந்ததோ(டு) இணைபெரு [து]என்றே
இந்தநாள் யாமும், எமையனார் சிலரும்
ஏய்ந்துளேம் ஏன்றதொண்(டு) இழைத்தே. 26

மாதவன் தன்பால் சனந்தனன் கேட்ட
வாறுணர் வியாசமா முனிவன்
சூதனுக்[கு] உரைத்த பசுக்கள்மான் மியத்தின்
சொச்சமோர் சிறிதுள[து] உரைப்பாம்,
ஏதமில் நந்தை, பத்திரை, சுரபி,
எழிற்சுசி லையும்,சும னையும்என்(று)
ஓதருட் பசுக்கள் அனையகோ லத்தோ(டு)
உற்றதேவ தைகள்ஓர் ஐந்தே. 27

அன்னவை கூடி ஏனைய தேவர்
அனைவர்க்கும் உலகமைந் தனளும்,
நன்னல மலிதம் இனத்தினர்க்(கு) அதிலா
நரிப்பும் ஓர்ந்(து) அன்றுநம் இனத்தார்,

---

24 முந்நிலத்து – வானுலகு, பூவுலகு, பாதாளவுலகு. அம் நிகழ் – அழகுடைய.

25 சூளிய சிங்காதனத்திலிருந்தவர்–அல்லமர், சோழன் - மநுமுறைகண்ட சோழன். மேலச்சிதம்பரம் – பேரூர்.

26 யாமும் – இந்நூலாசிரியர்; பசுக்களை வாழவைக்கவே தவம்புரிய அங்கு தங்கியிருந்தனர் என்ற கருத்து.

27 பசுக்களில், நந்தை. பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என்ற ஐந்துவகை யுண்டு என்பது.

இன்னல் தீர்ந்(து)உய்யக் கோடளித்[து] ஆண்டார்க்(கு)
இனியதொண்(டு) இயற்றுதும் என்னப்
பன்னகத் தலைப்பார்க்(கு) அணியெனக் குல்வும்
மாதையம் பதியிலுற் றனவே. 28

மேலியோர் வருடம் அசுரவே தியர்தாம்
வெட்குறக் கவாமயம் எனும்ஓர்
தாவில்சீர் வேள்வி முடித்[து]இது கருமச்
சழக்கென விடுத்தரன் தனது
கோவிலுட் புகுந்து பணிந்துபோற்[றி] இசைத்துக்
குளிர்மலர்ப் பூசைசெய்[து] உன்னி
ஆவியும், உடலும், தளர்தவம் ஐந்நான்(கு)
உகமுடித்(து) அறச்சலித் தனவே. 29

இன்னமும் சோதித் திடல்முறை அன்றென்(று)
இரங்கிஓர் இலங்கிழை பாகன்
தன்னது வழக்கப் படிஎதிர் வந்தான்
தாழ்ந்துதம் மனக்குறை முழுதும்,
சொன்ன அக்கணமே கயிலையின் அருகிற்
துலங்குகோ புரம்என்றென்(று) அமைத்துப்
பன்னலங் களும்ஈந்(து) ஆங்குநா டோறும்
பரிவில்வாழ்ந் துறும்படி பணித்தான். 30

அவ்வுல[கு] உயர்ச்சி ஆகம முதனூல்
அனந்தமும் அளவற அறையும்,
இவ்வுழி புகழ்சீர்ப் பசுக்களின் உரோமம்
யாவையும் இலிங்கமே என்றால்
எவ்வுணர் வுடையார் எனினும்அம் மகிமை
இசைத்திட வல்லர்ஆ குவரோ,
வெளவுமுத் தியினும் அவைபுரந் திடலே
மாட்சிஎன் பவர்உணர் வாரே. 31

முசுத்தலைப் புனிதன், நளன்,இரா கவனேர்
முறைமைசால் மன்னர்தம் உயிர்போற்
பசுக்குலம் புரப்பார் அவைதொழும் மாதைப்
பதிவளர் அழகிய நாதர்
கொசுத்திரள் புரையும் வானவர் விருப்பாற்
குலவுதம் மனைவியை வெறுத்துப்
பொசுக்குதீப் புரைசொல் சொற்றிகழ்ந்[து] அணைந்த
புதுமையை இனிப்புகன் றிடுவாம். 32

**பசுக்கள் பூசித்தது முற்றிற்று.**

**ஆகக்கவி 239.**

---

28 ஒவ்வொரு தேவர்கட்கும் ஒவ்வொரு உலகமுள்ளது. நமக்கென்று ஒரு இடமில்லை முன்பு நம் இனங்கட்கு, கொம்புதவிக்காத்த பெருமானையே தவம்செய்வோமென வந்தன.

30 கோ-புரம் – பசுக்களின் ஊர் என்று கயிலையின் சார்பில் பல சிறப்புடன் அருளினர்

31 முத்தியினும்-உயர்ந்த வீடுபேற்றைவிட அவை புரந்திடலே மாட்சி- அப் பசுக்களை காப்பதே மிகச்சிறந்தது என்றறிபவர் அறிஞர். 32. முசுத்தலைப்புனிதன்-முசுகுந்தமன்னன்

எட்டாவது

## அம்பிகை வழிபட்டது.

கலிவிருத்தம்

கயிலைமீது கொலுஇருந்த கண்ணுதற் பிரானொர்நாள்
வெயிலினிற் புழுப்புரைந்து வெம்பொர்தொண்டன் உய்யுமா(று)
அயிலுறழ்ந்த கண்ணிதன்னொ(டு)அடல்விடைப் புறத்(து)இவர்ந்(து)
ஒயில்குலாவு பவனியொப்ப உம்பர்வாய் உகைத்தனன். 1

செல்லும்வேளை ஆங்கொர்திண் சிலம்படுத்த சாரல்வாய்
அல்லுலப்பில் சோலைதன்னில் அக்கணம் பிறந்ததோர்
நல்லுருக் குழந்தைகூவி நாவறந்த தைத்தெரிந்(து)
ஒல்லுமங்கை ஏகொணு(து) எனு அமர்த்தி ஓதுவாள். 2

இக்குழந்தை பெற்றதார், அவ்ஏழையெங்(கு) அகன்றுளாள்,
எக்குணத்தி(து) உய்யும் நன்[கு]இயம்புகென்(று) இறைஞ்சினுள்
மிக்குறுங் குரூரகாம வெவ்வரக்கி வேறொர்காப்
புக்குளாள்; நம்ஆழிமால் புரக்கும்என்(று) அதட்டினுன். 3

அந்தமால் என்அண்ணன் ஆவன்யானுமாவன் ஆதலால்
இந்தமைத்த னைப்புரந்தலா[து] உனைப் புல்லேனென்றுள்
வந்தகா ரணத்தினுலும், மற்றொர்தன்மை யாலும்நற்
சந்தமார்பன் ஆறென்ஆண்ட தாகிடச்செய் தானரோ. 4

அங்கிசைந்த மட்டில்விட்டி டாமல்அவ் அரக்கன்வல்
வங்கிசத்து மைந்தர்முற்[று] அவ்வாழ்வராக நல்கென்றுள்
எங்கியன்ற வர்க்கும்ஈடில் இகலதாகி இமையவர்த்
தொங்கிசம்செய் பண்பதென்று சொல்லியும் தடுத்தனன். 5

---

1 கண்ணுதல் - நெற்றியில் கண்ணையுடைய பரமன். அயில் உறழ்ந்த-வேல் போன்ற, உம்பர் வாய் - ஆகாய வழியாக; உகைத்தனன் - உமாதேவியுடன் இடப வாகனத்தைச் செலுத்தினர்.

2 திண் சிலம்பு – உறுதியான மலை; ஒல்லும் மங்கை - உடனிருந்த பார்வதியார்.

3 ஏழை-பெற்றவளான பெண்; அரக்கி - இரக்கமற்ற அவள். ஒருகா - ஒரு சோலையிடம்; ஆழிமால் - சக்கரமேந்திய திருமால் (காத்தற்கடவுள் என்ற குறிப்பு)

4 புல்லேன் - உடன்வர இசையேன்; வந்தகாரணம்-இறைவன் கருத்து இதுவே. மற்றுஒரு காரணம்–உமையம்மையின் கருத்தை மறுக்கமாட்டாத பரிவு. திருமால் சத்தி அமிசம் என்பதாம்-அக்தக்குழந்தை ஆறுவயதினதாக அருளினுன்.

5 அந்த அரக்கன் மரபினில் யாரும் பிறந்தவுடன் ஆறு வயதினராகவும் அருளும்படி வேண்டினன்; தொங்கிசம் - அழிவு. அதனுல் பல இடுக்கண் .வருமென்று கூறியும் தடுத்தனர்.

கேட்டதைத் தவிர்ந்திலாள் கிளத்துமாறும் ஈந்தனன்
பூட்டகத்த தானபூர்வ புண்ணியங்கொ லோ?அரன்
வேட்டமோக வாரியோ?மன் வெறப்பணங்கின் மெய்யருள்
தேட்டமோ? இம்மூன்றுமோ? செயத்தகாத செய்தவே. 6

அன்பனைக் குறித்தவா[று] அவன்கருத்தின் ஆசைபோல்
இன்பமுற்ற நல்கிவெள்ளி வெற்பிடத்தி ஏகினர்
பின்படர்ந்த தானவப் பிணக்கரால் விண்ணோரெலாம்
துன்பவாரி மத்தியிற் சுழன்றிரங்கி னாரரோ. 7

கொண்டல்வண்ணன் ஆதியோர் குழாமிகக் குழைந்ததால்
துண்டரீக அசுரரைத் தொலைத்திடற்(கு) இசைந்தநாள்
வண்டலம்பு கொன்றையான்அம் மாதுபாற் பயத்தல்நீத்[து]
ஒண்டகைக்கண் அங்கியால்தன் ஒத்தகந்த னைச்செய்தான். 8

அதனையோர்ந்த உமைசினங்கொ[டு] அமரமாத ருக்(கு)எலாம்
மதலைநல்கு தன்மையின்றி மாறும்வன்சொல் கூறினள்
முதல்நிகழ்ந்த வம்பும்அன்று மொழியும்வன்பும் முன்னலால்
விதனமிக்[கு] உமைக்குநேர் விடைப்பிரான் விளம்புவான். 9

இருவிதத்தும் வானவர்க்(கு) இடுக்கண்நல்கி ஏனையோர்
பெருமைஎய்து மாறுசெய்த பிழையுனைப் பிணித்த(து)என்
அருகிருக்கொ ணாதுபோய் அருந்தவஞ்செய்(து) உய்யென்றுன்
மருமலர்க் குழற்பிராட்டி வாடிநொந்(து) இறைஞ்சியே. 10

எங்குபோய்எம்மா தவஞ்செய்(து) என்றுன்னோ(டு) இணங்குவேன்
பங்குபெற்ற என்னைஇப் படிசினத்தல் நீதியோ
பொங்குகங்கை யோடுவாழ்தி போவல்என்று பொருமினாள்
கங்குலன்ன கண்டன்அங்கொர் கருணைவந்து கழறுவான் 11

நந்தியும் பசுக்கள்யாவும் நம்மைநம்பி அன்பினாற்
சிந்தியா நலம்பொறுத்த மாதையம் புதிக்கண்நின்
புந்தியால் இயன்றவாறு பூசைசெய்(து) இருத்தி,யாம்
வந்திவண் குலாயவாறு வாழ்தும் என்(று) இயம்பினர் 12

---

6 கிளத்துமாறு - அம்பிகை சொன்னபடி. பூட்டகத்தது - யாரும் அறியமுடியாதவாறு வேட்டம் – மாயை. தேட்டம் – தெளிவு

7 அன்பனை – சிவபிரானை நோக்கித் தவஞ்செய்தவன்.

8 துண்டரிகம் – குரூரம். பயத்தல் - முருகனைத் தோற்றுவிப்பது. கண்அங்கி – நெருப்புக்கண். தன்ஒத்த – தனக்கு இணையான.

9 மதலைநல்குதன்மை - தேவ மாதர்கள் கருவுற்றதைப் பெற முடியாதபடி வன்சொல் சாபமிட்டனள். விதனம் – துன்பம்.

10 உய் - இப்பாவத்தைப் போக்கிக்கொள்வாயாக.

11 பொருமினாள் - விம்மி அழுதாள்.

ஆதலால் மடந்தைமாருள் அன்னவட் புரைந்து,தன்
காதலாளன் மேனியிற் கலந்துளாரும் இன்மையால்
பேதமற்(று)அ பேதமான பெற்றியுற்று வாழினும்
போதஅஞ்சு தன்மையும் புரந்திருக்கை நன்மையே. 13

வேறு

அறுசீர்த்தாழிசை.

அந்த மொழிகேட்[டு] உமையாள் அரன்முன் அடியாள் தன்மேல்
இந்த மட்டும் கருணை இருந்த தோஎன்[று] ஏங்கிச்
சொந்தம் இழந்து பிறர்போல் தொழுது விடைபெற்[று] அப்பால்
தந்த மகர்ஆ தியரும் தாதிய யரும்சூழ்ந் துருக. 14

தெற்கு நோக்கி விரைவிற் சிலநாள் நடந்து சிறந்தோர்
கற்கும் தமிழ்மா முனிவன் கருணை மலிதே யத்தில்
எற்கும் உரிமை நல்கும் எழில் ஆமாத்தூர் நடுவில்
நிற்கும் இலிங்கத் தன்னை நேரிற் கண்டு தொழுதாள் 15

வெள்ளை விடைமேல் அரன்பால் மேவி நொடியில் விண்வாய்
கொள்ளை நெடுந்தூ ரம்போய் கோலா கலப்பார்ப் பதியாள்
பிள்ளை அனம்போல் நடந்து பெரிது வருந்தல் கருதா(து)
எள்ளை நிகர்வாழ் வினரும் இறுமாப் புறுவ[து] என்னே. 16

அம்மை உறுப்பெண் ணன்கை, அணிபூண் இனத்தைக், குணத்தை,
செம்மை நிலையைச், சூழ்வார் செயலைக், காலங் களைப்,பொய்ச்
சும்மைப் பொலிவாற் பெருக்கிச் சொல்லத் துணிகின்[றிலன்என்[று]
எம்மை யிகழ்சில் புலவீர்! இவைசொற் றுளநூல் பலவே, 17

சொல்லும் பொருளும் உலவாச் சுவையும் உணவும் எனவே
அல்லும் பகலும் சிவனோ[டு] அணைந்தங்[கு] இருந்தாள் அன்று
நெல்லும் கரும்பும் வயலில் நிலவுந் திருவா மாத்தூர்
ஒல்லுந் தினமே கபிலை உறங்கிப் பொலி[வு] அற்றதுவே. 18

வந்தாள் மலரும் புனலும் மலிஓ தனம்ஆ தியவும்
தந்தா தரித்[து]அவ் இலிங்கம் தனையே துணையா நம்பிச்,
சிந்தா குலமற்[று] உருக்கள் செபித்தாள் இருநா ளுநம்முன்,
நந்தா முதற்சில் பசுக்கள் நலந்தோய்ந் ததும்ஓர்ந் தவளால். 19

---

13 பேதமற்று அமேதமானபெற்றி - வேறுபாடற்றுச் சிவன் வடிவுல் ஒன்றுன பெருமை

14 தந்தமகர் - புதல்வரான விநாயகர், முருகன். தாதியர் - தோழிகள்.

15 கருணைமலிதேயம் – அன்புடையோர் வாழும் தமிழ் தேசம்.

16 உறுப்பு எண் நான்கு - அங்க இலக்கணம் முப்பத்திரண்டு.

19 மலி ஓதனம் - சுவைமிக்க உணவு. சிந்தாகுலம் - மனவருத்தம். நந்தா – நந்து ஆ: நந்தை முதலிய பசுக்கள்.

எட்டு யுகம்என் பன,நம் இனத்தார் தமக்கே நெடுநாள்,
கட்டு குழலாற் கற்பம் கடத்தும் உமைக்கோர் கணமாச்,
சுட்டு தலும்ஆ காதே துயர்கூர்ந் திடன்மின் உலகீர்!
விட்டு மறுகும் சிவன்தான் விடைமீ(து) அவன்முன் மிளிர்ந்தான். 20

கண்டு தொழுதாள் அவனும் கரத்தால் எடுத்துத் தழுவிப்
பண்டு புரைய அருகிற் பரிவோ[டு] இருக்கப் பணித்தான்
விண்டு முதலோர் துயர்போய் மேனாள் மகிழ்ச்சி அடைந்தார்
மண்டு கயிலைத் தடமும் மாதை யிடம்போன் றதுவே. 21

அங்கும் இங்கும் ஒருவா(று) அவிர்தல் வியனன்[று] உலகில்
தங்கும் ஓரா யிரத்தெண் தலமும் அன்றித் தன்மேல்
நங்கு பகர்வார் மனத்தின் நடுவாழ் பலதெய் வமுமாய்
எங்கும் இருக்கும் அபிரா மேசன் புகழ்மிக் கினிதே. 22

வல்லார் புகழும் மாதை வளமா நகர்க்கோ யிலுக்குள்
எல்லாக் கடவுள ரும்போற்[று] இலிங்கத் திடைவாழ் எம்மான்
வில்லாற் பிரம்பால் இருவர் மேனாள் அடிக்கப் மடுமாண்[பு]
இல்லா விட்டால் என்போல் இளைஞர் பரம்ஓர் வரிதே. 23

கங்கைச் சடையார் தம்மைக் கயிலைக் கிரியிற் பிரிந்த
நங்கைக் குலசே கரமாம் நாரா யணிமா தையிற்போய்ச்
செங்கைத் துணராற் பூசை செய்துய்ந் தமைசற் றிசைத்தாம்;
அங்கைக் கடமா முனிவோர் அருள்பெற் றமையீண்[டு] அறைவாம் 24

அம்பிகை வழிபட்டது முற்றிற்று.

ஆகக்கவி 263.



20 துயர்கூர்ந்திடன்மின் — நான்கு யுகம் உமையவள், சிவனைப் பிரிந்து தவம் செய்தற்காக வருந்த வேண்டாம். கூந்தலை அவிழ்த்து முடிக்கும் நேரம் ஒரு கற்பமாகும் அம்மைக்கு என்பதாம்.

21 பண்டுபுரைய — முன் இருந்ததுபோல. உமையவளைப் பாகத்தில் வைத்தபின், ஆமாத்தூரைப்போல, கயிலை சிறந்திருந்தது என்ற நயம் காண்க.

22 நங்குபகர்வார் — கேலி பேசுமவர்.

23 பரம்ஓர்வரிது - எங்கும் நிறைந்த பொருள் இறைவனென்றறியும் சிறப்பு

24 அம்கை - அழகிய கையில் - கட — நீர்க்கலசத்தையுடைய.

ஒன்பதாவது

## முனிவர் வழிபட்டது.

கலித்தாழிசை

சர்லோக முதலாய கதிநாலும் அடியார் தமக்(கு) ஈந்தெழிற்
பூலோக நகராய ஆமாதை நடுநின்ற புனிதப்பிரான்
கோலோக மதுசெய்(து) அளித்திட்ட(து) உடனுய குலமான்மியம்
மேலோக முதல்எந்த உலகூடும் நிறைவாகி மிளிர்வுற்றவால் 1

நிறைவாய ஆசார நெறிசென்ற குலசீல நினை(வு)எய்தியே
குறைவாய மதவாதர் பின்சென்று வாடாத குணம்மன்னிமுன்
இறையோன் வகுத்துள்ள இருபத்தொ(டு) எட்டாக மத்திற்சொல்மேன்
முறையே நமக்காய துணையென்று முயல்கின்ற முனிவோர்களும். 2

ஒன்றன்றி மற்றென்றும் இன்றின் றெனத்தேறும் உரமன்னலால்
கொன்றன்றி வாழார் தமக்(கு)ஏமன் என்னக் குலாவுற்றெலாம்
கன்றன்றி வேறன்(று) எனக்கொள்ளும் ஞானக் கடற்றேய்ந்தருட்
குன்றன்றி ஏருது கோலம் பெருக்கும் குணைலத்தரும். 3

வேதாக மங்கூறும் நெறியொன்(று) எனக்கொண்டு மெய்பொய்ள
பேதாதி பேதப் பிணக்குற்று வாடாப் பெருந்தன்மைவாய்ந்(து) [னும்
ஆதாரம் ஓராறும் அப்பாலும் மெய்யென் றறிந்(து)ஆர்முனும்
சாதார ணத்தோர் எனத்தோற்று பொதுவாய தகவோர்களும். 4

மற்றும்பல் வகைபட்ட தவர்தாமும், ஒருகோடி மட்டாகியே
சுற்றும் புனற்பம்பை நதியென்ன மாதைச் சுயம்(பு)ஈசனைப்
பற்றும் கருத்தோடு நனிபூசை செய்தார்கள் பலநாள்அருட்
பெற்றும் பெருரென்ன வேதொண்டும் உய்த்தார் பெரும்பாலுமே. 5

அவ்வூரின் அருகா ஒருகோடி யெனும்ஊரொ(டு) அணிஆலயம்
செவ்வூழின் வழிசெய்து சிலவேளை வழிபாடு சிறிதும் செய்தார்
தெவ்வூ(று) ஒழிக்கும் கனற்கட் பிரான்அம்பை திகழ்பாகனு(க)
எவ்வூன முந்தீரும் இடபத்தின் மிசைசேவை ஈந்தானரோ. 6

---

1 முதலாயகதி – சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சுயம் என்ற நான்கு பதவி.

3 ஒன்றிஅன்றி – கடவுள் ஒன்றேயல்லாமல். கன்றன்றி - எவ்வுயிரும் கடவுளின் குழந்தைகளல்லாமல் வேறல்ல. கோலம் - தவவேடம்.

4 ஆதாரம் ஆறு – மூலாதாரம், சுவாதிட்டானம் மணிபூரகம். அநாகதம், விசுத்தி, ஆஞ்சையென்பன. அப்பாலும் - மேற்பட்ட பரவெளி அநுபவம் இருந்தாலும். ஆர்முன் னும் - யாரிடத்தும் எளியவராக இருப்பவர்.

5 பெற்றும்பெருர் – இறையருளைப் பெற்றிருந்தும், பெருதவர்கள்போல், ஆடம்பர மின்றி பணிசெய்பவர்.

பம்பைக் கரைக்கோயில் நடுவாழும் அபிராம பரமேசனுர்
அம்பைப் பொரும்கண்ணி யுடன்வந்த பொழுதேஅவ் அறவோரை
வெம்பைப் பிறப்பற்ற கதியாது தரினும்கொள் வேம்என்னலும் [லாம்
தும்பைத் தொடைச்சென்னி அசையச் சிரித்(து)ஈது சொலஉன்னினுன்
7

நமிலிங்கம் உடனுதல் ஒன்றும், பழிப்பற்ற நம்உலோகமொன்
று,மிவண் பிறக்காத படியாளும் எனநன்(கு) உரைத்தானுடன்
தமிழ்தந்த முனிவோனை நிகராகி அவிர்தந்த தவர்யாரும்அங்(கு)
அமிழ்துண்ட சுரர்நாண முதலோது கதியூ[டு] அடைந்தார்களே. 8

உடல்விட்[டு] உறத்தக்க கதிஈனம் என்நன்(கு) உணர்ந்தோதிடார்
இடமிக்க திருமாதை இறையுட் புகும்பேற்றை எளிதென்றுள்வார்
அடல்பெற்ற வண்ணப் பெருஞ்சிங்கம் அனையார்சொல் அருள்நூல்
கடமுற்ற கவியன்ன கவிவாணர் அறியாதல் கரியாகுமே. [நலம் 9

அருளாட லும்தொண்டர் வழிபாடு மேசொல்லும் அணிகைத்துநீ(டு)
இருளாரும் வெறியாடல் முதலான தித்திக்கும் இழிவாளருள்
பொருளாசை முதலோதல் புகுமன்றி ஒன்னுர் புரம்சுட்டவாய்த்
தெருளாளன் உருவச் சிறப்பொன்றும் நுழையாது தெளிமின்களே 10

ஒருகாலம் அரனேடு வெண்முட்டை யுள்நின்[று] உதித்திட்டதாய்
குருவாயொர் உகமேனும் அவிரப் பெருப்பேறு கொளும்நாவலோர்
திருமாதை யினில்முத்தி பெறுகோடி முனிவோர்கள் சீர்பாடிடிற்
கருகூலமாம் யானும் ஒருவாறு சொற்றேன் கடன்தீரவே. 11

போரேறு றுகைப்பார்தம் ஆமாதை யூரின் புராணந்தனுல்
காரேறு ளானைச் செயங்கொள்ள விழைவார் கணந்தேறுமா[று]
ஏரேறு பொதியைப் பிரான்ஆதி யோராகும் எழுமாதவர்
சீரேறு கதிபெற்ற கதைபா டிடச்சிந்தை சிந்தித்ததே 12

முனிவர் வழிபட்டது முற்றிற்று.

ஆகக்கவி 275.

---

7 வெம்-பை-பிறப்பு—கொடிய கருப்பையிலிருந்து வரும்பிறவி

9 ஈனம்-உடலைவிட்டு உயிர்மட்டும் வீடுபேற்றையடைவது சிறப்பல்ல இறையுள்—சிவலிங்கவடிவத்தின் உள், கடம் உற்றகவி-காட்டில் வாழும் குரங்கு, அறியாதல் - தெரிந்து கொள்ளாதற்கு, கரி-சான்று

11 தாய்-கலைமகள் பராசக்தியிடமாக பச்சை – வெண்மை – பொன்மையான மூன்று முட்டைகள் தோன்றின. பச்சையிலிருந்து திருமால், உமையவள், வெண்மையிலிருந்து சிவன், கலைமகள், பொன்மையிலிருந்து பிரமன் இலக்குமி, தோன்றினர். ஒருவர்ஒருவரை மாறி மணந்தனர் என்பது வரலாறு. ஆகவே சிவனுடன் தோன்றியவள் கலைமகள் என்றுர். கருகூலம் - பொக்கிசம் கடன் - கடமைபற்றி (தகுதிபோதாதவன்என்றதாம்)

12 போர்ஏறு-சண்டைக்குரியகாளை. கார்ஏறு—ஆண்எருமைக்கடா (எமன்) ஏர்ஏறு - அழகுமிகுந்த, எழுமாதவர்—அகத்தியர், வசிட்டர், துருவாசர், பிருகு, பராசரர், விசுவாமித்திரர், வியாசர், ஆகியோர்.

பத்தாவது

## ஏழுமுனிவர் வழிபட்டது.

அறுசீர்விருத்தம்.

வேதா ஒருக்காற் பெறத்தோன்றி
　　வெள்ளிக் கிரிநேர் மலயமலை
மீதா யிரங்கண் ணினர்போற்ற
　　விளங்கும் குறுமா முனிவோனும்,
சீதா ராமன் களிகூரத்
　　திருநான் மறையின் பொருள்முடிவை
ஒதா மகிழ்தே சிகனெனும்மாண்(பு)
　　ஒன்றித் திகழும் உரவோனும். 1

சினக்கும் தொறும்மா தவம்பெருகித்
　　திகழும் துருவா சனும்,சிதனைத்
தனக்கென்[று] ஒருசே யாப்பெறும்நற்
　　றவந்தோய் பிருகு மாமுனியும்,
கனக்கு மகிமைப் பராசரனும்,
　　கடின தவத்தால் கண்ணிமையார்
இனக்கும் பலைப்புண் படுத்தியப்பால்
　　இன்ப மளிக்கும் கோசிகனும். 2

தீதில் புகழ்சால் சதுர்வேத
　　சித்தாந் தத்தோர் அனைவருக்கும்
கோதில் குருவாம் எனக்கங்கைக்
　　குளிர்நா வாயி னிடைதோன்றிச்
சோதி மகமே ருவிற்பவளத்
　　தும்பி வரைநூல் சொன்னேனும்
பாதி மதிச்சென் னியன்அருளாற்
　　பதம்ஒன் றடையும் படிநினைத்தார் 3

எந்தத் தலத்திற் கடிதருள்பெற்
　　றிடலாம் எனநன்(கு) எண்ணிஎண்ணி
அந்தப் பரமன் திருவருளால்
　　ஆமாத் தார்என் றறிந்[து]அப்பால்

---

1 மலயமலை – பொதியமலை - குறுமாமுனி, அகத்தியர், கோசிகன் - வசிட்டர், சிதன் சுக்கிரன். (2) கோசிகன் – விசுவாமித்திரர்.

3 நாவாய் - ஓடம், நூல்சொன்னேன் – பதினெட்டுப்புராணம் கூறிய வியாசர், பதம் ஒன்று - ஒப்பற்றமுத்தி.

சந்தக் கிரியே முதலாம்தம்
தானம் முழுதும் தணந்தேகிப்
பந்தப் பிணிதீர்த் தருள்மகிமைப்
பம்பா நதியிற் படிந்தெழுந்து. 4

செய்யும் சடங்கு முழு[து]இயற்றித்
திருக்கோ யிலினுட் புகுந்[து]ஆன்கள்,
பெய்யும் பாலின் முழுக்(கு)உவப்பாற்
பிறைபோல் அதன்தாட் சுவடும்அணிந்[து]
உய்யும் தவத்தோர்க்[கு] உயிரேபோன்[று]
ஒளிரும் இலிங்கம் தனைப்பணிந்து
கையுங் குவித்துத் துதிகூறிக்
கனமந் திரத்தால் கருதினரால் 5

இந்தப் படிசின் னாட்போக்கி
எழுவர் தாமும் தினந்தோறும்
கந்தப் பனிமா மலர்ப்பூசை
காலம் வகுத்துச் செயத்துணிந்தார்
அந்தக் கரண தண்டமுத
லாய தவமும் மிகச்செய்தார்
சந்தப் பவளத் திருமேனித்
தகையும் கருதச் சலித்தில்லார் 6

அன்னம் மறந்து காய்கனிநீர்
அருந்தி அவையும் தணந்(து) அப்பால்
தின்னற் கரிய சரு(கு)அருந்திச்
செமியா வாயு விணைப்புசித்திட்(டு)
இன்னற் படுநா ளையில்அபிரா
மேசன் விடைமீ(து) எதிர்வந்தான்
என்ன படியோ களிகூர்ந்தங்(கு)
எழுவர் தாமும் இறைஞ்சிநின்றார். 7

இன்னப் படியாங்(கு) அவர்துதித்தார்
என்றோர் புலவன் விரித்(து)ஈண்டு
பன்னத் துணிவான் எனில்அந்தப்
பான்மைக்(கு) உவமைபகர் கின்றேன்
சின்ன எறும்பின் வயிற்றுறும்ஓர்
சிறிய புழுஏழ் கடலினையும்
தன்ன தறிவால் அளவிட்டுச்
சாற்றத் துவக்குந் தகைத்தம்மா 8

---

4 சந்தக்கிரி – சந்தனமலையானபொதியை, தானம் – அவரவர் இருந்தஇடம்.

5 தாட்சுவடு - சந்திரப்பிறைபோல் வளைந்த, பசுவின் காற்குளம்பின் தழும்பு. குவித்து, கூறி, கருதினர் என்பது; கை – வாய், மனம் மூன்றாலும் வழிபட்டார் என்க.

6 அந்தக்கரண தண்டம் – மனதாற் செய்யும் பூசனைமுதலியன.

வேண்டும் வரம்ஈ தெனச்சொலும்முன்
விடையோன் உரைப்பான், இனிநீவிர்
மாண்டு பிறப்ப(து) இலை,எந்த
வானோர் பதத்தும் எளிதேகித்
தீண்டும் வலியும் உடுவாயும்
திகழும் பயனும் உறக்கொடுத்தாம்
ஈண்டும் தவஞ்செய்(து) இளையேன்மின்
என்றிட் டிலிங்கத் திடைபுகுந்தான். 9

மற்றை முனிவோர் தமைப்போலும்
மகிமை யினர்தாம் இவருமென
எற்றை யினில்யாண்(டு) எவர்தாமும்
எண்ணொண் ணாதே இமயநெடும்
பொற்றை யிடம்போய்ப் பெண்கேட்கப்
போகத் தகும்நற் புனிதரென
அற்றைப் பொழு(து)ஆங் கிவரையன்றே
அழைத்தான் மதனை அழித்தோனே 10

இந்த முனிவோர் இவ்வுலகம்
இலங்கும் அளவும் உருக்கரவார்
எந்த வுலகில் எவரேனும்
இவரில் ஒருவர் தமைநாடிக்
கந்த மலர்ப்பூ சனைபுரிந்தால்
கனவி லேனும் அவர்தம்பால்
வந்தன் னவர்க்காம் இதஞ்செய்வார்
வம்பன்(று) உண்மை மனஞ்சான்றே 11

தெய்வப் புலமை விழைவோராய்த்
திருவார் வழிபாடுபா டுடையோராய்
மெய்வர்த் தனைச்சொல் பொழிவோராய்
வேள்விக் கொலைக்கும் இசையாராய்ப்,
பொய்வக் கணைச்சொற் குவக்காராய்ப்
புறநூலி னர்பிற் போகாராம்,
சைவப் புனிதர் களிகூறும்
தமிழ்ஏ னையர்க்(கு)ஓர் சமனுமே. 12

10 பொற்றை - மலை; இமயமலையரசனிடம் வளர்ந்துதவம்புரிந்த பார்வதியம்மையை திருமணம் செய்யும் பொருட்டு, இந்த ஏழு முனிவரையே சிவபெருமான் அவனிடம் அனுப்பினர்.

அம்மை வழிபா(டு) உரைத்தவுடன்
ஆனைமுகனும் குகனும் முயல்
செம்மை வழிபா(டு) உரைத்(து)அப்பாற்
சீரார் முனிவர்ச் செப்பிலனென்(று)
எம்மை இகழேன் மின்,புலவீர்!
இதன்முற் பிறந்த †வடநூலார்
தம்மை வினவித் தெளிமின்!அதன்
தகை,யான் உரைக்கத் தக்கதன்றே. 12

யாரும் முதலில் தொழவரம்முன்
ஈந்த தந்தை, இனி(து)ஏறும்
தேரும் முறியச் செயுங்குற்றம்
தீரும் பொருட்(டு)ஓர் கலியுகத்தில்
பாரும் அறியக் கணபதிதான்
பசுமுற் றுவக்கும் திருவாமாத்
தூருள் இலிங்கம் தனைப்பூசித்(து)
உயர்ச்சி நனிபெற் றமைஉரைப்பாம். 13

ஏழு முனிவர் வழிபட்டது முற்றிற்று.
ஆகக் கவி 289.



---

12 †வடநூலார் தம்மை-வடமொழியில் இந்த வரலாறு கூறிய ஆசிரியரை என்பதாம் சூதமுனிவர் வரலாறு கூறினர். அதையொட்டி வடமொழியில் ஒருவர் இயற்றினர். அதன் வழியே தமிழில் இதை நான் பாடுகிறேன். ஆகவே இந்தமுறை வைப்பு அவர்களைச் சாரு மென்று சுவாமிகள் கூறினராயிற்று.

13 விநாயகரைத் தோற்றுவித்த சிவபிரான்,எத்தகையோராயினும் எச்செயலையியற்ற வேண்டினும், உன்னை முதலில் வணங்குவாராயின், அவர் விருப்பப்படி செய். வணங்காராயின் அச்செயலுக்கு இடையூறு செய்! என ஆணையிட்டனர் என்பதாம்.

என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதல்
முன்னரே உனதுதாள் முடியுறப் பணிவரேல்,
அன்னர்தம் சிந்தைபோல் ஆக்குதி! அலதுனை
உன்னலார் செய்கையை ஊறுசெய் திடுதி!நீ. -கந்தபுராணம்.

பதினொன்றாவது

## விநாயகர் வழிபட்டது.

கலிவிருத்தம்.

எவரும் முற்றொழும் ஈடுடைத் தெய்வமாய்க்
கவள வேழமு கங்கொள் விநாயகன்
உவமை தீர்புகழ் ஓங்கெழில் மாதையூர்ச்
சிவனைப் பூசை செயும்படி சிந்தித்தான். 1

மலியும் நன்மைகொள் மற்றை உகங்கள்நீத்(து)
ஒலிகொள் புண்ணியம் உள்ளடங் கிக்,கொடும்
புலியை நேர்பவம் பூத்தொளிர் காலமாம்
கலியிற் செய்யக் கருதிய(து) என்கொலோ. 2

அண்டர் மட்டும் அறியச்செல் லாமல்,இம்
மண்ட லத்து மனிதரும் காணவே
கொண்டல் நாணக் குலா(வு)அடல் ஆகுமேல்
தொண்டர் சிற்சிலர் சூழ்தர ஏகினன். 3

செக்க டிக்கணும், தீமைசெய் வீட்டினும்
புக்க ளிப்பன கொண்டருள் புங்கவன்
திக்க றிந்திடச் சென்ற(து)அந் நாளில்வாழ்
மக்கள் கண்களின் மாதவப் பேறதே 4

சென்ற ஊர்தொறும் சிற்சில பத்தரே
நன்ற னந்தம் நவின்று வணங்கினர்
நின்ற மானிடர் நேர்இதொர் சாலமே
என்(று) அகங்கொ(டு) இகழ்ந்தகன் றாரரோ. 5

அரைநொ டிக்குள்அம் மாதையில் ஆம்திறம்
பரைமு தற்றரு பாலனுக் கில்லையோ
விரைவொ ழித்தஙன் மெல்லெனச் செல்லல்இத்
தரைஇ யற்று தவப்பயன் ஆகுமே. 6

பங்கு பற்பல பட்டுநன் நீர்மிகப்
பொங்கு தண்கரைப் பூம்பொழில் மாதையூர்
தங்கும் ஈசனைத் தந்திமு கப்பிரான்
கங்குல் நீங்கொரு காலையிற் கண்டனன். 7

---

1 வேழம் என்றதற்குரியதாகக் கவளம் முதலில் அடையேற்றது. ஈடு - உயர்வு. யாவராலும் முதலில் வணங்கப்பெறும் சிறப்பிருந்தும், அதனால் மகிழாமல், தனக்கு முதல்வனும், தந்தையுமான சிவபிரானை வழிபட எண்ணி வழிபட்டார்.

3 கொண்டல்நாண - மேகமும் வெட்கும்படியான கருப்புநிறம்; அடல்-வலிமையுள்ள; ஆகு - பெருச்சாளி.

4 செக்கின்பக்கத்தும், நன்மையைப்போலத் தீமைசெய்பவர் இல்லத்தும், விநாயக வழிபாடு நடைபெறும். (நெல்லைமாவட்டத்துள்ள நிகழ்ச்சி)

7 பங்கு - பலதுறை. கங்குல் நீங்கு ஒருகாலை - இரவுபோனபின் காலைநேரத்தில்.

அமல ஞானசம் பந்தனை அன்னதோர்
கமல நாயகன் ஒண்கதிர் வீசலும்,
நிமல நீறெனில் நெட்டுயிர்க் கும்பொலார்
சமண்ம தம்புரை யும்தமம் சாதலும். 8

பதுமம் பூத்துப் பமரம்உண் டாடலும்,
கதுமென்(று) அல்லிக் கணங்குவிந் தொஞ்சலும்,
சதுமு கன்புரை வார்தடம் சார்தலும்,
பொதும டந்தையர் சிந்தை புழுங்கலும், 9

கூகை யாவும் குகையுட் குறுதலும்,
வாகை வேள்கொடி வாரணம் கூவலும்,
சாகை வானரம் ஆதிய தாவலும்,
ஓகை வல்லியம் ஆதி ஒடுங்கலும், 10

கொல்லும் கள்வர்தம் கொட்டில் குறுகலும்,
நல்லு ணர்ச்சியர் தம்தொழில் நண்ணலும்
சொல்லும் காலை துலங்கும்அச் சுத்தநாள்
ஒல்லும் சோமனுக்(கு) உள்ளதும் ஆயதே. 11

கண்டு கைகுவிக் கும்களிற்(று) ஆனனன்
தொண்டு கொண்(டு)அவண் தோயும்நல் லோரெலாம்
பண்(டு) உமைக்குப் பரனருள் பாலனென்(று)
அண்டும் அன்பொ(டு) அடிபணிந் தேத்தியே. 12

மாத வம்செய வல்லவர் காணும்நீ
பாத கத்தரும் பார்க்கவந் தாய்!இதென்?
ஓத வேண்டும் ஒளித்திடல் என்றலும்
வேத நூல்முதல் வித்தகன் சொல்லுவான். 13

இமவ ரைக்கரு(கு) ஏய்ந்ததொர் ஆலயத்(து)
அமரர் மெச்சும் அருச்சகன் மைந்தன்நான்,
கமல னைக்கொல் கணபதி அன்பினால்
எம[து] உடற்கும்அக் கோலம்வந் தெய்திற்றே. 14

---

8 கமலநாயகன் - சூரியன். பொலார் - திருநீறு என்றவுடன் பெருமூச்சுவிடும் கோடியோரான தமம் (சமண்மதம் போன்ற) இருள்நீங்கியது. சூரியன் தோற்றியதை ஞானசம்பந்தருக்கு ஒப்புகூறியதற்கிணங்க, அவரால் மாறிய சமண் சமயத்தை, இருளுக்கு ஒப்பிட்ட சிறப்பை உன்னுக.

9 பதுமம்-தாமரை; பமரம்-வண்டு; கதுமென்று-விரைவாக. புரைவார்-அந்தணர்.

10 கூகை - கோட்டான். வாரணம் - சேவல்; சாகை - கிளை; வல்லியம் - புலி.

11 கொட்டில் - குடிசை; தம்தொழில் - நீராடல் ஆதியன. சோமனுக்கு - சந்திரனுக்கு (திங்கட்கிழமையன்று விநாயகர் வழிபட்டார் என்பதாம்)

14 கமலனை - கமலாசுரனை; அன்பினால் - உபாசனை முதிர்வினால்; அக்கோலம் - கணபதி உருவம்,

எந்த வானவர் பாலும்இவ் வா(று)அவர்
சொந்த வேடமுற் றோர்பலர் சூழ்ந்துளார்
இந்த ஞாயம் இறைபகர் நூல்களுள்
சந்த மார்பல் பகுப்பினும் சாற்றுமே. 15

ஓசை தோய்பல தீங்கும் ஒழித்துள்ளில்
மாசை நீக்கும் வழக்கம்ஒன் றுண்மையால்
ஆசை போற்றருள் ஆர்அழ கேசனைப்
பூசை செய்விருப் பால்இவண் போந்துளேன். 16

என்று கூறினன், யாரும் அவரவர்
ஒன்று பக்குவ மட்டில் உணர்ந்தனர்
அன்று ளார்கள் அறைந்ததும், எண்ணலும்
நன்று தீதென் இரண்டிடை நண்ணுமே. 17

உடனெ ழுந்தவ் ஒருசிவ லிங்கத்தைக்
கடக ரித்தலைக் காரணன் கைகளால்
தொடலும் வன்றொழில் துட்டக் கலியனுள்
படப டத்துப் பதைத்தது நெஞ்சமே. 18

உண்டி யாதி உறத்தொகுத்(து) ஒண்மலர்
கொண்டி றைஞ்சிக்,கை கூப்பி,உள் ளக்கண் ணாற்
கண்டி ருந்தனன், கற்பகத் தான்முதல்
எண்டி சைப்புல வோர்களும் ஏங்கவே. 19

சித்தர் முற்படச் செப்பு கணங்களும்
பத்தர் தாமும் பலபதி மன்னரும்
அத்த னைத்தனி மாதையில் ஐங்கரத்(து)
உத்த மன்புரி பூசைகண்(டு) ஒல்கினர். 20

கலியன் தன்மை, கனற்புகுந் தாங்கொழிந்(து)
ஒலிகொள் மற்றை உகங்களொப் பாகியும்
எலியும் ஊரவல் லானை, இனத்தொரு
வலிய மாதவன் என்றனர் மாந்தரே. 21

---

15 எந்தவானவர் - முருகன், சிவன், திருமால், சத்தி முதலியோரது புவனங்களில் அந்தந்தமூர்த்தி சொருபமுடைய, சாரூபப் பதத்தினர் பலர் உள்ளனர் என்பது அநுபூதி முறை.

17 பக்குவமட்டில் - உண்மையநுபூதிகளைக் கூறும்போது, அவரவர் நிலைக்கேற்பவே கொள்வார்கள் என்பதாம்.

18 துட்டக்கலியன் - கொடிய கலிபுருடன். தீமை வளராது என்ற அச்சம், படபடக்கச் செய்தது.

21 கலிபுருடன் தீமை, அக்கினியிற்பட்ட பஞ்சுபோலாயது. முன்னைய யுகங்கள்போல் அறம்செழித்தது. இனத்து - தம்போன்ற மனிதனென்று விநாயகரை மக்கள் கூறினர்.

ஒருவி கார உருவன் ஒறுப்பினும்
குருவெ னக்கரம் கூப்பும் குவலயம்
பொருவில் மாண்புடைப் பூட்கைமு கேசனை
இருமை உற்றவர் தம்முடன் எண்ணிற்றே. 22

புனித வேதம் புகல்உருக் காட்டியும்
கனித ரும்கருத் தெய்திலர் காசினி
மனித னாகி வரில்வரு கென்றோர்சொல்
இனித றைந்தும் இணங்கல் உற்றார்களே. 23

இன்ன தன்மை விரித்திவண் யான்மிகச்
சொன்ன தால்,இனித் தொல்லுல குற்றவர்
என்ன வேடமொ(டு) யாரெதிர் தோன்றினும்
முன்ன வன்செயல் என்றும்முன் னார்களே. 24

கொல்ல வந்த கொடுந்தகைக் கூற்றன்னர்
நல்ல வேடப் பொலிவினை நம்பியே
அல்லல் தீர்ந்த இருவரை அன்புடன்
சொல்லல் மெய்,திருத் தொண்டத் தொகையரோ. 25

எத்த லத்தெவர் தாமும்முற் பூசைசெய்
மத்த கக்கரி ஆனனன், மாதையூர்ச்
சித்த ருக்குச் செயும்திருப் பூசைமாண்(பு)
இத்த கைத்தென்(று) இயம்பரி தாகுமே. 26

சிறிது நாள்அங்ஙன் பூசைசெய் திட்டபின்
மறியி னோ(டு)ஒண் மழுவணி கைப்பிரான்
பொறியி னன்முதற் புங்கவர் சூழ,வால்
அறிஞர் சூழ்தலை மைந்தன்முன் ஆகினன். 27

கண்டு சிந்தை களித்து வணங்கலும்
மண்டும் அன்பொடு வாரி யணைத்தரு(கு)
கண்டும் மாதுகை யீந்(து)அவள் மோந்தபின்
தொண்டு வந்தனம் என்னிடம் தோற்றலால். 28

---

22. இருமை உற்றவர் - பிறப்பு இறப்பு உடைய சாதாரண மக்கள்.

23. வேதம்புகல் உரு - தெய்வீகமான கணபதி வடிவைக் கண்டும், அன்பு செய்ய வில்லை. அக்கடவுள், மனித உருவில் வந்தால், வா என்று இனிமையோடு கூறவும் இசையார்

24. என்ன சொன்னாலும், தெய்வம் எந்த வடிவுடன் யார்முன் வந்தாலும், இறைவன் செயல் என்று நினைக்கவும்மாட்டார்கள். இது மூட மக்கள் இயல்பு. ஆனால்,

25 ஆயுதங்கொண்டு கொலைபுரிய வந்த எமனை ஒத்தவரையும், பூண்டிருந்த சிவ வேடப் பொலிவுக்காக, அன்புடன் வணங்கிய இரண்டு, சிவனடியவரைப் பாராட்டுகிறது திருத்தொண்டத்தொகை. (ஏனாதிநாயனார் - மெய்ப்பொருள் நாயனார் என்ற இருவர்)

யானும் நீயும் இரண்டலம் ஏகமே
கூனும் அம்புலி கொன்றைஒப் பாவன
தானும் கொள்ளத் தகும்என் றளித்(து)அப்பால்
வேனுற்(று) யாவரும் மெச்சஒன் றோதுவான். 29

என்னை யேமுத லோர்எவ ரேனும்நின்
தன்னை நாடியொர் சாபம் மொழிந்திடில்
உன்னை விட்(டு)அது ரைத்தவர்க் காம்இனிப்
பின்னை வேட்கையென்? உண்டெனிற் பேசென்றான். 30

கடையு கந்தொறும் யானிடும் கைம்மலர்
உடையன் ஆதியென் றான்,ஒப்பி அக்கணம்
புடைஇ லிங்கத்துட் புக்கனன், தாதைபோல்
மடையு டைத்தென வார்க்கும் மதத்தனும். 31

மைந்த னும்பல மாந்தர்முற் றோற்றல்நீத்(து)
அந்த ஆலயத் தின்கண் அவிர்ந்ததோர்
சுந்த ரச்சிலை யாமதுள் தோய்ந்தனன்,
பிந்த ஆங்கியல் பெற்றிஒன் றோதுவாம். 32

கொச்சகக்கலிப்பா.

எமனொருநாள் பகற்பொழுதில் இந்திரனூர் விட்டுவரும்
அமரமகளி ரைப்பார்த்திட்(டு) அளப்பரு(ம்)மை யலின்மூழ்கித்
தமம்வருமுன் இவர்த்தொடர்தல் தகுதியன்றென்(று) ஒதுங்கியும்ஓர்
சிமயம்விடும் அருவியெனச் சிந்தியது சுக்கிலமே. 33

அக்கணமே அப்புனலோர் அனலுருவத் தானவனைப்
பக்கலெழுந் தெனக்(கு)யாது பணியென்றான், அவன்மகிழ்ந்து
முக்கணனைத் தொழு(து)உளத்தின் முன்னியசீர் பெறுகென்றான்
திக்கறியப் பெரிதுதவம் செய்தவனைத் தெரிசித்தான். 34

பின்னிகழும் ஆறன்றிப் பேசும்ஒரு விதத்தாலும்
தன்னிலைமைக் கிடையூறு சாராத வரம்பெற்றே
பொன்னிலத்தார் முதலாய புத்தேளிர் அனைவோரும்
துன்னிடர்ப்பட் டழுமாறு சொலற்கரும்பல் துயர்செய்தான். 35

---

31. தனது தந்தையான சிவபிரானைப்போல.

32. யானைமுகக் கடவுள் உலக மக்கள் கண்காண இருப்பதை விழையாமல், ஆலயத்துள்ள கணபதி வடிவுள் மறைதலானார்.

33. தமம் வருமுன் – இருள்தோன்றுதற்கு முன்பு.

34. அனல் உருவத்தானவன் – அனலாசுரன்.

35. பின் நிகழும் ஆறன்றி – பின்னே நிகழவுள்ள ஒருவிதமல்லாமல்.

வானவர்தம் துயர்முழுதும் மால்துயர மாகிய(து)ஆங்(கு)
ஆனமட்டும் பொருதிளைத்திட்(டு) அவன்கொடுமை மிகக்கண்டே
பானல்மலர் வயல்மாதைப் பதிஅபிரா மேசன்முற்போய்
ஈனமறுத் தெமையாள்என்(று) எல்லோரும் இறைஞ்சலுற்றார். 36

அப்பொழுதோர் அசரீரி ஆனைமுகத்(து) ஐங்கரனே
வெப்பொருங்கோர் வடிவாமவ் விறலோனைக் கொலுமென்ற[து]
இப்பொழுதே வழிபா[டு]ஈங் கிழைக்குதுமென் றெல்லோரும்
துய்ப்பொடுதூ பமும்தீபத் தொகையுமிட்டுத் துதித்தாரே. 37

எத்தேவர் களுங்கூண்டாங்(கு) இயற்றுபணிக் கிரங்கியருட்
சித்தேசர் தவப்பயனுத் திகழும்விநா யகப்பெருமான்
மைத்தேசு மலிஆகு வாகனத்தில் மலர்செச்சைக்
கொத்தேய்க்கும் நிறத்தொர்பெருங் குன்றெனத்தோற் றினன்அன்றே 38

கொன்றையஅறு காத்திமதி குலவுசடைத் தலைசேர்கைக்
குன்றையொத்துழ் கோட்டுடன்அங் குசபாசம் கனியேந்தி
என்றைவயிற் றமைத்தாகு இவர்வானை மால்முதலோர்
நன்றையளித் தாள்என்று நனிதுதித்து வணங்கினரால். 39

அன்னவர்தம் துயரோர்ந்தங்(கு) அருள்மலிவுற் றனைவருக்கும்
முன்னவனும் கணநாதன், முகுந்தனது முகநோக்கி
என்னருகீண் டுறைமின்!அவன் இகற்போர்வெந் துயர்கருதும்
இன்னலுறு வண்ணமென்றான் யாவருமிக் கின்புற்றார். 40

எவ்விதவிக் கினங்களையும்எளிதில்ஒழித் தருள்கூர்வான்
செவ்வியவாய் மொழிகேட்டுச் சிந்தைமகிழ் தேவர்களை
அவ்விகலோன் தேடியலைந்(து) அசுரர்குழாம் தனைச்சூழ
நவ்வியணி வார்மாதை நகர்ப்புறம்வந் தார்ப்பரித்தான். 41

எண்சீர்ச்சந்த விருத்தம்.

தத்த தத்தனன தந்ததன தந்தன
அக்கி னித்தகுவன் அங்குவரல் கண்டதால்
அக்க ணத்தமரர் தம்படை நெருங்கவே
விக்கி னத்தொழில்மு யன்றெழிய வுந்செய்சீர்
மிக்கு டைப்பெரிய பண்டியிறை வன்றனோர்
உக்கி ரக்கருநி றங்கொள்எலி மன்தன்மேல்
உற்றெ திர்த்தனன் இரண்டுபடை யுஞ்சினுள்
தொக்கி ரத்தநதி யுண்டுபணி யுங்கைசோர்
துர்ப்ப லத்துடன் இரிந்தனர்கள் உம்பரே. 42

---

39. ஓர் கோட்டுடன் – ஒரு கொம்பை ஏந்தி. என்றை – சூரியனை. ஆகுஇவர் – பெருச்சாளியில் ஏறுகின்ற.

41. நவ்வி அணிவார் – மானையணிந்த பரமன். ஆமாத்தூரில் அனலாசுரன் ஆரவாரமிட்டான். 42. பெரியபண்டி இறைவன் – பெரியவற்றியனனை கணபதி.

தந்த தந்ததன தந்ததன தந்தனு
அந்த வன்கொடுமை கண்டரிமு னிந்துபோய்
அந்த கன்புதல்வன் அன்றியவர் தங்கள்மேல்
விந்த மென்றுதிகழ் தண்டுகொ டறைந்ததால்
மிஞ்ச நைந்தனர், உடம்பொடவண் நின்றபேர்
நொந்த கன்றனர், தெரிந்(து) எரியும் அங்கிநா
ணும்பெ ருந்தகுவன் அங்கவன்மு ளஞ்செல்போ(து)
இந்த ணிந்ததலை கொண்டகளி றிங்குவா
என்ற டர்ந்நுபடை யுஞ்சில சொரிந்ததே 43

தனன தானதன தத்ததன தானனு
அவைகள் ஏகியோர் அணுத்துணையும் நேர்குலா(வு)
அவுணன் மேனியை வருத்தவிலை மேலனேன்
நவையில் வேல்பல செலுத்தினன் எலாமுமே
நறுநெய் தோய்கனலில் இட்டசரு காயவே
இவைகள் காணும்நெடி யற்கும்அதி சோக(ம்)மே
வின(து)எ வாறிவன்இ றக்குமென நாடியே
சபையில் ஆடினர் அனற்றகுவன் வாழவே
தருப வாம்வரம் நினைத்த(து) அருள்ஆனையே. 44

தனன தத்ததன தந்ததன தானனு
ஒருவி தச்சமரி னுந்தளர்வு றுனெனு
உணர்த லுற்றுடன் விரைந்தருகி லேகியே
பருமை பெற்றகவ ளங்கொலென வானுளோர்
பலரு மெச்சிட விழுங்கினன் முனைவி(டு)
அருமை யிற்செய்தவ சின்பயனி தேயெனு
அறிவின் மிக்குயர் பெருந்தகவு ளார்சொனர்
இருநி லத்தினது வெந்துயரும் மேலையூர்
இடரும் அற்றன சுகம்பெரிது மேவியே. 45

தந்த தந்ததன தானதன தானனு
இந்தி ரன்பிரம தேவன்நெடு மால்முனும்
எண்ட ரும்பலரும் ஏகினர்தம் ஊரின்வாய்
மந்தி ரங்கொள்முனி வோர்தவசில் நீடினர்
மண்ட லஞ்சிறிது மாறுயர் இலாதுதீர்
அந்தி றஞ்செயல் விநாயகனை னுவிடா(து)
அந்தி யும்பகலும் ஓதியது மாதையூர்
முந்தி நின்றதழ கேகன்அடி யார்களே
மொய்ம்ப ரென்றமுதல் வாய்மைநிலை யாயதே. 46

---

43. அந்தகன் புதல்வன் - எமன் மைந்தனை அனலாசுரன். எரியும் அங்கி - எரிகின்ற நெருப்பு. இந்து அணிந்த தலை - சந்திரனைச் சூடிய சிரம்கொண்ட கணபதி.

44. விட்ட அம்பு யாவும் பயனற்றதை எண்ணி, விநாயகர் சபையிலாடிய தந்தையான வர், அனலாசுரனுக்கு உதவிய வரம் யாது எனச் சிந்தித்தறிந்தார்.

தந்த தத்ததன தானதன தத்தன

ஐங்க ரக்கடவுள் மாதைநக ரத்தில்வாழ்
அங்க ணர்க்கினிய பூசைசெய் ததற்பினே
வெங்கண் அக்கினியை நேரும்அவு ணற்கொலா
விண்ட லத்தமரர் வாழ்வருளல் செப்பினும்
மங்க ளக்கவுரி பால்விழை வறப்பெரு
மைந்தன் அப்பரமர் பூசையதி யற்றியே
துங்க மிக்கவடி வேல்கொடசு ரர்க்கொல்சீர்
துன்றும் நற்கதையை ஓதுதும் அடுத்தரோ. 47

விநாயகர் வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 336



47. கவுரிபால் - அம்பிகையிடத்து என்றும். அவளது பால் உண்ணுதலில், என்றும் முருகனைக் குறித்து இரு பொருள்தர நின்றது.

பன்னிரண்டாவது

# முருகப்பெருமான் வழிபட்டது.

அறுசீர்விருத்தம்.

செந்தமிழ்ச்சீர்த் திருவாமாத் தூர்ப்பரமன்
அருட்செயலால், செகத்தில் முன்னாள்
வந்தகண பதி,முருகன் முதலியவா
னவர்க்(கு)அளவு வகுக்கப் போமோ?
அந்தவண்ணம் இன்னம்வரு வாரும்அள(வு)
இலரேயாம்; ஆத லாலே
எந்தவிதத்(து)எவ் வுகத்தோ ஒருமுருகன்
தோன்றிவந்(து)ஆங்கு எய்தி னானே. 1

அக்கினிதன் மனைவிகொளும் ஆறுருவத்(து)
உதித்தோனும், அரனார் நெற்றிச்
சக்கின்அழற் பொறியாகிக் குதித்தானும்,
உமைவயிற்றில் தனிவந் தோனும்,
உக்கிரபாண் டியன்,ஊமை வணிகமகன்,
தமிழ்விரகன் ஒத்தோர் தாமும்
திக்கினர்போற் றியமுருகோன் எனக்கொள்வார்
என்மொழியாற் சினங்கொள் ளாரே. 2

வத்துநிலை அறியாத இளம்பருவக்
கவுமாரர் மயிலோன் செய்யும்
சித்துநிலை உணரார்கள், பலமுருகன்
எனச்சொன்னால் சிந்தை நோவார்,
தத்துவதே சிகனாகும் அவன்பரியின்
இறகொன்றைத் தலைக்கொண் டோனும்
முத்துறழ்பல் ஆய்ச்சியர்தம் மனைதொறும்ஒவ்
வோர்உருவா முன்னுற் றானே. 3

---

1 கணபதி, முருகன் முதலியோர். திருவாமாத்தூரில் பூசனை செய்தவர் பலர் என்றதால், யுகந்தோறும் அந்தந்தஉபாசனையின் முதிர்வினால் அந்தவடிவம் அமையப்பெறுவர் உபாசகர் என்ற கருத்துப்பட ஒரு முருகன் வந்தான் என்றனர்.

2 அப்படி முருகன் பலர் என்றால் “ பெம்மான் முருகன் பிறவான் இறவான் ” என்ற உண்மை எப்படி எனில், அக்கினி மனைவியின்பால் வந்தது, சிவபெருமான் நெற்றிக்கண் வழி தோன்றியது. உமையவள் கருவில் திகழ்ந்தது, உக்கிரகுமாரன், ஊமைக் குழந்தையாகிச் சங்கத்தார் கலகம் தீர்த்த செட்டிமகன். திருஞானசம்பந்தர் ஆகியோர், முருகன் அவதாரம் என்ற வகையில் விகற்பமில்லை. சிவ வேடம் உடையோராய், பதினோருகோடி உருத்திரர் இருப்பது போலும் என்க. இவர்கள் சாருபப்பதவியினர்.

3 வத்துநிலை – பொருள் ஒன்றேயென்ற தெளிவு. சித்து – பக்குவ ஆன்மாவின்மீது தங்கி நின்று இறைவன் செய்யும் அருளாடல். பரி – மயில்; தலைக்கொண்டோன் – மயிலிறகு ஒன்றைத் தலையிற்சூடிய கண்ணன். ஒருஇறகையணிந்தவன், பல வேடமுற்றான் என்றால் மயிலுக்கே உரியவன் எத்தனை வடிவமடையமாட்டான் என்ற கருத்து. பிறப்பு என்றால். நம்போல வினைக்காக ஏற்படுவதல்ல என்பதாம்.

எச்சமயத்(து) உறுதேவும், சிவன்குரவர்
    எல்லோரும் எழில்வே லோன்என்(று)
அச்சமறத் தெளிவார்க்கே ஆனந்தப்
    பெருங்கடலின் அமுதம் எய்தும்,
சொச்சநிலை கைவரும்மற் றையர்எவர்க்கும்
    எந்நாளும் துயரே சாலும்,
பச்சறுகிட் டார்க்கும்அருள் ஒருவன்உளான்
    ஆமாதைப் பதியில் மாதோ. 4

அங்குவந்த முருகன்,முதல் ஆகமத்தின்
    விதிபிறருக்(கு) அறிவிப் பான்போல்
பொங்குகங்கைச் சடைத்தாதை தனைச்சிலநாள்
    மலர்கொடுயர் பூசை செய்தான்
குங்குமக்குன் றெனப்,பசுமா மயில்அனையா
    ளொடுவிடைமேற் குலவக் கண்டான்
எங்குளவா னவர்முனிவோர் களும்வியப்ப
    வணங்குபுநின்(று) இறைஞ்சி னானே. 5

அம்மையும்அப் பனும்மாறி மாறிஎடுத்(து)
    அகல்மார்பில் அணைத்து முத்திச்
செம்மையகுஞ் சிச்சடைசால் உச்சிமுகந்(து)
    ஆயதற்பின், சிரிப்பொன் றுல்முன்
மும்மைமதிள் எரித்தபிரான் நின்விருப்(பு)யா(து)
    என்றிடலும் முருகன் சொல்வான்
எம்மையும்நின் அருள்அசைப்ப(து) உண்மைஎனில்
    வினவுவ(து)ஏன்? எனச்சொன் னானே. 6

அளப்பரிய தனிமூலப் பிரகிருதி
    தன்னைமயில் ஆக்கித், தன்னோர்
உளப்பதுமத்(து) உறைஞான சத்தியைவேற்
    படையாச்செய்(து), ஒருவ ராலும்,
கிளப்பரிய நாதசத்தி யினைச்சேவற்
    கொடியாக்கிக், கிரீசன் நின்பால்
இளம்பமொன்றும் வாராமல் இவைபுரக்கும்
    எனக்குகனுக்(கு) ஈந்தான் அன்றே. 7

---

4 சொச்சநிலை – பரம்பொருளின் முழு இலக்கணமறியாத மதபேதர்கள்.

6 குஞ்சிச்சடை - குறுகிய சடை முருகனுக்குரியது. "வேண்டத்தக்கது அறிவோய்நீ" என்ற திருவாசகக் கருத்தை ஒட்டியது முருகன் கூறிய மொழி.

7 மூலப்பிரகிருதி – உலக உற்பத்திக்கு முதலாயுள்ள மாயை. கிரீசன் – சிவபிரான் புரக்கும் – பாதுகாக்கும்.

இந்திரனுற், சூரன்உடற் பாதியினுற்
சமைந்தமயில் இரண்டும் அன்றித்
தந்திமுகன் மயில்ஒன்றும் உளது;குகன்
தனைப்போலும் சாரூ பத்தார்
பந்திபட ஏறுமயில் களும்அனந்தம்
உள்ளனவாம், பகர்வ எல்லாம்
நந்திபணி ஆமாத்தூர் நாதன்அரு
ளியமயில்போல் நலத்த அன்றே. 8

தேவர்கள்தம் கோமானும், செவ்வாயும்,
அக்கினியும், செகத்தில் வாழ்பல்
காவலரும், மற்றும்உரைப் பார்உரைக்கும்
பலர்தாமும் கைவேல் கொண்டார்
மூவரும்போற் றியதிருவா மாத்தூரில்
சிவபெருமான் முருகப் புத்தேட்(கு)
ஆவலொடு சமைத்தளித்த வேற்படைக்(கு)ஒப்(பு)
ஆகுமென அறைஒண் ணுதே. 9

சூரனுடற் பாதியினுற் சமைந்துளசே
வலும்,கனலோன் சொருப மான
வீரவன்சே வலும்,சாத்தன் விறற்பெருஞ்சே
வலும்,குமர வேட்(கு)என்(று) அந்நாள்
பாரணங்கின் முகம்போலும் மாதைநகர்
வாழ்பரமன் படைத்து நல்கும்
ஓரடற்செஞ் சேவலினுக்(கு) ஒப்பாமோ?
சரபமதோ(டு) ஒக்கும் அன்றே. 10

வேலொன்றும், மயில்ஒன்றும், சேவல்ஒன்றும்
பெற்றகுகன், விடைவல் லானைப்
பாலொன்றும் முலைக்கவுரி தனைவணங்கி
அவர்உரைத்த பணிமேற் கொண்டு
நூலொன்றும் உரப்பிரமன் தனையிடலா
தியஆடல் நூறும் செய்து
காலொன்று சிலம்பில்உமை தருமகளிர்
பெறுமகர்தம் கணத்தைக் கூட்டி. 11

---

8 இந்திரன் மயில், சூரன் ஒருபாதியான மயில், விநாயகரது வாகனமான மயில், முருகனது சாருபமுற்றவர்களுடைய மயில், மற்றும் உள்ள மயில், யாவும் ஆமாத்தூரில் முருகன் பெற்ற மயிலுக்கு ஒப்பாகாது என்ருர். விநாயக புராணத்தில் மயில்வாகனம் விநாயகருக்கு இருக்கும் செய்தி காண்க.

10 கனலோன் - அக்கினி. சாத்தன் - ஐயனுர், இவர்கள் சேவற்கொடி சிவப்பு-

11 உமைதரும் மகளிர்மகர்-அம்மையின்பாதச்சிலம்பிலிருந்து தோன்றிய நவவீரர்கள்

பூதர்பெரும் படைசூழத் தேவர்குழாம்
நனிபோற்றப் புதுத்தேர் ஏறி
மாதவன்,நான் முகன்,மகவான், அக்கினி, ஆ
தியர்பெரிதும் மகிழ்ச்சி தோய
ஆதவன்மூற் புனல்இறைக்கும் அருந்தவமா
முனிவர்உளத்து, அச்சம் தீரக்
காதகரில் தலைமைபெறு தாரகன்மேற்
பொருமாறு கருதி னானே. 12

எண்சீர் விருத்தம்.

தான தத்ததன தந்ததன தானனா
காசி பப்பிரமன் அன்றுமக மாயைதோள்
காத லித்துதவும் மைந்தரொரு மூவரே.
ஆசி பெற்றமுதல் வன்பொருவில் சூரன்,நே
ராயு தித்தநடு வன்சதப தாகியே
மாசில் சுத்தமுறு சிங்கமுகன், நேர்பினோன்
வார ணச்சிரசி னன்,தலையொர் ஆடுபோல்
வேசி அத்தகுவர் பின்புவரு வாள்,இனோர்
மேதி னிக்கிடர்செ யுந்தொழில்வி டார்களே. 13

தான தானனத் தானதன தானனா
ஆனை மாமுகத் தாரகனை மோதுமா(று)
ஆசை யாய்இமக் கோடருகில் ஏகினான்
மீனை நேர்விழித் தாயுருவ மானகூர்
வேல்வி சாகன்,அப் போ(து)அவன் வினாவியே
தானை யோடெதிர்த் தான்இருவர் தாமுமே
சாய காதிதொட் டேநெடிது போர்செய்தார்
வானை மாநிலத் தோடளவி னான்முனும்
வாய்மை யாளர்தத் தால்வெருவி னார்களே. 14

தந்த தந்ததன தந்ததன தானனா.
அங்கி யன்றபல சண்டைகளும் ஆதிநாள்
அம்பியின் கண்வரும் மைந்தன்முத லோர்சொனார்
தொங்கி டுங்கைஇரு துண்டுபட வீசி,ஓர்
தும்பி யென்றதலை யுந்துணிய நூறியே,
சங்கி னந்தொனிசெய் பம்பைதிகழ் மாதையூர்
தங்கி டும்பரமர் தம்புதல்வன் ஆடினான்
மங்கி அன்றவன்ஒ ழிந்திடலும் வானுளார்
மங்க ளம்பலமொ ழிந்தனர்கள் கூடியே. 15

---

13 சதபது – நூறு பத்து (ஆயிரம்). வாரணச்சிரசினன் – யானைத் தலையினனான தாருகன். ஆடுபோல்வேசி - ஆட்டுத்தலைகொண்ட அசமுகி.

14 இமக்கோடு - இமயமலை. அவன் - தாருகன். சாய(க)ஆதி - அம்பு முதலியன அளவினான் - ஆகாயத்தையும் பூமியையும் அளந்த திருமால்.

15 அம்பியின் கண்வரும் மைந்தன் - கங்கை ஓடத்தில்பிறந்த வியாசர். தும்பி–யானை.

தனன தத்ததன தத்ததன தன்னனா.

அவனை அட்டபின்அ வற்குரிய அண்ணனும்
அரிமு கத்தகுவ னைச்செறுதல் நண்ணியே
சிவன ளித்தபடை பெற்றுளதொர் செம்மைவேள்
செயமு ழக்குடன்நெ ருக்கினன்அ(வ்) வெண்மை
உவரி மத்தியில்வ குத்தநகர் தன்னில்வாழ்(வு) [யான்
உறுதன் முற்றுணைவ னுக்கியல்வ பன்னியே
தவறு பட்டவசை சுட்டிடலின் உன்னியே
தலைகை அற்றும்முன்ன னத்தமைதல் கண்ணியே. 16

தனன தய்யதன தந்ததன தானனா

சமரில் வெல்கலன்இ(ம்) மைந்தனென நாடியோர்
சபதம் விள்ளுதலும், அன்றுபுரம் நீறவே
தமது பல்லொளித ருங்கனலி னல்வெல்வார்
தனையன், வல்லிடிந டுங்கொரொலி யாலனேன்
நமது செல்வமொ(டு)உ டம்பும்இறு மேனனா
நலிவு கொள்வதுதெ ரிந்(து)அவன தாள்முனண்
அமரர் ஐகொள்வயி ரம்புரைவ(து)ஏவியே
அழிவு செய்தனன்,அ வன்தமையன் வாடவே. 17

தான தந்தனத் தனனதன தந்தனா

கோர வன்குணத் தவுணர்களில் நேரில்சூர்
கோபு ரம்பெயர்த் தடல்மதிளில் மோதும்வாள்
வீரன் நன்குரைத் திடுமொழிகொ ளாமையால்
மேத குந்திறற் றுணைவருயிர் போயும்நீ(டு)
ஈர உம்பரைச் சிறைவிடுகி லானெனா
ஏசில் கந்தனுற் றமர்செய்முதல் நாள்அனேன்
நேர விர்ந்துதட் டழிவொடுவ மானமாய்
நீல்நி றங்கொள்வெற் பெனவிலகி னனரோ. 18

தந்த தானனா தனனதன தந்தனா

தங்கை யானபா தகிமொழியை நம்பியே
தண்கு லாவும்வான் உலகின்மிசை வெம்பியே
கொங்கை மாதர்ஊர் தொறும்அழு திரங்கவே
கும்ப லோடுபா லகரையும்இ ழந்தசூர்

16 வெண்மையான் – வெண்ணிறமான சிங்கமுகன். உவரி நகர் - கடல் நடுவில் உள்ள வீரமயேந்திரத்திலிருந்த சூரபத்மன்.

17 ஒலியால் - ஊங்காரத் தொனியினால் முளைத்துவந்ததலை, கைகள் ஒடுங்கின. அவனது ஆள் – முருகன் தொண்டனான வீரவாகு. அமரர் ஐ - தேவர்தலைவனான இந்திரன்.

18 உரைத்திடும்மொழி – தேவர்சிறையை விடும்படி கூறியது. விலகினன் – முதல் நாட் போரில் அபசெயம் பெற்று சூரன் சென்றான்.

கங்கை யாறும்நா ணியவிசைகொள் பம்பைநீர்
கண்ட மாதையூர் அடிகள்தரு கந்தனோர்
மூங்கை போலநா ணுபுசெலல்ம றந்துபார்
முன்சொல் பூதமா கியும்அவிர்தல் விந்தையே. 19

தானதன தானன தானந்த தானன

சூரனது மாயாவி னேதங்கள் நாடியே
சோர்விலது நீபாரெ ணஅங்கு நீடினன்
ஆரணனும் ஓராத ஞானங்கொள் சேயவேள்
ஆர்வமொட னேன்ஆட லான்அன்பில் ஆழ்வுரு
வீரமழி வாய்ஏதெ தோவிண்டு தாழ்முன்,வேள்
வேறுகுணம் ஆமாறு பேதம்செய் தான்அதால்
ஈரமில னேசி னன்அம்பு வாரியூ
டேபெரிய மாவாயும் மேலுந்தி னனரோ. 20

தான தந்ததன தானதன தானன

சாகை மிஞ்சுமர மேமுதல வாயமா
சால அங்கம்வெகு வாயுறலும் மாயவே
ஓகை கொண்டுகுகன் மோதினன்ஓர் கூரவா
ளோடு சொந்தவடி வாயெதிரும் வேளையே
வாகை தங்குகதிர் வேல்கொடிரு பாதியா
வார்த லும்,பழைய ஞானமுடன் ஆடல்சேர்
தோகை யம்புளொடு சேவலுரு வாகியே
சூரன் நின்றனன்வி ணடுகுடி ஏறவே. 21

அறுசீர் விருத்தம்.

இக்கதை விரிவெல் லாமும் இயற்றமிழ்க் கவிக ளாலும்
செக்கர்நேர் சிவன்வாழ் கச்சித் தேசிகன் முதலோர் சொன்னார்
முக்கணான் அருளால் யாவர் முருகவேள் கலைபெற் றுலும்
திக்கறி தரச்சூர் போல்வார்ச் செகுப்பது கடனும் அன்றே. 22

மட்டுவார் இதழிச் சென்னி மாதையூர் அபிரா மேசற்
றெட்டுமுன் பூசித் துய்ந்த தொழும்பர்தம் திலகம் போல்வான்
விட்டுணு கமல யோகி என்றிரு விடலை அன்றற்(கு)
இட்டுள பெயரால் மும்மூர்த் திகள்கலை இயைதல் தோன்றும். 23

---

19 பாதகி—அசமுகி, பாலகர்—பானுகோபன் முதலியோர் அடிகள்—அபிராமேஸ்வரர், மூங்கை - ஊமை. பார் -- பூதம்—பூமி முதலான ஐந்து பூதங்கள். அவை – பிரிதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன.

20 நீடினன் - பெருவடிவம் முருகன் கொண்டார். ஏதேதோ - முருகன் பெருமைகள் வேறுகுணம் - அன்புமாறிய அகந்தை. ஏசினன் – முருகன் ஏமாற்றியதாக ஓதிய சொல், உந்தினன் – மேல்நோக்கி வளர்ந்தான்.

21 சாகை - கிளை. சால அங்கம் - பல மாயவடிவம். வார்தலும் – பிளந்தவுடன்.

22 தேசிகன் - கச்சியப்ப சிவாசாரியர்.

தாவறும் கலைமின் கேள்வன் தளைபட விடுத்த தாலும்,
தேவர்தம் துயரம் முற்றும் தீர்தரச் செய்த தாலும்,
பாவனு தீத ஞான பலம்பலர்க்(கு) அருள ளாலும்
மூவர்தம் கலையும் தோய்வார் முருகன்அங் கிசமே யாவர். 24

கருணையை முதன்மை யாக்கிக் கல்வியை அதன்பின் னுக்கி
இருளறும் முத்தி எய்தற்(கு) ஏதுவாம் ஞானம் தன்னைப்
பொருவில்அவ் விரண்டின் பின்னுப் புணர்த்தலில் புகலும் அப்பேர்
திருமகள் கணவன் பேர்முற் றிதழ்தரப் பெற்ற தம்மா. 25

தெய்வம்அத் தனையும் மாதைச் சிவனருட் செயல்என்(று) ஓரா(து)
ஐவரில் ஒருவன் தான்என்(று) அலமரும் இளமை வாய்ந்த
சைவரே இந்தக் காதை தமியனேன் அவனுற் றேறிச்
செய்வதாம் உண்மை யாவும் திருவுளம் அறியும் அன்றே. 26

என்னதுள் அநுப வத்தோ(டு) இயல்சில கதையும் சேர்த்துக்
கொன்னகு தமிழாற் சொன்ன குருபர தத்து வத்தில்
இன்னதன் குறிப்புச் சற்றே இலங்குறக் காட்டி யுள்ளேன்.
அன்னபோ(து) ஈண்டைக் காதை ஆம்என அறிந்தி லேனே. 27

இந்துசூ டினர்ஆ மாதைக்(கு) இயல்புரா ணத்தின் காதை
வந்துறும் ஞாயம் எல்லாம் வகுத்துரைத் திடினும், முன்னால்
தந்துள வியாசன் ஆதித் தவரையும் மதியாப் பொல்லார்
வெந்துறும் மனத்த ராயே மிகஇகழ்ந்(து) அழிவார் அன்றே. 28

சுந்தரன், சேரன் என்னும் தொண்டர்விண் வழிபோம் அன்றே
அந்தவெண் கபிலை சேர்ந்த ஔவையைக், கம்பன் நாளில்
இந்தஞா லத்தில் உற்றுள் என்னினும் இசையும் மாந்தர்க்(கு)
எந்தவா(று) எவர்சொன் னுலும் இனியதாம் இயல்பொன்(று) உண்டே

கம்பனோ(டு) இகன்ற ஔவை கபிலையில் உறைந்தாள் தன்னை
நம்பலால் அவள்சா ரூபம் நணுகினுள் எனும்ஞா யத்தால்
உம்பரூர்ச் சேந்தன் மாயன் ஒத்தவர் சிலரும் ஈண்டை
வம்பரைச் செகுக்கு மாறு வயங்கல்உண்(டு) உணர்ந்துய் வீரே. 30

---

24 பாவனுதீதஞானம் - எண்ணத்துக்கு அமையாத பொருளையறியும் நிலை.

25 கருணை, கல்வி, ஞானம் இவற்றையுடையவர் - விட்டுணு, பிரமன், சிவன். இம் மூவர் பெயரையும் ஒருசேரப் பெற்றவர், விட்டுணுகமலயோகி என்பதாம்.

26 ஈண்டைக்காதை - இந்தப் புராணத்தினைப் பாட நேரும் செயல்.

29 ஔவை - சுந்தரர் காலத்தில் ஒன்று. கம்பர் காலத்தில் ஒன்று. முன்னையவள் உபாசனையால், பின்னையவள் அந்தப்பெயரும் வடிவும் பெற்றுள் என்பதாம்.

கலிவிருத்தம்.

கற்று ளார்புகழ் கலைமகள் கணவனுற் செயப்பட்(டு)
எற்றும் வார்திரைக் கடற்கலை உடுக்கும்இவ் உலகில்
நற்று வாபர யுகம்செலச் செலக்,கொடு நமன்போல்
உற்று நீங்கின வாம்கலி யுகங்களு(டு) ஒன்றில். 31

குதிரைச் சென்னிமால் ஒழிக்கரும் கொடுமைமேற் கொண்டு
விதியெ லாம்பிறழ்ந்(து) அமரரும் முனிவரும், வெதும்பி
நிதிய மேகதி எனும்பிழை எங்கணும் நிலவிப்
பதித ருங்கொடும் கள்வரும் நலமிகப் படைத்து. 32

தெய்வ ஆலயங் களிலுறும் சிறப்பெலாம் குலைந்து
சைவம் ஆதிய நன்னெறி யாவையும் தளர்ந்து
பொய்வ ழக்கினர் உளந்தொறும் புளகிதம் பொலிந்து
மெய்வ ழிச்செல்வார் மிடிப்பெருங் கடலிடை வீழ்ந்து. 33

இன்ன ணம்பகர் பாவம்எல் லாம்பெரு கிடலால்
முன்னம் உள்ளபுண் ணியபலம் யாவையும் முடிந்திட்(டு)
உன்ன ரும்பெருந் தவமுளான் வருநலம் உறுவான்
இன்னல் எய்துபு நிலமகள் அழுதனள் இரைந்தே. 34

அழுத ஓசைகேட்(டு) அமரரும், அவர்பதிக் கோனும்,
எழுதொ ணுமறைக் கிழவனும் மாயனும், ஏகிப்
பழுதில் மாதையூர்க் கோயிலுள் வளர்பர சிவனைத்
தொழுது போற்றினர் அவனச ரீரியாய்ச் சொல்வான். 35

உமக்கு மாத்திரம் அத்துயர் உளதுகொல், உலவா
நமக்கும் ஓர்சிறி துள்ளதால் இன்னம்நாம் சகியேம்
இமக்குன் றுள்முலைப் பால்நுகர் மதலையை ஏவித்
தமக்கும் பன்னஅத் துன்பறத் தவிர்க்குதும் என்றான். 36

அதுவி னுவலும் அன்னவர் தம்பதி அடைந்தார்
விதுவு லாம்சடை வேதியன் வேலனை அழைத்துப்
பொதுவில் நன்மைஇப் புவியொடு வானுறப் பொருத்தும்
இதுசெய், மானிட யாக்கைஒன்(று) எய்திஎன் றிசைத்தான். 37

அந்த நாளொரு மானிடன் அருந்தவம் புரிந்து
மைந்தன் வேண்டும்என்(று) இரந்திருந் தனன்அவன் மனைதன்
செந்த கைத்திரு வயிற்றெரு மகவெனச் செனித்துக்
கந்த னேஎனக் காண்டொறும் பலர்சொலக் கவின்றான். 38

---

32 குதிரைச் சென்னிமால் – கற்கிமுகத்தோடு கலிமுடிவில்வரவுள்ள திருமால்
36 தம, கும்பு, அன்ன – இருட் கூட்டம் போன்ற துன்ப மிகுதி.
37 பொருத்தும் இது - அமையச்செய்தற்குரிய இதனை.

அவன்தன் ஊர்ப்பெயர் அன்னைதந் தையர் பெயர்ஆதி
பவந்த மாயொரு வாறமைத்(து) உரைத்திடிற் பயனென்?
சிவன்தன் உள்ளமும் தேவர்தம் உள்ளமும் சித்தர்
நவந்த ருந்திரு உள்ளமும் அறிதரும் நன்கே. 39

கல்வி கேள்வியிற் சிறந்தனன் கருணைமே வீட்டாற்
செல்வி கோன்முத லினர்வியப் புறும்படி திகழ்ந்தான்
பல்வி தத்தலங் களின்மகி மையும்பகுத்(து) அறிந்து
நல்வி சேடமாம் மாதையே எனமிக நயந்தான். 40

அங்கு போவதற் காகிய உறுதிபெற் றிடும்நாட்
கங்கு லிற்றுயில் கனவினிற் கடகரி முகன்,தான்
பொங்கும் அன்பினிற் பூசைசெய்(து) உய்ந்தமை புகன்றுன்
எங்கும் இன்றிய உவகைமேற் கொண்டுசென்(று) ஏய்ந்தான். 41

சென்று தான்செயத் தகுநலம் முழுமையும் செய்து
பொன்று ருஅழ கேசர்தம் பூசையும் புரிந்து
மென்று கிற்பிடி அனையசீர் உமையொடு வெள்ளிக்
குன்று றழ்ந்தமால் விடைமிசை குலவுறக் கண்டான். 42

கண்டு தெண்டனிட்(டு) அளவறத் துதித்தலும் கருணை
கொண்டு நின்விருப்(பு) யாதென வினவும்அக் கோன்பால்
விண்டு வும்கமலத் தனும்நீயுமா விளங்கித்
தொண்டு செய்(து)இறப் பொடுபிறப் பறலெனச் சொன்னன். 43

எந்த வாறுநீ விரும்பினும் அவைமுழு(து) எளிதே
இந்த ஞாலமேல் நடத்திநம் பதத்தில்எய் தென்றிட்(டு)
அந்த ஊர்இலிங் கத்தினுட் புகுந்தனன் அமலன்
கந்த நாள்மலர் பொழிந்தனர் விண்ணுளார் களித்தே 44

உடன்எல் லாவுல கமும்,உடுக் களும்,படைத் திரளும்
கடவுட் டன்மையும் தன்னவாத் திகழ்தரக் கண்டும்
அடல ரக்கரொத்[து] ஆணவத்[து] அழுந்திடா[து] அடியார்
தடம லர்த்திரட் கடிமையாம் எனும்நிலை சார்ந்தான். 45

உத்த மர்க்குதல் உதவிசெய் யாதொளித் துலவும்
சித்த ரும்பல தேவரும் இருடியர் திரளும்
நித்தம் வந்துற வாடிடப் பெற்றனன், நீசப்
புத்த ராதியர் நடுநடுங் குபுமிகப் புலர்ந்தார். 46

---

39 பவந்தம் - பொய்.

40 கடகரிமுகன் - மதயானையின் முகன் (விநாயகர்)

43 விண்டுவும், கமலத்தனும், நீயுமா- திருமால்,பிரமன், சிவனை! இம்மூவர்போல

அறுசீர் விருத்தம்.

வீரர்களும் புலவோரும் மாதவரும்
மடவாரும் விரும்பிச் சூழத்
தேரதனில் திசைதொறும்போய்த் தெய்வமின்(று)என்
பாரைமுதற் றிருத்தித், தேருக்
கோரகுணங் காட்டினரைக் கொன்றழித்(து)ஊன்
விரும்புமவர் குலவேர் கெல்லிப்
பாரணங்கின் சுமைதீர்த்துப் பகவன்இவன்
எனப்பலர்சொல் பயன்பெற் றனே. 48

வேந்தன்என்றார் பலர்,புலவர் தலைவன்என்றார்
பலர்,மலய வெற்பின் மேவும்
சாந்தன்என்றார் பலர்,மதனன் தான்என்றார்
பலர்,அவன்அத் தன்மை முற்றும்
வாய்ந்தடியார் எத்தேவா வணங்கிடினும்
அவர்அவர்க்(கு)அவ் வடிவம் காட்டிப்
பாந்தளணித் தலைஉலகே பலஉலகு
மாவிளங்கப் பார்த்திட் டானே. 48

அறிவில்சில புன்குரவர் அமைத்தநெறி
அத்தனையும் அழித்திட்[டு] அம்பொற்
பொறியிருந்த மார்பன்உந்தி பூப்பவரும்
நான்முகத்தோன் புகல்நால் வேத
நெறியனைத்தும் விளக்கி,அவற்[று] அசுரர்கலந்
தனமுழுதும் நீக்கி, ரோமப்
பறியிடைசா ரணர்வருந்தும் இஞ்சைமுத
லாம்பலவும் பாழ்செய் தானே. 49

எச்சமயத் தோர்களையும் தெய்வமொன்றே
எனத்தேற்றி இதுஅ[து] என்னும்
பொச்சமொழித் திடினும்அவற் றுள்ளநன்மை
அத்தனையும் புரந்தான் அந்தோ!
இச்சமர சானந்தம் இனி[து]இனி[து]என்
றவறிந்தோர் எவரும் சொன்னர்
நச்சரவும் தேரையும்போன்[று] இகல்வாரும்
உறவினராய் நனிவாழ் வாரே. 50

---

48 சாந்தன் – அகத்தியர், பாந்தள் அணித்தலை உலகு – ஆதிசேடன் தலையிற் சுமந்த உலகம்

49 அமைத்த நெறி – புறச்சமயம். வேத நெறி – சைவ நெறி, அசுரர் கலந்தன – கொலைபுலையை ஒப்பும் இழுக்கு. சாரணர் – சமணர்.

50 பொச்சம் – பொய்.

எல்லவரும் தம்குரவன் யாவருக்கும்
பொதுவானுன் என்றே சொன்னுர்,
வல்லசில தானவரும் பைசாசர்
களும்புலைமீ மாஞ்சர் தாமும்
புல்லறிவாண் மையிற்சிறந்த புத்தர்முத
லினர்தாமும் பொருது மாய்ந்தார்
கொல்லல்புலை யாடலிஞ்சை செயல்மூன்றும்
மனிதர்இன்றிக் குலவி ஞரே. 51

எத்தனையோ சத்துருக்கள் அனலில்விழு
புழுவினம்போன்[று] இறக்கக் கொன்ருன்
செத்தழிந்தார் பலர்உலகில் உடலொடுமீண்[டு]
உலவிடவும் செய்தான் அந்தோ!
பத்தர்விரும் பியபயன்முற் றுதவுதற்கென்[று]
ஆமாதைப் பதியிற் பண்டைச்
சித்தர்இருப் பதுதெரிந்தும் சிலர்,தம்உயிர்
உய்வதெண்ணித் திகைக்கின் ருரே. 52

அன்னவனைக் காண்டொறும்மா விடர்பலரும்
கருதியவா(று) அனைத்தும் செய்யும்
முன்னவன்நீ எனத்துதித்தார், அவன்எனைச்செய்[து]
அளிக்கும்ஒரு முதல்உண்[டு] என்ருன்
என்னசொல்வேன் இவ்வுலகில் பலர்தமக்கென்[று]
ஒருசெயலும் எய்தப் போமோ?
தன்னதுகற் பனையேயாம் சகசீவ
பரம்எனற்கும் சகிக்கில் லாரே. 53

அவ்வண்ணம் அம்முருகன் அகிலமிசை
விளையாடல் அனந்தம் செய்து
மைவண்ணத் திருநெடுமால் முதலியவா
னவர்பலர்க்கும் மகிழ்ச்சி நல்கிப்
பொய்வண்ணக் கலிவருத்தும் புகழ்க்கடலில்
முழுக்காடிப், புனிதர் சூழச்
செவ்வண்ணத் திருவுருவாய்ச் சிகிளைர்ந்து
சிவலோகம் சேர்ந்தான் அன்றே. 54

---

51 மீமாஞ்சர் - யாகத்தின் கொலையை ஒப்புவோர். புத்தர் - புலையுணவை ஒப்புவோர்.

52 பண்டைச்சித்தர் - அநாதியாயுள்ள அருட்பெருமான்.

53 துதித்தார் - மக்கள் மிகப்பாராட்டினர். அவர்-எனக்குத்தலைவன் உண்டு என்ருர். ஒரு செயலும் - சுதந்தரம். சக, சிவ, பரம் - உலகம், உயிர், தெய்வம் என்பன.

அங்கனந்தம் பேர்தனைப்போன்[று] அயில்வேலோ[டு]
அவிர் வதுகண்(டு) அவரிற் சேர்ந்து
செங்கமலத் தடம்சூழும் திருவாமாத்
தூர்ப்பரமன் சீர்சொற் றுற்றான்.
பங்கமில்யாழ் வல்லவரில் தலையாய
நாரதன்அப் பதியிற் பூசித்(து)
எங்கணும்வாழ் வுறும்எவரும் போற்றிசைக்கும்
நலம்பெறுசீர் இயம்பு வேனே. 55

## முருகப்பெருமான் வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 391



55 அங்கு – சிவலோகத்தில்; திருவாமாத்தூரில் அழகிய நாதரை வழிபட்டுத் திருவருள் பெற்று, உலகில் பல நன்மை செய்தும், தீமைகளைப் போக்கியும், இறுதியில் சிவலோகத்தெய்தினர். அங்கு, தன்னைப்போலவே வேலாயுதந் தாங்கியவராய்ப் பலர் இருப்பதைக் கண்டு, அக் கூட்டத்தில் தாமும் சேர்ந்து, தனக்கு அருள்செய்த ஆமாத்தூர்ப் பெருமானது புகழைப் பலர்க்கும் கூறியிருந்தார் என விளக்கினார்.

# நாரதர் வழிபட்டது.

**கலிநிலைத்துறை.**

எவ்வேளையும் மாமுனி வோர்புடை ஈண்டிச்சூழ
மெய்வேதமு டிப்புரைக் கும்சதுர் விட்டுநீங்கான்
மைவேல்புரை கண்ணியர் சூழ்கலை வாணிதன்செங்
கைவேய்ந்தவிர் வீணையின் ஓசையிற் காதல்கூர்ந்தான். 1

ஓரேழ்சுர மும்பிற ழாவணம் உன்னியன்னான்
சீரேய்தரப் பாடல்வி ளையமகிழ் சிந்தைதன்னாற்
பாரேமுத லாம்உல(கு) யாவும் பராவும்வண்மைப்
பேரேய்ந்தொளிர் நாரதன் முன்வரப் பெற்றிட்டானே 2

பெறுமைந்தன் அத் தாதைதன் பொன்னடி பேணிப்பாங்கர்
உறும் அன்னைதன் தாளினும் வீழ்ந்தனன் ஓகைபூத்து
மறுவின்றிய வாணிமின் னாள்தன் வலக்கைவீணை,
சிறுமங்கைபெற் றாங்(கு)எழில் யாழ்ஒன்று சிட்டித்(து)ஈந்தாள். 3

ஞானத்தகை நான்முகன் நல்கினன் நாவின்வாணி
கானத்திறம் காட்டினள், வேறினிக் காதல்உண்டேல்
மானப்புவி யிற்றமிழ்த் தேயத்து மாதையூர்வாழ்
கூனற்பிறைச் சென்னியற் போற்[று]எனக் கூறினாரே. 4

அம்மாற்றம் வினாவலும் தாழ்ந்[து]எழுந்[து] அங்குபோய்அப்
பெம்மான்தனைப் பல்மல ரால்மிகப் பேணிஏத்திக்
கைம்மான்மழு வாதிய கோலம் கருத்தில்நாடி
மைம்மாதுமை சொல்லுறம் நல்லிசை வாசித்தானே. 5

அவ்வாறுபன் னாட்கழித் தேங்கி அழுங்கல்நாடிச்
செவ்வான்உரு வம்புரை யும்சிவ சித்தமூர்த்தி
எவ்வானவ ரும்தொழ வெள்விடை ஏறித்தோன்றி
வெவ்வாதனை தீர்ந்தநின் வேட்கை விளம்புகஎன்றான். 6

எல்லோகமும் போய்வரு மாட்சியும், ஈடில்தீமைப்
பொல்லோர்களும் காணுமுன் அன்பொடு போற்றுசீரும்,
கல்லோலம கோததி நேர்புகழ்க் காடுநல்[கு] என்[று]
இல்லோடொளிர் வான்எதிர் தாழ்ந்தெழுந்(து) ஏத்தினானே. 7

---

1 ஈண்டி - நெருங்கி. சதுர் – அறிவுரை
2 கலைமகளின் யாழிசையில் ஒன்றித்த பிரமன் சிந்தனையிலிருந்து நாரதர் தோன்றினார்
3 சிறுமங்கை பெற்றாங்கு - கலைமகளின் வீணையான பெண் ஒரு மகவைப் [பெற்றதுபோல
4 கானத்திறம் – இசைநுணுக்கம்.
6 ஏங்கி - மனம் வருந்தி.
7 காணுமுன் – கண்டவுடன். கல்லோலமகோததி – பேரிரைச்சலுடைய கடல். புகழ்க்காடு – கீர்த்தி மிகுதி.

சந்தோட மலிந்துவிண் ணோர்பலர் தாழும்கேட்பத்
தந்தோம்எனச் சொற்றனன் மாதையில் தங்குநாதன்
திந்தோம்என ஐந்தொழிற் கூத்தினிச் செய்யும்தோறும்
வந்தோதுதி யாழ்இசை என்றும்நல் வாய்விண்டானே. 8

அந்நாள்முதல் வேதமொ(டு) ஆகமம் ஆதிநூல்கள்
இந்நாரதன் தன்புக ழும்பெரி(து) ஏத்தலுற்ற
முந்நான்கு நெறிக்கும் ஒரேபொது மூர்த்தியாகி
எந்நாளும் எங்கெங்கும் உலா(வு)உவப் பெய்தினனே. 9

எவர்க்கும்பொது வாநிகழ் தன்மை இயைந்தவாற்றால்
அவர்க்(கு)ஒன்(று)இவர்க்(கு) ஒன்(று)உரைக் கும்பிழை யற்றுஞானத்
தவர்க்கும்புல வர்க்கும்அன் றிக்கொடும் தானவர்க்கும்
துவர்க்கும்சொலும் இன்சொலும் சொல்லத் துணிந்துளானே. 10

சைவத்தவர் தம்மவன் என்பதில் சக்கரக்கைத்
தெய்வத்(து)அடி யார்களும் சொல்லுவர் செப்பல்மெய்யேல்
பொய்வர்த்தனைத் தானவர் தம்பகை பூணல்வேண்டும்
ஐவத்திரத் தான்என வேபொது வாயுளானே. 11

கனகன்மனை யாள்வயிற் றுற்ற கருப்பம்கேட்ப
அனகத்திரு மந்திரம் நாரதன் அன்றுசொற்(று)அவ்
இனமும்தவம் எய்திடச் செய்தனன் இல்லையேல்வெம்
பனகம்புரை அக்குலம் முற்றிலும் பாழதாமே. 12

ஆமாதையு ளார்தரும் மைந்தனுக்[கு] ஆடதாம்ஓர்
மாமாவும், வனத்துறையும் குறவள்ளி மின்னும்
ஏமாப்புறும் நாரத னுற்கிடைத் திட்டஉண்மை
தாமாஉரைத் தார்பல மாதவர் தாரணிக்கே. 13

நிலவார்சடை நின்மல நாதனை நீடும்வீணை
வலநாரதன் பூசைசெய்[து] எய்திய வண்மைசொன்னம்
புலவோர்புகல் சீர்மலி மாதையிற் புக்கெந்நாளும்
உலவாப்புகழ் ஓங்கும் உரோமசன் உய்கைசொல்வாம். 14

நாரதர் வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 405.

---

10 துவர்க்கும் சொல் - வெறுக்கும் மொழி.

11 தம்மவன் – தங்களைச்சார்ந்தவன், என்பதில் - என்று கூறுவதுபோல, ஐவத்திரத்தான் - ஐந்துமுகமுடைய சிவபிரான்.

12 கனகன் - இரணியன். கருப்பம் - பிரகாதனன், பனகம் – பாம்பு.

13 மா, மாவும் - குதிரை ஒத்த பெரிய வாகனம்.

## உரோமசர் வழிபட்டது.

வெண்டளைக்கலிப்பா

நாரதனால் என்பால் நடந்த கதைஉளது
பாரதிஇந் நூலிற் பகர்தற்(கு) இசைந்தில்லாள்
ஆரறிவார் இந்தஉண்மை ஆமாதைக் கோயிலுக்குச்
சேரமல னார்தம் திருவுளமே சான்றாமே. 1

சத்தியலோ கத்திற் சதுமுகத்தோன் தான்உரைக்கும்
முத்திநெறி கேட்ட முனிவோர் பலர்தாமும்
உத்திநலத் தேம்என்(று) ஒவ்வொருவ ரும்கழகி
மத்தியத்தன் இல்லார்போல் வாதித்(து) உழன்றாரே. 2

வேதன்உரை கேட்டோர்க்கும் வித்தைஅகங் காரத்தால்
போதம் மறந்தபெரும் போராட்டம் உற்றதென்றால்
சீதம் மலிகடற்பார்ச் சிற்றறிஞர் தேறுவரோ
நாதன் அருளின்றி ஞானநிலை தோன்றாதே 3

அந்தக் கொடுமையறிந்(து) அம்புயத்தோன் தன்தலையின்
சந்தச் சிகைத்தோர் தவளரோ மம்பறித்துச்
சொந்தக் கருணையினால் தூயமுனி யாக்கிவிட்டான்
கந்தக் கமலன் கழல்பணிந்து நின்றானே. 4

நின்றானை நோக்கி நிறைஉணர்வெய் தா(து)இகன்றார்
ஒன்றாய மாற்றம் உரைத்திவரைத் தேற்றெனலும்
பின்றாழ் சடிலப் பிரான்கழல்அல் லாற்கதியின்(று)
என்றான் குதர்க்கம் இழந்துநாண் உற்றாரே. 5

நாணினர்தம் கண்முன்அந்த நன்முனிவன் நான்முகனைப்
பேணிஎனக்(கு) யாதுபணி பேசுதிஎன்(று) ஏத்திடலும்
நீணிலத்தின் மாதைநகர் நின்மலனைப் பூசித்துச்
சேணினர்க்கும் எய்தரிய சீர்பெறுகென் றான்அயனே. 6

அன்றேஅங்(கு) ஏகி அருளோர் திருவுருவா
நின்றேதம் தீர்க்கும் நிமல சிவலிங்கம்
ஒன்றே துணைஎன்(று) உரியபணி முற்றியற்றி
நன்றே விழைந்து நனிநாட்கள் கழித்தானே. 7

மாதவம்செய் வார்முன் வரும்வழக்கம் போல்விடைமேற்
பூதர்களும் போற்றும் புராந்தகன்வந் துற்றிடலும்
பேதமற்ற முத்திப் பெரும்பே(று) அருள்என்று
பாத மலர்க்கீழ்ப் பணிந்தான் உரோமசனே. 8

---

1 பாரதி – கலைமகள். 2 சத்தியலோகம் – பிரமன் உலகு. உத்தி நலத்தேம் – அறிவாற்றல் உடையவர். 3 நாதன் – சற்குருநாதர் (தெய்வம்) 5 இகன்றார் – போராட்ட முற்றவர்கள். ஒன்றாய மாற்றம் – ஒருமை கொள்ளும் வாய்மை, சடிலம் – சடை, குதர்க்கம் – விவாதம். 8 புராந்தகன் – சிவன்

எந்த வரம்வேண்டும் என்(று)எவர்கேட் டாலும்உடன்
தந்தனம்என்(று) ஓதச் சலியாத சங்கரன்தான்
இந்த முனியளவில் ஏதேதோ ஞாயங்கள்
அந்தரத்தி னோரும் அதிசயிக்கச் சொல்வானே. 9

உன்னாற்பல் காதை உலகில் நடந்தாய
பின்னாள் தருவாம், பிரமனுக்கும் என்றாழ்க்கும்
நின்னாயுள் அவ்வளவு நீட்சியில்லை, நீயதுமட்(டு)
என்னாள்கை நீங்கா இரசிதமால் வெற்பிடத்தில். 10

நந்தி முதலோர் நனிவாழ்கின் றார்அவரோ(டு)
உந்தியபே ரானந்தம் உண்டிருத்தி! உற்றக்கால்,
பிந்திஅதன் மேன்மை பிறங்கும்,எங்கும் போய்வரலாம்
பந்தியநின் போல்வார் பலருள்ளார் என்றானே. 11

செப்புமொழி கேட்டுன் திருவுளத்தில் சீர்கேடாம்
தப்புதிக்கும் கொல்லோ? நின் சம்மதத்தைத் தள்ளவல்லார்
எப்புவனத் தேனும் இருப்பாரோ? என்றிறைஞ்சி
அப்புனித மாமுனியங்(கு) அவ்வா(று) அடைந்தானே. 12

முக்கணன்அம் மாற்றம் மொழிந்தநா ளில்திகழ்ந்த
அக்கமலத் தோனும் அருக்கனும்மாய் வுற்[று]அடுத்த
இக்கற்பந் தன்னில் எழுதுமா பாரதமும்
அக்கடவுள் மாமுனிவன் ஆற்றல் எடுத்(து) ஓதியதே. 13

நாரா யணன்கலையாய் நானிலம்உய் வான்உதித்த
ஏரார் முனிசொல்பதி னெண்புரா ணங்களுள்ளும்
தாராள மாஅத் தவஃமுனிவன் சீர்விளங்கும்
பேரா தரமுடையார் பீடளத்தற் பாலதன்றே 14

இந்நாள் அவன்தனக்(கு)என்று யாக்கையொன்றெங்(கு) எங்குமில்லை
பைந்நாகப் பூணான் பதத்தே கலந்துள்ளான்
அந்நாட் கதைஈண்(டு) அறையத் தகாதிந்நூல்
எந்நாவாற் பின்சொல்விக்கைக்(கு) ஏதுஇருக் கின்றதுவே. 15

மன்னுபெரும் சீர்த்திருவா மாத்தூரில் வாழ்சிவனை
உன்னும் நலத்தால் உரோமசன்மன் உய்கைசொற்றாம்.
பின்னுசடைக் கற்றைப் பிரீங்கிமுனி வன்சரிதம்
தன்னுள் ஒருசிறிது சாற்றத் துவக்குகின்றாம். 16

உரோமசர் வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 421.

---

10 என்றாழ் - சூரியன். இரசிதமால்வெற்பு - வெள்ளியான பெரியமலை.

13 அருக்கன் - சூரியன். 14 ஏரார்முனி - வியாசர். தவமுனிவன் - தெய்வத் தன்மைபெற்ற உரோமச முனிவர்.

## பிரீங்கி முனிவர் தவம்செய்தது.

**கலித்தாழிசை**

இன்ன காலத்(து)இன் னூர்பெறத் தோன்றினன்
என்ன நான்அறி யேன்,எவ ராயினும்
சொன்ன தாகவும் கேட்டிலன், சூழ்ச்சியிற்
பின்ன மிக்க பிரீங்கி முனிவனே. 1

தூய வன்சிவ னே,அவன் தோள்புணர்
மாய வல்லியோர் வம்பி, அவள்தொழேன்
ஆய வட்கினி யார்எவ ராயினும்
தீயர் என்னத் தினம்தினம் ஏசுவான். 2

அத்தி மாலை அணிந்த அழகனுர்
பத்தி யேமுனி வோர்பெரும் பாக்கியம்,
சத்தி யைப்பணிந் தேத்தும் தகையுளார்
முத்தி எய்தலர் என்றும், மொழிகுவான். 3

அந்த மாமுனி யைப்பல அன்பரும்
எந்த யோகிய ரும்பெரி(து) எள்ளியும்,
கந்த னைத்தரு கண்ணுதற் கள்வர்தம்
சொந்தன் என்னத் துணிந்தனர் போலுமே. 4

இப்பி ரீங்கி இகழும் தொறும் தொறும்
செப்பி லங்கு முலைச்சிவை சிந்தையுள்
வெப்பி யைந்தமை மிஞ்சுபு கொண்கர்தாம்
ஒப்பி டும்படி ஒன்றுரைப் பாளரோ. 5

இருவர் தாமும்ஒ ரேஉரு எய்தி,அக்
கெருவ மாமுனி கண்முற் கிளர்ந்(து)அவன்
அருவ ருப்பது காணல் அவாவினேன்
தருதி என்றனள், அங்ஙனம் தாம்உற்ருர். 6

சடையைக், கூந்தலைச், சங்கினைத், தோட்டினைப்,
படைக ளாம்மழு வைக்,கொடும் பாசத்தை,
அடைவில் மற்றவற் றைப்பக ராதல்,முன்
தொடைக ளிற்பல சொற்றமை நாடியே. 7

---

1 சூழ்ச்சி – ஆராய்வு. பின்னம் – பேதம் (சத்தியும் சிவமும் ஒன்றென்றுணராத தன்மை) 3 அத்திமாலை – எலும்புமாலை. 4 எள்ளி – இகழ்ந்து. 5 மிஞ்சுபு–அதிகப்பட்டு
7 உமையொருபாகனுகிய சிவசத்தி வடிவத்தின் அமைப்பை விரிவாகக் கூருதது முன்னோர் கூறியுள்ளதனுலாம்.

திகழ்வெண் குன்றுசெங் குன்றுரு ஆயது,
நிகழ்பல் லோரும் நிரம்ப மகிழ்ந்தனர்
இகழ்பொல் லாமுனி அவ்வுரு வின்நடு
அகழ்தல் உற்றனன் வண்டுரு(வு) ஆகியே. 8

துளைத்து நாதனோர் பாதியைச் சுற்றினான்
வளைத்த வில்லுறழ் வாணுதல் அம்மைநெஞ்(சு)
உளைத்தென் ஊன்உதி ராதியுற்(று) ஓங்குடல்
திளைத்து ளாய்!இதென் சீஎனச் சீறினாள். 9

அதனை ஓர்ந்(து)வன் அக்கண மேஅவை
உதறி நீத்து,நிற் கும்திறம் இன்றியே
பதம்ந டுங்குபு வீழ்ததி பார்த்(து)ஓர்தாள்
இதமு றக்கொடுத் தான்அழ கேசனே. 10

யாவ ருக்கும்ஒ ரேபொது என்றமெய்த்
தேவ தேவன் சிவன்எனற்(கு) ஈதொர்சான்(று)
ஆவ தும்தெரி யாஅறி வினைவெம்
பாவம் அன்ன பகைபிறி தில்லையே. 11

தன்னில் வேறல ளாம்உமை தன்களிப்(பு)
உன்னி நம்பினற்(கு) ஊறுறப் பார்க்கலான்
என்னில், ஈசன் இமைப்பிலர்க்(கு) ஆர்வமிட்(டு)
அன்னி யத்தகு வர்க்கிடர் ஆற்றுமோ. 12

மூன்று காலும்அல் லாதொர்கை முன்னிடத்(து)
ஊன்று கோலும் உதவியும் ஒண்பிறைக்
கூன்று லக்கினன் ஆதலிற், கும்பிநொந்[து]
ஈன்று ளாள்தயை இல்லவர்க்[கு] இன்னலே. 13

சேலென் கண்உமை, தீமக வாம்முனி
பாலென்[பு] அன்றிய பற்றிலை யோ,பசுந்
தோலென் கூறென்றும் சொற்றிலள், உள்தயை
யால்,என் றும்பிறர் அன்னைஒவ் வார்களே. 14

---

8 வெண்குன்று - வெள்ளிமலை செங்குன்று – திருச்செங்கோடு. பொல்லாமுனி – பேதவுணர்வுற்ற பிரீங்கி. நடு - மார்பினிடமாக. அகழ்தல் – துளைத்தல்.

9 வாணுதல் – விளக்கமான நெற்றி. உளைத்து – வருந்தி. உதிரம்ஆதி – இரத்தம் முதலான; சிவக்கூறு எலும்பும், சத்திகூறு இரத்தமாமிசமும் ஆம்

10 அவை - மாமிசக் கூற்றினைத் தவத்தால் உதறினார். தாள் – உடல்பதறிய சமயம், ஒரு காலையுதவினர் பரமன்.

11 ஆ – வியப்பு. அதும் – அத்தன்மையையும்.

12 என்னில் – தனக்கு வேறல்லாத உமைக்கு மனம் உவப்பதற்காக, தன்னை நம்பிய வர்க்கு இந்த இன்னலை இறைவன் சகிக்கமாட்டான் என்றால்.

13 முன் இடத்து – முன்பக்கத்தில். கும்பி – வயிறு.

14 தீமகவாம் முனிபால் - மூர்க்ககுணமுடைய பிள்ளையான பிரீங்கியிடம்.

கண்ணும் என்பினங் கட்டும் நரம்பதும்
எண்ணும் சத்தி யிடப்பொரு ளாம்,அலால்
விண்ணும் நாணும் வெறுவெளி யாம்சிவம்
நண்ணு ருவென நான்மறை கூறுமே. 15

அங்கண் ஞாலத் தவர்களும் பல்வயின்
பொங்கம் ஆரப் பொறிக்கும் புகழ்முனி
கங்க ணக்கட் செவிச்சிவன் காதலால்
துங்கம் எய்தித் துலங்கினன் நீடுநாள். 16

கொச்சகக்கலிப்பா.

பிங்கலக்குன் றுயசிலைப் பெருமானைப் பெரிதேத்திச்
சிங்கமிவர்ந் தவிர்சிவையைத் தினம்இகழ்பி ரீங்கிமுனி
செங்கனகத் தனிமன்றில் திருநடனம் செயச்சோம்பாப்
பங்கயத்தா ளினிற்கலக்கும் பரகதியின் விருப்புற்றான். 17

அவ்வாஞ்சை அதிகரித்திட்(டு) அரனிடத்தில் அதுகேட்டான்,
எவ்வா(று)எங் கெவர்சொலினும் இசைந்தபொதுப் பொருளானான்
மெய்வாழ்வாம் அதுதருதும் விரையேல்என்(று) உரைத்திட்டான்
இவ்வாறு நிகழ்காலத்(து) இயன்றஇயல் இசைக்கின்றாம். 18

அந்திமதிச் சடைப்பெருமான் அடித்தொழும்பு மறவாத
நந்தி,அவன் பதம்போற்றும் நாகரிகத் திருமூலன்,
சிந்தியா அவற்பரவும் சித்தன்அடற் காலாங்கி,
புந்தியால் அவற்றெழும்சீர்ப் போகமுனி, அவன்சீடர். 19

கருவூரான், கொங்கணன்,என் கனயோகப் பெருஞ்சித்தர்,
இருவரவர் தங்களுக்குள் இளையவனும் கொங்கணன்தான்
மருவாமென் மலர்க்கூந்தல் வாலைபதந் தொழுதுய்ந்தோன்
அருளால்மிக் குயர்வுற்றான் அவன்பெருமை அளப்பிலவே. 20

சிவன்முதலாம் ஐவர்களும் சித்தரினத் தினர்தாமே
அவள்மலர்த்தாள் நனிபோற்றி அடிநாள்உய்ந் தாரெனத்தே(று)
உவகையுளான், பிரீங்கிமுனி உறுதிபலர் சொலக்கேட்டுத்
தவளநெடும் கயிலாயச் சாரலிற்சென்(று) அவற்கண்டான். 21

---

15 சத்தியின் அருளின்றி, சிவத்தைக்காண முடியாது. அதுவெளி - உருவமாவது சத்தியினால், "சிவமெனும் பொருளும் - - - மறை இசைக்கும்" சௌந்தரியலகிரி.

17 பிங்கலக்குன்று - பொன்மலை (மேரு) கனகத்தனிமன்று - சிதம்பரசபை; சோம்பா - சலியாத.

18 அது - முத்திப்பேறு. 19 நந்தி - நந்திதேவர்-இவரே முதற்குருஆவர்.

20 வாலை - உமையவள்.

21 ஐவர் - பிரமன், மால், உருத்திரன், மயேசன், சதாசிவன் என்ற ஐந்தொழில் தலைவர்கள்; உய்ந்தார் - ஐந்தொழில்புரியும் ஆற்றல் பெற்றார்; உறுதி - அம்பிகையை வெறுத்து, சிவனையே போற்றும் நெறி.

கண்டுடல்தோன் றியதாய காலத்தாற் பழையன்எனத்
தொண்டுடையார் முறைப்படியே தொழு(து)யாவர் பரம்என்றான்
மண்டுசடைச் சிவன்எனலும், மலர்க்கூந்தற் சிவைஎன்றான்
விண்டுமுத லினர்தாமும் வியப்புறவா திழைத்தாரே. 22

பார்ப்பதியோர் பசுவெனலும், பரமன்ஒரு பத்தன்என்றான்,
சீர்ப்பரையைச் சடம்எனலும், சிவன்தனைச்சூ னியம்என்றான்,
பேர்ப்பரிய தவம்சொலலும் பிரமைகொண்டு தொழல்சொன்னான்
ஆர்ப்பரித்துச் செயும்வாதத்(து) அளவுரைத்தற்[கு] அறியேனே. 23

வாதபலம் பலமன்றி மதபலம்இன்[று] எனும்மாற்றம்
போதவிளங் கிய(து)உணர்ந்த புலவோரும், முனிவோரும்
ஆதரத்தோ[டு] இருவரையும் அழைத்தேகிக் கயிலைமலை
மீதமரும் இருவரெதிர் விடுத்தியன்ற விதம்சொன்னார் 24

சிவனும்உமை யவள்தானும் செப்பரிய வாறுமகிழ்ந்[து]
இவர்புகலல் நிசமென்றே இசைத்திட்டார், உடன்வந்தார்
கவலுமிவர் வாதொழியக் கருணைசெய்ம்மின் எனத்தாழ்ந்தார்
தவர்பதியாம் குறுமுனிவன் தான்ஒழிக்கை கடன்என்றார். 25

அம்மையும்அப் பனும்சொலல்கேட்(டு) ஆங்குற்றார் அனைவோரும்
செம்மைவளம் பொலிபொதியச் சிலம்பினது சிரத்தேகி
மும்மைவினைப் பிணிதீர்ந்த முனிக்கோனைத் தொழுதிறைஞ்சித்
தம்மையனுப் பியவாறு சாற்றிடலும், தமிழ்க்கோமான். 26

வாதித்தார் இருவரன்றி மற்றையரும் கேட்டுணரப்
பேதித்தார் முத்திமட்டும் பெறலரிதாம், ஒன்றென்னச்
சாதித்தார்க்[கு] எளிதிலெய்தும், சத்தியம்சத் தியமென்னப்
போதித்தான், துணைவந்தார் பொருக்கெனத்தம் பதிபுக்கார். 27

கொங்கணனைக் குறுமுனிவன் கூவி,நின்னுட் குறிப்(பு)என்என்றான்
சங்கரனும் நீயும்இரு தடங்கிரிமீ துறுமளவும்
அங்கமொடு வாழ்ந்தருட்சித் தாடல்என்றான் அக்கணமே
புங்கமிகும் நீறளித்துப் போகென,நல் விடைஈந்து. 28

முக்கால்கொள் முனியையும்அம் முறைப்படியே வினவுதலும்
எக்காலும் பிரியாவீட்[டு] இரண்டறவாழ்ந் திடல்என்றான்
மைக்காலன் தனையட்டார் மனைவிமனம் களிகூரும்
அக்காலம் வருமளவு அமையா[து],என் றறைந்திட்டான். 29

22 பரம் – முதற்பொருள் யார் என்றார் கொங்கணர்

23 பசு – உயிர்; சடம் – அறிவற்றபொருள்; சூனியம் – அருவமானது; தவம் – தவம் செய்து உமையவள் இறைவனை மணந்த விவரம்; பிரமை – மயக்கம்

25 கவலும் இவர் – ஒன்றை உயர்த்தி மற்றொன்றை இழித்துப்பேசி வருந்தும் இரு முனிவர்கள். 26 பேதித்தார் – சத்தி சிவம் வேறு என்பவர். சாதித்தார் – இரண்டும் ஒன்றே என்ற நிரமுடையவர்.

நீடுநாள் அவட்பகைத்து நிந்தித்த பாவமுற்றும்
வீடுமா[று] உபாயமொன்று விளம்புகெனப் பணிந்திடலும்
நாடுவார் மனமேபோல் நலந்தீதென் றிரண்டினிலும்
ஆடுவாற் பிரித்தானுக்[கு] அலைக்கடல்உண் டோன்நுவல்வான். 30

தீங்குதவிர் பம்பைஎனும் திருநதியின் வடமேற்கில்
ஓங்குபுகழ்த் தனிஆமாத் தூருள(து) அவ் வூர்ச்சிவன்தன்
பாங்குடையாள் எதிர்க்கோயில் படைத்தருட்கூத்(து) இயற்றுகின்றாள்
ஆங்குபெரும் சத்தியக்கல் லாம்அதொன்றும் அமைந்துளதால். 31

அங்குபோய்த் தவம்செய்தி! அவளுளத்தின் அருளார்வம்
பொங்குநாள் வருமளவும், பூருவவா சனைபலத்தாற்
கங்குல்நேர் களத்தானைக் கலந்திருப்பாள் தனைப்பிரித்துப்
பங்குபே சிடல்!என்றான், பணிந்தெழுந்து விடைகொண்டு. 32

பகர்வயிற்சென் றனைவோரும் பார்த்திகழும் உருநீத்து
நிகரில்வன்னி மரமாகி நின்றுதவம் செய்கின்றான்,
இகபரத்துள் ளார்பலரும் இந்நாளும் காண்கின்றார்
சுகபரமா னந்தமுத்தி தோய்தரும்நாள் அறியேனே. 33

இம்முனிவ னொடுநெடுநாள் எதிர்வாதிட் டான்தன்னை
வெம்முனைச்சூ லம்பிடித்த விறல்வடுகன் மொழிவழியே
பம்முறும்உத் திரநாளோர் பங்குனித்திங் களிற்பகற்போ[து]
இம்முகக்கண் ணாற்பார்த்தும் இனியபயன் எய்திலனே. 34

ஆதலின்எப் பேறெவர்தாம் அடைந்தாலும் ஆமாதை
நாதரருட் செயலூட்டும் நலத்தளவே கொளற்பாற்றும்,
பேதகுணத் தாற்பலவாப் பிதற்றுவது முறையன்றன்[று]
ஏதமற்ற வீட்டுயர்ச்சி இதனால்நன் கிலங்குறுமே. 35

முற்றான்றும் இருகாலின் மொய்ம்பழிகால், முக்கணனால்
மற்றோர்கால் பெற்றானும் மரமான வகைசொன்னாம்
கற்றோர்சூழ் மதங்கனெனும் கடவுள்முனி வனும்,அவன்சொல்
பெற்றோர்ஏழ் வரும்சபரன் பெண்ணும்உய்ந்த பீடுரைப்பாம். 36

பிரிங்கிமுனிவர் தவம் செய்தது முற்றிற்று.

ஆகக் கவி 457.

---

30 இரண்டினிலும் ஆடுவான் – உயிர்கட்கு நலமும் தீமையும் உதவும் சிவபிரான். சத்தியக்கல் – திருவட்டப்பாறை.

33 பகர்வயின் – அகத்தியர் கூறிய திருவாமாத்தூரிடத்தில்; இகழும் உரு – எலும்பும் தோலுமாயுள்ள வடிவம்.

34 எதிர்வாது இட்டான் - கொங்கணர். வடுகன் – வயிரவர்.

35 ஊட்டும் நலத்தளவு – இறைவன் ஆணைப்படி தரும் அளவாக.

36 மொய்ம்பு அழிகால் – வலிமை குறைந்த சமயம்.

# மதங்கமுனி முதலானோர் வழிபட்டது.

**கலிவிருத்தம்.**

வாலியநி றத்தொடு மலர்ப்பிரமன் நாவில்
வேலினை நிகர்த்தகண் வியன்கொடுறை வாணி
தாலியறி யத்தரு தமிழ்க்கவி சொல்கின்றேன்,
மேலிகலன் மின்!புலமை மிக்கபெரி யோரே 1

மன்னுதவ மும்புகழும் மாட்சிமையும் அன்பும்
துன்னுறு மதங்கமுனி தோன்றும்இடம் யாதோ?
தன்னுரிமை மிக்கதொர் தலம்சரத மாதை
என்னுமெழில் வன்னிவன மேஎன இருந்தான். 2

(இதுமுதல் ஆறு பாடல்களில் மதங்கன் என்ற பெயர்க் காரணம்)

வேதமொரு நாலின்முன் விதித்தமதம் ஆறும்
ஆதர முறும்படிதன் அங்கமென ஒப்பி
வாதமுழு(து) ஓவலின் மதங்கனெனும் ஓர்பேர்
மாதவர் எலோர்களும் மகிழ்ந்துரை செய்தாரே. 3

சாமசுர மாதிய தனுதுதனி நாவால்
நாமகளும் மெச்சிட நவின்றிடுமொர் பண்பால்
தாமதகு ணந்தவிர் மதங்கனெனும் நாமம்
கோமகரை நேர்புலவர் கூறினர்கள் மாதோ. 4

ஈனகுலர் மாதவம் இழைத்திடினும் மேலாம்
மானமுனி வோரொடு மதிக்குமொரு பெட்பால்
கானமறை யிற்சொல்வழி கன்மமுய லுற்றிட்(டு)
ஊனசைகொள் வார்களும் மதங்கன்எனல் உண்டே. 5

ஊனையும் உணச்சிறிதும் ஒல்கலில் குணத்திற்
பூனையனை யார்கள்மிசை பொங்குறு சினத்தால்
வானையிட மாக்கொளு மயேசன்இ வரும்பேர்
ஆனைபுரை வான்அருள் மதங்கன்என லாமே. 6

---

1 வாலிய – வெண்மையான, தாலிஅறிய – திருமங்கலம் உணர, என்றவாற்றல் இதன் உண்மை கூறிறுராயிற்று. 2. வன்னிவனம் - திருஆமாத்தூர்.

3 வேதத்தில் விதித்த மதங்கன் ஆறினையும் தன் அங்கமாகக்கொண்டு, மதபேதமற்ற நிலையில் விளங்கியதால், மத-அங்கன் - மதங்கன்.1

4 சாமசுரம்-சம(ஒத்த)இசை; ஆதிய-ஏற்ற இறக்க ஓசை; இசைவல்லவராகியிருந்த காரணம்பற்றி வந்தபெயர். மதங்கர்-பாணர்; இசைப்பயிற்சியினர். 2

5 இழிகுலத்தினராகியோராயினும் தவம்புரிவாரானல் உயர்ந்துகாணப்படுதல்போல வேதவிதிப்படி கொலைவேள்வி செய்பவரும் மதங்கரென்ற பொருள் பெறுவதுண்டு.
கன்மம் – கருமகாண்டவிதி. மதத்தையுடையவர் – மதங்கர் 3

6 பூனைபோன்று ஊனையுண்பவர்மீது சினப்பவராயிருந்த தன்மையால். ஆனைபோன்ற இவர் – மதங்கரெனப்பட்டார்-4 மாதங்கம் - யானை.

வித்தக மலிந்ததிரு மாதைநகர் மேவும்
அத்தவனை நன்மது அருதுதவு பூவில்
சுத்தவிசை வண்டினம் எனத்,துகளில் தூயோர்
மொய்த்தலின் மதங்கனென வேமொழிகு வாரே. 7

எப்பொனும் நிகர்ப்பரிய(து) என்றவட குன்றின்
ஐப்பொனில் விளங்குமுயர்(வு) ஆயிரம் அதன்மேல்
கைப்பொனில் வகுக்கநிகழ் காமர்முனி வோனை
அப்பொனுல கோர்களும் மதங்கனெனல் ஆறே. 8

நீடல்குறு கக்குறுகல் நீடிட, நினைத்துப்
பாடவலர் பாடிடல் கடுப்பமறை நூல்கள்
ஊடவிர் விதித்திரள் களைச்செயும் உரத்தோன்
மாடமலி மாதையின் மதங்கமுனி வோனே. 9

அம்முனிவன் அந்நகரில் ஆண்டபெரு மானைச்
செம்முளரி யாதிமல ராற்றினம் அருச்சித்(து)
ஐம்முகமும் நாடியருள் ஆழியிடை மூழ்கி,
எம்முறைக ளுந்தெரியும் ஈடொடு திகழ்ந்தான். 10

நன்னர்உக மாம்கிருத நாளில்ஒரு பாதிப்
பின்னர்உயர் சீர்கொடு பிறங்குமுனி வோனும்
அன்னவன தாளென அடைந்தருள் பொறுப்பான்
இன்னலில் விரத்தியினர் ஏழ்வரவண் வந்தார். 11

வந்தவர்கள் பக்குவம் மதித்தடிமை கொண்டு
மைந்தரினும் அன்புமலி யும்படி வளர்த்துச்
சிந்தனைசெய் துய்வகை தெரித்[து]அவர் களும்தன்
சந்தமரு வித்திகழ் தருந்தகைமை கண்டான். 12

அக்கிருதம் நீங்கிய(து) அடுத்தயுகம் வந்த(து)
இக்கினும் இனித்தமொழி ஏழையமர் பாகன்
சக்கினெதிர் வந்தசது மாமுகவன் ஊரில்
புக்கினி துறும்படி புகன்றனன் அவேலை. 13

---

7 தேனையுடைய பூக்களில் வண்டுகள் மொய்ப்பதுபோல, முனிவர்கள் சூழ்ந்திருந்த இயல்பால் மதங்கர், மது, தேன், அங்கர் – அன்பர்களையுடையவர் என்பது–5.

8 எல்லாப்பொன்னிலும் மேலான மேருவினிலும், உயர்ந்த அரிய நற்குணங்கள் பல, கைமேற்பெற்றிருந்த சிறப்புப்பற்றி வந்த பெயர் மதங்கர். மா - தங்கம். மாண்புற்றதங்கம் 6

9 விரிவைக்குறையவும், குறைவை விரியவும் பாடும் புலவர் – போல, வேதவிதியின் அமைப்பைமாற்றும் தவத்துடனிருந்தவர் மதங்கமுனிவர். ஆறே - ஏற்றமுறையே.

10 ஐம்முகம் – சிவனுக்கு ஐந்து முகங்கள் - ஈசானம், தற்புருஷம். அகோரம், வாமதேவம் – சத்தியோசாதம் என்பன.

11 கிருதநாள் – கிரேதாயுகம்.

12 தன்சந்தம் மருவி – தன்போன்ற அருட்சிறப்பு பெறும்படி.

13 சக்கின் எதிர் கண்முன்பாக. சதுமாமுகவன் ஊர் – பிரமன் ஊரான சத்தியலோகம்

அன்னமிவர் வானும்இவண் வந்தினி[து] அழைத்தான்
மன்னரும் வெருக்கொள்புகழ் வாய்ந்தவிர் மதங்கன்
தன்னடி வணங்கும்எழு தாபதர் களுக்கும்
சொன்னவை அலாதசில சொல்லியவண் உற்றான். 14

வல்லபுல வோரொர்கவி வாய்பகர்வ, அல்லார்
அல்லர்பகர் பாடல்கள் அநேகம்உற லேபோல்
சேல்அ(ம்) முனி செய்பணிகள் சிற்றுமுனி வோராம்
நல்லர்எழு வர்க்கும்அமை வாயஒவோர் நாளும். 15

விந்தமதை வென்றகர மேலவன் முதற்சொல்
அந்தமுனி வோரெழுவர், அன்னரிவர் ஏழ்வர்
சந்ததமும் மாதைநகர் தன்னில்வளர் ஈசன்
சொந்தரென வேபலபல் தொண்டுசெய் திருந்தார். 16

அத்தகைய நாளிலுல காளும்ஒரு மன்னன்
சத்தசுர நான்மறைகள் சாற்றுபல தேவும்
சுத்தபரம் என்னஉணர் தூயகுணம் எய்தி
முத்தர்சப ரப்பெயர் மொழிந்திட நிகழ்ந்தான். 17

அன்னவன் முதற்றலைவி அம்கமல மங்கை
என்னவருள் பெண்வய(து) இராறுவரை யாயும்
தன்னதர சைக்கொள்தனை யற்பெறுகி லாளால்
இன்னலெனும் மைக்கட லிடத்தினில் அமிழ்ந்தான். 18

அங்கொரு பிராமணன் அகோரசிவ னன்னோன்
வெங்கொலை மடங்கல்நிகர் வீரர்தொழு வேந்தின்
செங்கொடை விரும்புபு திகழ்ந்தவனை நோக்கி
இங்கொரு மகற்பெறுநல் ஏதுமொழி என்றான். 19

ஆன்மகிழும் மாதைநக ரத்திலமர் அண்ணல்
கான்மலர் நினைந்து,முது கங்கைவிழை பம்பைப்
பான்மதுர உண்டிபல ருக்குதவி, அங்கே
மேன்மகரொர் ஏழ்வருளர் அன்னவரை வேட்டு. 20

சொற்படி நடக்கினது தோன்றுமென ஓதிப்
பற்பல நலங்கொடு பறித்தனன்அ(ம்) மன்னன்,
பொற்பணம் நிறைத்தபொதி யாதிகொடு போகி
அற்பது மலிந்தவண(து) ஆற்றிஅவர் முற்போய். 21

---

14 தாபதர் – தவசிகள், சில சொல்லி - சில அருளுரைகூறி.

15 புலமையில் வல்லவர்கள் ஒரு கவியிற் சொல்வதை சிறுபுலவர், பல பாடலில் அப் பொருளைக் கூறுவதுபோல, பிரமனுலகம் சென்ற மதங்கமுனி, ஒருவரேசெய்த பணிகளை வந்த ஏழு முனிவர்களும் ஒவ்வொருநாளும் செய்தனர் என்பதாம்.

16 கர மேலவன் – அகத்தியர்; அன்னர்–அவர்களை ஒத்தவர்.

21 அற்பது மலிந்து – அன்பு மிகுதியுற்று. அற்பு - வலித்தல் விகாரம்.

சென்னிகொடு பற்பல்முறை தெண்டனது செய்திட்(டு)
உன்னிய பயன்பெறும் உபாயம்விழை வுற்ருன்
கன்னிகையை எங்கள்பணி கைக்கொள விடுத்தாற்
பன்னிரு மதிக்கிடை பலிக்கும்அது என்ருர். 22

அப்பனுடன் அன்னையும் அதற்கிசைய, அப்பெண்
செப்பரிய முற்றவ பலத்தவிடை சேர்ந்தே
தப்பரிய தொண்டுதலை யிற்கொடு தரித்தாள்
மெய்ப்பயன்அ(ம்) மன்னனும் விதித்தபடி பெற்ருன். 23

பெற்றபய னிற்பிறை வருங்கொலென அஞ்சிப்
பற்றணுவும் இன்றிய பதத்தரசன் உற்ருன்
குற்றமில் மனைக்குமது கூடும்வகை செய்தான்
நற்றவ மகட்சபரி என்றவர் நவின்ருர். 24

ஆன்மதலை யேஉயர் வெனக்கொளுமொ ராசை
வீண்மகர் தமக்குமுறல் மேதினி வழக்கால்
தோண்மகி தலச்சுமை கொளும்சுதனை மன்கொள்
கோண்மறு வெனக்கடிது கூறிடல் தகாதே. 25

மன்னனொரு வன்கைமண மாலிகை தரித்துக்
கன்னன்மத வேளருள் களிப்படைதல் தன்னிற்
பொன்னனைய மாதவர் புகன்றபணி செய்தல்
சின்னதுகொ லோவுணர்வர் சீரியவர் தாமே. 26

எண்சீர் விருத்தம்.

அன்ருெருத்தி எழுவருக்கும் பணிசெய் துற்ருள்
ஆனுலும் புத்திரிபோன்(று) அவிர்ந்தாள் அன்றிக்
குன்ருெடொக்கும் முலைப்போராங்(கு) ஒருவர் மீதும்
குறித்தில்லாள், அவர்களும்உட் கொள்ள வில்லை
தன்ருெல்குடித் தலைமுறைஆ யிரமட் டாயும்
தவவலியாற் பருவநலம் தவிரக் காணுள்
வன்ருெழிலாம் அத்தவம்செய் வரிதே யாகும்
மலரவன்கைப் பொறித்துணையால் வாய்த்த தம்மா. 27

தேவரும்,மற் றுள்ளபல முனிவர் தாமும்,
சித்தரும்,கந் தருவர்முதற் செப்ப வாழும்
யாவரும்அப் பெண்ணுருவம் காணுந் தோறும்
இகல்மதன்கைம் மலர்ப்போரால் இளைத்தார் அந்தோ!

---

24 அது கூடும் வகை – அரசனுக்கு ஆண்மகப்பேறு உண்டாகும்படி.

25 மன்கொள் கோள்மறு என – தனக்குப்பின் அரசை ஏற்கும்படி அரசன்கொண்ட அவா குற்றமானது என்பதாக.

27 வன்முறையான தவம்புரிவதற்கு, நல்ல விதி தேவை என்பதாம்.

மூவர்மனை வியரனையா ளெனவுள் அன்பால்
　　முன்னியஞ்சு வார்சிலரே, முயங்கி வாழ்தற்
காவருவார் ஒருவருமில் லாமல் அந்நாள்
　　அயன்விதித்த ஞாயமென்னே அறிகி லேனே. 28

என்னிடத்தும் அங்ஙனமோர் கதையுண் டாயிற்(று)
　　எழுவர்களில் ஒருவன்என்றால் யானும் சோரேன்,
பன்னியிற்கொண் டின்பதுன்பம் இரண்டும் துய்த்துப்
　　பழிப்பவரோ டுவப்பவராப் பலரைப் பார்த்தேன்,
நன்னிமித்தம் காட்டியதே வதுமுன் னின்றால்
　　நானிலத்தோர்க் கந்தவுண்மை நன்றாத் தோன்றும்
வன்னிவனத் துறைசபரி புனற்காப் போம்அவ்
　　வழியிலெழிற் கலைபுணரோர் மான்கண் டாளே. 29

கண்டவுடன் தவத்தர்பெரும் பகையாம் வில்வேள்
　　கணையிரண்டொன் றவளுரத்திற் கதுவ எய்தான்
புண்டரிகன் விதித்தவிதிக் கூறும் வந்து
　　பொருந்தியதாற் சிலநேரம் போக்கி நோக்கி
எண்டருநெஞ் சினளாய்ப்பின் சலங்கொண் டாங்குற்
　　றிடுமுன்அந்தத் தவமுனிவர் எழுவர் தாமும்
தண்டவலி யாற்றீர்த்தம் சமைத்துக் காலம்
　　தவறுமற் சிவபூசை தனைச்செய் தாரே. 30

கொண்டுவந்த புனலுதவா மையின்மிக் கஞ்சிக்
　　குலைகுலைந்(து) ரேணுகைபோற் குமரி நின்றாள்,
மண்டுசடைத் தவரவட்காங்[கு] உற்ற வாற்றை
　　மதித்தறிந்து வதனமட்டும் மானாச் செய்தார்
கண்டுவந்த கண்கள்முன்னம் உள்ள வாறே
　　கவின்றன,கோ டையிற்றளரும் கலாபி யேபோல்
தொண்டுசெய்த பயனிதுவோ என்றுள் எண்ணித்
　　தொழுதிரந்தாள் கருணைவந்து சொல்கின் றாரே. 31

உன்னாற்செய் பணிஎமக்(கு)இவ் வளவே, யாம்இவ்
　　உடலோ(டு)இனி யாங்களும்இவ் வுலகில் வாழேம்,
முன்னாக்கள் பூசைசெய்யப் பெற்றோ னாம்இம்
　　மூர்த்திநின்பூ சையும்விழைந்தான், முகுந்த நாதன்
சின்னாட்சென் றிரவிகுலத் தரச னாகித்
　　திகழ்தருவான் அவனுருவச் சேவை பெற்றிவ்
இன்னாத்தீர்ந் துடன்கதியும் பெறுவாய் என்றிட்[டு]
　　ஏழ்வரும்அவ் இலிங்கமதா டேகி னாரே. 32

---

28 மூவர் மனைவியர் – கலைமகள், திருமகள், உமையவள்.

29 கலை - மான். 30 கதுவ – அழுந்தும்படி. புண்டரிகன் – பிரமன்.

31 வதனமட்டும்-சபரியின் மனித முகம், மான்முகமாகச் செய்தனர். கண்முன்போல வேயிருந்தது என்ற நயம் காண்க.

32 முன்னாக்கள் – முன்-ஆக்கள் – முன்பு பசுக்கள் என்பதாம்.

அம்மகள்அம் மொழிப்படிஅப் பணிசெய் தங்கே
அவன்வரவு நாடியுற்ருள், அடிமை யாஞேர்
தம்மதுடல் உடன்உயிரும் தன்னிற் சேர்க்கும்
தனியிலிங்க மூர்த்திபுகழ் சாற்றற் பாற்ருே?
நம்மனைய மனிதரும்,தே வரும்,மற் ருேரும்,
நாற்காற்செந் தாதியவும் நாடி நாளும்
செம்மலராற் பூசைசெய்த கதைபல் கோடி
சேடர்பலர் பாடிடினும் தீரா வாறே. 33

அக்கமணி வடம்புனைசீர் மதங்கன் தானும்,
அவன்சீடர் எழுவர்களும், அடைந்த வாறும்
திக்கறியச் சபரிஎனும் பெயர்பெற் ருேங்கும்
தெய்வமன்னுள் தன்சரிதம் சிறிது நாடி
இக்கதையிற் சொற்றனமேல் அவள்தன் காதை
இராகவன்தன் சரித்திரத்தில் இலங்கும், இப்பால்
பொக்கமில்நான் மறைவகுத்தோன் எண்கை யாலும்
பூசித்த கதைசிறிது புகல்கின் றேனே. 34

மதங்கமுனி முதலாஞேர் வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 491.



## நான்முகன் வழிபட்டது.

கொச்சகக்கலிப்பா.

தன்போலும் பிரமர்பலர்த் தரும்உந்தித் திருமால்பால்
அன்போங்கத் தாதைஎன அடிபணிதல் நீத்தயன்றான்
வன்போடு பகைத்திகழ்ந்து வானமும்பூ மியும்நடுங்க
முன்போர்செய்(து) இழிந்தகதை மொழிதரும்நூல் பலவுளவே. 1

அக்கதையை வியாசன்முத லாயமுனி வரர்தாமும்,
திக்கறிய என்பினையோர் சேயிழையாக் கினன்முதலாம்
தக்கவரும், எல்லப்பன் தனைமுதற்சொல் புலவோரும்
மிக்கறைந்து ளார்அதனால் விரித்திதில்யான் விளம்பேனே. 2

அப்பிழைநான் முகன்தலைமீ(து) அமைதலினால் அவற்சூழும்
மெய்ப்பிரம முனிவோரும் வெறுத்திகலும் துணிவுற்றார்,
திப்பியசொற் கலைமகளும் சிந்தைமகிழ் வதுதீர்ந்தாள்
இப்பிரமா தந்தவிர்தற்(கு) ஏதுவென்என் றிடைந்தப்பால். 3

தைத்தவாய் வழியேமுள் தான்எடுக்கை நலமென்னும்
வித்தகச்சொற் பயன்தேறி விண்டுவுறை வைகுந்தத்(து)
உத்தமப்பண் புடனேகி, உந்தியில்நான் முகன்நகைப்பப்
பத்தர்களில் ஒருவனெனப் பணிந்தெழுந்து துதிசெய்தான். 4

அன்னவனைக் காண்டலுமிக் கவிகூர்ந்(து)அச் சுதமூர்த்தி
நின்னகத்தின் குறிப்புணர்ந்தாம், நினைப்போல்முன் ஒருபிரமன்
இன்னபிழை செய்திழிவுற்(று) இமயமகள் மணவாளன்
தன்னருளால் உய்ந்தான்அத் தவமேநீ முயல்என்றான். 5

அதுவினவித் தன்னறிவால் ஆய்ந்தாய்ந்து சிவதலத்துள்
எதுவுமெழில் ஆமாத்தூர்க்(கு) இணையாகா தெனத்தெறிப்
பதுமமலர்க் கண்ணான்பாற் பகர்ந்(து)அவன்சம் மதத்தேகிச்
சதுரயுகம் ஒன்றாங்கு தண்மலராற் பூசித்தான். 6

---

1 தாதை – தந்தை, நீத்து – வணங்குவதைவிட்டு. வணங்காத பிழையுடன், பகைத்தலும், இகழ்தலும் செய்தான் பிரமன்.

2 எலும்பு பெண்ணாகச் செய்தவர் திருஞானசம்பந்தர். எல்லப்பன்-திருவருணைத்தல புராணம் பாடியவர்.

3 திப்பிய சொல் – தெளிவுடைய மொழி. பிரமாதம் – தவறு; இடைந்து–வருந்தி

4 உந்தியில் நான்முகன் – திருமால் நாபியில்உள்ள ஒரு பிரமன். திருமாலைக் காணச் சென்றவன் ஒரு பிரமன். 5வது கவியில் மாயன் கூறுவது ஒரு பிரமன். ஆகவே பிரமர் பலர் கற்பந்தோறும் தோற்றுவதும், மறைவதும் உண்டென்பதறிக. “ நூறுகோடி பிரமர்கள் ” என்பது திருமந்திரம். 6 சதுரயுகம் – கிரேதா, திரேதா, துவாபர, கலி என்ற நான்கு யுகம்.

அவன்றனைப்பூ சித்துறுநாள் அகண்டதுபரத் வம்வாய்ந்த
சிவன்தன்வலக் கையுடுக்கைச் சிற்றொலியாற் சிருட்டிஎனும்
நவம்தருமுற் றொழில்நடத்தி ஞாலமழி யாதமைத்திட்(டு)
எவன்றொழிலும் இவன்தொழிலே எனுமறைச்சொற் புரந்தானே. 7

அத்தனைநாள் சென்றதற்பின் ஆமாத்தூர் ஆண்டமரும்
நித்தனுமை யவளோடும், நெடியவேற் குகனோடும்
சுத்தவெள்ளிக் கிரியேபோல் துலங்குமால் விடையேறிப்
புத்தமுதுண் பார்முதலோர் புடைசூழ்த் திகழ்ந்தானே. 8

உற்றானை நான்முகவன் உருத்திரமந் திரந்தன்னால்
சொற்றாது தொறுந்தோயும் சுதியொடுதோத் திரம்செய்து
நற்றாளில் வீழ்ந்தெழுந்து நலங்குலைந்து நலிவேனை
முற்றானந் தனில்முன்னை முறைப்படிவைத் தருள்என்றான். 9

என்றலும்அப் பிரமாவை இளநகையோ டுறநோக்கிக்
கன்றலின்மேம் பாடுடைப்பல் கணத்தினரும் களிகூர
மன்றகத்தின் முயல்கன்மேல் மாருத நடம்புரிந்தும்
குன்றவிற்கொண்(டு) அமர்க்கேகும் குழகன்எடுத் துரைசெய்வான். 10

எம்மைஇகழ் தலிற்கொடுமை ஏதிடத்தாள் தனையேசல்,
கொம்மைமுலை இவளைஇகழ் கொடுமையினும் கொடிதாம்,எந்
தம்மைநனி பூசித்துச் சக்கரம்பெற் றெங்நாளும்
மும்மையுல கமுங்காக்கும் முகுந்தனைஎள் ளிடல்கண்டாய். 11

அனையுடன்அப் பனுமாகிநிற்(கு) அமைதருமாண் புறும்அன்னான்
தனைமதித்துப் போற்றுதியேல் சதுர்வேதப் பொதுக்குருவாம்
உனைஇகழ்தல் அதிற்கொடிதென் றுணர்ந்தவர்ஓ திடப்பணிப்பாம்
தினைஅளவும் ஐயமுறேல் செல்லுதிநின் பதிக்கென்றான். 12

சொல்லிஅரன் மறைந்திடலும் தூயநிற மனையாளும்,
நல்லிதய முனிவோரும் நாடிவந்து நனிபோற்றிப்
புல்லியரேம் செய்தபிழை பொறுத்தி!எனப் பணிந்திட்டார்
அல்லிமலர்க் கமலத்தோன் அதிசயத்தாங் குடன்போனான். 13

போதலுமிந் நாள்வரையான் புரிதொழில்யார் பொறுத்தார்என்(று)
ஆதரத்தோ டவர்க்கேட்டான் அறிகிலேம் எனச்சொன்னார்
சீதமலர்ப் பொழில்மாதைச் சித்தரா கியஅழக
நாதரருட் செயலென்ன நன்குணர்ந்து நாணுற்றான். 14

---

8 மால் விடை - திருமால் இடபமாயிருப்பதென்ற பொருள். புத்தமுது-புதியஅமுது உருத்திரம் - சிவனைக் குறித்த வேதமந்திரம். சொற்றாது - சொல்லின் மூலம்.

10 இளநகை - குறுஞ்சிரிப்பு. 11. மும்மை உலகு - மண், விண், பாதலம் என்பன.

12 அன்னான் - திருமால். பொதுக்குரு - அறுவகைச் சமயத்துக்கும் சிறப்பு வேதத்திற் கூறியவர் பிரமதேவன்.

மூவர்களில் ஒருதேவாம் முண்டகத்தோன் தனைமேலாப்
பாவனைசெய் ததற்(கு)இந்தப் பரிசுகே டுற்றானேல்
**யாவரா யினும்அளப்பில் இறுமாப்புற் றவப்பாரேல்**
**சீவனோ டிறந்தார்நேர் சிறுமைஎய்தித் திகைப்பாரே.** 15

எத்தகைத்தே வரும்போற்றும் ஈடிருந்தும் இடப்பாகத்(து)
அத்தமுறும் மனையாட்கும் அடல்விடையு மாம்அரிக்கும்
இத்தளரவெய்(து) அயற்கும்உயர்(வு) இசைத்ததன்றி, இனிதேத்தும்
பத்தருக்கும் பணிசெய்தன்றோ பரமனுயர் வடைந்தானே. 16

**தாழ்வாரைத் தாழ்வாரே தகவினரிற் றலையாகி**
**வாழ்வார்என் றுணர்சீலம் மலரவற்கும் அரிதானால்,**
**சூழ்வாய்மை உணராராய்த் தொட்டதும்மே லென்றிகலும்**
**பாழ்வாதக் குறும்புடையார் பலரழுங்கல் வியனன்றே.** 17

உண்டலையும் பகுத்தொருவர்க்(கு) உதவாத செல்வரையும்,
வெண்டளையை வண்ணத்தின் மேலெனும்புன் கவிஞரையும்,
அண்டர்பிரான் அடியவர்க்(கு)ஆ ளாகப்பொய்த் தவர்களையும்
கண்டகண்ணை அக்கணமே கழுவுவதும் கடனாமே. 18

ஆரியநூற் பொருள்தேறும் அந்தணர்தம் அரசாய
சீரியநான் முகன்செய்த சிவபூசைத் திறஞ்சொன்னேன்,
மாரிவளம் குன்றாத மாதைநகர்க் கோயிலிற்போய்ச்
சூரியர்பன் னிருவர்களும் தொழுதகதை சொல்வேனே. 19

நான்முகன் வழிபட்டது முற்றிற்று.

**ஆகக் கவி 510.**



15 பாவனை – எண்ணம். மூவரில் ஒருவனான பிரமன், தன்னை மேலாக எண்ணிக் கொண்டது தவறுஆகும். சீவனோடு இறந்தார் – உயிருடன் மரணமுற்றவர்.

16 அத்தம் உறும் - சிவனுடலில் ஒரு பாதியாயுள்ள; அர்த்தம் – பாதி.

17 தாழ்வாரை - இறைவனை வணங்கும் அடியவர்களை, தாழ்வார் – வணங்கும் தொண்டர்கள். தகவினரில்–அறிவுடைய பெரியோர்களில். தொட்டதும் – தவம், புலமை ஆதியன சிறிதுவந்தவுடனேயே, தான் உயர்ந்துவிட்டதாக எண்ணி, இகலும் – தம்போன்றவரோடு போரிடுன்ற போலிகள்.

# பன்னிரெண்டு சூரியர்களும் வழிபட்டது.

ஆறுசீர் விருத்தம்.

தினமெலாம் தானே செய்து திங்களா தியர்க்கு நல்கும்
இனனெனும் இனத்தி னோர்பன் னிருவராம் அவர்தம் பேரும்
கனவடி வமும்வெவ் வேறாக் கழறுவார் அவையும் பல்வா(று)
எனலின்ஓர் விதமிந் நூலில் இயம்பிடற் கிசைந்தி லேனே. 1

முண்டக மலர்த்தும் பண்பும், மூவிரு சமயத் தோரும்
கண்டபோ திறைஞ்சும் மாண்பும், கதிரொரா யிரங்கொள் பாங்கும்,
விண்டலத் தொருகால் தேர்ஏழ் வியன்பரி ஈர்க்கத் தான்மேற்
கொண்டவிர் சீரும் அந்தக் குழுவினர் பொதுவாம் அன்றே 2

உன்னிடற் கருஞ்சீர் எல்லோன் ஒருவன்என் றாலும் அன்றிப்
பன்னிரு பேர்என் றாலும் பகரும்அக் கோடி பேர்கள்
என்னினும் அளவில் கோடி இனரென இயம்பி னாலும்
வன்னிமால் வனத்தின் அம்மான் வலக்கண்அங் கிசத்தோர் தாமே 3

எங்கிருப் பவரும் வேண்டும் இரவியின் இடத்தில் ஏழ்நா(வு)
அங்கிவாழ் வதற்குச் சாட்சி அதன்வெயிற் சூடே, இந்து
தங்கிடற் சான்று முற்றும் தமம்படும் இரவே என்றால்
சங்கியல் காதான் மூன்று தடங்கணும் அதுவே யன்றோ. 4

பிரமனும், நெடிய மாலும், பிறங்குமூ விலைவே லானும்
கரவறு காலை மாலை உச்சியிற் கதுவும் பெட்பால்
பரமனும் தகுதி வாய்ந்த பரிதியைப் பணியாப் பண்பு, ஏழ்
சுரமொடு தொனிக்கும் வேதத் தொடர்பினர்க் கின்றாம் அம்மா. 5

இவனிவள் இதுவென் றோதி இகல்பல சமயத் தோர்க்கும்,
எவரெஙன் கருதி னாலும் இலங்கும்ஓர் பரமென் பார்க்கும்,
அவரவர்க்(கு) அவராத் தோற்றி அருள்சம ரசத்தி னோர்க்கும்
தவலரும் கரும சாட்சி தபனனே யாவன் அன்றே. 6

---

1 இனன் - சூரியன். தினமெலாம் தானே செய்து - தன்தோற்றத்தால் நாட்களை வருவிப்பது சூரியன். மாதம் ஒன்றுக்கு ஒரு சூரியனாக பன்னிருவர் என்பதாம்.

2 முண்டகம் - தாமரை. ஏழ்வியன்பரி - சூரியன் தேரில் உள்ள குதிரைகள் ஏழு. அவை பச்சை நிறத்தின. ஆகவே வியன்பரி என்றார்.

3 எல்லோன் - சூரியன் எல்பகல். வன்னிவனம் - திருவாமாத்தூர். வலக்கண் - இறைவனின் வலக்கண் சூரியன்.

4 நாவு - நாக்கு. அக்கினிக்கு ஏழுநாக்கு உண்டு. சூரியனிடம் அக்கினியிருப்பதற்குச் சூடும். சந்திரனிருப்பதற்கு இருளும் சான்று. இவை மூன்றும் கண்கள் பரமனுக்கு.

5 காலையில் பிரமன், உச்சியில் திருமால், மாலையில் சிவன்.

6 இவன் இவள்இது - ஆண், பெண், அலி. "அவன்அவள் அது" என்பது சிவஞான போதம்; கடவுளை ஆண் அல்லது பெண், இரண்டுமற்ற பொது என்று கூறும் சமய நூல்கள்.

ஒருபொருள் பரிதி என்றல் உயர்த்தனா ரிகள்சித் தாந்தம்
பெருகுபல் கோடி என்றல் பிரகிரு தியின்பே ராக்கம்.
மருவுபன் னிரண்டென் றேதல் மாதவம் பத்தி என்னும்
இருவகை நிலையி னோர்க்கும் இசைந்தவா(று) எனச்சொல் வாரே. 7

ஆதலின் தொன்னூல் சொல்லும் அருக்கர்பன் னிருவர் தாமும்
ஏதம்ஏ தேதோ தம்முள் இருப்பன தீர்வ தெண்ணிச்
சீதநீர்ப் பெருக்கார் பம்பை திகழ்தரு திருவா மாத்தூர்
நாதனைக் கண்டு பூசை நனிசெயும் கருத்த ரானார். 8

எல்லுயி ராகித் தோற்றும் இரவியா வனசு ராறும்
ஒல்லும்வே தியரே போலும் உருவொ(டு)இவ் வுலகில் எய்திக்
கல்லுறழ் வடிவம் காட்டும் கருணைகூர் இலிங்க மொன்றால்
நல்லுபா சனைசெய் வாரேல் அதன்புகழ் நவிலற் பாற்றே. 9

மதிதொறும் உலகுய் வான்விண் வழிச்செலொன்(று) அல்லா
பதினொர்ஆ தித்தர் தாமும் பம்பைநீர்ப் படிந்து, முன்னாள் [மற்றைப்
முதிரறி வினர்க்கோர் தாய்நேர் முண்டகா தனன்சொற் றுள்ள
விதியொடா கமமும் நாடி விருப்பொடும் அருச்சித் தாரே. 10

சூரியன் ஒருவன் பாரில் தோய்ந்திடில் முழுதும் பாழாம்
காரியம் கருதி யன்றே பார்ப்பனக் கவசம் பூண்டார்
நாரிதன் நிமித்தம் அன்று குந்தல நாட்டோர் எல்லோன்
சீரிய மன்னன் போலத் திகழ்ந்தமை இதற்கோர் சான்றே. 11

அப்படி நெடுநாட் பூசித்(து) அயர்தல்கண்(டு) ஆமாத் தூரில்
முப்படி யினரும் போற்ற முளைத்துள இலிங்க மூர்த்தி
மெய்ப்படி வொடுவிண் வாய்போம் வெயிலன்முன் திகழ்ந்து நீஈண்(டு)
எப்படி வரங்கேட் டாலும் ஈதும்என் றியம்பி னானே. 12

இயம்பலும் வணங்கி ஏத்தி யாதுகா ரணம்யான் அங்குன்
சுயம்புமூர்த் தியின்பால் அன்பால் தொண்டுசெய் திடுங்காற் றேற்று[து]
அயம்பல ஈர்ப்பச் செல்கால் அவிர்ந்தனை எனலும் ஆர்க்கும்
பயன்படு காலம் ஈதே எனச்சொலிப் பரிவு கூர்ந்தான். 13

அன்னவன் எனக்கும் என்போன் றவர்க்கும்முன் அழிவேள் விக்கண்
உன்னதங் கிசமாம் வீரன் உதிர்த்தபல் முளைக்க வேண்டும்
என்னலும் அளித்தான், அப்போ(து) ஈண்டுமவ் வுருவோ டுற்ற
முன்னவன் தனைமற் றேரும் முறைப்படி வணங்கிக் கேட்பார். 14

---

8 அருக்கர் – சூரியர்கள்; 10 விண்வழிச்செல்ஒன்று – ஆகாயவழியே செல்வதான ஒரு சூரியனையன்றி, மற்றைய பதினொருவரும்.

11 காரியம் கருதி – தாம் வழிபட்டுப் பயன்பெற வேண்டி. கவசம் – போர்வை. நாரிதன் நிமித்தம் – குந்தி வழிபட்டதற்காக. எல்லோன் – சூரியன் அரசனாக வந்து இணங்கியது பாரதக் கதை. 14 அழிவேள்வி - தக்கன் செய்த யாகம். வீரன் – வீரபத்திரர்; மற்றேரும் – பதினொரு சூரியர்களும்.

எந்தமை வணங்கு வார்நோய் யாவையும் தீர வேண்டும்,
கந்தவா ரிசம்போன் றெம்மால் நெருஞ்சியும் களிக்க வேண்டும்,
திந்தர ணியைப்போற் பற்பல இலைகளும் செழிக்க வேண்டும்,
மைந்தன்வீட் டுறும்நாள் எல்லா மனிதரும் வணங்க வேண்டும். 15

பாந்தளம் குருளை வேட்ட பயனும்நல் கருட்சீர் வேண்டும்,
நீந்தரு மதவா தத்தோர் நிந்தியாப் பெருமை வேண்டும்,
காய்ந்ததால் விதைகள் யாவும் கருகிடா மகிமை வேண்டும்,
வாய்ந்தவிர் தொறும்பல் கோளும் உடுக்களும் மறைய வேண்டும் 16

எவ்வகைத் தேவும் எம்முள் இருப்பிடம் கொள்ள வேண்டும்,
பௌவநீர் முழுக்கு வேண்டும், மழைப்பயன் வேண்டும் என்னும்
இவ்வரம் கேட்ட போதே ஈந்தனம் என்றான், யாண்டும்
தவ்வலற் றிருந்தும் மாதைத் தலத்திலோர் வடிவ மானான். 17

அசுரரும் அமரர் தாமும் அன்பராய் வணங்க ஆண்டு
முசுஎலி சிலந்தி யாதி முடிபொறுத் திடவும் சூட்டும்
பசுபதி மறைந்த பின்னர் பானுமூர்த் திகள்எல் லோரும்
வசுவம்வாழ் வதுசெய் துள்ள விதிமுறைப் படியுற் றாரே. 18

மண்டலத் துள்ளீர்! மற்றை வானவர் தம்மோ டொப்ப(து)
ஒண்டரு பரிதி என்ன உன்னிட வேண்டாம், உண்மைத்
தொண்டர்பற் பலர்நாள் தோறும் தொழுதுநற் பயன்கள் தோயக்
கண்டதுண்(டு) யானும் என்னுட் கனவினும் காண்கின் றேனே 19

தேவர்தம் தெய்வ மான சிவனைஆ மாத்தூர் தன்னில்
மூவலில் பரிதிக் கூட்டம் முன்னிஉய்ந் தமைசொன் னேன், பின்
ஏவரும் பிதிர்என் றேத்தும் எண்வசுக் களும்பூ சித்து
மாவரம் பெற்று நெஞ்சின் வருத்தம்நீங் கிடல்சொல் வேனே. 20

பன்னிரெண்டு சூரியர்கள் வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 530.



15 கந்தவாரிசம் – மணமுள்ள தாமரை. திந்திரணி – புளிமரம்; மைந்தன் வீடு – சூரியன் மகனான சனியின் வீடு, மகரம் – தைமாதம்.

16 பாந்தள் அம்குருளை – பாம்புக்குட்டி. சூரியனிடமிருந்தே விடத்தைப்பெறும் முதலி லென்பதாம். நிந்தியா – எந்த மதவாதிகளும் சூரியனை இகழ்வதில்லை.

17 பௌவநீர்முழுக்கு - கடலில் முழுகுதல்; தவ்வல் – கெடுதல்.

18 முசு - குரங்கு; முசுகுந்தச் சக்கரவர்த்தி. எலி – மாபலிச்சக்கரவர்த்தி, பசுபதி– உயிர்கட்குத் தலைவனான சிவன்; விசுவம் – உலகம்.

## அட்டவசுக்கள் வழிபட்டது.

எண்சீர் விருத்தம்.

இந்தி ரன்றன்ஊர்த் தேவர்தம் குழுவூ(டு)
 எட்டுக் கோடிபேர் இகல்மலி வசுக்கள்
பந்தி யாமொரு கோடிபேர்க் கொருவன்
 பழுது றுதவர்ப் பாதுகாத் திடுவோன்
தந்தி ரத்துயர் எண்மரும் பிதிர்கள்
 தமைஎண் ணிச்செயும் சடங்கில்ஊண் புசிப்போர்
மந்தி ரச்சது மறைநெறிச் செல்லும்
 மக்க ளேஅவர் மாண்பறி வாரே. 1

புனையும் வார்கடற் கலைப்பெரும் புவிமேல்
 புனிதர் செய்பல பூசைகொண்(டு) அப்பால்
மனைவி யோடருள் வசிட்டன்வாழ் மனையில்
 வசுக்கள் எண்மரும் வந்தினி தடைந்தார்
அனைய தின்றிய காமதே னுவினல்
 அவர்க்கு வேண்டுவ அளித்துப சரித்தான்
இனைய உண்டிகண் டிலமென மகிழ்வுற்(று)
 இளைய வன்சிறி தெடுத்துவைத் தனனே. 2

அந்த நல்உண வினைக்கொடு போய்த்தன்
 ஆவி நேர்மனை யவளுணக் கொடுத்தான்
இந்த ஆண்உனக் கெங்ஙனம் கிடைத்த(து)
 எனவி னவலின் இயன்றமை புணர்ந்தீண்(டு)
எந்த வாறுநீ முயன்றும்அப் பசுவந்
 திடுதல் வேண்டுமென் றுள்,அவன் இசைந்தான்,
கந்த நாண்மலர்க் குழலியர் மொழியாற்
 கடைப்பட் டோர்பலர் கதைகள்கேட் டிலனே. 3

பொன்னி லத்ததென் றுணர்ந்திலன், அதுபோற்
 புதிதி(து) ஒன்றெனப் புந்தியில் மதித்தே
தன்னின் மூத்தவர் எழுவருங் கூடத்
 தக்க தந்திரம் சமைத்தழைத்(து) ஏகி
நன்னி லைப்பசு திருடரிற் பிடித்து
 நலியச் செய்யுமுன் நங்குல தேவா
வன்னி மாவனத் துறைபிரான் அளித்த
 மருப்பி னலவர் வசம்தவிர்ந் துவே. 4

---

1 முப்பத்து மூன்றுகோடி தேவருள் ஒருகோடி பேர்க்கு ஒருவன் தலைவன். அப்படி முப்பத்துமூவர் ஆகும். அவரில் எட்டுக்கோடி பேர்களுக்குத் தலைவராவாரை அட்டவசுக்கள் எனப்படுவர். அட்டம் – எட்டு. வசு என்பது ஒருவகைத்தேவர்; பிதிர்கள்-தென்புலத்தினர்

4 தந்திரம் – தமையன்மார்களைத் தன்னோடு இணங்கிவருமாறு சொன்ன சூதுமொழி

தப்பி யோடிஅவ் வசிட்டமா முனிவன்
　　தாளில் வீழ்ந்(து)அது சாற்றலும், அவன்றான்
திப்பி யத்திரு அமுதிடும் அவர்பால்
　　திருட்டுச் செய்தஅத் தீயர்எண் மரும்போய்
மெய்ப்பி றப்படைந் திடுக!ஏழ் வரும்அம்
　　மேனி விட்டுடன் மீள்க!மற் றொருவன்
செப்பி ளைத்தன முயக்கமற் றுழன்றே.
　　செருவில் மாய்ந்துபின் செல்க!என் றிசைத்தான். 5

அரவ மன்னதாய் கொடுமையால் எழுவர்
　　அங்ஙன் மாய்ந்ததும், அவனொரு வனும்பின்
புரவ லர்த்திரட் போரிடை மாய்ந்து
　　போய தும்,பெரும் பாரதம் புகலும்
பரவு சீர்முனி சாபம்ஆங் கவர்மேற்
　　பட்ட போதுவிண் பதியினர் வெறுத்தார்
கரவி லாரவர்க் கிடும்அவி களையும்
　　கமல நான்முகன் கைக்கொடுற் றானே. 6

உண்டி ஓரணுத் துணையுமில் லாராய்
　　உம்பர் தாமும்எவ் வுலகிலுள் ளாரும்
கண்டி கழ்ந்திட மனந்தடு மாறிக்
　　கணத்தி னோடவர் கரத்துறும் யோகத்
தண்டி னாலெவர் தம்மையும் வெல்லத்
　　தக்க மாமுனி சரண்பணிந் தெழுந்(து)யாம்
தொண்டி யற்றிஉய்ந் திடும்வகை இனிநீ
　　சொல்லென் றார்அருள் சுரந்துரைப் பானே. 7

ஆறு நான்கொடோர் கோடியாய்ப் பொன்னாட்(டு)
　　அமரர் குன்றஈண் டணைந்தநீர் இழைத்த
ஊறு தீர்வதற் காங்கொடுஞ் சாபம்
　　உரைத்தி லேன்அதால் உமைஅவர் சேர்க்கும்
பேறு பெற்றிலீர்! இனியது வேண்டிற்
　　பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞகன் தன்னை
ஈறு தீர்புகழ் மருவும்ஆ மாத்தூர்
　　இடத்திற் பூசைசெய் திடுமின்!என் றானே. 8

---

5 அது சாற்றலும் - காமதேனு கூறியதும்; தீயர் - தேவராயினும் திருட்டு மூலம் காமதேனுவைப் பற்ற முயன்றதால் தீயர் என்றார்.

6 அரவம் அன்னதாய் - தனது பிள்ளைகள் எழுவரைப் பெற்றவுடன் கொன்றமைபற்றி அரவம் அன்ன என்றார், பாம்பு, தன் முட்டைகளையோ குட்டிகளையோ உணவாகக்கொள்ளும்

7 வசிட்டர், தமது யோகதண்டின் வலிமையால், எதிர்த்துப் போரிட்ட கோசிகன் என்ற விசுவாமித்திரர் அம்புகளைத், தன்மீது வரவொட்டாமல் தடுத்தார் என்ற செய்தியைக் குறித்ததாம்.

8 ஆறுநான்கொடு – இருபத்துநான்கு. வசுக்கள் எண்மர் இங்கு சாபமுற்றனர்.

வேள்வி யிற்பலர் சாம்திதி களில்நல்
விரகர் நல்(கு)அவி வேட்டுணற்(கு) உபாயம்
கேள்வி யுற்றவா றியற்றிடக் கருதிக்
கிளரும் அப்பதி கிட்டிவந் தருகில்
வாள்வில் ஏந்துகைச் சாத்தன்ஆ தியர்தம்
வாய்ச்சொற் பெற்றுளம் மகிழ்ந்தவண் ஏகி
நாள்வி டாமல்எண் கோடியோ(டு) எட்டா
நவில்வ சுக்களும் நன்மலர் சொரிந்தார். 9

எறும்(பு)அ நாளிடும் திரணமு ஏற்றங்(கு)ம்
இனியபே றருளிய தன்றிப் பொல்லாக்
குறும்ப ராம்அரக் கரும்உய அருளைஎண்
குணப்பி ரான்இரெண் கோடியொ(டு) ஈரெண்
செறும்ப லத்தகை வானவர் இளைப்புத்
தீரச் செய்பணி தீதெனும் கொல்லோ
நறும் பயோதரக் குமரியோ டொருவெண்
நரைவி டைப்புறம் நடுத்திகழ்ந் தானே. 10

முகிழ்நி லாப்பிறைக் கீற்றணி சடையும்,
முண்ட கம்புரை மூக்கணும், முதிர்செந்
துகிர்கு லாங்கனி வாயும்,ஒண் மழுமான்
துலங்கு தோள்களும் தோலுடைப் பொலிவும்,
அகியும் என்புமாம் பணிகளும் திருமால்
அறியொ ணாத்திரு வடிகளும் கண்டு
மகிழ்வெ னும்பெருங் கடலிடை மூழ்கி
வசுக்கள் யாவரும் வணங்குபு துதித்தார். 11

யாது காரணம் ஈண்டுவந் தெமைநீர்
இனிது பூசைசெய் திட்டவா றதனை
ஓதும் என்றனன், அதற்கவர் எமதாம்
உரிமை வேட்டனம் உதவுதி! என்றார்
கோது கீர்கதி விழையினும் நல்கும்
குழகன் வந்துநேர் குலவிடப் பெற்றும்
மோது தானவர் துயர்செயில் தளர்சீர்
முன்னி யேற்றலும் முன்வினைப் பயனே. 12

9 அவி – யாகத்திலும், திதிகளிலும் உதவும் உணவு. ·வசிட்டர் கூறியதற்கிசைய, ஆமாத்தூர் வந்தபோது, ஐயனாரும் பிறரும் சொன்னவாறு, வசுக்கள் எண்மரும், சேர்ந்தவர்களும் வழிபட்டனர்.

10 திரணம் – சிறு அளவில் எறும்பு செய்த பூசனைக்கு அருள் செய்தவர் இறைவன்; (திரு எறும்பூர்) பயோதரம் – தனம்; இரெண் - - - ஈரெண் முப்பத்துமூன்று.

12 பூசனை செய்து காட்சி பெற்றபோது, வசுக்கள் தீய அசுரர்கள் எதிர்த்தபோது சஞ்சலப்படத்தக்க வாழ்வையே விரும்பினார்கள்.

தந்த னம்,களித் தேகுமின் இன்னம்
தவறு செய்யன்மின்! எனத்தனி மாதைச்
செந்த கைச்சிவன் உரைத்தலும் விண்ணோர்த்
தேவர் யாவரும் செறிந்துவந் தழைத்தார்
கந்த நாண்மல ரோனும்நீர் இனிநும்
கடமை யாவையும் கைக்கொளும் என்றான்
எந்த இன்பதுன் பங்களும் அவன்தன்
எண்ண மின்றிவந்(து) யார்க்குமெய் தாதே. 13

ஆதி நாளிலவ் வசுக்களில் இளையோன்
அந்தத் தேனுவை அருமையோ டடுத்(து)என்
மாதுன் மேல்விழை(வு) அளவறக் கொண்டாள்
வருதி என்றிடில் வரும்அதை விட்டு
வாதை செய்த னாற்பெருங் கேடு
வந்த தாதலின் மற்றையர் பொருள்மேற்
காதல் எய்திடில் இரப்பதை மறந்து
களவு செய்திடக் கருதலொண் ணாதே. 14

வசுக்கள் தம்மையும் அவர்பெரும் கணமாம்
வாரி தன்னையும் மருப்பினால் மோதி,
நசுக்கி, நீற்றிட லொருபெரி தாமோ?
நலங்கொள் மாதையூர் நாதனார் வரத்தாற்
பசுக்கள் தம்மினத் தரசெனக் குலவிப்
பரைதன் அங்கிச மாயதே னுவிற்கோர்
இசுக்கு வார்த்தையுண் டாகும்என் றிறைஞ்சி
இருடி சேகர னிடத்துரைத் ததுவே. 15

கடல்கு டித்தவற்(கு) இளையவ னும்அக்
கருணை மாமுனி கண்ணுதற் பெருமான்
தடம லர்த்துணை கருதிடு மா(று)எத்
தவசி நாடினும் அவன்தனைப் பொன்னூர்
இடமி ருக்கும்அத் தேனுஆங் கவர்போன்(று)
எண்ணி யேபணி இனிதுசெய் திடுமெய்
திடமொ டஃதைவா வெனவழைத் தேவும்
தீர மாமதும் சிவன்தரில் வருமே. 16

13 இன்பமும் துன்பமும் இறைவன் திருவருளாணைப்படியே வருவனவாம். உயிர்கள் அதனை அநுபவிக்கக் கடமைப்பட்டவர்கள்.

14 களவு செய்திடக் கருதலொண்ணாது - களவை நினைத்தலுமாகாது என்றதால், செய்தவன் மிகுதி கூறாமல் விளங்கும்.

15 வாரி - கடல். கொம்பால் குத்தி - அவர் யாவரையும் கொல்லும் வன்மை காம தேனுவுக்குண்டு. பசுக்குலத்தின் அரசாயுள்ளதும், உமையவளின் அம்சமாயும் உள்ளதும் காமதேனு எனக் கொள்க.

16 எத்தவசிநாடினும் - இனி எவனொருவன் தவஞ்செய்வானானாலும் காமதேனு வந்து ஏவல் செய்யும். ஏவும் திறம் இறைவன் உதவினாலே வருமென்பதாம், தவம். அருள் கூடுமானாலும், ஆளும் திறமையும் அவனருளால் அமையும்.

என்றும் தாம்வளர் ஊரிறை பசுவை
　　இதுமற் றென்றென எண்ணவும் செய்யும்
மின்று லங்கிடை யார்தரு மோக
　　வெறியென் றுலரன் விழிக்கனல் எரித்தும்
பொன்று றுதெழுந் தவமுடைக் காமன்
　　போரின் மாட்சிமை புகன்றிடற் பாற்றே?
கொன்று தின்கல ராகிஐந் தெழுத்தும்
　　கூறின் அல்லதக் கொடுமை யருதே. 17

முதற்பி திர்க்கிடும் அவிகொள்எண் வசுக்கள்
　　முனிப்பி ரான்பகர் மொழிவழி சுழன்றிட்(டு)
அதற்கு பாயமும் அவன்சொலக் கேட்டுய்ந்
　　ததுசொன் னும்;இனி அருள்மலி பெரியோர்
பதச்ச ரோருகத் தன்புறும் அடியார்
　　பலரும் இன்புறப் பழையமோ கினித்தாய்
சுதற்கொர் தோளெனக் குலவுமா காளன்
　　தொண்டு செய்துயல் சொற்றிடு வோமே. 18

அட்டவசுக்கள் வழிபட்டது முற்றிற்று.

**ஆகக் கவி 548.**



17 அதை விலக்குதற்கு, கொலையும் புலையும்புலையுமின்றி, செபதவ மியற்றுதல் வேண்டுமென்பதாம்.

18 பதச் சரோருகம் - திருவடித்தாமரை. மோகினித்தாய் சுதன் – அரிகர புத்திரர். மாகாளன் – ஐயனரது சேனைத்தலைவன் என்ற குறிப்பு.

## மகாகாளன் வழிபட்டது.

கலிநிலைத்துறை.

சேதா வுடன்கன்றும் மகிழ்கூரும் மாதைச் சிவன்பாலநாள்
வாதாடி டச்சென்று நாணு நிலம்பார்த்த மாகாளியாம்
மாதாம காவீர னைச்சேர்ந்து பெற்றிட்ட மாகாளனென்(று)
ஓதார வாரப் பெரும்பூதம் ஒன்றுண்டிவ் வுலகத்திலே. 1

அதுளண்ணில் பலகோடி பூதங்க ளும்பேயும் அடிபேணவே
சதுரான னன்தாதை பெண்ணாகி ஈன்றிட்ட சாத்தாஇடம்
குதுகூலம் எய்திக் குதிக்கின்ற தாமக் கொடும்பூதம்,வால்
விதுவார் சடைக்கற்றை யானன்ப ரைக்காணில் மிகஅஞ்சுமே. 2

பூதக் கணத்தொன் றெனச்சொன்ன தால்எள்ளு புன்மைத்ததன்(று)
ஊதப் பெறுங்கார் உடற்றான வப்பெண்கை யுற்றுள்ளம்நொந்(து)
ஏதப் படும்தெய்வ அயிராணி சுகமெய் திடச்செய்ததால்
வேதப் பொருட்சொன்ன முனிநாத னும்பேசும் விறல்பெற்றதே. 3

வலியோடு புகழும் பொறுத்தெண்ணி ஊர்வாழும் மாகாளனைப்
புலிபோலும் நெஞ்சக் கொடுந்துட்டர் ஊன்வெளவு புலைநீர்மையர்
கெலிநீடு பொய்வேடர் முதலோர்கள் கலிவன்மை கிளர்தன்மையால்
மெலியோர் தமைத்துன் புறுத்தத் தொழும்தீமை மிகலாயதே. 4

அத்தீமை செய்தோர்கள் எல்லோரும் ஆடாதி யேயாயினர்
இத்தீமை என்முற்செ யேன்மின்! எனக்கூறி டாதேற்றதாம்
மெய்த்தீமை யாலந்த மாகாள னும்பண்டை விறல்குன்றியே
கைத்தீமை யுற்றுப் பதைத்துத் தவித்துக் கவன்றனரோ. 5

அந்நாள[வ்] வீனந் தனைக்கண்டு சிவபால னும்ஐயனர்
தந்நாவி னலெம்முன் நில்லேல்ம காபாத கந்தோய்ந்துளாய்!
எந்நாளும் வெம்பேய்கள் தமையும் திருத்தா(து) அவ்இனமாகியே
வெந்நாய் அருந்தானும் உண்டாய்! எனச்செண்டின் விறல்எண்ணினர்

1 சேதா - பசு. நாணு - நாணி, நிலம்பார்த்த - தோல்வியுற்றுக் குனிந்த; மாதா - காளி; வீரன் - வீரபத்திரர்.

2 சாத்தா - ஐயனர். வால் விது - வெண்மையான சந்திரன்.

3 எள்ளு புன்மைத்தது அன்று - இகழத்தக்க கீழானதன்று. ஊதப் - - - பெண் - கரிய உடலோடு கூடிய அசுரப் பெண் அசமுகி. கை - அவள் கையை; முனிநாதன் - வியாசர். இந்திராணியைக்கவர்ந்த அசமுகியின் கைகளை வெட்டி இந்திராணியை மகாகாளன் காத்தான். இவ்வரலாற்றை வியாசர் கந்தபுராணத்துட் கூறினர்.

5 ஆடு ஆதியே ஆயினர் - கொல்லப்பட்ட ஆடு, கோழிகளாக மறுபிறவி எய்தினர்.

6 செண்டு - ஐயனர் ஆயுதம்.

கண்டந்த மாகாளன் நெஞ்சம் கலங்கிக் கழற்ருளில்வீழ்ந்(து)
எண்டந்த துதிசெய் தெனைக்கொல்ல வேண்டாம், இரங்(கு)யாவரும்
புண்டந்த உணவுண்டி டாமற்செய் எனினும் புரிந்(து)உன்னருள்
தொண்டந் தரங்கத்தில் அமைவேன்உய் வகையொன்று
சொல்என்றனன்.

மதனைச் சமன்தன்னை முன்கொன்று பின்செய்த மாதேவர்தம்
சுதனென்ற கருணைப் பெரும்பண் புதித்தொன்று சொல்வான்,முனுள்
கதறித் தொழும்தேனு முதலாய பசுஉய்ந்த கவினூரிலுற்[று]
இதமிக்க பணிசெய்து பவம்நீங்கி வருகென் றிசைத்தானரோ. 8

அங்குற் றருட்பம்பை யிடைமூழ்கி யுடன்ஆம்ப லம்பொய்கைவாய்
பொங்குற்ற புனலிற் றிளைத்துக் களித்துப் புதுச்சென்மமாய்க்
கங்குற் பொருங்கண் டனைச்சிந்தை நடுநன்கு கருதிச்செல்கால்
வெங்குற்ற முடையாய் எனச்சிற்சில் முனிவோர் வெகுண்டார்களே, 9

அவனங் கவர்த்தெண்ட னிட்டுண்மை என்றெருப்பி ஐயன்சொலால்
இவண்வந்து ளேன்என் றுரைத்தான் மறுத்தோதி லார்ஏகினன்
சிவனங் கிசம்பெற்ற வீரன்ற ஞல்வந்த சேயாமவற்
பவவுண்டி அவ்வா றிழித்திட்ட[து] ஓரார்கள் பதர்போல்வரே. 10

சென்ருன் அவ்வூருக்கு நடுவே முளைத்திட்ட சிவலிங்கமாம்
ஒன்ரு தரிக்கின்ற தல்லாது மற்ருேர் உபாயங்கொளான்
நின்ருன் இருந்தான் கிடந்தான் துயின்ருனில் நெஞ்சானதைக்
கொன்ருன் உறுப்பைக் குறைத்தான் நெருப்பிட்[டு] அகோரஞ்
[செய்தான்.

இவைகண்ட ஆமாதை ஈசன்தன் உள்ளத் திரக்கம்செனித்
து,வைகுந்த நாடாளன் வேதா முதற்றேவர் துன்றித்தொழக்
கவைதுன்று நாற்காலில் மறையாய அரவங்கொள் காளைப்பரிச்
சிவைபங்க னுவந்து முன்னின்று நல்வார்த்தை சிலசொல்லுவான். 12

நின்றெண்டில் அளவற்ற மகிழ்வெய் தினோம்,முன்னை நீசத்தனத்(து)
ஒன்றென்று மருவேல்இவ் வுலகின்கண் யாரேனும் ஊன்வேட்டுணில்
சென்றென்ப தாம்ஓட்டை தோறும்செ நீர்மேனி சிந்தச்செய்,பின்
என்றெந்தம் உறும்ஐயன் அறைதொண்டு தினமும்செய் என்ருனரோ.

சொல்லும்சொல் வினவிக் களிப்பாகு முன்அச் சொரூபப்பிரான்
மல்லுந்தும் விடையோடு மறைவுற்ற னன்துங்க மாகாளன்முன்
அல்லுண்ட சொற்சொல்லும் அவர்தாமும் அன்பாள ராதற்றெறிந்(து)
எல்லும்செய் விழியாள னேதெய்வ மாமென் றிரைந்தானரோ. 14

---

9 ஆம்பலம்பூம் பொய்கை - இவ்வூரிலுள்ள தீர்த்த குளம்.
10 கொன்ருன் - மனதை அதன்வழியிற் செல்லாமல் தடுத்து நிறுத்தினுன்,
11 கவைதுன்று நாற்காலில் - இருபிளவான நான்கு கால்களில்; காளை - இடபம்.
13 ஓட்டை - உடலிலுள்ள ஒன்பது வாயில், 14 மல் உந்தும் - வலிமைமிகுந்த.

அரன்மேவும் அரிநல்கு மகவாகி வளர்சொந்த அரசன்தனைப்
பரம்நீ எனத்தெண்ட னிட்டான் அவன்கண்டு பரமன்சொலைத்
திரமாகும் எனநம்பு மாரேதி நீறங்கு சிறிதீந்தனன்
வரம்நாடி ஒருசிற்சின் மனிதப் பதர்க்(கு)ஏனை வரல்சொல்லுவாம் 15

வெண்கோழி முட்டைத் தகர்ப்பார்கள் கருவிற்று வீழச்செய்தான்
வண்கோழி ஆடேனம் முதலாய கொலைசெய்யு மாபாதகர்க்
கண்கோடி யுடையான் எனக்கண்டு கொன்றான் கரும்பேளலாம்
எண்கோடி கோடுமுன்னை ஈனந் தவிர்ந்திட்ட இகமுய்ந்ததே. 16

சொற்சாரம் அறியா இளம்பாவ லாரன்ன தொண்டர்க்கெலாம்
நற்சாத னந்திய தாய்த்தோற்றி அளவற்ற நலிவெய்தலால்
கற்சாப மணிதிண்கை யார்மாதை யூரிற் கருப்பன்கொள்பேர்
உற்சாக வரம்மெய்மை யாய்எங்கும் அருள்வண்மை ஓங்குற்றதே 17

புலியட் டுரித்தார்தம் அருளான்மு னுள்வந்து போய்விட்டதோர்
கலியிற் றிகழ்ந்திட்ட கதையீ(து)இந் நாளக் கறுப்பன்கொலைப்
பலியிச்சை யிடைமூழ்கு பாவம் பெருக்கின்ற பண்பெண்ணிஎன்
சொலினுக்(கு) இளப்பங்கள் சொல்லேன்மின் நெஞ்சம் துணிந்
தோர்களே.

சகுணத் தியானப் பழக்கம் செயாதுள்ள தவர்பற்பலோர்
மிகுமற் கறுப்பன் தனைப்பேய்கள் தமையோதில் மெய்யன்றெனு
வெகுதர்க்கம் இடுவார்கள் அதைநம்ப வேண்டாம்என் மேலோர்
தகுதிப் பிழைப்பட்ச மாநின்றும் விட்டான்பல் தரம்வந்ததே [பொலான்

ஆமாதை யூரானை, அவன்வாமம் உடையாளை, அருள்மைந்தரைத்
தாமாக விழைவார்கள் பூதப்பை சாசம் தமக்கஞ்சிடார்
தீமாமி சந்தின்ப தேபேய் அதுண்ணுத தேதெய்வமாம்
நாமாக இவைசொல்ல விலைமுன்னை முனிவோரும் நவில்சொற்களே 20

சோகாட உடனுடு வாரென்ற பழியும் சுமந்தாரை,முன்
மாகாளன் வழிபாடு செய்துய்ந்த துடன்முந்தும் வம்பும்சொனும்
நாகாதி பதிமீது துயின்மாயன் உருவாம் இராமன்புகழ்ப்
பாகாய கடலூ(டு)எம் மாதைக் கிசைந்துற்ற பாகம்சொல்வாம். 21

மகாகாளன் வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 569.

---

15 அரசன் – தன் தலைவனை அரிகரபுத்திரன். மனிதப்பதர் – போலி மக்கள்.

16 எண்கோடி – கோடியான எண்ணிக்கையுடைய சேனை. முன்னை ஈனம் – பேய்களும் ஊன் விரும்பாதாயின.

17 கற்சாபம் – மலையான வில்; கறுப்பன் – மகாகாளன். எங்கும் - உலகெலாம்.

18 மாகாளன் என்றவீரன் (கறுப்பன்) கொலைபுலையில்லாதவன் என்பதால் இப்போது அவ்வித பூசை கொள்வதுபற்றி என் வார்த்தையை இகழாதீர்கள். இச் செய்தி முன்னைய கலியுகத்தில் நடந்ததென்க.

19 சோகு ஆட - பூதங்கள் ஆடுமாறு. முந்தும் வம்பும் - பூசைசெய்யுமுன் அவனது வீரச்செயலையும் சொன்னேன். பாகு ஆய கடல் – இனிய வரலாற்றுக் கடல்.

இருபத்தொன்றாவது

# இராமபிரான் வழிபட்டது.

**அறுசீர் விருத்தம்.**

தோற்றமும், காரணமும்.

உலகில்வரு யுகநான்கில் நன்மையும்தீ
மையுங்கலப்ப(து) உண்மை யேயாம்
இலகுதரு மத்தினள வொன்று,முக்கால்,
அரைக்கால்என்(று) இசைப்பார் மேலோர்
அலகிலவா ஒவ்வொன்றும் கிழமைகள்போல்
வந்துவந்தே அகலும் கண்டீர்!
பலகலிபோன் றெருதிரே தாயுகங்கெட்
டிடமாதைப் பரன்செய் தானே. 1

அவ்யுகம்அங் ஙனம்கெடுதற் காரணம்யா
தோவெனிற்பல் அரக்கர் தாமும்
வெளவுகொடுங் கோலரச ஞகுமிரா
வணன்எனுமோர் வம்பன் தன்பால்
வெவ்வுரகப் பணியுமணிந் துவக்கும்அரன்
விடைப்பரிமேல் விளங்கி வேட்ட
மூவ்வுலகும் வாளும்இர தமும்முடிபத்
துடனளித்த முறைக்கே டொன்றே. 2

ஆயஇரா வணன்பிறப்பும், உடன்பிறந்தார்
சரித்திரமும் ஆதி யாவும்
ஏயஇதிற் சொலல்மிகையாம், வான்மீகன்
கம்பன்முத லினர்சொற் றுள்ளார்
தூயநகை மடவாரைத் துயருறுத்தி
இன்பநலம் தாய்ப்ப தாமோர்
தீயகுணத் தினிற்றலையாய் மற்றுமுள்ள
கொடுமைகளும் செய்துற் ருனே. 3

நன்றினைத்தீ தாக்கிடலும், தீதினைநன்
ருச்செயலும் நரைவெள் ஏரும்
குன்றிவர்ந்(து)ஆ மாதைநகர் வீதிவரும்
அழகேசர் கூத்தே யாமால்
அன்றிமையோர் அனைவோரும் வானரங்க
ளாவுருப்பெற்(று) அகிலத் துற்ருர்
வென்றிநெடு மால்இரவி குலத்தரசாம்
தயரதன்செய் வேள்வி முற்றி. 4

---

1 யுகம் நான்கில் – யுகம் ஒவ்வொன்றிலும் அறம் காற்பாகம் குறைந்துவிடும். அறம் குறைந்த அளவு தீமை மிகுந்து காணப்படும் என ஆசிரியர் கூருரார் ஆயினும் கருத்தைப் பெறவைத்தார். தீமை வளர்ந்ததென ஆன்ருேர் கூருர்.

2 திரேதா யுகத்தில் இராவணன் ஆட்சி ஏற்பட்டது, தவத்தின் அருமை குறித்து தீய தாயிருப்பினும் இறைவன் அருளினன். ஆதலின் தீமை வளர்ந்தது. உரகம் – பாம்பு.

அதன்பயனா அவன்மனைவி யரிற்றலையாம்
கோசலைதன் அருமைப் பண்டிச்
சுதன்தனுரு வாவுதித்தான், தாட்படை யா
தியும்சிறிய துணைவ ரானார்
மதன்தனது தாதையெனும் அடையாளம்
திகழ்தரவே வளர்ந்தான், அந்நாள்
இதம்பொலிசீர் மெஞ்ஞானச் சனகன்மனை
யினிற்றிருமா தெய்தி னாளே. 5

சீதை வரலாறும், மணமும்

உழுபடைசா லிடைக்கிடைக்கப் பெற்றமையாற்
சீதைஎனும் ஒருபே ரிட்டான்
அழுபருவம் நீங்கிவிளை யாடுமிளம்
பருவத்தே அங்கோர் விற்றான்
எழுபதினா யிரம்பேர்தொட் டிழுப்பதனை
எடுத்துமற்றோர் இடத்தில் வைத்தாள்
தொழுபதத்தன் அவள்இதனை வளைப்பாற்கே
அளிப்பனெனும் துணிவுற் றானே. 6

பேரழகால் இராமனெனும் பெயர்பொறுத்(து)அ
யோத்தியில்வாழ் பெரியோன் தன்னைக்
கோரதவக் கோசிகன்கொண் டேகிஅடற்
றாடகையைக் கொல்லச் செய்வித்(து)
ஆரணனோர் கவுதமன்பத் தினிகல்உரு
அவன்பதத்தால் அகலல் நோக்கித்
தேரரையர் பலர்மணம்வேட் டுறுமிதிலைப்
பதியினிடம் சேர்த்தான் அன்றே. 7

மன்னர்பலர் நாணமுற வளைப்பதற்கா
அவர்நடுவே வைத்த வில்லை
முன்னகிலம் உண்டுமிழ்ந்த உருமறைத்தோன்
கணப்பொழுதின் முறித்துப் போட்ட
பின்னர்அவன் தான்சீதை கணவனெனத்
தெரிந்தமன்னாற் பெயர்ந்த தூதன்
தன்னதுகை யோலைவழி தயரதனா
தியர்மிதுலை தனில்வந் தாரே. 8

---

5 பண்டி - வயிறு. இராமபிரான் தோன்றிய வயிறுபற்றி ‘அருமைப்பண்டி’ என்றார். தோள்படை - சங்கு, சக்கரம் இராமனுக்குத் துணைவராகத் தோன்றினர்.

6 தொழுபதத்து அன்னவன் - மன்னர்கள் பணியும் தசரதன், அதனை - சீதை எளிதாய் எடுத்துவைத்த வில்லை.

7 பெரியோன் - வயதிற் சிறியவராயினும் தகுதிபற்றி இராமபிரானைக் கூறப்பட்டது. கோசிகன் - விசுவாமித்திரர்; பத்தினி - அகலிகை; அரையர் - அரசர்.

வந்தவர்தாம் வரும்வழியிற் கட்குடித்து
மயங்கியதா வகுத்துக் கம்பன்
தந்தகவி யினும்மகிழும் சிலபுலவீர்!
விரித்திதனைச் சாற்றி லேனென்(று)
அந்தரங்கம் கொதியேன்மின்! ஆமாதைப்
பதியிலவன் அணைந்தான் என்று(து)
இந்தமட்டும் பகர்வதுவும் அவன் ஆங்கு
வருநிமித்தம் இலங்கு மாறே. 9

மூவுலகும் அதிசயிப்பச் சீதைதிருக்
கலியாணம் முடிந்த பின்னர்
ஏவுடையார் வியந்தபுகழ் இராவணன்தம்
பதியாகி எவரும் சூழ
மேவுதம்மூர்க் கேகுங்கால் விடையுகைப்போன்
படையேந்தோர் விறலோன் வெம்பிப்
பாவுபெரும் புகழனைத்தும் பறிகொடுத்தான்
அனையகதை பலவாம் அன்றே. 10

வனவாசம்.

சென்றுசில நாட்கழித்துத் தயரதன்தன்
கரத்திலுறும் செங்கோல் தன்னை
நன்றுணர்தன் மகன்கரத்திற் கொடுப்பவசிட்
டாதியரால் நாள்வைத் திட்டான்
அன்றுதன்றாய்க் கிகலவளாம் ஒருத்திசெய்விக்
கினபலத்தால் அந்த ராமன்
துன்றுமனை யொடுமுரிமைத் துணைவனொடும்
வனம்புகுந்தான் துயரெய் தாதே. 11

தயரதன்மாய்ந் ததும்,பரதன் தமையனது
பாதுகைக்குத் தறைமுற் றீந்த
வியனும்நதி ஓடம்விடும் குகனுறவும்,
இருடியர்பால் மேவும் மாண்பும்,
வயமலிதோள் அரக்கர்களால் வந்தகன்ற
பொல்லாங்கும், மயிலே போலும்
நயமுறுமென் சாயலுடைச் சானகிபோய்
இலங்கையிடை நைந்த துன்பும். 12

---

10 ஏவு உடையார் - அம்புகளை உடைய அரசர். படை - மழுவாயுதம்;
விறலோன் – பரசுராமன்.

11 ஒருத்தி – கைகேயி; துயர்எய்தாது – அரசபதவி இல்லாமற் போயிற்றே என்றோ
காடு செல்ல வேண்டுமென்றோ இராமன் துயரடைந்திலன்.

இராகவன்றன் தன்தலைமேல் வருமகுடம்
தவறியதால் இன்னல் எய்தா
நிராசையுற்றே னுயிருந்தும் உயிரனைய
சனகியினை நினைத்து நொந்து
சராசரமெல் லாமறியத் தவித்ததுவும்
விரிக்கில்அவன் சரித நூலாய்ப்
புராணஅணி குன்றிடுமால் இனிஆமாத்
தூர்த்தொடர்சீர் புகலு வேனே. 13

இனிப்புகலும் கதைகளிற்சிற் சிலசிவன்முன்
முனிவோர்க்(கு)ஓ திடும்நூல் உண்மை
குனிப்புறுவில் வேடுவனாய் இருந்தமுனி
முதலோர்கள் கூறல் நாடித்
தொனிப்புறுமிக் கவிப்பயனை எள்ளேன்மின்!
சதகோடித் தொகைஎன் றோதும்
தனிப்புகழும் செயராமன் சரிதமதற்(கு)
உளதுளது சரதம் தானே. 14

அகத்தியர் சந்திப்பு.

சீதையைவிட் டுப்பிரிந்த ராமனிர
வொடுபகலும் சிந்தை நோம்பல்
வாதைகளைப் பலபொருள்க ளொடும்பகர்ந்தாங்(கு)
ஒருநாள்விண் வயிற்றோற்(று) ஓரேழ்
போதைநிகர் எழுமுனிவர் பதம்ஆய
உடுக்களிடம் புகன்றான், அன்னோர்
காதைஅவை படுத்துதுயர் சகியாமற்
கலசமுனி கண்முன் வந்தான். 15

வந்தமுனி வனைஇரவி குலஞ்செய்தவப்
பயனனையான் வணங்கிப் போற்றி
இந்தவினைப் பயன்தீர்கைக்(கு) ஏதுவொன்று
பகரென்றான், எல்லாம் மாயைப்
பந்தவிகா ரங்களன்றோ எனவுரைத்துத்
தேற்றிடற்குப் பார்த்தான் அந்தோ
கந்தரங்கள் ஓரேழும் நானுறநீர்க்
கடல்குடித்த கனிவா யானே. 16

---

14 முனி – வான்மீகர்.

15 போதைநிகர் – மலர் போன்றுள்ள ஏழு முனிவர்களின் நட்சத்திரம். காதை – செவியை; அவை - இராமன் கூறிய துன்பமொழி. கலச முனி – அகத்தியர்

16 கந்தரம்-மேகம், மேகம் கடல்நீரை ஓரளவு முகக்கும். ஆனல் அகத்தியர் முற்றும் குடித்தார் என்க.

சொன்னமொழி கேட்(டு)ஒருவன் தாடகையைக்
கணையொன்றால் துணித்தோன் சொல்வான்
இன்னமொழி என்சீதை தனைப்பயந்தோன்
முதலினருக்(கு) இனிதா மன்றிக்
கின்னமொழித் திடவலநின் சோதரன்பல்
வாறுரைப்பக் கேட்டும் உள்ளேன்
என்னமொழிந் தாலும்அவை இச்சமயத்(து)
எனக்குதவா என்றிட் டப்பால் 17

எவ்விதத்தும் வெவ்விரா வணன்தனையி
டழித்தென்மனை யினைமீட் டற்காம்
அவ்விதமே விழைகின்றேன் எனைஇயக்கும்
பொருளையும்நீ அறிவாய் என்றும்
செவ்வியவாய் முகிலனையான் பகர்ந்திடலும்
தமிழ்முனிவன் சிலையொன் றீந்(து)இத்
திவ்வியவில் உனையனைய ராமன்முன்னாள்
கொண்டதென்றும் செப்பி னானே. 18

ஆமாத்தூரை அறிவுறுத்தல்

பின்னுமுரைப் பான்அவ்இரா வணன்எளியன்
அல்லன்எழிற் பிறைக்கீற் றார்ந்த
மின்னுறழ்செஞ் சடைப்பெருமான் அருட்கடலிற்
றிளைத்துள்ளான் மெய்மெய் நீயும்
என்னுரிமைத் தேயத்தோர் பம்பைநதி
உளததன்பால் ஏகி, யார்க்கும்
முன்னுதித்தான் தனைப்பூசித் தவற்செறற்காம்
வரம்பெறலின் முடுகென் றானே. 19

என்றுரைத்தம் முனிமறைந்தான் அந்நதியின்
இடப்பாலோர் இலிங்க மூர்த்தி
உன்றுயர்தீர்ப் பதுகருதி உளதெனச்சொற்
றிலன்நடப்ப தோர்ந்தோ னால்,பொற்
குன்றுறழ்தோள் இராகவனும் தம்பியும்அக்
கணத்தில்வழி கூடிப் போய்ப்போய்
வென்றுயர்வெய் திடும்விதியோடு அங்குளதோர்
ஆலடியில் மேவி னாரே. 20

---

17 வன்தாடகை. வலிமையான தாடகை, சீதையின் பிரிவு, அதைப் போக்க வழி இவை மனதில் மிகுந்திருந்ததால் தற்போதைக்கு இவ்வுபதேசம் உதவாது. உம்துணைவனை வசிட்டர் கூறியுள்ளதைக் கேட்டுள்ளேன் என இராமன் கூறினான் என்றார்.

18 உனைஅனைய – (ஒவ்வொரு யுகத்திலும் இராமன் தோன்றுவதுண்டு. அதுபோல) முன் தோன்றிய இராமன் வைத்திருந்ததென்று கூறினார்.

20 ஆலடி – ஆலமரத்தின் கீழாக.

ஆஞ்சநேயர் அறிமுகம்

அம்மரத்தின் அடிசெலலும் தம்பிமடி
மேற்றலைவைத்(து) அண்ணன் சற்றே
செம்மலர்க்கண் துயில்கூர்ந்தான், அதன்தலைவாழ்
அநுமனெனும் திண்டோள் வீரன்
இம்மனிதர் ஆரோமிக்(கு) உயர்ந்தார்போல்
தோன்றுகின்றார் இவரைத் தேரில்
நம்மதுகா ரியத்துணைவ ராயினும்ஆ
குவரெனவுள் நண்ணி னனே. 21

இவர்தகுதி அறிகுவம்என்(று) இலைசிறிது
பறித்தவர்மேல் எறிந்தான், அண்ணன்
தவமனைய துயில்கலையும் எனவெகுண்டு
தம்பியவன் தன்னை நோக்கி
அவலமுறு தொழிற்செய்கின்றாய் அடகுரங்கே!
என்றிடலும் அநுமன் சொல்வான்
தவறிலன்யான் என்குலத்தோர் செய்கையில், நீர்
நுந்தகைமை தவிர்ந்தார்.போன்றீர். 22

நீவிர்இரத் தினசிங்கா தனத்(து)அரையர்
பலர்தொழவே நிகழ்வார் போன்றும்
பாவிகள்போற் பதசரராய் அலைந்துமரத்(து)
அடியிருக்கை படுக்கை பெற்றீர்!
மேவியதோர் நிமித்தமுரைத் தால்நலமாம்
என்றளவில் விழித்(து)இ ராமன்
தாவில்துணை வனைநோக்கிக் குரங்கிதொன்றென்[று]
எண்ணிடுதல் தகாது கண்டாய். 23

வார்த்தைகளாற் பெரும்புலமை விளங்கியது,
நாமேந்தும் வரிவிற் கண்டும்
பேர்த்தகலா[து] இகல்வதனால் வீரமிகப்
பிறங்கியது, பின்னும் காதிற்,
சீர்த்தகுழை யாற்றெய்வத் தன்மைதுலங்
யிய[து]எனும்சொற் செப்பும் போதே
வேர்த்தவசத் தினனாகி மரத்தினைவிட்
டிறங்கியன்பால் விரைவிற் றாழ்ந்து. 24

---

21 நம்மது காரியம் - நண்பனான சுக்கிரீவன் மனைவியைப் பிரிந்து வருந்துவதை நீக்க தக்கவர் துணையை நாடி ஆஞ்சநேயர் இருந்தார் என்பது.

22 தவம் அனைய துயில் - இராமர் கண்ணயர்வு தவத்திற்குச் சமம். நுந்தகைமை - அரசகுலத்தில் தோன்றியும் நடந்து வருந்தியிருப்பது முறையல என்பது.

23 பதசரர் - மக்கள், துணைவனை - இலக்குவனை, நிமித்தம் - காரணம்.

24 வேர்த் - - - ஆகி - இராமன் கூறியதைக் கேட்ட அநுமார் அச்சமும், பணிவும் கொண்டார்.

முன்காட்டும் வடிவைஎட்டில் ஒன்றுகக்
குறுக்கிநின்றுன் முகத்தை நோக்கித்
தென்காலூர் வாற்பயந்தம் மரத்திலேயிற்
றுயில்கைவிட்டுத் தேவர் உய்வான்
தன்காலாற் றிரிவான்நின் சரிதமுற்றும்
நன்கெனக்குச் சாற்று[க] என்றுன்
வன்கால்சேய் நின்பணிசெய் வதன்பொருட்டே
பிறந்துள்ளேன், வாலி என்றேர். 25

குரக்கரையன் உளனவன்தன் துணைவன்மனை
வியைக்கவர்ந்து கொடுமை செய்தான்
அரக்கரினும் கொடியான்என்(று) அவற்பிரிவுற்(று)
இளையவனை அளிப்பச் சேர்ந்தேன்
இரக்கமில்அன் னவன்அமைச்சன் எனும்பெயர்தாங்
கியும்சிலநாள் இருந்தேன் இந்நாள்
வரக்கருணைச் சிவனறைந்த வாசகத்தால்
உனைஉணர்ந்து வந்தேன் என்பால். 26

அனுமார் அடிமையுறுதல்

இதுவரைஎன் செவியிலுறு குழைகண்டார்
ஒருவரும்வந் திலங்கக் காணேன்
அதுகுறித்தே உனையெனையாண் டருளவரும்
நெடியோன்என் றறிந்தேன் மீறப்
பொதுமும்வடி வுடன்குறுகும் வடிவமெடுத்
திடுந்திறமை பொருந்தி யுள்ளேன்
எதுபுகன்றிட் டாலும்அது செயக்கடவேன்
எனஅவனும் இயம்பி னனே. 27

அஞ்சனைசேய் மொழிவினவி அருட்பெருங்கோ
சலைபுதல்வன் அறைவான் உன்றன்
கொஞ்சஉருப் பார்த்தனன்,நீ டிடும்உருவும்
தெரிந்துளவா குலவு கென்று

25 தென் - - பயந்து - தென்றலைத் தேராகவுடைய மன்மதனைப்பெற்று, அம்மரத்தில்- அவ் ஆலமரத்தில், தேவர் உய்வான் - இராமன் பிறத்தல், இவ்வாறு நடந்து வருந்துதல் வினையாலல்ல, தேவர்கள் நலமடையும் பொருட்டாகும். இந் நூல் பாயிரம் 9-வது பாடலில் 'ஞாலம் - - - மால்' என்று குறிப்பிடுவது ஒப்புநோக்குக.

26 துணைவன் - தம்பியான சுக்கிரீவன்; குரக்கு - குரங்கு; சிவன் அறைந்த வாசகம்- ஆஞ்சனேயர் காதில் குண்டலத்தோடு பிறந்தார் - அனைவரும் அஞ்சினர். இவன், தலைவனைக் கண்டபோது மறையுமென அசரீரி கூறியது. இராமனைக் கண்டதும் மறைந்தது. தன் தலைவனை இராமனைக் கொண்டார்

27 மீறப் பொதுமும் வடிவு - அதிகமாக உயரும் உருவம்.

மிஞ்சடல்மா வலிஎதிர்தான் நிமிர்ந்தாங்கே
வளர்ந்து,முன்போல் மேவக் கண்டு
நஞ்சமர்கண் டனைப்பூசை புரிந்தல(து)ஈண்டு
உணவருந்தேன் நடந்தின் னேபோய். 28

அருணையிலோர் இலிங்கம்எடுத் ததிவிரையில்
வருதி!என அறைந்தவ் வாறே
வருணனுறு திசைநோக்கி அவன்போய
பின்னர்இளை யவன்றன் மாட்(டு)இத்
தருணமதில் இவன்கிடைத்த வியப்பும்அதிட்
டமும்பகர்ந்து தருக்குற் றன்அக்
கருணைநெடும் புயலுயர்ச்சி தானறியான்
அனுமனன்னுர் காணற் பாற்றே. 29

ராமன், அபிராமனைக் காணல்.

பெண்டிழந்த சிற்றரசாம் சுக்கிரீ
பனையவன்நோய் பெரிதும் நெஞ்சிற்
கொண்டிருந்த ராமனுடன் கூட்டுதற்கா
அநுமனைமுற் கூட்டுங் கள்வர்
வண்டிரைந்த மலர்ச்சோலை மாதைநகர்க்
கோயில்நடு வாழ்வார் தம்மெய்த்
தொண்டிசைந்த சபரிமனத் துயரொழிக்கத்
திருக்கருணை சுரந்தா ரன்றே. 30

கலிவிருத்தம்.

சபரி சந்திப்பு

தான்மு ழுத்தொண் டியற்றும் சபரிப்பெண்
மான்மு கம்பெறல் மட்டுமுன் சொற்றுளேன்
தேன்மு கக்கும் செழுங்கம லக்கணன்
பான்மு னுற்ற பரிசுறல் கூறுவாம். 31

---

28 தெரிந்துளவா - நீ சொன்னபடி (குறுகிய வடிவு) நிமிர்ந்தாங்கு - மூன்றடி மண்பெற மாவலி மன்னனிடம் பெரிய திருவுருவம் எடுத்தவன் திருமால் என்பது. வளர்ந்து அநுமன் பெரிய வடிவங்காட்டிப் பின் குறுகி நின்ருர்.

29 வருணன் உறுதிசை, மேற்றிசை, இத்தருணம் பிரிவால் வருந்தி சமயம், அநுமன் அவர்கள் உதவி கேட்க, அவர்கள் இவர் உதவி கேட்டனர். உயர்ச்சிதான் அறியான் - தனது வீரம், பெருமையை அறியான், பெரியோன் தம் வலிமையைக் கருதாது பிறரையே புகழ்வர் என்ற சிறப்பையறிக.

30 கள்வர் - ஒன்றை மற்ருென்ருேடு இணைக்கும் பெருமான் இராமன் வருகை எண்ணியும், தனக்கு மனித முகம் பெறுவதை எண்ணி வழிபடும் சபரியை இராமன் சந்திக்க கருதினர்.

31 முழுத்தொண்டு - மனம், மொழி, மெய் மூன்ருலாகிய வழிபாடு. கமலக்கண்ணன் அருளால் சபரி கமலக்கண்ணினளாக மாறப்போவதைக் குறிப்பால் விளக்கினுர்.

எந்த நாளெவர் பூசைசெய் தேகினும்
அந்த நாளினும் அன்பொடு பூசைசெய்(து)
உய்ந்த நாள்வரு மோஎன் றுயிர்த்(து)உளம்
வெந்த நாள்பல கோடி விடுத்துளாள் 32

அவள்பெ ரும்புகழ் ஆயிரம் பாடவும்
தவள வாணி தயைசெயக் காத்துளாள்
இவள விற்சுருக் காவிடில் யானவண்
நுவல்க தைக்கு நுடக்கம்உண் டாமரோ. 33

நுடக்கம் யாதென ஞொள்கு மனங்கொள்வீர்!
இடக்க ராமவர் ஈனமெங் கென்றுரு
நடக்கு மாருதி நாற்பெருங் காதம்போய்க்
கிடக்குங் கொல்லெனும் கேலிஎன் றேர்மினே. 34

அம்பொன் மின்னிகர் அச்சப ரிப்பெண்ணோர்
பைம்பொன் மேனிப் பசுமயிற் சாயலாள்
செம்பொன் வில்லி திருக்கைக் கலைமகி
ழம்பொன் மான்முகம் ஓவலின் ஆசையாள் 35

ஒப்பத் தான்கொள் ஒருதுணை யில்லவள்
செப்பத் தாற்செய் திருக்குடம் ஏந்தியே
அப்ப வாவொ(டு)அவ் ஆம்பலம் பூம்பொய்கை
உய்ப்ப தாகும் ஒருவழிச் சென்றனள். 36

மான்முகம் மாறியது.

அங்கு நீடுமோர் ஆலடி நீழலின்
மங்கல் நேரிரு மன்னரைக் காண்டலும்
நங்கும் இன்னலும் நாணமும் தீர்தரப்
பொங்கும் தாமரைப் பூமுகம் வாய்த்ததே. 37

பிணைய தாமுகம் பேர்ந்துதன் பெண்முகம்
அணைத லாற்சப ரிக்குள்மெய் யன்பளாய்
இணையில் சீலத்(து) இராகவன் தன்பதத்
துணையில் வீழ்ந்து துதித்துநின் றுளரோ. 38

---

32 தான் நன்கு வழிபட்டாலும், யாரேனும் பிறர் வழிபடுவதைக் காணின் அதுபோலத் தாமும் வழிபடவில்லையே என வருந்தும் சபரி.

33 மாருதி – ஆஞ்சநேயர்; சிவபூசை செய்தன்றி இராமன் உண்பதில்லை. (இங்கு சபரியைப் பாடி நேரம் கடத்துவது முறையல்ல. கேலிக் கிடமாகும் என்றுர்.)

நுடக்கம் - முடக்கம்; ஞொள்கும் – இளைக்கும்.

35 செம்பொன் - - முகம் – மேருவை வில்லாக ஏற்ற சிவன் கையிலுள்ள ஆண்மான் விரும்பும் அழகிய முகம். சபரி பெண் ஆகையால் அம்முகமும் பெண்மான்முகம் ஆகவே ஆண்மான் விரும்புகிற என்ற நயம் காண்க. ஓவலின் – மாறுவதில்.

36 அப்புஅவாவொடு – நீர் எடுக்கும் ஆவல். பொய்கை – குளம்.

37 மங்குல்நேர் - மேகம் போலும் மேனியரான இராம, இலக்குமணர். “மையோ - - மழைமுகிலோ” என்பர் கம்பர். 38 பிணை – பெண்மான் முகம்.

கண்டி ராமன்நின் காதைசொல் லென்றலும்
பண்டி யன்ற பரிசெடுத் தோதினுள்
தொண்டி சைந்தஅத் தொல்சிவ லிங்கத்தை
அண்டி யான்தொழற்(கு) ஆசையுற் றேன்என்றான். 39

கைக்க டத்தொ(டு)அக் காரிகை முன்செல
மக்க ளன்னஇவ் வானவர் பின்செலும்
அக்க ணத்தில் அநுமனும் ஆலிபோல்
மிக்க லிங்கத் துடன்வந்து மேவினன். 40

அந்த நால்வரும் ஆன்மகிழ் மாதையில்
முந்த வந்து முளைத்த பிரான்எதிர்
வந்த டுத்தனர் வான்வழி அங்(கு)ஒரு
சுந்த ரப்பெருஞ் சோதிவந் துற்றதே. 41

ஆய சோதியில் ஆடவர் மூவரும்
மேய மாமகிழ் வெய்தி வியந்திட
மாய மான்முகம் மாறினள் மூழ்கினள்
காய மொன்றினிக் காண்பரி தாகியே 42

அவள டைந்தபின் அங்கநு மன்கொணர்
சிவனை யன்னவன் பூசை செயச்செய்வித்(து)
எவன ராமன் இவர்அபி ராமர்என்(று)
உவகை நாமம்அவ் வூரரர்க்(கு) இட்டனன். 43

மனுவல் லார்புகழ் மாண்பரு ணபுரி
எனுமவ் வூர்விடுத் தெய்தொரு மூர்த்தியை
இனுமெல் லோர்களும் ஈடுடை யார்தொழும்
அனும தீசன்என்(று) ஆதரிப் பார்களே. 44

துட்டர் தம்மைத் தொகுத்தொழிக் கும்திறற்
சிட்ட ராமன் தினந்தினம் எண்ணிலார்
தொட்ட ருச்சிக்குந் தொல்சிவ லிங்கத்தை
இட்ட மூர்த்தி எனக்கொடு பூசித்தான். 45

பூசித் தாகிப் புசிப்பவும் ஆயபின்
நேசித் தேஎதிர் நிற்கும் அனுமனை
ஆசித் தேநின் அரசையிங் குய்த்தி!யாம்
யோசித் துச்செய லொன்றுள(து) என்றனன். 46

---

40 கைக்கடம் - கையிலேந்திய குடம். மக்களன்ன – உருவில் மனிதராயும், தன்மையில் தெய்வமாயும் உள்ள இவர்கள். ஆலிபோல் – காற்றைப்போல்.

42 ஆடவர் மூவர் – இராமன், இலக்குமணன், அநுமான்; மூழ்கினள் – சோதியில் ஒன்றினள், காயம் – வேறு ஒரு உடல்.

46 நின் அரசை இங்குய்த்தி – உன் அரசனை வாலியை இங்குவரச்செய்.

அந்த வண்ணம் அவண்கொணர்ந் துய்த்தபின்
மைந்தர் நால்வரும் வான்திரு வட்டக்கல்
முந்த நின்றெரு மோசமும் செய்யொணுப்
பந்த மார்உடன் பாடுசெய் தாரரோ. 47

இறைவன் காட்சி

மற்றை யோரில் வருந்துமுன் வண்குலாம்
பொற்றை நேர்திண் புயங்கொள் இராமன்முன்
ஒற்றை வெள்விடை மீதுமை யாளுடன்
கற்றை வார்சடை யான்கவின் ருனரோ. 48

கண்டு தெண்டனிட் டுக்கரம் கூப்பியே
மண்டும் அன்பொடு தோத்திரம் வாழ்த்தலும்
தொண்டு வந்தனம் துன்புறல்! இன்பமார்
விண்டு நீஎனில் வேறலை ஆதலால். 49

என்ன வல்வரத் தார்எதிர்த் தாலும்நின்
தன்ன தாம்செயம் சத்தியம் அஞ்சுறேல்!
இன்னம் வேண்டுவ கேட்டிஎன்(று) எந்தமால்
பன்ன ரும்பல் படைகளும் ஈந்தனன் 50

யாது வேண்டும தோஅதெற்(கு) ஈதி!யான்
ஈது வேட்கைஎன் னேன்என ராகவன்
கோது தீர்மொழி கூறினன் கோல்வளை
மாது பாகன் உருமறைத் தானரோ. 51

போரின் தொடக்கம்.

இக்கி ஞனைமுன் ஈந்தஇ ராகவற்
சுக்கி ரீபன் தொழுததும், சொன்னதும்,
உக்கி ரத்தரக் கன்றன்என்(பு) உய்த்ததும்,
வக்கி ரத்த மராமரம் எய்ததும், 52

வாலி மாய வதைத்தும், மற்றவன்
போலி வன்களிப் பெய்தப் புரிந்ததும்,
ஆலி மாமழைக் காலம் அகன்றபின்
வேலி லங்குகைத் தம்பியை விட்டதும். 53

---

47 நால்வர் - இயல்பாயிருந்த மூவர்உடன் வாலி. சுக்கிரீவனுக்கு உதவியாக இராம, லட்சுமணர்களும், அவர்கட்கு உதவியாக வாலி, சுக்கிரீவனும் உதவியை மறப்பதில்லை என்று திருவட்டப்பாறையின்முன்பு உறுதிகொண்டனர்.

50 எந்தமால் – என்போன்றவர்களால்

52 அரக்கன் – துந்துமியின் எலும்பு.

53 மற்றவன்போல் - வாலியைப் போல (தம்பிமனைவியுடன் வாழ்ந்தது)
தம்பி – இலக்குமணர்.

தூது

தூது சென்றவன் தொல்இலங் கைப்பதி
மீது தீயிட வெந்ததும், நொந்தழும்
மாது சற்று மகிழ்ந்ததும், மற்றவும்,
ஓது தற்கிடம் ஈதன்(று) உணர்மினே. 54

ஆணையிடுதல்

இருப தாம்கரம் எய்தரக் கன்துணை
வருமொ ருத்தனும் வந்தடை யப்பெறும்
திருவ ருட்செய ராகவன் சேதுசெய்(து)
அருகு ளாரொ[டு] அடைந்தனன் அங்கரோ. 55

இரங்கும் நெஞ்சத் திராகவன் தன்னிடம்
குரங்கும் வன்கட் கரடியும் கூடியே
திரங்கு லாம்படை யாம்திறம் சிந்தித்தால்
வரங்குன் றுஅவன் மாட்சிமை தோற்றுமே. 56

அன்ற ரக்கரும் அஞ்சனை சேய்முனும்
வன்ற கைப்பெரு வானர வீரரும்
துன்ற மர்த்திறம் சொற்றிடற் பாலதோ
இன்ற திற்சற் றியம்பல்என் இச்சையே. 57

இப்பு ராணத் ததனை விரிப்ப[து]ஏன்
தப்பு வம்பெனும் தன்மையும் தள்ளிடா[து]
ஒப்பும் என்கவிக்[கு] ஊறுமுண் டாகுமோ
செப்பு நேரு முலைக்கலைச் செல்வியே. 58

தூது போயஅத் தொல்லைநன் னுளிலே
காதும் நீர்கொள் இலங்கணி என்றதோர்
மாது தன்னை வதைத்தனன் மாருதி,
ஈது போல்கதை எண்ணில வுள்ளவே. 59

தக்க சீர்ச்சுக சாரணர் என்றிரு
மக்கள் மேனிகொள் வல்லரக் கர்க்கொலா[து]
அக்க ணத்தில் அருள்சுரந் தான்அவன்
பக்க லுற்ற பலரும்நல் லோர்களோ. 60

தண்டு போற்றோர் தனியர சாம்அவன்
கண்டு வல்லரக் கக்குலக் காவலன்
மண்டு சென்னி மணிமுடி ஓர்பதும்
கொண்டு வந்தரு கிற்குவித் தானரோ. 61

---

54 அம்மாது – சிறையிலிருந்த சீதை.
55 துணை – விபீடணன்.
60 அவன்பக்கல் – இராமனை அடுத்தவர்கள் அரக்கராயினும் அமரபதவியில் அமைவர்
61 தண்டுபோற்று – சேனைகள் போற்றுமாறு; காவலன் – இராவணன்.

எனக்கும் ஆர்வஞ்சற் றிந்துள மாருதி
தனக்குத் தெய்வம் தயரதன் புத்திரன்
சினக்கு மால்விடைச் செல்வர்சொல் லாற்பெறும்
கனக்கு மேரு அனேகம் கடுக்குமே. 62

**எழுசீர்ச்சந்த விருத்தம்.**

63

போர் நிகழ்ச்சி.

தனன தனதன தனன தனதன தனன தனதன தனதானு
கனக மயமெனும் மதிள்க ளுடனகல் கடலின் நடுவளர் நகரின்வாய்
தினக ரனுமதி யமுமுன் விலகல்செய் திறல்கொள் ஒருபது தலையினன்
அனக ரகுபதி சமரின் முடுகலும் அடலொ டுறுபடை ஒருவியே
தனது வசமறு துயரொ டகல்வது சகல புவனமும் அறியுமே.

64

தான தனதன தான தனதன தான தனதன தானனு
தாழ்வொ டலறும்இ ராவ ணனுடனொர் தாயி னதுசிறு தாதைதான்
வாழ்வு நிலைபெறும் நீதி சொலினன்ம கோத ரனுமதை ஒவியே
வீழ்வு தனுபவி யாது விடுவது மேன்மை யலவென ஓதினன்
ஊழ்வெல் கையினுயர் சீதை விழைவெனும் ஊறு மிகவளர் வாயதே.

65

தந்த தனதன தந்த தனதன தந்த தனதன தந்தனு
கும்ப கனனெனொர் தம்பி உறுதுயில் குன்றி எழமுயல் விந்தையால்
அம்ப ரமும்அணு நொந்த(து) அவனும றிந்த ணனுடன்இ ரைந்துசூழ்
வம்பர் மொழிவழி வந்த திடரென மண்டு சினமிகை கொண்டுபோய்
உம்பர் நகவொர்கு ரங்கு கொளலின்ஒ ழிந்த தவனது துண்டமே.

66

தந்த தானன தந்த தானன தந்த தானன தந்தனு
தங்கை போலுமுன் அங்கு போயதொர் தம்பி வாய்மொழி கொண்டிலான்
அங்கு தோயஇ ருந்து வாழ்தலின் நன்று சாதலென் வன்பினன்
அங்கி ராகவன் முன்பல் போர்செய்த ழிந்து போயினன், என்செய்வான்
எங்கள் மாதைபு ரந்து ளார்அரு ளின்றி யார்சுகம் ஒன்றலே.

---

63 கடலின் நடுவளர் நகர் – இலங்கை. வாய் – வாயில், கோபுர வாயிலின்முன் சந்திர, சூரியர் விலகிச் செல்ல இராவணன் ஆணையிட்டான்.

64 இராமன் இலங்கையுள் வந்தமையறிந்து இராவணன் வருந்தினன். அப்போது மாலியவான் சீதையைச் சிறைவிடுக என்றான். மந்திரி மகோதரன் அதை மறுத்தான். ஊழ் உறுத்த இசையாமல் போருக்கெழுந்தான்.

65 அம்பரமும் நொந்தது – அசையாத விண்ணும் நடுங்கியது. சுக்கிரீவனால் கும்பகர்ணன் காதும், மூக்கும் துண்டமாயிற்று.

66 தங்கை – சூர்ப்பனகைபோல் மூக்கிழந்து வாழ்வதைவிட இராமனால் இறப்பதே மேல் எனக் கும்பகர்ணன் கருதினன். அப்படி – போரிட்டு மாய்ந்தான்.

67

தத்த தந்தன தத்த தந்தன தத்த தந்தன தத்தன

துட்ட இந்திர சித்தெ னும்பெயர் தொட்ட வன்பகை முற்றுநாள்
விட்ட அங்கதம் ஒற்றை துண்டுற வெற்பெ னுங்கரு டப்புள்வாய்
அட்ட தம்புயன் முற்ற ருங்கயி(று) அற்ற தங்கவன் உற்றதோர்
பட்டம் வந்துற நத்து நன்கைகள் பற்று குன்றின்ம ருத்திலே.

68

தான தானன தான தானன தான தானன தானன

வேவ வார்கணை கோடி தூவும்வில் வீர னுமவன் வேள்விபோய்
ஓவ லாதமு னோன்அ நாள்பகர் ஊக நாடிளை யோன்விடோர்
ஏவ தாலிரு கூறு மாயினன் ஈத லாதென னுதமா
பாவ னும்அதி காய னுதிய பாலர் மாய்வுநி லாயதே.

69

தான தந்தன தான தந்தன தான தந்தன தானன.

ஞால அந்தர பாத லங்கொள்இ ராவ ணன்குலர் யாரும்ஓர்
சால மன்றுசெய் சீதை கண்டதி தாப மொன்றநு மானும்,மா
சீல மொன்றிய தாதை கண்டயர் சீதை யும்,படு பாடெலாம்
மேல மிந்திடு மாறி யன்றது வீட ணன்செய்ச காயமே.

70

தத்த தத்தன தத்த தத்தன தத்த தத்தன தத்தன

அத்தி யிற்கணை விட்ட மித்தஅ டற்பு யத்தனோர் விற்குநேர்
வத்தி ரத்தொகை பத்தொ டுற்றவன் வைத்த விற்றிரள் எய்த்தசீர்
நத்தி விட்புலர் கெக்க லித்துந கைத்து வப்பஇ யற்றினர்
சத்தி யைத்தன்இ டத்த மைத்தவிர் தத்து வச்சிவ சித்தரே.

71

தந்த தந்தன தந்த தந்தன தந்த தந்தன தந்தன

அந்த ரந்தனில் அன்று வெஞ்சனி அஞ்சி டும்படி சென்றகோன்
மைந்தன் வென்றிய றிந்திர் ஐந்தலை வம்பன் நன்குவ ணங்கிடா(து)
உந்த கங்கொடெ திர்ந்தி கன்றிட வுஞ்செய் கின்றதி வன்றனன்
முந்த வந்துக ரும்பொ டைங்கணை மொய்ம்பி டங்கொள் அனங்கனே.

---

68 இளையோன் – இலக்குமணன்; ஏர் ஏவதால் – விட்ட அம்பால். இருகூறு - இந்திர சித்து இறந்தான். மாபாவன் – மிகுபாவமுடைய அதிகாயன்.

69 ஞால, அந்தர, பாதலம் – பூமி. வானம், நரகலோகம், செய்சீதை–மாய சீதையைக் கண்டு அநுமன் துன்பமுற்றுர். தாதை, சனகரின் மாயவடிவம் கண்டு சீதை வருந்தினள், சகாயம் – திரிசடை துணையால் உண்மை தெரிந்தனர் இருவரும்.

70 அத்தி – – – புயத்தன் – கடலில் அம்பை ஏவிய இராமன். விற்குநேர் – வில்லின் வன்மைக்கு எதிராக, கெக்கலித்து – தேவர் மகிழ்ந்து, இவ்வாறு செய்தது சிவன் என்பது.

71 கோன் - விண்ணிலுள்ள சனிமீது சினந்த தசரதன். இராமன் வெற்றியறிந்து பாராட்டாமல் இராவணனை எதிர்த்துப் போரிடவைத்தது மன்மதன் செயலாகும்.

72

தான தத்ததன தான தத்ததன தான தத்ததன தானன
மால ருட்பொலிவி னுலு தித்தவிர்ம கார தர்க்களும்இ ராமனே
போல மற்றிலர்மெய் மாதை யிற்கடவுள் பூர ணத்தயையி னலனுர்
ஆல மொத்தருண ராவ ணற்குதவ லால்அ வற்குரிய தாயதோர்
சூலம் விட்டனன்,அ வேளை நிட்டைகொடு தூள்ப டச்செயலை நாடினே

73

இராவணன் அழிவு.

தான தந்ததன தான தந்ததன தான தந்ததன தானன
மாய வஞ்சகம கோத ரன்றறெடு மானு கின்றவர்எ லோரும்நீ(று)
ஆய பின்(பு)அடல்இ ராவ ணன்றலைவி டாத ரிந்தும்வரல் மாறுமா(று)
ஏய அங்குறும்வி பீட ணன்சொல்முறை யே,த டிந்தனன்விண் ணூருளார்
தீய துன்பமொடி ராம னன்புமலி சீதை துன்பும்அழி வாயவே.

74

தான தத்ததன தான தத்ததன தான தத்ததன தானன
தேனி கர்த்தமொழி பேசும் அத்திநிகர் சீதை நட்பனிட மேவினுள்
ஆனி யுற்றெருழியி ராவ ணற்குரிய ளாமொ ருத்தியழல் மூழ்கினுள்
கூனி ருப்புவடி வாள ரக்கருள கோரம் அற்றறிஞ ராகவே
மேனி லத்தமரர் தாமு மெச்சியவி பீட ணற்கரச தாயதே.

75

தனன தானதன தனன தானதன தனன தானதன தனதன
அணிகு லாவுமயி லனைய சாயல்கொளும் அரமி னூர்ககன மருவினுர்
பணியு மாதவமும் இடைவி டாதுபுரி பவரெ லாமுவகை பெருகினுர்
மணிநி லாவுகளம் உடையர் மாதைநகர் வயின்அ நாளுதவும் வரமெ
திணிய ருதசிலைவிசைய ராமனது திறமை யாவர்களும் அறியவே. [னேர்

அறுசீர் விருத்தம்.

இரக்கம்என் றுரைக்கும் பெட்(பு)ஓர் எள்ளள வேனும் இல்லா
அரக்கரைச் செயித்த வென்றி யதைநினைத் தார்வம் எய்திக்
குரக்கின முழுதும் ஒன்று கூடிநின் றிறைஞ்ச ராமன்
சிரக்கர கம்பஞ் செய்து திருவுளம் மகிழ்ந்தான் அன்றே. 76

இந்திரன் தன்னை நெஞ்சத்(து) இராகவன் எண்ணி வேட்டான்
சந்திரன் தினமும் ஊரும் தனிவிமா னம்போல் ஒன்று
வந்திழிந் தது,பல் கோடி வானர ருடன்மேற் கொண்டான்
சிந்தியாங் கொருகூட் டத்தார் தியங்குபு நிலமேல் நின்றுர். 77

---

73 வரல்மாறுமாறு – இராவணன் தலைகளை வெட்டியபோதும் மீண்டும் முளைத்தன. விடணன் கூறியவாறு அம்பு ஏவ இராவணன் மாண்டான்.

74 ஒருத்தி – வண்டோதரி.

75 திருவாமாத்தூரில் பெற்ற வரத்தால் இராமர் வெற்றிபெற்றுர் என்பது.

76 சிரக்கம்பம் – தலையசைத்தல், 77 ஒன்று – இந்திரவிமானம்.

அன்னவர் தமக்காம் தாய்போன்(று) அவிர்ந்ததோர் வசந்தன் மாய்ந்த
இன்னலென் றுணர்ந்தப் போதே இணையில்மா ருதியை ஏவித்
தென்னவன் தன்பால் உற்ற சீவனை அயன்பால் உய்த்து
முன்னமைந் துற்ற வாறே மொய்ம்புடற் சமைத்துச் சேர்த்து. 78

கொண்டுவந் தளிப்பச் செய்தக் கூட்டமோ(டு) இவரக் கண்டான்
பண்டுமா முனியன் னேற்குப் பகர்ந்தபே றடைந்த தாக
மண்டுபே ருவகை எய்தி வாழ்ந்துளீர்! அந்த வண்மை
உண்டுகொல் நுமக்கு நன்கோர்ந்(து) உள்ளவா றுரைசெய் வீரே. 79

அந்தநாள் இலங்கை யூர்வாழ் அரக்கியர் இனத்திற் சிற்சில்
கந்தநாண் மலர்ப்பைங் கூந்தற் கன்னியர் களித்துள் அன்பால்
வந்தனர், அவரை எள்ளா மனத்தனு மணித்தேர் ஏற்றிச்
சுந்தரச் சனகிக் கேற்ற தொழிற்செயக் கொடுசென் றனே. 80

சென்றவன் சேது மூலத் தினிலொரு சிவலிங் கத்தை
அன்றருச் சனைசெய் தேத்தி அரக்கர்தம் மத்தி யாய
வன்றகைப் பாவம் நீங்கி மதுரையா தியவாம் ஈசன்
தன்றலம் சிறிது நோக்கித் தடமதில் மாதை புக்கான். 81

புகுமவன் ஆங்கு தான்முன் பூசைசெய் மூர்த்தி யன்றி
வெகுசிவ லிங்கம் அன்பால் வேண்டிய படிதா பித்தான்
நகுமுகத் தணங்கா ரோ(டு)இ ராக்கத நாரி மாரும்
தொகுபணி செய்யச் செய்தான் எனமுனூல் சொல்லிற்[று] அன்றே. 82

வந்தவன் உடன்செல் லா(து)அம் மாதையிற் சிலநாள் உற்றான்,
செந்தகைப் பொன்னால் வேண்டும் திருவுருப் பலவும் செய்தான்,
அந்தவூர்ச் சிவபி ரானுக்(கு) அவனிடும் அபிரா மப்பேர்
எந்தலோ கத்தும் தோற்றேர் இரவிபோன் றிலங்கிற் றன்றே. 83

கோவிலும் மதிலும், செம்பொற் கோபுர முதல வாய
தாவில்சீர்ப் பணிகள் யாவும் சமைத்ததல் லாமல் தண்ணீர்
வாவி,நற் கூபம், சாலை, மடங்கள்,சத் திரங்க ளாதி
ஓவில்புண் ணியங்கள் கோடி உஞற்றியும் உவப்புற் றனல். 84

இன்னவா ருங்குற் றேகும் இராமமூர்த் திகளும் இன்னும்
அன்னவா றுற்றுற் றன்பால் அழகர்தம் பணிசெய் வாரும்
என்னவோ தொகையான் தேரேன், எனக்கும்ஓர் இராமன் முன்னாள்
சொன்னதோர் கதையுண் டுண்மை சுருக்கிஈண் டுரைக்கின் றேனே. 85

---

78 தென்னவன் – எமன். பொய்உடம்பு சமைத்து – வசந்தன் உடலில் எமனுலகில் இருந்தவுயிரைப்பொருத்தி.

81 சேது – இராமேஸ்வரம். அரக்கர்தம் அத்தி – அசுரரை மாய்த்த பாவம்.

82 மூர்த்தி – அபிராமேஸ்வரர்; அணங்கார் – தேவமாதர், முன்னூல்–வடமொழிநூல்

அணிதிகழ் இராமன் காதை யார்எவண் அறைந்திட் டாலும்
துணிவுறும் அரக்கர் கூற்றுத் துலங்கடல் அநுமான் ஏகிப்
பணிவொடு வினவல் தொன்மை பாரினிற் பலரும் சொல்வார்,
மணியுமிழ் அரவக் கூட்டம் மன்னுபா தலத்தோர் தொண்டன். 86

அக்கதை பகரும் காலை அங்கதன் ஆழி ஏந்திப்
புக்கனன் முதலென் றேதப் பொருமையுற் றவன்அப் போதே
சக்கரம் நழுவு றுமற் றவளவா ரியிலோர் பாம்பிற்
பொக்கமென் றுயில்கொள் வான்பாற் போய்இது வினவச் சென்றான். 87

போயவன் வணங்கி நின்று போற்றுமுன் புவனம் உண்ட
வாயரி கருணை கூர்ந்து மாருதி வதனம் நோக்கி
நீயகி லத்துயாம் செய்ய நிகழ்இரா மாவ தாரம்
ஆயஎத் தனைதேர்ந் துள்ளாய்! அறைகுதி! அன்றி நின்போல். 88

எத்தனை அனுமர்க் கண்டாய் இந்திர பதம்வேட் டோனும்,
சுத்தநீ றணிந்து செம்பொற் சடையொடு துலங்கு வானும்,
ஒத்தவர் பலருள் ளார்நம் உந்தியில் உதிக்கை வேட்டு
மெய்த்தவ முயலும் நீஇவ் வழிக்கொடு மேவு கென்றான். 89

செப்புமம் மாற்றங் கேட்டுத் திடுக்கமுற் றநுமன் தாழ்ந்து
தப்புமுற்(று) ஒருவி யாண்ட தயைவியந் திறைஞ்சி மீண்டு
மைப்புய லனையான் சொன்ன வழியிலோர் வனத்தில் நாப்பண்
முப்புரம் எரித்தார் போல்ஐம் முகங்கொளோர் அநுமற் பார்த்தான். 90

தன்முகம் ஒன்றல் லாத சதுமுகம் வராகன், சிங்கம்,
இன்முகத்[து] இராமன், கற்கி எனஇலங் கிடக்கண்(டு) அஞ்சி
நன்முக மனும்சொற் றன்பால் நாண்மலர்ப் பதத்தில் வீழ்ந்து
நின்முச் சரிதம் தன்னிற் சிறிதென்பால் நிகழ்த்து கென்றான் 91

தண்டகோ தண்ட ராமன் சரிதமோர் சதகோ டிக்குள்
தொண்டனேன் சரிதம் ஐந்து கோடியே சொல்லும் இந்நாள்,
அண்டமேற் குடிகொண் டுற்ற அமரர்கேட் டறியார் அந்நாள்
கண்டவா னவர்என் பெல்லாம் கனற்கணன் களத்த வாயே. 92

---

87 பாதாள உலகில் இராமாயணம் படித்தபோது அங்கதன் கணை கொண்டதாக வினவிய அநுமன், தன் செயலை அவன் செயலாக இருப்பதறிந்து திருமாலிடம் கேட்டனர்.

89 அநுமன் பலருண்டு. நமது அவதாரமும் பலவுண்டு. நமது உந்தியில் நீ பிரமனைத் தோன்றித் தவம் செய்கிறாய் என்றுகூறி ஒருவழி கூறிச்செல்க என்றார் திருமால்

90 நாப்பண் – வனத்தினிடையில்.

91 சதுமுகம் - நான்கு முகம். அவை – பன்றி சிங்கன் – இராமன். குதிரை என்பதுடன் இயல்பான குரங்குமுகம் ஆக ஐந்து முகம். முகமன் – உபசாரம்.

92 சதகோடி – நூறுகோடி. இராமகாதை பலகோடி, அதில் அடியேனது ஐந்துகோடி. அப்போதிருந்த தேவர்கள் முழுதும் அறியாது மாண்டனர். அவர் எலும்புகள் சிவன் கழுத்தில் அணியப்பெற்றன என்று ஐந்துமுக அநுமான் இவ்வநுமானிடம் கூறினர்.

உற்றன எனது வேட்கை உரைக்கரும் கதிஒன் றேயாம்
மற்றகைப் பொலிவார் இந்த வனத்திலோர் கிணறுண்(டு) அஃதோர்
நற்றவ னுனுண் டாமந் நாளின்முன் னளே செய்த(து)
எற்றரும் ஆழிக் கூட்டால் நிறையில்யான் அடைவேன் என்றும். 93

என்னையாட் கொண்ட ராமன் எழிற்கைமோ திரந்தான் ஈதுன்
முன்னைநாள் வீழ்ந்த[து] இந்நாள் முழுமையிற் பாதி யாய(து)
உன்னைநேர் பலர்க்கண் டுள்ளேன் ஓர்தய ரதன்சே யேனும்
தென்னைசூழ் திருவா மாத்தூர் சேர்தரா[து] உய்ந்த தின்றே. 94

உலகினுக் கிடர்செய் கின்றோர் ஒருங்[கு]இரா வணன்தன் கூறே
இலகதற் கிதம்செய் கின்றோர் இராமனங் கிசத்தி னேரே
திலகவா னுதற்கொம் பன்ன சிவையிடம் சிவன்சொல் காதை
அலகில்சீர்க் கந்தன் தான்ஆம் அவன்என அறைந்த துண்டே. 95

எவ்விடம் உனதோ அங்கே ஏகுதி என்றும் சொன்னன்
வெவ்விடப் பாம்பு போலும் வீரவெங் கோரம் நீங்கி
இவ்விடர் தவிர்ந்துய்ந் தோமென்[று] இணையில்பே ருவகை பொங்க
அவ்விடம் சேர்ந்தான் அந்தோ அநுமனும் அறிஞன் தானே. 96

என்மன வெளியி னூடோர் அநுமன்வந் திலங்கு கின்றன்,
நன்மைகள் பலசொற் றுள்ளான், நவின்றவா நடக்கக் காணேன்
வன்மநோய் முழுதும் தீர வயங்குநாள் எந்த நாளோ
புன்மைசால் பொய்யன் றுண்மை புலவர்முற் றுணர்வார் அன்றே. 97

மயிலிரா வணனும், நூறு வதனரா வணனும் போலப்
பயில்பலர் இருந்தா ரென்றும் பாருல குரைப்ப துண்டு
குயில்நிகர் சனகி கேள்வன் கொல்லமாய்ந் தவர்க்கும் கூறில்
சயிலவில் உடையா னன்றித் தஞ்சம்வே றில்லை மாதோ. 98

குறைபடு தவமுள் ளார்கள் கொடுமைசெய் திடுவா ராகில்
நிறையருள் பெற்றோர் தம்மாம் நீக்குதல் வழக்க மே,யான்
அறையுமவ் விருவர் தாமும் அசுரர்கோ அமரர் கோவாம்
மறைமுத லியப்ப னூல்கள் வகுத்திடப் படுவார் அன்றே. 99

---

93-94 உரைக்கரும் கதி - சொல்லில் அடங்காத முத்தி. இந்தவனம் - வன்னிவம், ஏற்றரும் - எல்தரும் (சூரிய ஒளி) இராமன் அணிந்து சீதைக்களித்த மோதிரங்கள்பல இதில் உள்ளன. ஒவ்வோர் இராமவதாரத்திலும் இராமன் இதில் மோதிரம் இடுவர். அதன்மூலம் கிணறு நிறையுமானல் எனக்கு முத்தி. இப்போது பாதியே நிறைந்துளது. ஆதலின் இங்குள் ளேன். எந்த இராமனும் இங்கு வந்து வழிபடாமல் இரார். உன்போன்ற பல அநுமார்களைக் கண்டுள்ளேன் என்றது.

95 கந்தன் - - - என - முருகப்பெருமான் தான் என்று சிவன் கூறியுள்ளார்.

96 வீரவெம் கோபம் - தன்னைவிட வேறு அநுமனில்லை என்ற செருக்கு.

97 நூலாசிரியர் சிலநாள் அநுமன் உபாசனை செய்தனர் என்ற குறிப்பு.

98 இராமர், அநுமன், பலராதல் போல இராவணனும் பலராவர் என்பர் உலகோர்.

99 யான் - - - இருவர் - இராமர், இராவணன்.

உத்தமத் தலங்கள் தம்முள் உயர்திரு வாமாத் தூரில்
நித்தமும் பூசை செய்து நெடுஞ்சிலை இராமன் உற்ருன்,
அத்தனும் கருணை நீடி அநுதினம் சேவை ஈந்தான்,
சித்தரும் முனிவர் தாமும் திரள்படத் தொழவந் தாரே. 100

தென்மொழிக் கிரந்த மன்றித் தெலுங்குகன் னடமுற் கூறும்
பன்மொழி யாலும் பல்லோர் பாடினர் இராமன் காதை
நன்மொழித் திருவா மாத்தூர் நாதனைப் பூசித் துய்ந்த[து]
இன்மொழித் தமிழால் என்ஞல் ஏன்றமட் டியம்பி னேனே. 101

இனியவன் இவனைப் பூசித்[து] எழுந்தபோ தொருநாள் எண்ணில்
முனிவரர் களும்ஒன் ருகி முகுந்தநா யகனும் நீ,இம்
மனிதவே டத்தால் எம்மை மயக்கிடேல் எனநின்(று) ஏற்பச்
செனிதரு தெளிவின் தன்மை தெரிந்தவா றுரைக்கின் றேனே. 102

இராமபிரான் வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 671.



100 நித்தமும் - - உற்ருன் - இறைவன் காட்சி யீந்தான். இங்கு வழிபட்டபின் இராமன் சென்ற செயலைக் கூருதலால் இன்றும் பூசை செய்தவாறுள்ளார் என ஆசிரியர் கூறும் சிறப்பை உணர்க.

# தெளிவு - ஞானப்பகுதி.

இப்புராணம் பாடத்தொடங்கிய மறுநாள் சுவாமிகள் மனவெளியில் திருமால் ஒரு வைணவ வேடத்தில் தோன்றி இப் பகுதிச் சிறப்பைக் கூறியதாகக் கூறுவதால் நாம் கற்பிதமாகக் கூறவில்லை என்பதை விளக்கினர். சைவ, வைணவ சமயவேறுபாடுகளை அறவே நீக்கி (மயக்கத்தை நீக்கி) ஒன்றே என்ற உறுதியான உண்மையை விளக்குவதால் இப் பகுதிக்குத் 'தெளிவு' என்ற பெயரமைத்தனர் ஆசிரியர்.

**எண்சீர் விருத்தம்.**

தோற்றுவாய்

பூரமெனும் வாகனத்தில் ஏறிப் போய்ப்போய்ப்
புலவர்தம்நாத் தொறும்உலவும் புனித வாணி
சீரவிர்செங் கமலமலர்த் துணையே போலும்
திருவடிகள் நன்கறியச் செப்பு கின்றேன்
மாரனைச்சுட் டளித்தபிரான் மாதைச் சீர்த்தி
வண்டமிழாற் சொலத்துவக்கும் மறுநாள் என்னுள்
ஓருருமை வயிணவன்போற் றிருமால் தோன்றி
ஒளிருமிந்தப் படலவண்மை உரைத்த துண்டே. 1

உரியவரல்லாதார்

தக்கமறு சமரசப்பே ரானந் தத்தால்
தண்ணருட்சீர் பொருந்தாப்பொய்த் தவத்தி னோர்க்
இக்கவியிப் பிரபந்தத் தினுக்காம் என்னும் [கும்
இயல்பறியாப் புன்புலமை யிசைந்துள் ளார்க்கும்
கைக்கனக மேதுணைஎன் றுவக்கின் றார்க்கும்
கவினுமாத் தூர்ப்பெருமை கழறி னலும்
மிக்கதெளி வாமிதுசொற் றிடலா கா(து)என்
விதிவிதித்தார் வியாசன்முதல் மேலோர் தாமே. 2

முனிவர்களின் ஐயம்

நவகோடி சிவலிங்க பூசை செய்த
ராவணனைத் தடிந்தசெய ராமன் தானும்
சிவபூசை சேதுவினில் ஒருநாட் செய்து
திருவாமாத் தூரில்மிகச் செய்தல் கண்ட
தவயோக முனிவரர்கள் பலரும் கூடிச்,
சதுர்வேத முடிவினிற்சந் தேகம் எய்தி,
இவனரோ அவனரோ அறிகு வோம்என்(று)
இருவருக்கும் ஒருங்குதுதி இசைக்கின் றரே. 3

---

1 வாணி – கலைமகள், மாரன் – மன்மதன்.

2 கனகம் – வாழ்விற்குப் பொன்துணை, ஆனல் அதையே முழுதும் நம்பக்கூடாது.

3 வேத முடிவு – சிவனே பரம், திருமாலேபரம் என்று கூறுவதால் ஒன்றுதானே முதலாக இருக்கமுடியும் என்று ஐயப்பட்டனர். வழிபடும் இராமன் (திருமால்) யார், வழிபாட்டுக்குரிய சிவன் யார் என அறியலாயினர்.

### சிவ, விட்டுணு துதி

மழுவொடுமான் கரத்தணிந்த வள்ளால்! போற்றி!
வளையுடன்ஆ ழியும்பிடித்த வரதா! போற்றி!
எழுதரும்நான் மறைக்கிழவற் பயந்தாய்! போற்றி!
இரங்கஅயன் தலைகவர்ந்தோட்(டு) இரந்தாய்! போற்றி
தொழுமவர்வேட் கையின்வழிச்சென் றருள்வாய்! போற்றி
சுரர்தமைக்காத்(து) அசுரர்களைத் தொலைப்பாய்! [போற்றி!
பழுதறுபே ரம்பலத்தில் நடிப்பாய்! போற்றி!
பாற்கடலிற் றுயில்கூரும் பகவா! போற்றி! 4

அகண்டபரி பூரணமாய் நிறைந்தாய்! போற்றி!
அடியவர்தம் பணிபுரிதற்(கு) அஞ்சாய்! போற்றி!
திகந்தமுடைத் தேவர்தொழும் தேவா! போற்றி!
திருவருட்பே ரானந்தச் செல்வா! போற்றி!
முகங்கரம்தாள் அளவில்பல கொண்டாய்! போற்றி!
முத்தொழிலும் செயத்தகுமோர் முதல்வா! போற்றி!
பகர்ந்தமறைப் பொருள்முழுதும் ஆனாய்! போற்றி!
பரவவல்லார்க்(கு) அருள்புரியும் பரனே! போற்றி! 5

### முனிவர்கள் வேண்டுகோள்

என்றுவெகு வாத்துதித்த முனிவோர் தம்மை
இராக்கதர்க்கோர் கூற்றனான் இனிது நோக்கி
இன்றுமது வேட்கைஎன்என் றிடலும் சொல்வார்
இரவிகுலத்(து) அரசன்மகன் என,நீ எம்முன்
நின்றுணர்த்தல் தகுதியன்[று]உன் வடிவம் காட்டி,
நிகமாந்தத்(து) உண்மையினை நிகழ்த்தி, அப்பால்
வன்றுளைக்கைக் களிறனையார் மதவா தத்தால்
வாட்டமுறாத் தெளிவதனை வழங்கென் றாரே. 6

### இராமன் வடிவம், திருமால் வடிவமாக மாறியது.

அக்கணமே மரவுரிபொற் றானை ஆய(து)
அடற்றுணைத்தோள் நான்காய[து] ஆழி சங்கம்
மிக்கவிர்ந்த அபயவர தமும்உண் டானே
விதுமுகம் கண் ணிறம்,இவைவே றாக வில்லை;
சிக்கம்முடி மிசைஒருகி ரீடம் கோடி
தினகரராற் சமைந்தாங்கு திகழ்ந்த(து), அண்டர்
தொக்கனந்தம் தரம்வணங்கும் பதங்கள் தோன்றச்
சுடரனைய கலுழன்மிசை தோன்றி னானே. 7

---

6 முனிவர்கள் இராமனைப்பார்த்து எங்களால் வணங்கப்படும் உனது கோலங்காட்டி, வேதமுடிவை அருள்க என்றனர். அதுதாழ்வு என்பாரை மதமுடைய யானையோடு ஒப்பிட்டார் மதம் கொண்டிருத்தலை நோக்கி என்க.

7 பொற்றானை - பொன்னுடை. சிக்கமுடி - முடித்தசிரம், தினகரர் - சூரியன். தொக்கு - கூடி, கலுழன் - கருடன்.

### முனிவர்கள் பாராட்டல்.

கண்டவுடன் பேருவகைக் கடலின் மூழ்கிக்,
களிமலிவாற் குதித்தாடிக், கரங்கள் கூப்பி,
தெண்டனிடற் குரியஇந்தக் கோலத் தாய்!நீ
தினகரன்தன் மரபிலொரு சேயாய்த் தோன்றித்,
தண்டணிகைம் முனிவர்பலர் தம்மைத் தாழ்ந்து,
தாடகையா தியர்மடியச் சரங்கள் ஏவி,
வண்டலர்த்து மலர்க்கூந்தற் சனகி தன்னால்
வருக்கரிய இன்பதுன்ப வாரி யாழ்ந்து. 8

வானரங்கள் பலகோடி, கரடி கோடி,
மதர்த்தவிழிக் கார்அரக்க மகளிர் கொஞ்சம்
ஆனபடை புடைசூழ விமானம் ஒன்றில்
ஆகாய வாசரெல்லாம் அஞ்சி நாணப்
பானல்மலர் வயல்மாதைப் பதியில் வந்த
பழங்கருணை என்?எனலைப் பலவாப் பேசி
மானமுனி வோர்களெலாம் வீழ்ந்து வீழ்ந்து •
வசமிழந்தார் உடன்கருணை மாயன் சொல்வான். 9

### இராமபிரான் அருளுரை

எம்மையும்எம் மனமலது வசிப்ப வேறோர்
இடமிலனும் சிவன்தனையும் எண்ணி, ஏத்தி,
உம்மையினும் நீர்பூசை புரிந்துள் ளீரால்
உமக்கிந்தக் கடன்பாட்டுக் குடன்பா டுற்றேன்
மும்மைவினை களும்புரிவார் மூவர் என்ன
முதுமறைவாக் கியங்கள்பல மொழிந்திட் டாலும்
கொம்மைமுலை யொருபாதி தன்னிற் கொள்வான்
குணகணங்கள் பிறரெடுத்துக் கூறொண் ணுவே. 10

### சிவலிங்க வடிவம், சிவ, விட்டுணு அமைப்பு எனல்.

யாமும்அவன் றனும்அயல் அல்லம் என்றே
எண்ணிறந்த பலவேதம் இசைக்கு மேனும்
தீமுகவன் கணர்அறிய மாட்டார் அந்தோ!
செகம்வே(று)யான் வே(று)எனக்கச் சிவன்வே [றென்னும்
பாமுழக்கம் பலசெய்து வாத மிட்டுப்
பகலிரவா உள்ளமிகப் பதைத்து வாடிக்
கோமுகமும் இலிங்கமுமா நின்ற உண்மை
குறியாராய்ப் பவக்கடலிற் குலைவார் அன்றே. 11

---

8 தண்டு - முனிவர். யோகதண்டமுடைய தவசி. 9 பானல் - நீலோற்பலம்.

10 உம்மையினும் - இடைக்காலத்தும், மும்மைவினை - படைத்தல், காத்தல், அழித்தல்.

### மூவுருவும் வேறல்ல எனல்.

அகிலசரா சரமுழுதும் பிரமன் கோலம்,
அதிற்கலந்த வியாபகமென் அறிவின் தன்மை
பகர்வரிய தாயசிவ பெருமான் என்னைப்
பார்த்திருக்கும் சாட்சி,இவை பகரிற் றேற்று.
முகில்வருங்கால் அதிற்கலந்த நெருப்புத் தோற்று
முறைபோலும், பலவாய முன்னைச் சென்மத்[து]
எகினமுளான் கையெழுத்தால் தவஞ்செய் திட்டோர்
எனைச்சிவனிற் பிரித்திகழார், இடர்தீர் வாரே. 12

### தன்னிலை விளக்கல்.

பூவின்மண மெனக்,கனலிற் சூடு போலப்,
புராரிஎன்னிற் கலந்துள்ளான், பொய்யன் றுண்மை
ஆவியறி வெனப்பிரித்து வாதிட் டாற்போல்
அரன்அரிஎன் றிகலிமிக அயர்வார் பல்லோர்,
பாவிகளுக் கெத்தனைதான் போதித் தாலும்
பகைதவிர்ந்த சமரசத்திற் பழக மாட்டார்
சேவில்இவர் வாற்(கு)அயலன்(று) யான்என் றுலும்
தினம்பூசை செயுங்கடமை தீர்ந்தி டேனே 13

### இரண்டுரு ஒன்றென இசைக்கும் உண்மை.

என்னையன்றிச் சிவனுக்கோர் ஆக்கம் இல்லை,
எனக்கும்அவன் தன்னைவிட்டோர் இன்பம் இல்லை,
முன்னைமறை உபநிடத முடிப்(பு)இ தேயாம்,
மூதுணர்ந்தோ ரேஇதனை முறையிற் கொள்வார்,
பின்னையுள்ளார் பலவிதமாம் விகற்பம் பேசிப்
பிறப்பிறப்பிற் சுழன்றிடுவார், பிரம ஞானம்
தன்னைஎதென் றுராயில் பொருளொன் றென்னும்
சரதமே யாம்அறிமின்! தவத்தி னோரே. 14

சிவநிந்தை யால்எனக்குக் கோப மேயாம்
திருத்தியில்லை, எனை இகழ்ந்து செப்பி னுலும்
அவனும்சந் தோடமுறுன், சினமே கொள்வான்
அயனறிவான், அகத்தியனோர் அறிஞர் தேர்வார்,
இவனல்லோன் அவன்பொல்லான் என்னப் பேசும்
இளமதியோர் தமைத்திருத்தற்(கு) எவரால் ஆகும்?
தவமொன்றே துணையாம்என்(று) உணற்று வாரேல்
தானேமெய்ஞ் ஞானநிலை தலைக்கொள் வாரே. 15

---

12 சரம், அசரம் - இருப்பனவும், நடப்பனவும் உடைய உலகம். எகினம் உளான் - அன்ன வாகனமுடைய பிரமன்.

13 புராரி - சிவன், ஆவி - உயிர், அறிவு - உணர்வு. சேவில் - இடபத்தில்

14 உபநிடதமுடிவு - வேதமுடிவான ரகசியம். பிரமஞானம் - கடவுளை எதுவென அறியும் ஒன்றான அறிவு.

அண்டர்பிரான் முதலாம்எண் டிசையி னேரும்
அயனும்என்னை மதித்தாங்கே அரனை நாடித்
தெண்டனிட்டுத் துதித்துள்ளேன், அவனே என்னைத்
தெரிவன், அவன் தன்னையும்நான் தெரிவேன், சற்றே
மண்டலத்தும் விண்டலத்தும் பாதா ளத்தும்
மற்றொருவர் அனையரிலர் மயங்க வேண்டாம்
துண்டரிக மதவாதர்க்[கு] இந்த உண்மை
தோற்றாது நன்குணர்ந்து துயர்தீர் வீரே, 16

உண்மையுரைத்தல்

சகலபுவ னங்களும்என் சொருப மேயாம்
சத்தியமாய்ச் சிவனேஎன் றன்ன(து) ஆவி
அகளமுமற் றைச்சகளந் தானும் எம்மை
அன்றியில்லை உணர்வதெளி தன்றன்(று) உண்மை
இகதலத்தில் எவனேனும் என்னை நீர்கண்(டு)
இரந்தாங்(கு)ஈ சனைவினவில் எனையும் சொல்வான்
மகரசலம் சூழுலகில் தெய்வம் ஒன்றே
வல்லதெனத் தெளிதல்பெரு வாழ்வாம் மன்னே. 17

ஒன்றேஎன் பார்க்கவண்ணம் ஓங்கி மற்றொன்(று)
உளதென்றால் அவ்வாறும் ஒளிரும் தன்மை
நன்றேஎன் றேற்ப(து)அருட் கடமை கண்டீர்!
நான்றானே அவன்றானே நன்கா ராயில்
வன்றேவென் றையமுற்று வருந்த வேண்டாம்
மாதேவன் ஆணை; அவன் வடிவே எல்லாம்
பொன்தேடு வார்புரையத் தவஞ்சேர்க் கின்ற
புனிதரன்றி எந்தமக்கோர் பொருள்வே றின்றே. 18

எண்ணில்பல அவதாரங் களில்யான் அன்பால்
இத்திருவா மாத்தூர்வாழ் இறைவன் தன்னை
நண்ணிஉபா சித்துவரம் அனந்தம் பெற்று
நானிலத்தில் விளையாடி நலஞ்செய் துள்ளேன்;
புண்ணியபா வங்களொன்றும் எனைச்சே ரா[து]அப்
புனிதனையே போய்ச்சேரும் புகன்றேன் உண்மை,
திண்ணியமா தவமுறும்நீர் இந்த வாறு
தியக்கமுற்றால் மற்றெவர்தாம் தெளிவா ரன்றே. 19

---

16 எண்டிசையினோர் – எட்டுத்திசையில் உள்ளோர், துண்டரிக – துட்டத்தனமான.

17 அகளம் – அருவம், சகளம் – உருவம், இரந்தாங்கு – விரும்பியதுபோல. மகரசலம் – கடல்நீர்.

18 வன்தேவு – வலிமையான தெய்வம்

### சொரூப சித்திநிலை.

மின்போலும் சடைத்தலையிற் பிறைக்கீற்(று) ஆர
விளங்குகின்றோர் களும்,ஆழி வெண்சங் கேந்தி
என்போலத் திகழ்வாரும் பலபே ருள்ளார்,
இவரெல்லாம் எந்தம(து)அங் கிசத்தி னோரே
அன்போடு நீறணிந்தோர் திருமண் இட்டோர்
ஆதியரும் பின்னரங்ஙன் ஆவார் தாமே
பொன்போலும் உமையவளே போலும் பற்பல்
பூவையரும் வாழ்ந்துள்ளார் புனித ராயே. 20

### முன்னையபடியே தன்னுருவெய்தல்.

அணுத்திரணம் ஆதியவும் பரமே என்ன
ஆகமவே தங்களெல்லாம் அறைந்த உண்மை
கணுப்பொலிவார் பராய்மரத்தின் காய்ந்த கோணற்
கட்டையொக்கும் கருத்தினர்க்குக் கசப்பே யாகும்
நுணுக்கமுறும் நுந்தமக்[கு]யான் இந்த மட்டும்
நுவன்றதுவும் மிகைஎன்றான், நோக்கும் போதே
விணுட்கலந்து பழையபடி இராம னாகி
விடைபெற்றே விமானமிசை மேவி னானே. 21

### அயோத்தி செல்லல்.

பரிசனங்கள் தமிழ்இலங்கை நீத்து வந்த
பைந்தொடியார் அல்லாத பலர்தம் மோடும்
விரிககன வழிக்கொடுபோய் அயோத்தி மேவி
விண்ணவரும் மண்ணவரும் வியந்து போற்றத்
துரிசறுமா மணிமகுடம் வசிட்டன் கையாற்
சூட்டிடப்பெற்[று] அனைவோரும் துயர்தீர்ந் துய்யச்
சரியணிகைக் கலபமயில் அனைய சாயற்
சானகியும் புவியும்மகிழ் தகைசெய் தானே. 22

### அபிராமேசனை அயோத்தியில் நிறுவல்

ஓங்குபுகழ்த் திருவாமாத் தூரில் தாமுன்
உரைத்தஅபி ராமனெனும் ஒருபேர் மட்டும்
தாங்குபுமற் றுள்ளபெயர் அனைத்தும் நீத்துத்
தண்ணருள்வா ரிதிபெருக்கும் தாணு மூர்த்தி

---

20 அங்கிசத்தினோர் - சிவசாரூபம், விட்டுணுசாரூபம் பெற்று, எங்கள் அமிசமுற்ற சொருபசித்தர் பலர் உளர். இதுபோல ஒவ்வொரு சமயத்திலும் உண்டு.

21 பராய்மரம் - கணு, வளைவு, பசையற்றிருத்தல் வறண்டுபோதல் இவைகளையுடைய மரம்போல பிணக்கம், அழுக்காறு, பிடிவாதம் உடையோர் மதவாதிகளாவர். நீங்கள் அவ்வாறல்ல என்று கூறியவாறே இராமனாகி விமானத்தில் அமர்ந்தார்.

மாங்குயிற்பே டனையமுத்தாம் பிகைதன் னோடு
மனவெளியிற் றிகழ்ந்தபடி மற்றோர் காண்பான்
ஆங்குமொரு திருக்கோயில் அமைத்து நாளும்
ஆதிசைவ ராற்பெரி[து]ஆ ர்தித் தானே. 23

அறச்செயல் நிலவ ஆட்சி செய்தல்

அன்னவன்வெண் குடைநிழலில் இருந்த பார்ப்பார்
அருமறையில் தமக்குரைத்த வாறும் அன்றி
என்னதொழில் எதனிமித்த மேனும் செய்யா
இயல்பினராய் மூத்தவர்கள் இருக்கத் தம்மிற்
சின்னவய துடையவர்கள் இறத்தால் அந்தச்
செயவீர னூற்றிருப்பித், திருத்தி எய்திக்
கன்னல்விற்கைச் சித்தசன்போர் மலிவுற் றாலும்
கருமநிலை பிறழாமற் கவின்றார் அன்றே. 24

இராமன் அரசின் இனிமை கூறல்.

சிறையுறுபாம் பணையகணை கோடி சிந்தித்
திண்டோள்ஆ யிரமுடைய தேர்வேந் தாதி
நிறைவலிமன் னவர்பலர்க்கொன் றவர்தம் செந்நீர்
நெடுங்குளத்தில் தருப்பணம்செய் நியம முற்றும்
மறையவனைச் செயித்தஇரா கவன்றன் செங்கோல்
மாநிலமுற்(று) ஓச்சுகையில் மற்றோர் மன்னன்
குறைமுழுதும் விளைநிலமே போலும் பொல்லாக்
கொடுங்கோல்ஓச் சிடலுறுமோ குறித்(து)ஓர் வீரே. 25

அண்டமுழு துண்டுமிழ்ந்த நெடியோன் தானே
அருந்தவத்தால் தயரதன்சே யாகித் தோன்றி
மண்டலமும் விண்டலமும் பிலமும் பொல்லா
வல்லரக்கன் கொடுங்கோலால் வருந்தா(து) ஆண்ட
புண்டரிகக் கண்முகில்நேர் இராமன் தன்னைப்
புரவலரில் ஒருவனென்றார் புலவர் சில்லோர்,
கண்டவுடன் கார்த்தவீ ரியனைக் கொன்றான்
கலையும்வில்லும் புகழும்நல்கல் கருதா ராயே. 26

---

23 அயோத்தியிலும் அபிராமேஸ்வரன், முத்தாம்பிகை கோயில்அமைத்து ஆதிசைவ ரால் வழிபாடு செய்வித்தான்.

24 வெண்குடை – மன்னர்க்குரியகுடை, சித்தசன் – மன்மதன், கருமநிலை - கடமைகள்.

25 பல பேரரசர்களைக் கொன்று அந்த இரத்தத்தில் தந்தைக்குத்தருப்பணம் செய்யும் நியதிகொண்ட பரசுராமர்.

26 பிலம் - பாதளம், வல்லரக்கன் - இராவணன், புண்டரிகம் – தாமரை. கார்த்த வீரியன் - தந்தையான சமதக்கினியைக் கொன்றவன், அவனைக் கொன்றவன் பரசுராமர், அவனை அடக்கியவர் இராமர் என்று பாராட்டுவர் புலவர்.

### பரசுராமன் பலத்தினை ஒடுக்கல்.

வாணிபரும் சூத்திரரும் பிறரும் தந்தம்
மரபினுக்கா காதபெரும் வம்பு செய்தால்
தோணிலவு வாட்படையாற் றனே போய்ப்போய்த்
துணிக்கவல்ல இராமன், அவன் தோற்றற் கான
ஏணிலவு குலத்தரெண்ணில் பலரைக் கொன்றேன்
இளைத்துநடு நடுங்கியுற்ற இறுமாப்(பு) ஒய்ந்து
நாணியும்கொன் றிலன், விடுத்தான் இகழ்ந்தா லும்
நவின்றிலான், முதற்குலத்(து)ஓர் நரன்என் றோர்ந்தே

### மாதைப்பரமன் மாண்பு.

இன்றுபடும் பாடுதவிர்ந் திட்டால் நாளை
இராமனர சுறினும்உறும் என்று லோகத்[து]
ஒன்றுபட எல்லோரும் சொல்லல் ஓர்ந்தால்
உலகளித்தோர் இனத்தினுள்அவ் ஒருவன் தான்மேல்
என்றுவிளங் கிடும், அதற்குச் சகாய மாய(து)
யாதெனநன் காராயில் இமயப் பாவை
துன்றுமிடத் தினனாகித் திருவா மாத்தூர்
தொல்கோயில் நடுக்குலவு சுயம்பு தானே. 28

### நூலாசிரியர் நோன்பு விளக்கல்.

இந்தமட்டில் ஈசனருள் நந்திக்(கு) ஓதி
ஏற்றபடி சனற்குமா ரன்றான் கேட்டு
நத்தமக்கோர் பொதுக்குருவாம் வியாசன் கோப்பாய்
நற்காந்தந் தனிலுளநா கரகாண் டத்தில்
வந்தஎழு சருக்கத்தின் கதையைச் சேர்த்(து)என்
வாக்கில்வளர் கலைவாணி வகுத்த காதை,
எந்தமது விரதமுடி வதற்கு மூந்நூ(று)
இயற்கவிசொற் றிடல்வேண்டும் இன்னும் மன்னே 29

### முடிவுரை.

இத்தெளிவுப் படலத்தின் ஞானக் கூறும்,
இலங்கநுமாற்[கு] ஐம்முகத்[து]ஓர் இனவன் சொன்ன
மெய்த்தெளிவும், முருகனதங் கிசத்தோ னை
விட்டுணுக மலயோகி வென்றிப் பாடும்,

---

27 பரசுராமர் வலிமை இழந்து நாணி நின்ற போது இகழவும், கொல்லவும் செய்யாது அந்தணக் குலத்துப் பிறந்தவர் என்பது பற்றிப் பிறமரபினர் தம் தொழிலைச் செய்ததால் தண்டித்தார்.

28 உலகு அளித்தோன் - உலகை ஆண்ட மன்னர்கள். ஒருவன் – இராமன். பெருஞ் சிறப்பு இராமனுக்கு வந்ததற்குக் காரணம் அபிராமப் பெருமான் அருளாகும்.

29 பொதுக்குரு – அறுசமயத்துக்குப் பொதுவான புராணம் கூறியவியாசர் எந்தமது விரதம் – தலபுராணத்தை 1000 பாட்டில் அமைப்பதாகக் கொண்டநியதி.

எத்தெளிவும் மயக்கமும்,எந் நன்றும், தீதும்,
இதுளடங்கு வனவாம்,மற் றெல்லாக் கூறும்
பொய்த்தெளிவுப் புலவருக்கும் கருணை செய்யும்
புகழ்க்கலைமா தெனக்களித்த பொருள்க ளாமே. 30

சூதபுரா ணிகர்பதத்தைக் கருத்தால் நாடிச்
சுற்றிலிருந் தவர்,கதைகொள் சுகுணர் ஆனூர்
பாதமலர்த் திரளுருக்கு மகரம் சூடிப்
பன்னிரண்டு சமயமும்தன் பங்காக் கொள்ளும்
போதமது பிறந்திருந்தும், சைவம் ஒன்றே
பொருவிலதாம் எனும்நிலையிற் பொருந்தி நின்று
சீதநதிப் பம்பைநன்னீர்த் திருவா மாத்தூர்ச்
சிவன்இந்தக் கலியுகத்திற் செய்த சொல்வாம். 31

இவ்வளவும் பூருவகாண் டமென்றிட் டிப்பால்
இயம்புதலை உத்தரகாண் டமென லாகும்,
எவ்வரமும் கொடுக்கவல்லார் திருவா மாத்தூர்க்(கு)
எவ்வுலமும் சொந்தமென்[று]ஆங் கிசைத்தேன் [ஓர்மின்!
செவ்வரிக்கட் கலைமகளைக் கொஞ்ச மேனும்
தெரிந்தவர்க்கே என்கவிகள் தித்திப் பாகும்,
தவ்வலில்சீர்த் திருமகளும் வாணித் தாயும்
சண்டையிட்டுப் பயனிரண்டும் சார்ந்தா ரன்றே. 32

### தெளிவு - ஞானப்பகுதி முற்றிற்று.

ஆகக் கவி 703

**பூர்வகாண்டம் நிறைவெய்தியது.**



30 இதுவரைக் கூறியது ஞானப்பகுதி. அனுமனுக்கு ஐந்து முக அநுமார் கூறியது உபாசனைத் தெளிவு. விட்டுணு கமலயோகியின் வரலாறு, உலக சீர்திருத்தம். இவை தெளிவும், மயக்கமும், நன்றும், தீதும் அவரவரால் வரும் என்பது.

31 அகச்சமயம், புறச்சமயம் ஆகப் பன்னிரண்டையும் தனக்குரிய அங்கமெனக் கொள்கின்ற சமர ஞானம் அடைந்தவர் சுவாமிகள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

உ

சிவமயம்

# உத்தரகாண்டம்

(இரண்டாம் பகுதி)

## முதலாவது
## இலக்குமி, சரசுவதி வழிபட்டது.

**கலி விருத்தம்.**

திரும டந்தைநா ராயணன் பத்தினி, சிவந்த
மருமலர்த்திரு வுந்தியால் அவன்பெறு மகன்தோய்
தருவெண் பாவை,அன் னவட்கொரு மருமகள், சரதம்
இருவ ருக்கும்உட் பகைநெடு நாள்இயன் றதுவே. 1

நல்ல ளாவள்இம் மருமகள் எனஅவள் நாடாள்,
பொல்ல ளாயினும் மாமிஎன்(று) இவள்நலம் புகலாள்
வல்ல தன்மையில் வானவர் மனிதர்ஆ தியர்முற்[று]
அல்லல் நோயிடை அழுங்கவிட் டார்இரு வருமே. 2

செல்வ மேபொரு ளாமெனக் கொளுந்திரு மாதும்,
கல்வி யேஉயர் வாமென மகிழ்கலை மகளும்,
பல்வி தத்தினிற் பகைப்பதால் நிகழ்கொடும் பான்மை
எல்வ ருந்தினந் தொறும்உல கிடத்திலங் குவதே. 3

ஆதி நாள்அரி அயனெனும் தந்தை,சேய் ஆனோர்
மோதி வெஞ்சமர் இழைத்ததன் காரண மொழியில்,
மாதி ரந்தெரி மாமிநன் மருமகள் என்னும்
போதின் மாதர்கள் இருவரும் முதற்செய் வன்போரே 4

அப்ப னுந்திறற் கணவனும் அமர்செயக் கண்டு
வெப்ப மிக்குமா நிலமகள் மெலிவுற விடுத்தோர்,
தப்ப தேநனி செயுமொர்சக் களத்தியாம் திருவும்
செப்பம் ஆர்கலை மகளென்அன் னையும்எனத் தெளிவீர். 5

இவள்தன் அன்பரை அவள்மிடிப் படுத்தலும், ஏமத்
தவள்தன் தொண்டரை இவள்முழு மூடர்ஆக் குதலும்,
புவன மேற்பெரு வழக்கமா நிகழ்ந்தன, போதத்
தவர்தம் கல்வியும் அரசர்தம் நீதியும் தணந்தே. 6

---

3 எல்வரும்தினம் - சூரியன் உதிக்கும் ஒவ்வொருநாளும்,

4 மாலும், பிரமனும் போரிட்ட காரணம் திருமகளான மாமியும், கலைமகளான மருகியும் செய்த பகைமையாலாம். போதில் - தாமரை மலரில்.

5 பூமாதேவிக்குமுன் திருமாலுக்கு மனைவியான திருமகளும், பூமிதேவிக்குத்தாயான கலைமகள் பகைத்ததால் நிலமகள் துயருற்றுள்.

6 செல்வமுடையவரை மூடராக்குவதும்; கல்வியுடையவரை வறுமையுறச்செய்வதும் வழக்க மாயிற்று.

முன்னம் உற்றநல் உகங்களின் முறைப்படி இருந்த
அன்னம் நேர்சரச் சுவதியும், அலர்ந்தசெங் கமலப்
பொன்ன ணங்கும்,இக் கலிபுரு டன(து)அடற் பொலிவால்
இன்னல் வெம்பகை விளைத்தனர் இகபரங் கெடவே. 7

உலகைச் செய்தவன் மனைவியும், உற்றன எல்லாம்
இலகக் காப்பவன் பன்னியும், இகல்விளைத் ததனால்
அலகற் றுள்ளநன் மைகளெலாம் குன்றின அன்றிக்
கலகத் தானவர் களிமுத லியகலித் தனவே. 8

எந்த வானவர், மாதவர், மானிட ரேனும்
கந்த வாரிசத்[து] அணங்கினர் இருவர்தம் கடைக்கண்
வந்த நாட்டமில் லாதுயர் உரிமையின் மலிவால்
முந்த வொன்றுறும், பிந்தவொன்[று] இளைத்துறும், முறையே. 9

ஊமை நாவினும் ஒலிசிறி துறும்,இரந் துழலும்
தீமை யோரும்ஊண் அ யின்றல[து] உய்கலார், தெளியின்,
ஆமை யாயவன் மனைவியும், அருமறைக் கிழவன்
வாய்மை நாவில்வாழ் மடந்தையும், பிரிவரி யவரே. 10

இந்த நாள்கலை மகளருள் நூற்றொர்பங் கேனும்
செந்த கைத்திரு மகளருள் செய்திடாத் திகைப்பால்
வந்த இன்னலா யிரம்உள, இங்ஙனம் மாறி
அந்த மாதருள் பெற்றும்நோம் அவரெணி லாரே. 11

வாணி கண்ணருள் தோய்ந்தவர், வரிவடி வுணர்வும்
காணி யேனும்அற் றிழிவுறுர், திருமகள் கடைக்கண்
பேணி டப்பெரு மன்னரா யிருந்தவர், பிணிப்பால்
நாணி யேசிறைப் படுதலும் உண்டுநா னிலத்தே, 12

போதை யேஇட மாக்கொளவ் இருவர்தம் புணர்ப்பால்
வாதை யாதும்இல் லா[து]உள மகிழ்பெரு வாழ்க்கை,
சீதை நாயகன் ஆதியர் தெண்டனிட் டிறைஞ்சும்
மாதை மாநகர்ச் சிவனரு ளின்றிவா ராதே. 13

---

7 இகபரம் – இவ்வுலக, மறுஉலக போகம்.

8 உற்றன் – – - பன்னி - உயிர்களைக் காக்கும் திருமால் மனைவி.

9 கல்வியுற்றவரிடம் வறுமையும், செல்வமுடையவரிடம் அறிவின்மையும் மாறியமையும். இரண்டும் ஒருசேர அமைவதருமை என்க

10 ஊமைக்குச் சிறிது ஓசைவரும். யாசிப்பவருக்கு உணவு கிடைக்கும். அவளவும்கூட இவ்விருவர் அருளின்றேல் கிடையாது, ஆமையவன் – திருமால்.

11 கலைமகள் செய்யும் சிறு அருளையும்கூடத் திருமகள் செய்வதில்லை. அந்தமாது – திருமகள். 12 வரிவடிவு உணர்வு - எழுத்தறிவு. பிணி – தீவினை, சிறைப்படுதல் – செல்வம் இகழ்ந்து.

அனைய மாதரார் இருவரில் மருமக ளானாள்
தனைமுன் னாள்சிவ தூடணத் தக்கன்வேள் வியிலோர்
முனைவ னாமுது வீரன்வா ளுருவிமூக் கரிந்த(து)
இனைய லோகமோ[டு] எந்தலோ கமும்அறிந் திடுமே. 14

ஆத லால்அதை யான்இவண் விரித்திடல் அணியன்(று)
ஏதம் நாணமோ டுறத்தளர்ந் திடைந்தனள் வெகுநாள்,
வேதன் உள்ளமும் கொதித்தது, புலமையோர் வெட்கம்
போத வுற்றனர், மாமிமாத் திரம்களி பூத்தாள். 15

தன்ம னைக்(கு)அணி யாம்மரு மகள்நலம் தாழ்தல்
நன்மை யேஎனத் திருமகள் கருதலில், நாட்டிற்
பொன்ம லிந்திடப் பெற்றவர்க்[கு] ஆணவம் பொருளாய்த்
தின்மை கண்(டு)ஒதுங் கா[து]இகல் செருக்குமிஞ் சியதே. 16

அஞ்சு வார்களுக் கொருவர்மேன் மேலும்நோ வளிக்கில்
மிஞ்சு துன்பம்,மற் றொருவரால் அவர்கொளல் விளங்க
மஞ்சு லாங்குழற் கலைமகள் மனந்தளர் பாவம்,
நெஞ்சு நோம்துயர், திருமகட்(கு) அளிப்பநேர்ந் ததுவே 17

வாத வூரனைக், குருகைமா முனிவனை, மானும்
போத முற்றவர்க் கல்ல(து)அஞ் சானொரு புலவன்,
வேதம் ஆகமம் பொதுவெனப் பெரிதுணர் மெய்யன்,
தாத மார்க்கமா தியஒரு நான்கினும் சார்வோன். 18

அலைகொள் பாற்கடல் அமுதுறழ் திருமினாள் அருளிற்
கலைமி னாளருள் கோடிபங் குயர்வெனக் கண்டோன்,
சிலைவல் லார்புகழ் விசையனேர் ஆண்மையிற் சிறந்தோன்,
தலைமை தோய்புகழ்த் தென்மொழிச் சங்கரன் தானே. 19

வீர பத்திரன் தனைநெடு நாள்மிக விரும்பி
ஆர ணத்துறும் விதிப்படி நாடியா ராதித்(து)
ஈர மிக்குறு காளியும் பூதரும் ஏயப்
பார கத்திலோர் ஆயிரந் தலையொடு பார்த்தான். 20

---

14 முதுவீரன் வீரபத்திரர். 16 தின்மை - தீச்செயல்.

17 அஞ்சுவார்கட்கு - தனக்கு அடங்கியிருப்பவர்க்கு. மருகியான கலைமகள் மூக்கறுபட்டதால் மாமி திருமகள் களித்தகொடுமையால் அவளுக்குத் துன்பம் நேர்ந்தது.

18 வாதவூரன் - மணிவாசகர். குருகைமுனி - சடகோப ஆழ்வார், மானும் - போன்ற, போதம் - அறிவு, தாதமார்க்கம் - அடிமைப்பண்பு. தாதமார்க்கம் முதலிய நான்கும் இறைவனை அடையும் வழியாகும். 19 விசயன் - அருச்சுனன்.

20 ஈரமிக்குறுகாளி - அன்புருவான சத்தியே காளி. கொலை விரும்பாதவள் சத்தி.

பார்த்த லும்பயந்(து) உயிர்விடுத் திலன்,மிகப் பணிந்து
தீர்த்த மார்சடைச் சிவனிவன் தான்எனத் தேறி,
ஆர்த்த ஓசையி னுற்பல தோத்திரம் அறைந்து,
கார்த்த வீரியற் செகுத்தவன் போல்பவன், கலுழ்ந்தான். 21

தொக்க வானவர் அனைவரும் நடுங்குறத் துணிந்(து)ஓர்
தக்கன் வன்தலை யினைமணி முடியொடு தடிந்து
திக்க றிந்திடக் கனல்உணும் படியிடும் சீர்த்தி
மிக்க தோள்இரண் டாயிரம் உடையவன் விளம்பும், 22

பொன்ன தாற்செயும் பதியுடைப் புரந்தரன் அரசோ?
அன்ன வாகனத்(து) அயனுறும் அம்புயப் பொகுட்டோ?
பன்ன காதிபன் மிசைதுயில் நாரணன் பதமோ?
என்ன வேட்டனை யோஅதின்(று) உதவுவேன் என்றான். 23

என்று கூறலும் இவனவன் தன்னுடன் இசைப்பான்
அன்று வேள்வியிற் புரோகித னும்அயன் மனைவி
கன்று மாறுமூக் கரிந்தநீ கலகம் உண்டாதற்(கு)
ஒன்று காரண னும்,அரி மனையவட்(கு) ஊறு 24

செய்தி லாய்அதால் அவள்,எமக் கினியளாய்ச் செஞ்சொற்
பெய்து ளாளைநன் மருமகள் எனக்கொடு பேணும்
உய்த முந்தவிர்ந்[து] உலகெலாம் அறியமிக்(கு) உருத்து
வைது ளாள்அதென் துயர்,அற மாற்றுதி! என்றான் 25

அறுசீர் விருத்தம்

26

அச்க ணத்தின்மூ வாயிரம் விழியுடை யவன்அவள் இந்நாளில்
எக்கண் யார்வசத்(து) எத்தொழில் முயன்றினி திருந்துளாள் எனநோக்கி
மைக்க ருந்தகை மாலூரம் ஆதிய வயினெலாம் மறுகோலம்
ஒக்க வாழ்ந்(து)உளத் துரித்துடன் கடல்நடு ஒளிரொரு பெருந்தீவில்.

27

வல்ல ரக்கன்வா லங்கனென் பவன்புலை மனையிலுற் றதுதேறிக்
கொல்லல் செய்யினும் தீர்வரி தாம்பெருங் கோபமுற்(று) அவண்ஏகி,
மல்லல் வார்பொழில் உறழ்குழற் பற்றி,அம் மயிலனை யளையீர்த்து,
நல்ல ளாயஅம் மருமகள் மூக்கினும் நவைபட அறுத்தானே.

---

21 செகுத்தவன் - பரசுராமன், கலுந்தான் - கண்ணீர்விட்டழுதான்.

22 விரபத்திரர் ஆயிரம் தலை, இரண்டாயிரம் கைகளுடையவர்.

23 புரந்தரன் அரசு - இந்திரபதவி, நாரணன்பதம் - மிக்க செல்வம்

24 கன்றுமாறு - வருந்துமாறு. 25 அவள் - கலைமகள், உய்தம் - ஆதரிப்பு, உருத்து - கோபித்து. அது என்துயர் - அது ஒன்றுமட்டும் என் கவலை.

26 மூவாயிரம் விழி - அக்கினிக்கண் சேர்ந்து ஆயிரந்தலைக்கு மூவாயிரம் கண்கள், எக்கணத்து - எந்தக் கூட்டத்து உளத்துரித்துடன் - முழு ஊக்கமும், உரிமையும் பெற்று.

27 அவண்ஏகி - கடல் தீவில் வாலங்கன் என்பான் இல்லம் சென்று. மயில் அன்னயனை - திருமகளை, நவைபட - இகழ்வடைய.

28

அறுத்த மட்டில்விட் டிலன்,இனி மால்பகர் அறநெறிக் கிசையாரை
வெறுத்தல் நின்கடன் விருப்புறில் இன்னமும் வேறுதண் டனைசெய்வேன்
பொறுத்து ளேன்,எனப் புகன்(று)அவன் உலகினிற் போயினன், அவள்
புண்ணுய்க், கறுத்த நாயகன் கழலில்வீழ்ந்(து)ஆங்கியல் கதைசொலி
அழுதாளே.

29

அழுது ளாள்முகம் நோக்கியோர் சிறிதுளைத்(து) அகிலமுண் டவன்நீமுன்
எழுதொ ணுமறைக் கிழத்தியைப் பழித்ததால் எய்திய பயன்என்ருன்,
விழுமி யோர்புகழ் பாரதி வினவி உள் வெப்பமோர் சிறிதாறிப்,
பழுது மாமிதன் நாசியு முற்றதாற், பரிவுமார்ந் தனள்மாதோ.

30

மாய வன்சொலால் அறிவுளார் பெருந்தகை வயங்கிய(து), அவன்
மார்பில், ஏயமங்கைபண் பாற்பெருஞ் செல்வர்தம் இயற்கைதோற்
றிய[து],என்றும், தூய ளாங்கலை மகளிடம் கற்றுளார் சுபாவம்நன்
கிலங்கிற்று, தீயர் போற்றும்வா லங்கன்வாழ் வழிந்தது, செகமகிழ்ந்
தது,மன்னே.

31

மறைவி ளம்பிய நீதிமுற் றழித்ததோர் வம்பனும் வாலங்கன்
நிறைபெ ருந்திரு முழுமையும் இராமனோர் நீதிமன் னவன்கைக்கொண்டு
இறையும் மாநில மகள்துய ரின்றிமாய்த் திட்டமை யான்சொல்லேன்
அறைவ தற்கினி வேறொரு புலவன்வந் தகிலமீ தவிர்வானே.

32

திருமின் நாசியும், கலைமகள் நாசியிற் சீரழிந் ததற்பின்னர்,
இருவர் சிந்தையுட் பகைமையும் தவிர்ந்(து)உற வெய்திய தெந்நாளும்
மரும கட்குறு பிழைகுறித் திகழ்ந்திகல் மாமி,தன் பிழைமுற்றில்
அருமை வாசக மொழிந்(து)உற வாடுதல் அகிலமேல் வழக்காமே

33

தம்மி னத்தருட் பகையுறில் இதழ்தரு தாழ்ச்சியும், உறவுற்ருல்
அம்மி கப்பொலி வாழ்வுறும் உயர்ச்சியும், அவிர்தரும் படிஅன்னோர்
விம்மி யேங்கிநா ணுறவரு குறைஅறும் விதம்வெகு வாயோசித்[து]
எம்மி ஞர்க்கும்ஓர் குலப்பெருந் தெய்வமாம் இமயமின் னிடம்சென்ருர்

---

28 கறுத்த நாயகன் – திருமால்.

29 மறைக்கிழத்தி – கலைமகள், வெப்பம் – திருமகள் இகழும் துயர். பரிவு – மாமியும் தன்போல் மூக்கறுபட்டதால் மகிழ்வு.

31 வாலங்கன் - வெள்ளை உடலினன், யான் – – – அமைவான் – என்னுற் கூற இயலாது, வேறொருவன் வருவான் என்று நிகழ்காலம், எதிர்காலம் தோன்றக் கூறினர்.

33 அன்னோர் – இலக்குமி, சரசுவதி. வருகுறை - மூக்கறுபட்ட துயர். இமயமின் – பார்வதி.

34

சென்று தெண்டனிட்(டு) எழுமுனம் அவள்,அவர் சிந்தையின் குறிப்
நன்று நீரிவண் ஒருப்பட வருகை,நும் நாசிஉற் றிடும்ஈனம் [போர்ந்து
தன்று ஊனப்பெரும் சேடிய ரெனக்கொள்ளன் றனதுமாண் பினும்சற்றே
ஒன்றும், ஆதலின் அவைமுளைத் தொளிருமா[று] உரைப்பல்கேட் [குதிர்!மேனுள்.

35

நானும், நந்தியும், பசுக்களும், வசுக்களும், நாரதன் முதலோரும்,
வேனு றும்பயன் பெற்றதல் லாமல்,அவ் வீரனுல் உகுபற்கள்
பானு மூர்த்திகள் பன்னிரு வரும்பெறல் பார்த்திலீ ரோ?வீணே
ஏனு ளைத்துளீர்! மாதையூர்க் கேகுமின் இலிங்கபூ சனைக்கென்றாள்.

36

இயம்பு மாற்றம்நன் றுகுமென்[று] ஒப்பியாங்[கு] இறைஞ்சிமீண்[டு] இருவோரும், நயம்பு கன்றுபம் பாநதிக் கரையிடம் நண்ணுமவ் வூர்வாய்போய்ச், சுயம்பு மூர்த்தியாம் சிவபெரு மான்பதந் தொழுதுபூசித்தேத்திக், கயம்பு னற்சொரி தலைமினும், கலைமினும் கனதினம் கழித்தாரே.

37

கண்ணு தற்பிரான் அவர்செயும் பணிகளிற் களித்துமுன் வழக்கம் போல், விண்ணுள் வெள்விடைப் பரிமிசை ஆங்குற விடுத்தவள் தன்னோடு, நண்ணு மாறுவந் தவிர்ந்தனன் சொல்லுவான் நாசிநுந் தமக்கிந்தாம், ஒண்ணு தற்பிடி யனையநீர் பிழைசெயில் ஊறுதோற் றிடும்கண்டீர்!

38

அரக்கர். தானவர், இரக்கமில் பாதகர், அறஞ்செயார், ஊனுண்பார்,
கரக்கும் வஞ்சகர், மனைகளிற் புகுந்தொறும் கமலைமூக் கிலளாவாள்
குரக்கு வன்பிடிக் குதர்க்கர்,தூ டணர்,அருட் குருநிலை உணராதார்
சுரக்கும் ஆணவர், வாய்புகுந் தொறுஞ்சரச் சுவதிமூக் கரையாவாள்.

39

மாயன் மார்பினும், மறையவர் மறையினும், வழுவில்செங் கோலோச்சும்
நேய மன்னர்தம் அரண்மனை யினும்,அற நெறிச்செல்மற் றையர்பாலும்
மேய போதுசெந் திருமகள் நாசியும், விதி,வியா சன்,சூதன்,
தூய சங்கர முனிஅனுர் தம்மிடந் தோயில்நா மகள்மூக்கும்.

---

34 ஒருப்பட - மாறுபட்ட மனம் நீங்கிக் கருத்தொத்து. உங்கள் இருவரையும் தோழியராகப் பெற்ற எனக்கும் உங்கள் குறையிற் பங்குண்டு.

35 அவ்விரனுல் - வீரபத்திரனுல். உகுபற்கள் - தக்கன் யாகத்தில் உதிர்ந்த பற்கள். பானு மூர்த்திகள் - பன்னிரு சூரியர்.

36 சுயம்புமூர்த்தி - அபிராமேசுவரர், கயம்புனல் சொரி - யானைகளால் பொழியும் நீரைக்கொண்ட, கலைமின் - கலைமகள்.

37 ஆங்குற விடுத்தவள் - கலைமகளையும், திருமகளையும் ஆமாத்தூர் செல்லும்படியாக விடுத்த பார்வதி.

38 சுரக்கும் ஆணவர் - அருள்நிலைகண்டபோதும் பணியாமல் இருக்கும் தன்மையில் வளர்வது ஆணவம்.

39 மறை - வேதம், நாமகள் - கலைமகள்.

40

ஆதி நாளையி லிருந்தவா றவிர்தரும், அசத்தியம் அன்றேயென்[று]
ஓதி ளுன், அவர் தொழுதெழுந் திறைஞ்சுமுன் உருக்கரந் தனன், அன்
பாதி ஆர்வமும் பாதிஅச் சமும்கொடு பவளவாய் முகில்போல்வான் [ளேர்
கோதில் மார்பினும், நான்முகன் நாவினும், குடிபுகுந் திருந்தாரே.

41

பணில வார்செவி யார்தமை மாதையிற் பதுமமங் கையர்பூசித்[து]
அணிகொள் சண்பக மலர்புரை நாசியொ[டு] அறிவும்உற் றமைசொற்
தணிவில் சீர்த்திரு நாவினுக் கரசனுர் தமிழ்கொடு துதிசெய்து [ரும்
கணித மின்றிய பயன்பெரி தடைந்தும் கதைசிறி[து] உரைசெய்வாம்.

இலக்குமி, சரசுவதி வழிபட்டது முற்றிற்று.

ஆகக் கவி 744



40 ஆதிநாள் - முன்னையநாள், கரந்தனன் - மறைந்தனன். அச்சமும் ஆர்வமும் - மூக்கு வளர்வதற்கும் பழையபடி இழப்பதற்கும் ஏற்ற செய்தியைப் பரமன் கூறினன்.

41 பணிலவார் செவி - சங்கைக் குண்டலமாக அணிந்த நீண்ட காது.
பதும மங்கையர் - தாமரை மலரில் தங்கியிருக்கும் கலைமகள், திருமகள்.
இவ்விருவரும் நாசியும், அறிவும் பெற்றனர் என்க.

## திருநாவுக்கரசு சுவாமிகள் அருள் பெற்றது.

கோச்சகக் கலிப்பா

இச்சதுர யுகத்திடைமுன் இயன்றதிரே தாயுகத்தில்
எச்சகத்தோர் களுமறிய இருந்தஇரா வணன்என்பான்
அச்சமொரு சிறிதுமின்றி அரன்கயிலை மலையடியிற்
கைச்சமுகங் களையிட்டுக் கவுரிகலங் கிடஅசைத்தான். 1

அவனசைத்த[து] உணராளாய் அசலமகள் எழுந்தோடிச்
சிவனையிரு கரத்தாலும் சேர்த்திறுகப் புல்லுதலாம்
உவகையொரு புறத்துதித்தும், ஊறுவரா நிமித்தம்தன்
தவளநகக் கால்விரலைச் சற்றூன்றி நெரித்தானே. 2

அப்பெருமை எளிதன்றன்[று] அதனை அடை யாவமென
மெய்ப்பெருமை யினர்இருவர் விளம்புபதி கந்தோறும்
இப்பெருமைப் புனலுலகும் இயம்பிடவைத் தனரென்றால்
பொய்ப்பெருமைத் தொகையுளொன்று போல்வதென்னப் போகாதே. 3

ஆயிரம்வே தந்தெரிந்த அரக்கனும் அவன்தனது
மாயிருங்கை ஐந்நான்கும் மலையடியில் அகப்படலால்,
வாயிரங்க கண்கள்பெரு மழையெனநீர்த் துளிபொழியச்,
சேயிளந்தைப் பருவத்தால் திகைத்தழுதான் நெடுநாளே. 4

அங்கனந்தம் மாதவர்தாம் அறிந்தறிந்து போய்வந்தார்
எங்கள்தவ மலிவதனால் இருங்கருணை வாகீசர்
சங்கரா சாமவே தப்பிரியா எனச்சொன்னார்,
துங்கமிகும் அவன்உணர்ந்தச் சுருதியினாற் றுதித்தானே. 5

இசைக்(கு)ஆடு வான்உமையோ(டு) எழில்விடையிற் றேன்றி,இவன்
வசைக்காளாம் என்றுணர்ந்தும் வாளொடுபல் வரமீந்தான்
திசைக்காவ லரும்நடுங்கச் சிறிதுநாள் வாழ்ந்தப்பால்
நசைக்கார்நேர் மால்கணையால் நடுக்களத்தில் இறந்தானே. 6

---

1 கைச்சமுகம் - கைகளின் கூட்டம், இராவணன் கைகள் இருபதாலும் கயிலையைத் தூக்க முயன்றான்

2 அசலமகள் - மலைமகள் (பார்வதி). புல்லுதல் - தழுவுதல், ஊறு - இடையூறு.

3 இருவர் - சம்பந்தர், நாவரசர்

4 சேயிளந்தைப்பருவம் - குழந்தை நிலையில் நீண்ட காலம் ஓலமிட்டான்.

5 மாதவர்கள் வாளாஇருக்க, வாகீசர் 'சாமவேதப் பிரியா' என்றனர். அவன் சாமவேதத்தைப் பாடினன், அப்பராக அவதரித்து தேவாரம் பாடிய கருணையுள்ளவர் என்பதை 'எங்கள் தவம் அனைய' என்றார்.

6 இசைக்குருகும்பரமன் - இவனால் கேடு வரும் என்றறிந்தும் அன்புக் கிரங்கினன்.

அத்தினமே வாகீசற்(கு) அரன்அரக்கன் அருள்பெறற்காம்
உத்தியுரைத்[து] உரையான்போன்(று) ஒளித்ததனாற் கலியுகத்தில்
பத்திசெயு மானிடனைப் பலவிதத்தூன் பழமையின்று
முத்தியடை குதி!என்ன மொழிந்தபயன் முற்றியதால். 7

வாய்மூரில் வேளாளன் மனையிலொரு மகவாகித்
தூய்மூரற் குயிலுறழ்முற் றுணைவியொடு வளர்ந்தப்பால்
வேய்மூத்தாங்(கு) அடர்ந்துகெடும் விறற்சமண மதத்தெய்தி
நோய்மூலத் தால்,அதிகை நோக்குபுவந் தருள்பெற்று. 8

வாக்கின்அர செனும்பழைய வண்பெயர்வாய்ந் தளிகூர்ந்து
தேக்கிசைச்செந் தமிழ்வலியாற் சிந்துரமும், நீற்றறையும்
போக்கிநெடுங் கற்றாணைற் புணரியும்நீந் தினன்,பெருமை
சேக்கிழார் எனும்புலவர் திருத்தொண்டர் புராணத்தில். 9

விரித்துள்ளார் அதைஈண்(டு)யான் விளம்பில்மிகை யாம்,மேனாள்
சிரித்தெயில்வென் றூர்களிகூர் திருவாமாத் தூரில்நிகழ்
சரித்திரத்தைச் சுருக்கினர்அத் தலமகிமை ஆதலினால்
தெரித்திடுகின் றேன்அறிவிற் சிறந்தோர்கேட் டுவப்புறவே. 10

அம்முனியாம் நாவரசிற்(கு) அப்பன்என்றோர் அருமைப்பேர்
செம்முபெருங் கருணையினாற் சிவனளித்தான், அதற்பின்னர்
சம்முலவா விடைக்கொடிச்சீர்த் தலந்தோறும் தமிழ்பாடி
நம்முரிமை மிகுமாதை நகரிடைவந் தடைந்தானே 11

வந்தவனுக்(கு) அத்தினமே மணிகண்டத்(து) அழகேசர்
சிந்தனையி னிடைத்தோன்றித் திருவதிகைச் சிவனேநாம்
சொந்தமென எண்ணுதி!சொற் றுதிக்கடன்தீர்த்(து) உடன்போகேல்!
செந்தமிழ்த்தொண்(டு) உழவாரத் திருப்பணியோ(டு) இயற்றென்றான்.

அவ்வருமை எடுத்தோதி அடல்இரா கவன்அன்பாற்
செவ்வழிபா டியற்றிஉயும் சீர்பாடித், தெருத்தோறும்
தவ்வலில்சீர் வண்ணங்கள் தாம்பாடிப் பவனிவரும்
செவ்வணியும் மடமாதர் சிங்காரங் களும்செப்பி. 13

இவ்வண்ணம் நாடோறும் இலங்கநுபூ திகட்கெல்லாம்
செவ்வண்ணப் பதிகங்கள் செழுந்தமிழால் மிகப்பாடிக்
கைவண்ணத் திருத்தொண்டும் களைக்கொட்டால் நனிசெய்து
பொய்வண்ண மயலகன்று போதமய மாத்திகழ்ந்தான். 14

---

7 நேர்முகமாகக் கூறாது உய்த்தறிய நவின்றார். ஆதலின் வாகீசர் பிறந்தார்.

8 வாய்மூர் – திருவாமூர் என வழங்குகிறது. முற்றுணைவி – தமக்கை திலகவதியார். வேய்மூத்தாங்கு - மூங்கில் முதிர்ந்தால் முற்றும் அழிதல்போல சமணர் தங்களாலேஅழிபவர்

9 வாக்கின் அரசு - நாவரசு, சிந்துரம் – யானை, புணரி – கடல்.

11 அவ்வருமை – 'தென் அதிகை வீரட்டம் சேர்ந்தார்போலும்' என்றும், இராகவன் – – உய்யும் சீர் – 'இராமனும் வழிபடும் ஈசனை' என்றும் கூறியுள்ளார். பவனிவரும் செவ்வணி– உலாச்சிறப்பு.

அன்றவன்பா டியபதிகம் அத்தனையும் அகிலத்தே
இன்றவிர ஒட்டாமல் இறைஎனக்கொண் டன,தில்லை
மன்றதனைச் சூழ்ந்தவிரும் மணிமதிலுட் கறையான்கள்
என்றமொழி மாத்திரம்நன் கியம்புமவர் பலர்தாமே. 15

வாதவூர் முனிவரனை மதிக்கறியா இளஞ்சைவர்
நாதர்களாம் எனத்தோன்றும் நால்வர்களிற் கடைஎன்னும்
ஏதமற நரிக்குதிரை இயன்றவிதம் ஏத்தெடுக்கும்
போதமுறும் வாகீசர் புகழ்க்கடற்கோர் அளவின்றே. 16

மத்தகய உரிபோர்த்து மாதைநகர் ஆதியவாம்
எத்தனையோ தலந்தோறும் இருந்தசிவ பெருமானைச்
சித்தர்பிரான் எனத்தேறித் திருநாவுக் கரசரைப்போல்
அத்தனைபா டலிற்றுதித்தோர் ஆரும்இந்நாள் வரையின்றே. 17

நாவரையன் தனைச்சிவன்றன் நாணமறு சாரணருள்
மேவநெடு நாளாக விடுத்திருந்தான், மீண்டதற்பின்
ஓவரிய நர்ன்கிலக்கத் துடன்இருப தாயிரமாம்
பாவனைந்தான் அவைமுழுதும் பாரதிநன் கறிவாளே. 18

அப்பரெனும் மாமுனிவர், ஆமாத்தூர்க் கோயில் நிலம்
செப்பமுற வாழ்நாளிற் சிவனருளாற் சித்திபல
மெய்ப்பரிசுள் ளனவாயே விளங்குதலின், வெண்ணீறும்
துப்பனைய கலையொ(டு)அக்கும் தோயுமவர் சூழ்ந்தாரே. 19

அவ்வடியார் தொகையோர்எண் ணாயிரமே ஆதலினல்
எவ்வமுறு சினன்சமயத்(து) இருந்துபகை புரிஅருகர்
இவ்வகிலத் தவிர்ந்ததிறள் எனச்சிவன்பொற் கழல்பேணும்
செவ்வழிசேர் இவரருகு சேர்ந்தனர்என் றிடலாமே. 20

மாலோகங் களிற்பெரிதா மன்னுசிவ லோகத்துச்
சாலோக சாமீபத் தன்மைஎலாம் சாக்கிரத்தும்
பூலோகத் தணிமுகம்போற் பொலிதிருவா மாத்தூரின்
மேலோகத் தமரர்குழாம் வெட்கஅநு பவித்தாரே. 21

---

16 நால்வர் – சமயாச்சாரியார் நால்வர், ஏதமற - குறைமாற, நரிக்குதிரை-“நரியைக் குதிரை செய்வானும்” என நாவரசர் பாடியுள்ளர்.

19 நீறு, கல்லாடை, உருத்ராக்கமணிபூண்ட் சிவனடியார் பலர் கூடினர்.

20 அப்பருடனிருந்த சிவனடியார் எண்ணாயிரவர், சமணமுனிவரும் எண்ணாயிரவர். கழுவேறியிறந்த சமணர் யாரும், இவர் சமண் சமயம் விட்டுச் சைவஞ் வந்ததினல் சிவனடியா ராகி இவருடனிருந்ததுபோல் ஆயிற்று என்றார். தொகைபற்றி இரண்டுக்கும் சிறப்பு கூறினர், ஆகவே ‘போல்’ என்றார்.

தவயோகர் பார்வெயினும் தம்மறிவிற் சொற்பணத்தும்
சிவயோகப் பயனுகித் திகழ்தருசா ரூபமுற்ருர்
அவயோகத் தினர்சேரா ஆமாத்தூர் அம்மான்பாற்
கவயோகந் தவிருண்மைக் கதிஅருள்என்(று) இரந்தாரே 22

மின்னுறழ்செஞ் சடைக்காட்டு வியன்பவளக் கிரிபோல்வார்
மன்னுதமிழ் வாகீசர் மனவெளியி னிடைதோன்றி
இன்னும்உன்ஞற் சிலவிளையாட் டியற்றிடவே நினைத்துள்ளாம்
பன்னுபுகழ்ச் சோணுட்டுப் பதிதொறும்போ கெனவுய்த்தார். 23

சென்றுபல தலம்பாடிச், சீகாழிக் கவுணியச்சேய்க்(கு)
ஒன்றும்உற வினஞகி, உருத்தவன்சா ரணர்மேற்போம்
அன்றுடன்செல் லாதவராய் அவர்கொடுமை யினுக்கொதுங்கிப்
பொன்றுலங்கு புகலூரிற் புக்கொருசின் ஞள்வசித்து. 24

காமாரி உருக்கரந்து காட்டுபுசற் றிடம்சாய்ந்தே
ஆமாத்தூர்க் கோயிலுக்குள் அவிரிலிங்கம் அதுபோல்வ(து)
ஏமாப்புற் ருெருசீயம் எனவிழுங்கும் கதிசேர்ந்தார்
போமாற்றை அறியாதார் புண்பாடென்[று] அயர்வாரே 25

உடனிகழ்ந்தார் பலர்தாமும் உருத்திரர்தம் உருவெய்தி
அடல்விடைமா முகத்தண்ணல் ஆணைவழி சிவலோகத்[து]
இடமமையப் பெற்றுய்ந்தார், இதிலதுதாழ் வென்ருேங்கும்
மடமையினர் அருள்நிலைஓர் மாவுளவும் அறியாரே. 26

பொன்மணியும் மண்கல்எனப் புறத்தெறிந்தார், பூதலத்து
வன்மரையும் சிவமாத்தேர் மகிமைஉணர் வார்உணரச்
சென்மவினை தீர்க்குமலர்ச் சேவடியார் செய்தனர்,அத்
தன்மமறி யாப்புலவர் தாரணியிற் பலர்தாமே. 27

தூநிறத்து நீறணியும் தொண்டரெலாம் உயவேண்டி
மாநிலத்தில் வந்தபடி வாகீசர் கதிசொன்னும்;
சேநிகர்த்த பேராண்மைத் திருஞான சம்பந்தர்
பாநிகழ்த்த ஆமாதைப் பதியில்வரல் பகர்கின்ருேம். 28

திருநாவுக்கரசு சுவாமிகள் அருள்பெற்றது முற்றிற்று.

ஆக கவி - 772.

---

23 கவயோகம் - கபத்தின் சேர்க்கை, மரணத்தின்போது வரும் அதனை நீத்த முத்தியை விரும்பினர்.

24 இறைன், உன்னால் சில ஆடல் உளது. சோழநாடு செல்க என்ருர்.

25 காமாரி - சிவபிரான். திருவாமாத்தூரிலும் திருப்புகலூரிலும் சற்று இடதுபுறம் சாய்வாகவுள்ளார் இறைவன். அங்குசென்று பாடலியற்றினர் புகலூரில் காட்சியீந்து தம்முள் ஒன்றுபடுத்தினர். 26 மடைமையினர் - திருவருட் சிறப்பறியாதவர்.

27 மரையும் சிவமா - மிருக முதலியவற்றையும் சிவ வடிவாகக் கண்டவர் அப்பர்.

# திருஞான சம்பந்த சுவாமிகள் அருள் பெற்றது.

**கலித்தாழிசை**

இந்த வன்கலி ஆண்டிரண்(டு) ஆயிரத்(து)
அந்தண் பாண்டி அரசனும், மாந்தரும்
சந்த மார்தரு சைவம்விட் டுச்சமண்
பந்தம் எய்திப் பரிசழிந் தாரரோ. 1

சீலம் விட்ட செழியனும், தேயத்தின்
பால ணைந்த பலரும்ஒன் றாகியே
மால ளந்தறி யாமலர்த் தாளுளான்
ஆல யங்கள் அடைத்தனர் ஐயகோ! 2

வினையை நீக்கும்வெண் ணீறுகண் டால்முந்நாள்
பனையை நேர்துயர்ப் பட்(டு)உண வுண்டிடார்
அனையர் சொற்கொளில் அன்றுண(வு) ஆர்ந்திடார்
இனைய தீமைகள் எண்ணில செய்தனர். 3

சித்த ரும்,பல தேவரும், சீர்குலாம்
முத்த ரும்சிறி தாயினும் முன்னிலார்
உத்த மப்பண்[பு] உரோமசன் மப்பெயர்
வித்த கன்கயி லைக்கிரி மேவினேன். 4

அன்று மாதை அழகர்தம் பூசையால்
நன்று மிக்க வரம்பல நண்ணினேன்
முன்று லங்கொர் படலம் மொழிந்தசீர்
துன்று வான்நனி எண்ணித் துணிந்துபோய். 5

ஈசன் தன்னெதிர் இன்றமிழ் நாடெங்கும்
பாசம் என்னப் பறிதலைச் சாரணர்
மோச முற்றது, முற்(று)அறற் காயசொல்
பேச வேண்டும் எனப்பெரி[து] ஏத்தலும் 6

வில்வ தோர்ந்து விடைப்பரி வேதியன்
உள்வ ருத்தம்உற் றானில் உருத்து,நீ
கொள்வ தக்கடன் போகெனக் கூறினன்
புள்வ கிர்ந்தவன் ஆதியர் பூரித்தார். 7

---

1 சீலம்விட்ட செழியன் - சைவ சமயத்தின் ஒழுக்கத்தைக்கைவிட்ட பாண்டியன்.

3 திருநீறு கண்டால் - நீறணிந்த சைவர்களைக் கண்டால், மூட்டு - நீட்டு. (கண்டு மூட்டு, கேட்டுமூட்டு) இனையதீமை - இதுபோலும் தீச்செயல். 5 அன்று-முன் ஒரு காலம்

7 வருத்தம் உற்றானில் - வருந்தியவனைப்போல. உருத்து - கோபித்து. புள்வகிர்ந்தவன் - நாரையின் வாயைப் பிளந்தவனான திருமால்.

மற்றுந் தன்னொடு வாழ்முனி வோர்சிலோர்
முற்று ணர்ந்தவற்[கு] ஏன்மொழிந் தாய்என்றார்,
எற்று காற்புள்ஒன்(று) ஏந்துகைச் சேந்தன்முன்
உற்று ரோமசன் ஓதிநொந் தானரோ 8

வந்த டைந்தஅம் மாமுனி நாதன்மேல்
கந்த மூர்த்தி கருணைவந்(து) ஓதுவான்
அந்த ணன்தமிழ்க் காழியில் ஆற்றல்கூர்
மைந்தன் வேட்டு மலிதவம் செய்துளான். 9

அன்ன வன்மனை யாள்வயிற்[று] ஓர்மக[வு]
என்னச் செல்லுதி! எம்மைதன் பாலொ[டு] என்
தன்ன தோர்கலை சாரும்,அப் பாலுன(து)
இன்னல் முற்றும் இறும்,செயம் எய்தியே. 10

யானென் றேயுனை யாவரும் போற்றிட
வேனெண் சித்தியும், மேதகு ஞானமும்,
தேனென் றேதிகழ் செந்தமிழ்ப் பாடலும்,
வானென் முத்தியும் வந்துறும், என்றனன். 11

அந்த வாறங்(கு) அருள்மக வாயதும்,
வந்த மூன்று வருடங் கழிந்தபின்
சந்த வாவித் தடங்கரை மேயதும்,
செந்த கைத்திரு வாய்திறந் திட்டதும், 12

கோல வேல்விழிக் கோமளப் பார்ப்பதி
பால ருத்தலும், பல்தலம் பாடலும்,
சீல மிக்க செழியன்தன் தேவியார்
ஓலம் ஓலமென்(று) ஓலையொன்[று] உய்த்ததும். 13

கல்லி னல்முன் கடல்கடந் திட்டவன்
சொல் இகந்து துணிந்தவண் போய்ப்பொலா
வல்லி ருட்புரை சாரண வம்பர்வேர்
கெல்லி மாய்த்தொளிர் கீர்த்தி பொறுத்ததும். 14

---

8 எற்று - - சேந்தன் - காலாற்போர்புரியும் சேவற்கொடி பிடித்த முருகன்.

10 எம்மைதன் பாலொடு - - - சேரும் - என் தாயின் ஞானப்பாலுடன் என்கலாமிசம் உன்னை வந்தடையும்.

13 தேவியார் - மங்கையர்க்கரசியார்.

14 சொல்இகந்து - நாவரசர் நாள், கோள்நலமில்லாததை ஓதினர். "வேயுறு தோளி - - -" என்ற பதிகம் பாடி ஏகினர்.

புத்தன் சென்னி பொடிப்பொடி யாயதும்,
செத்த செட்டி திடுக்கென் றெழுந்ததும்,
அத்தன் அம்பொன் அளித்திடப் பெற்றதும்,
சுத்த என்பு தொடிக்கையின் ஆனதும், 15

அன்ன ஆடல் அனந்தமும் ஆய்ந்தறிந்[து]
இன்னம் நானும் இயம்புதல் வேண்டுமோ?
மன்னர் மன் அந பாயனை வாழ்வித்த
நன்னர் மந்திரி நன்குரைத் தானரோ. 16

அறுசீர் விருத்தம்

17

ஆயசீர்த் தமிழ்விரகர் ஒருபதினு றுயிரமெய் அடியார் சூழத்
தூயமுத்துப் பந்தரில்அச் சிவிகைமிசை சிவதலங்கள் தோறும் அன்பாற்
போயருமைப் பதிகங்கள் பலபாடி அருளாடல் புரியும் நாளில்
தீயவர்கண் டிறைஞ்சரிய திருவாமாத் தூரினிடம் சேர்ந்தா ரன்றே

18

ஊர்ந்துவரு சிவிகையினைக் கோபுரங்கள் கண்டவுடன் ஒருவிக்கீழ் நின்(று), ஆர்ந்துவரு தொண்டருடன் முக்காலும் தெண்டனிட்(டு) அங்கை கூப்பி, நேர்ந்துவரு வாரொருவர் தம்மையும்கா ணுமை யில்நெட் டுயிர்த்துள் அன்பு, கூர்ந்துநடந் தப்பதியின் அணிபெரு கும் திருமறுகு குறுக லானுர்.

19

அங்குவந்த திருக்கூட்டத் தவருடன்பம் பாநதியில் ஆடி ஈடில், குங்குமக்குன் றுறழுருவம் நாடியன்பிற் பாடினர்பின் கூடுந் தொண்டர், பொங்குபெரும் பசித்தீயாற் புழுங்குமட்டும் அருளிலர்போற் பொறுத் தார் மாதை, தங்கும்அழ கேசர்செயும் பத்திசோ தனைக்கொடுமை சகிக்கொண் ணுதே.

20

உமைக்குறித்துக் கேள்வியுற்ற புகழ்முழுதும் பொய்யாமோ? உண்டி யால்இங்[கு], எமைக்கருக்கல் முறையோ?என் றிணையில்குன்ற வார்சிலைப்பா இசைத்தார் ஈசர், தமைக்குதலைப் பருவத்தே கண்ட வர்க்கும் இங்ஙனமோர் தயக்கம் உற்றால், நமைக்கனசோ தனை புரிதல் வியப்பாமோ? உணர்ந்துகொள்மின்! நாட்டுள் ளோரே.

---

15 செத்தசெட்டி – பாம்பு கடித்து இறந்தவன் திருமருகலில் உயிர் பெற்றது. அத்தன் பொன் அளித்து – திருவாவடுதுறையில் தந்தை யாகத்துக்காகப் பொன் பெற்றது. என்பு – – ஆனது – மயிலாப்பூரில் பூம்பாவை உயிர்பெற்றது,

16 நன்னர் மந்திரி – அனபாயச் சோழன் மந்திரி சேக்கிழார்.

17 அச்சிவிகை – இறைவன் உதவிய முத்துச்சிவிகை, முத்துப்பந்தர்.

18 நேர்ந்து வருவார் - எதிர்கொண்டுவருபவர். பதிகம் - குன்றவார்சிலை என்று துவங்குவது,

20 உண்டியாலும் - – கொலோ – அடியவர்கட்கு அமுதளிப்பார் யாருமில்லை என 5-ம் பாட்டில் தொண்டர் – – என்ற பாடலில் பாடினர்.

21

அன்றுதித்த சூரியன்தேர் உச்சியின்மேல் வரலும்உடன் அபிரா மேசன், தன்றுணைத்தாள் மலர்ப்பூசித் துய்ந்ததே னுவைநினைத்தான் தறுகா தோடிக், கன்றுடன்வந் தமுதுமுத லியஉணவெல் லாம் அளித்துக் களித்து நாவற், பொன்றுலங்குப் பரிக்கைகளும் அரமக ளிர்களும்பிறவும் புரிந்த தன்றே

22

கணமொருகற் பாந்தமெனச் செயுமாயா சத்தியின்மேற் கருணை செய்தான், மணமலர்க்கற் பகநாடும், அயனுலகும், திருநெடுமால் வாழும் ஊரும், தணவருஞ்சீர்ச் சிவலோகந் தானும்வந்து மாதை யினும் தயங்கக் காட்டிற்[று], இணர்சொரிந்திட் டார்க்குமிரங்[கு] இறையருள்பெற் றார்க்கரிய[து] யாதும் இன்றே.

23

அந்தவொரு நாளும்வெகு சதுரயுக மாச்சுகங்கள் அநுப வித்தார், கந்தனருட் கலைபுனைசெய் துன்னம்பெய் கோவணர்என் கவின்சொற் றொட் டும், பைந்தமிழ்ஆ மாத்தூரிற் பரனைவணங் காத்தலையைப் பாராக் கண்ணைச், சிந்தனைசெய் யாமனத்தை முதலியவற் றினையிகழ்ந்து செப்பிற் றன்றே.

24

தாமநறுங் குழல்கொள்அர மகளிரும்வந் தாரெனநான் சாற்றும் சொல்லாற், காமவலைப் பட்டுழன்றார் அனைவோரும் எனவீணே கருத வேண்டாம், கோமளப்பார்ப் பதிவடிவாக் கண்டுதொழு தார் பலர்,என் குணந்தோய் சிற்சில், பாமரரும் இருந்திருப்பார் என நினைக்கின் றேன்,அதற்குப் பரன்தான் சான்றே.

25

குற்றம்பார்த் திடிற்சுற்றம் இல்லைஎன்ற வேதமொழி குடிமைப் பாங்கில், உற்றவர்க்கு மாத்திரம்என் றிடவேண்டாம் திருக்கூட் டத்(து) உரிமை எய்தும், நற்றவர்க்கும் ஆமேயாம் இதுவசவ மூர்த்திமுதல் ஞான வான்கள், பெற்றபெருஞ் சிவகணத்தோர் சரித் திரம்நன் கோர்ந்தவர்க்கே பிறங்கும் அன்றே.

26

எத்தனைதான் குற்றங்கள் செய்திடினும் இலைத்தரெனும் இயை(பு) ஒன் றுண்டேல், அத்தனையும் தழுவுதகை யுடையார்க்கே உறவின் முறை யவர்உண் டாவார், சுத்தநீ றுதியசா தனமுடையார் துரி சனைத்தும் தொல்சீர் மாதைச், சித்தர்விளை யாடலெனக் கொள் வார்க்கே திருக்கூட்டச் சிறப்புண் டாமே.

---

21 தேனு - காமதேனு தறுகாது - தாமாகத் தங்காமல் வந்து

22 இணர் - பச்சிலை.

23 நலங்கள்பலவும் பெற்றனர். அதன் பின் 'துன்னம்பெய் - - -"என்ற பதிகம் பாடினர்.

25 வசவமூர்த்தி - வசவன்னர் என்ற வீரசைவப் பெரியார்.

26 துரிசு - குற்றங்கள்.

27

ஆங்கிருந்த மெய்யடியார் கணத்தொடுமுத் தமிழ்விரகர் அறமெல் லாம்செய், மூங்கில்முளைத் தோட்கவுரி பாகர்அரு ளால்எழுந்து முன்னோர் வேடன், பாங்கிறைசெய் தருள்புறவார் பனங்காட்டூர் முதலியன பாடிப் பாடித், தூங்கிளநீர்த் தென்னைமலி சோணாட்டுக் காழிஎனும் தொல்லூர் சேர்ந்தார்.

28

அவருடலம் எடுப்பதற்காம் தவமுறும்அக் குலத்துளஅந் தணர்க ளெல்லாம், உவகைமலி தருமணமொன் றுஞற்றுவிக்கும் படிவி ழைந்தார் ஒப்பிக் கொண்டு, நவமலிமங் கலந்தரித்த வுடன்மனைவி கைப்பிடித்(து) அந் நாள்அங் குற்றூர், எவரொடும்ஆச் சாபுரத்துச் சிவன்சேவைக் கெனக்கோயில் எதிர்சென் றூரே.

29

கோயிலெதிர் செல்லுதலும் அதுநிறையச் சோதியொன்று குல வுற்(று) ஆங்கு, மேயினரிற் பலர்இரிய வெருட்டியது, பல்லுயிரும் விரும்பி ஈன்ற, தாயினருட் பால்குடித்தான் தீயிதென அஞ்சேல்மின்! தகியா(து), உள்ளிற், போயினித்தோற் றுதமுத்தி அடைமின்என் றுன் பற்பலருட் புகுந்தா ரன்றே.

30

தானுந்தன் மனைவியும்அல் லாதுமுகம் வாடியொரு தருணி நின்று வேனுந்துங் கதிபெறவே விழைந்தளனை மாதவிடாய் விலக்கிற் றென்ன, வானுஞ்செப் பியபுகழோன் பெருநெருப்பிற்(கு) ஈரமில்லை, மருவென் றுய்த்துக், கானுந்தண் மலரும்நிகர் கதியினில்தம் பதியாயே கலந்தா னன்றே.

31

வாதவூர் முனிவோனும், திருநாவுக் கரசனும்தம் வாழ்வும் தாழ்வும்,
போதநுவன் றனர்கவியால் சம்பந்த மூர்த்திஅவை புகல வில்லை,
மாதரசென் பினிற்றோன்ற அளித்ததனை, ஆமாதை வயினன்(று) ஈந்த
மூதருட்பே ரானந்தத் தினையேனும் எடுத்துமிக மொழிந்தி லாரே.

32

பொருளருமை அரசன்மகார் அறியாரென் பதுபோலப் புராரி தன் கண், அருளருமை சம்பந்தப் பிள்ளையும்,சுந் தரன்தானும் அறியார் போலும், தெருள்வலியாற் றேறியமற் றிருவர்களும் அதுசேர்க்கும் செட்டி கட்போன்(று), இருள்சமண்வா தனைமுடிவைப், பரிமிசை வந் தவிர்தலை,மிக் கியம்பி னூரே.

---

29 இரிய – பயந்து விலக.

30 தருணி – எவ்வனப் பெண். தானும் தண்மலரும் நிகர் – மலரும் மணமும் போல, தம்பதியாய் – தானும் தன் மனைவியுமாக முத்தியுற்றூர்.

32 சம்பந்தரும், சுந்தரரும் பிள்ளையும் தோழனுமாக உரிமையாயினர். நாவரசரும், வாதவூரரும் தொண்டனும், ஞான நிலையும் உற்று வருந்தித் திருவருளைப்பெற்றனர். ஆதலால் பொருளைச் சேர்க்கும் வணிகன் போல அருளைப் பெறப் பாடினர் என்க.

33

மண்ணேயாம் பொன்னேயும்நன் மாதவர்க்கும் உதவாத வஞ்சத் தோராய்த், தண்ணேய்ந்த மலைக்குகைகள் தொறும்பலபல் கோடி சித்தர் தாம்வாழ் வாரேல், விண்ணேயாம் தனிக்கதியைச் சீகாழிக் கவுணியர்தம் விடலை யேபோல், பெண்ணேயாய்ப் பிறந்தார்க்கும் வலிதுதவும் பெருமைஎவர் பெறுவார் அன்றே.

34

பட்டினத்துப் பிள்ளைபெருந் தவவலியாற் றிருவருணைப் பதியிற் றேன்றி, மட்டில்பெருஞ் சித்தியற்றி வான்மலரும் கொண்டுவந்த வல்லோன் தானும், சுட்டிடும்என் பிணப்பெண்ணுக் குங்குக னென்(று) உரைத்திருப்பச் சோழன் உய்கை, நட்டிசைக்கும் புரா ணத்தோன் சிறிதேனும் அதுகுறித்து நவின்றில் லானே.

35

வேதங்கள் பலவேயாம், மதங்களும்அப் படியேயாம், மெய்ம்மை ஆய, போதந்தந் தருள்குரவர் களும்பலரே யாவர், உண்மைப் பொருளாம் ஈசன், பாதந்தோய் தருகதியைப் பலர்க்கும்விருந் தென அளித்துப் பழுதில் கீர்த்தி. **ஓதன்பர்க்[கு] உறுதுணையாம் உயர்ச்சியுற்றேன் தமிழ்விரகன் ஒருவன் தானே.**

36

செந்தமிழ்ச்சீர்த் திருஞான சம்பந்தப் பெருமான்,நம் திருவா மாத் தூர், வந்தளவில் ஆனந்தம் அடைந்தகன்று முத்திபெற்ற வாறு சொற்றும், பந்தனைய முலைப்பரவை, சங்கிலிக்கோர் உயிர்த்துணை யாய்ப் படியிற் றேன்றும், சுந்தரன்வந் ததும்,அவனல் நடந்தவிளை யாடல்களும், சொல்லு வாமே.

திருஞானசம்பந்த சுவாமிகள் அருள்பெற்றது முற்றிற்று.

ஆகக் கவி - 808.



33 பொன்மண் ஒப்பது - மண்ணில் தோன்றியது. உருவற்றுஒன்றுகும் உயர்ந்த முத்தியை எளிதில் எவர்க்கும் உதவிய சம்பந்தர் பெருமை அளவு படாதென்பதாம்

34 வான்மலர் - பாரிசாதம், வல்லோன் - அருணகிரிநாதர். ஞான சம்பந்தர் முருகன் அவதாரமெனத் திருப்புகழில் அவர் கூறினர். அதை சேக்கிழார் விளக்கவில்லை என்பது.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருள் பெற்றது.

எண்சீர் விருத்தம்

கயிலைமலைத் தலையில்வளர் சிவபெருமான் ஒருநாள்
கண்ணாடி யொன்றினைத்தன் கண்களாற் பார்த்தான்,
வெயிலுமிழ்தன் திருவுருவம் இலங்கியது கண்டு
மிகும்விழைவாற் சுந்தர!நீ விரைந்துவரு கென்றான்
பயில்பெருஞ்சா ரூபமெய்தத் தக்கதவம் உறுமோர்
பக்குவத்தோன் உடனந்தப் படிவமுற்று வந்தான்
எயிலெரித்த வாயினன்,தன் பணிசெயுமா(று) அமைத்தான்
இவ்வாறங்(கு) உமையவளும் இருமகளிர்ச் செய்தாள் 1

அவரொருமூ வருமொருநந் தாவனத்துற் றொருநாள்
அனங்கவேள் விடுங்கணையால் அல்மரல்மிக் கடைந்தார்
இவருணர்ந்(து)அங் கனம்உலகில் அநுபவித்து வம்மின்!
எனஅனுப்பி னார்,அவருள் ஏந்தல்என்பான் சென்று
நவமலியும் நாவலூர்ச் சடையன்மகன் ஆனான்
நாரியரில் ஒருத்திசென்று நல்லாரூர்ப் பிறந்தாள்,
உவமையில்சீர் ஒற்றியூர்க்(கு) அருகிலுள தாமோர்
ஊரிடைமற் றொருத்திசென்றவ் உருவெடுத்தாள் அன்றே 2

வளர்ந்ததுவும், நரசிங்க முனையர்அபி மானம்
வைத்தவும், செயத்துவக்கும் மணந்தவிர்ந்த வாறும்,
தளர்ந்தவுட லும்தடியும் கொண்டொருவே தியனாச்
சங்கரன்போய்ப் பலரறியத் தடுத்தாண்ட கதையும்,
அளந்தறியா மதுரமுடைக் கவிபலபா டியதும்,
அவ்விருமங் கையராலும் ஆர்வமொடு சலிப்பும்,
கிளர்ந்தனவும் சேரன்உற(வு) எய்தியும்,பொன் வாஞ்சை
கிளைத்ததுவும், பிறவுமிவண் கிளத்தல்தகா தன்றே. 3

செப்புமந்தச் சிவப்பிரா மணக்குரவன் தன்னால்
திருத்தொண்டத் தொகைபிறந்த தெய்வீகம் ஒன்றே
ஒப்புரைத்தற் கரியபெரு மகிமையின தேனும்
உரைக்குமந்தக் குலத்தொருவர் ஓதும்அந்தா தியினால்
மெய்ப்புகழ்ச்சிற் றம்பலத்தார் அசரீரி யாயே
விளம்பியதோர் வார்த்தையினால் வேளாளர் மரபில்
தப்புரையாச் சேக்கிழார் சோழனுய்தற் பொருட்டாய்ச்
சாற்றியநூல் விரிக்குமந்தச் சரித்திரம்யா வையுமே. 4

---

1 வெயில் உமிழ் - ஒளி வரும்படியான. சாருபம் - உபாசித்த மூர்த்தியின் உருவநிலை சாரூபம், சொரூபம் என்பன ஓர் பொருள். எயில் எரித்த - திரிபுரத்தை நீற்றிய.

2 அனங்கன் - மன்மதன். இவர் - சிவனும், உமையவளும்.

4 சிவப்பிராமணர்-ஆதி சைவரான சுந்தரர், குரவன் - ஆசாரியன். அந்த . . ஒருவர்-நம்பியாண்டார். அந்தாதி - திருத்தொண்டர் திருவந்தாதி. சாற்றிய நூல் - பெரியபுராணம்.

அக்கதைகளத் தனைவிதமோ விரித்துரைத்த அவர்தாம்
ஆமாத்தூர்ச் சேறல்மட்டும் அறக்குறுக்கிச் சொன்னார்
முக்கணர்தம் திருவுளப்பாங் கில்லையோ? வெள்ளை
முண்டகப்பூம் பொகுட்டுடையாள் மொழியவிசைந் திலளோ
திக்கறியும் அபவாதம் என்றுமறைத் தாரோ?
சிறியனேன் சொலற்பொருட்டே செப்பவிற்றப் பியதோ?
மைக்கடல்சூழ் உலகினிற்பல் பலருரைக்கின் றார்.அவ்
வண்ணமே யானுமிவண் வகுத்தியம்பு வேனே. 5

புகலூரிற் பெற்றதங்கச் செங்கல்முத லாய
பொருள்முழுதும் பரவையிடம் போந்தளித்தும் அந்தோ
மிகலாய பொன்தருகின் றில்லீர்நீர் எனவே
வெதும்புதலாற் றுயர்கூர்ந்து வியன்தமிழ்ச்சுந் தரனார்
பகலோன்ஆ தியவாமுச் சுடர்களும்கண் ஆனார்
பதிகளில்மேல் ஆமாதைப் பதியெனநன் கோர்ந்து
நகலால்முப் புரம்எரித்த சீர்முதல நாடி
நவின்றுபொருள் பெரும்பரிசு நண்ணிநடந் தாரே. 6

போனவர்கோ புரங்கண்ட வுடன்வணங்கி, ஊருட்
புகுதலும், ஆங் கவர்எதிர்ஓர் பூதம்வந்து தோன்றி
மானமலி தமிழ்ப்புலமை உடையீர்! நீர் வந்தால்
மாழைமிகக் கேட்பதெண்ணி மறைந்தனன்இவ் வூர்க்கோன்
ஆனசிவன் எனச்சொல்லிற்(று) அதுவுமவன் விளையாட்(டு)
அன்றியிலை என்றாலும், அவர்ஒருத்திக் காமுன்
பானல்வயல் ஒற்றியிலோர் மரநிழலிற் போகப்
பகர்ந்தவரால் நிசமெனவே பரதவித்தார் அன்றே 7

எங்குசென்றார் எனஅதன்பால் வினவலும்அப் பூதம்
இரவிவரு திசைநோக்கி எறுழ்வலக்கை நீட்டிற்[று]
அங்குசிறி தேகுதலும், அகரம்எனும் ஊரில்
அரசடியில் ஒருபெரிய ஐங்கரனைக் கண்டு
சங்குபுனை காதுடைய அபிராமன் இந்தத்
தடத்தில்வரக் கண்டதுண்டோ? சாற்றுமெனப் பணிந்து
மங்குலென மதம்பொழியும் அவர்கரத்தாற் சுட்டும்
வழிக்கொடுபோய் மோகினிசேய் வாழ்கோயிற் புகுந்தார். 8

---

5 சேறல் - செல்லுதல். அபவாதம் - பழி, சுந்தரர் வரலாற்றில் பலதலங்களில் நிகழ்ந்த செயல்கள் கூறப்படவில்லை, அதுபோல இத்தலத்திலும் உண்டு.

7 மானமலி - பெருமைமிக்க; மாழை - பொன், ஒருத்தி - சங்கிலி நாச்சியார். நிசமென - திருஒற்றியூரில் மகிழடியில் பெருமானைப் போயிருக்கச் சொன்னவா ஆகவே அம்மொழியை நம்பினார்.

8 இரவி - சூரியன். எறுழ் - வலிமையான, மங்குல் - மேகம், மோகினி சேய் - அரிகரபுத்திரர்.

அவ்வயிற்றன் சிந்தையினில் உள்ளபடி விடையும்,
அலவன்கீற் றணிசடையும் அவிர்மழுவும் மானும்,
செவ்வனப்பார் அபயவர தமும்,புலித்தோல் உடையும்
திருநீறு முழுதணியும் சிறப்புமுதற் பிறவும்,
பௌவநிகர் விழித்துணைப்பார்ப் பதியிருந்த பாங்கும்
பளிச்செனத்தோற் றலும்வணங்கிப் பாவியேன் நிமித்தம்
இவ்வயின்வந் தொளித்தனையோ எனஇரங்கிக் கண்(டு)அவ்
இறைவனவன் தனைநோக்கி இசைக்கின்றான் மாதோ. 9

சங்கிலிக்கா எனைஒருநாள் கண்டமெனப் பிரித்துத்
தழைமகிழ்க்கீழ் இருக்கவைத்தாய்! தடிப்பெரும்பூ தந்தான்
அங்கிசைத்த சொல்லைநம்பி அக்கோயிற் புகுதா(து)
அலமந்(து)இத் திசைநடந்தாய்! ஆனைமுகன் சொற்கா
இங்கிவுருக் காட்டினம்,அத் தலத்தும்இவ்வா றுள்ளோம்.
இந்நாம ரூபமுடன் இனும்பல்வயின் உற்றும்.
எங்கிருக்கின் றும்,எங்கில் லாதொழிந்தாம், எங்கும்
இருப்பதே நம்இயற்கை, எனவுரைத்தான் மன்னே. 10

சொல்லிஉருக் கரந்திடலும் இன்பதுன்பம் இரண்டும்
துய்ப்பவராய்ச் சுந்தரனார், தொல்வழியே மீண்டு
வல்லியமர் பாகத்தார் ஆமாத்தூர்க் கோயில்
வயினடைந்தார், அங்கும்வந்த வண்ணமே கண்டு
கொல்லியெனும் பண்ணெடுத்துக் காண்டனன்காண் டனனென்
குறிப்பினால் ஒளித்தமையும் குலவிடவே பாடி,
நல்லிரட்டு மொழியடுக்கே கவிதோறும் காட்டி,
ஞாங்கர்விழிச் சங்கிலிதோள் நயந்தொற்றி யூரில். 11

ஆர்ந்தனன்ஆர்ந் தனன்,இவர்தம் அருளால்என் றேத்தி
அம்பொன்நல்கிப் போகவிடா தவரென்றும் சொன்னார்
ஈந்தமிழ்கேட் டாயதற்பின் யாவும்வல்ல பெருமான்
இயம்புவான், நீவிரும்பும் ஏமம்நல்கற்(கு) அஞ்சிப்
போந்ததாப் பேய்சொல்மொழி நம்பினை,அல் லாமல்
பிச்சையுண்(டு)என் பணிந்துள்ளேம், பீதகம்பே ணுகிலேம்
சார்ந்தவர்க்(கு)யா தொன்றும்நல்கா தேகவிடா நீதிக்
தகையுடமை பிழையாமல் தருபொருட்கொள் என்றே. 12

---

9 விடை - இடபவாகனம், அலவன் கீற்று - இளம்பிறை மதி. பௌவம் நிகர் - கடல் போன்ற, இவ்வயின் - இவ்விடம்.

10 கண்டம் என - துண்டுபட்டவகை. (மரத்தடியில் போகக்கூறியது.)

11 இன்ப துன்பம் - இறைவனைக் கண்டவுடன் இன்பமும், பேதவுணர்வுடன் அலைந்து துன்பமுமாம். ஒளித்தமை - மறைந்தது, இரட்டுமொழி - அடுக்குச்சொல், சங்கிலி - - - - அருளால் என்பது சுந்தரர் பாடிய இவ்வூர் தேவாரப் பாடல் 4-ல் காண்க.

12 அம்பொன் நல்கி - - விடாதவர்- சுந்தரர் பாடிய பாடல்8ல் காண்க பேய் - பூதம், ஏமம், பீதகம் என்பன பொன். நீதி - தன்னை அடைந்தவர்க்குதவும் கருணை,

நன்னிழல்தந் தடரும்வன்னிக் காய்த்துதிர்த்த காய்கள்
நான்குகரத் தாலும்அள்ளி நல்கினன்,வன் ஞெண்டர்
நின்னிதயப் பாங்கெனது பாக்கியம்என்[று] ஓதி
நீடுமுன்று ஊனயிற்கொளலும் நிகரிலதாம் நாவற்
பொன்னின்வடி வாகிஅவை பொலிந்தன,நா னிலத்துப்
பொருள்முழுதும் ஈடுரைக்கப் போகாத கொடையீ(து)
என்னியற்கை அறிந்[து]உவகைக் கடலிடைமூழ் கினராய்
எழிற்றிருவா ரூரினிற்போய் இன்பமுற்ரு ரன்றே. 13

முதலையுண்டு விட்டிப்பத் தொலைந்ததொர்பார்ப் பனச்சேய்
மூன்ருண்டு சென்றுவர முதிர்தமிழ்ப்பாட் டிசைக்கும்
அதனைமுத லாயவிளை யாடல்பல கோடி
அகிலத்தே செய்துமகிழ்ந்[து], அமரர்தம்ஊர் இறைதன்
சிதநிறவே ழத்திவர்ந்திட்[டு] உடனெர்பச்சைப் பரிமேற்
சேரமான் தொடர்ந்துவரத் திருக்கயிலை சேர்ந்தார்
மதன்வியக்கும் எழிற்பரவை சங்கிலியார் தாமும்
மாதரியார் அருட்பொலிவால் வந்தவண்உற் ருரே. 14

ஆனைமுகன் துதிக்கைவழி அவர்க்குமுந்தி ஔவை
அத்தினமே அங்கடைந்தாள், ஆறுமுகன் தானும்
ஏனைஅருந் தவன்ஒருவன் அன்றவண்வந் துறச்செய்
திலன், வருடம் ஆயிரம்சென் றிட்டபின்ஓர் தொண்டன்
தேனைநிகர் தமிழ்பகர்பைங் கிளியுருவாய்த் தன்பால்
திகழ்தரச்சேர்த் தனன்,உலகிற் சென்றவர்மீள் குவரே?
வானையிட மாக்கொடுடற் கரைத்தல்முதல் இலிங்க
வாய்ப்புகள்மட் டுள்ளகதி வரவறுபோக் கினவே. 15

சுந்தரற்கும், சேரமான் பெருமாற்கும், மரத்தின்
துணிதழைத்துப் பழம்உகுக்கச் சொன்னட்கும், சுரரூர்ப்
பைந்தருவின் மலர்கொணர்ந்தோர் மன்னனுக்கீந் தாற்கும்
பாருலகிற் பிறக்கும்வினைப் பற்றுறல்இன் றேயாம்,

---

13. வன்னி – தலவிருட்சம், அதன் காய்களை இறைவன் அள்ளி உதவினர். அவை உடன் பொன்னாயின. முன்தானை – மேலாடையின் முகப்பு.

14 விட்டிப்ப – சீரணித்துக் கழித்தல். சிதநிறம் – வெள்ளை, சிதன் – சுக்கிரன், வெள்ளி என்பது அவன் வெள்ளை நிறத்தைக்குறித்ததாகும். மாதரியார் – பார்வதி.

15 சிவன் ஆணையால் சுந்தரரும், சேரமானும் கயிலை சென்றனர். அப்போது விநாயகர் உதவியால் ஔவையும் கயிலை சென்ருர். தொண்டன் – அருணகிரிநாதர். உலகிற் சென்றவர் – சிவலோக பதம். வரவுஅறு – மீளவும் பிறப்பதற்ற முத்தி.

மைந்தர்சிலர் எடுத்தடக்க உடல்விடுத்தோர் சிலரும்
மாதேவன் திருவடிப்பூ மருவல்நிச மாமோ?
இந்தவித ஞாயங்கள் இளம்பருவர் உணரார்
இகன்றிகழா[து] இசைவாரும் இகத்திருப்பா ரன்றே. 16

சொற்கநர கத்திருப்பார். வினைக்கீடாப் பிறந்து
சொலுமவற்றின் மேல்கீழாச் சுழன்றிடுவார், அதுபோல்
நற்கயிலை, சிவலோக முதற்சொல்பதங் களிற்போய்
நாதனுருப் பெறுதல்வரை நவில்கதிசேர்ந் தவர்தாம்
அற்கடல்சூழ் உலகில்அவ தரிக்கில்,அறம் பெருக்கி
அகம்சுருக்கி, விண்ணவருக்[கு] ஆனந்தம் விளைத்துப்
பொற்கணமே தஞ்சமெனும் ஆணவத்தோர் முதலாம்
புலையரக்கர்க்[கு] எமனாகிப் பொலிதருவா ரன்றே. 17

இனிப்பிறவா முத்திபெறக் கருதிமிகப் பேசி
ஏன்றதவம் செய்கின்றோர் எண்ணிலர்பார்த் திடலாம்,
மனித்தவுருப் பெற்றதெய்வம் எனவுலகோர் போற்றும்
வாழ்வமைந்து தனைச்சார்ந்தோர் வருத்தமறக் களைந்து
முனிக்கணங்கட் கினியபணி செய்[து]இரா கவன்நேர்
மொய்ம்படைவார் தமைக்காணல் மூவுலகத் தரிதாம்
அனிச்சமலர்த் தாளார்பால் அரனையும்தூ தனுப்பும்
அவன்ஒருவன் தானும்உதித் தவிர்ந்தனன்சின் மயத்தே. 18

பூமிதலைக் கணிதருமென் மலர்புரைதா ளினரும்,
புனிதவே தாகமத்தின் பொருவில்வித்தா குநரும்,
பாமிழற்றும் பறையுறழ்செந் நாவுடையார் தாமும்,
பலசமயங் களையழித்துச் சிலபுரக்கின் றருரும்,
தீமிருகம் போல்வாருக்[கு] இயமன்அனை யாரும்,
திருவாமாத் தூர்ப்பரமன் சேவடியே கருதி
மாமிசம்வேள் வியிலருந்து வாரெனினும் இகழ்ந்து
வல்லதிரு வருட்பெருஞ்சீர் வாய்ந்தபெரி யோரே. 19

---

16 மரத்தின் துணி - மரத்துண்டு. தழைத்துப் பழம் உகுக்க - உயிர்பெற்று பழம் விழச் செய்தது (ஔவை வரலாற்றில் காண்க) சுரர் வர்மலர் - - - ஈந்தான் – அருணகிரிநாதர் கிளி வடிவில் பாரிசாத மலரை விண்ணுலகிலிருந்து கொணர்ந்தது. இவர்களெல்லாம் உடலோடு முத்தியுற்றனர். இப்படியன்றி உடலைப் பூமியில் விட்டுச் சென்றவர்கள் வீடுபேற்றை வுற்றார் என்பது எப்படி என்று கூறினர்.

17 நாதன் உறுப்பெறுதல் – இறைவன் வடிவத்தைப் பெற்ற சாரூபசித்தி, அவர் உலக நலம் கருதி இறைவன் ஆணைப்படி பிறந்து அருளாடலியற்றி இறைவனுகவே போற்றப்பெற்று வீடுபெறுவர்.

18 ஏன்றதவம் – சாதக திசை. மொய்ம்பு அடைவர் - தவம் கைவரப்பெற்றவர், சாத்தியம் பெற்றவர் ஏகதேசமே. அவன் ஒருவன் – சுந்தரர்.

19 பூமிதேவி தன் தலைக்குப் பூணுகக்கொள்ளும் பாதமுடையவரும், மாமிசம் - - - இகழ்ந்து யாகத்தில் கொலை, புலை செய்வதும் தவறே என்ற கருணையினரும் உயர்ந்தர்களாம். தீமிருகம் – நல்லோர்கட்கு இடர் விளைவிப்பவர் சிங்கம் புலியோடு ஒப்பாவர்.

புலவரையெல் லாம்அழைத்து நாவலூர்ச் சடையர்
புத்திரராம் சுந்தரனுர் புகலூர்ப்போற் றுமின்என்[று]
இலகுதமிழ்ப் பதிகமொன்று சொற்றிருந்த படியே
ஏத்தெடுத்துப் பயனடையா[து] ஏங்கியருள் வசத்தால்
அலமில்புகழ்த் திருவாமாத் தூரிலுற்ற நான்,அங்[கு]
அவர்வந்து போங்கதையோ[டு] அடைந்தகதிச் சீரும்
குலவுசில ஞாயமும்சொன் னேன்,இரட்டைப் புலவர்
கொண்டாடிக் கதிப்பயனும் கொண்டதுசொல் வேனே. 20

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருள்பெற்றது முற்றிற்று.

ஆகக் கவி 828



20 தமிழ்ப் பதிகம் - "தம்மையே புகழ்ந்து" என்று தொடங்கும் தேவாரம், அவர்கருத்துப்படியே தானும் ஆமாத்தூர்ப் பரனை நம்பியுள்ளேன் என்பது நூலாசிரியர் கருத்து.

# இரட்டைப்புலவர் முத்தியுற்றது.

**கலி விருத்தம்**

இருவோரும்ஓர் உயிர்போலும் இரட்டைப்புல வோர்தம்
அருளார்தரு சரிதம்சிறி[து] ஆமாதையில் மொழிவேற்(கு)
ஒருதாரகம், அவிர் நாவினும் உறையுங்கலை மகளால்
தருவாள்நிசம், வேறீந்திடில் தவறன்னவள் தனதே. 1

தென்னாட்டுறும் வேளாளர்கள் திலகம்புரை ஒருவன்
மின்னாளொடு மகவாசையில் மிகமூழ்குபு விடமார்
பன்னாகம் அணிந்தானடி பரவிப்பணி செய்திட்[டு]
அன்னானடி யவர்சொற்படி அறமும்செய லுற்றான். 2

அம்மாதவம் முதிரும்தினம் அரனார்ஒரு தவனாக்
கைம்மான்முழு நீத்தன்னவர் கவினார்மனை குறுகிச்
செம்மார்வமொ(டு) அமுதுண்டு தெவிட்டித்,திரு வருளால்
உம்மாவல்என்? எம்மால்முடி வுறும்,ஓதுமின்! என்றார். 3

அருளுள்ளன வா,விட்டக லாநட்பின வா,மெய்த்
தெருள்உந்(து)இய லினவாஇரு சேய்நல்குதி யெனவே
மருவும்புரு டனும்,நாரியும், வாயார மொழிந்தார்
உருவிற்குறை யொன்றாதன வாஎன்றிலர் அந்தோ! 4

மேனாள்நிலை தவிர்வார்அசு வினிதேவர்கள் இருவர்,
வானார்தரு சிவலோக வயிற்சார்ந்தனர், அவருக்(கு)
ஊனாருடல் நல்கிக்கதி உய்க்கத்திரு வுளமாய்த்
தேனார்மலர் இதழிச்சிவன் இதுசெய்குவன் மன்னோ. 5

தானுண்டதன் மிகைஓரிரு தரம்நல்கினன், உடன்அம்
மானுண்கண்மி னாள்உண்டு வயிற்றிற்கரு எய்திப்,
பானுச்செல வால்வந்தகல் பதுமாதமும் முற்றி,
ஈனுந்துயர் மலியாவகை இருமைந்தரை ஈன்றாள். 6

---

1 இருவோர் - இவ்வரலாற்றுக்குறிய இருவர். உடல் இரண்டாயினும் செயல், கருத்து ஒத்திருந்ததால் ஒருயிர்போலும் என்றார். தாரகம் - ஆதாரம்.

3 உம் ஆவல்என் - இறைவன் அடியர் வேடத்தில் வந்து உண்டனர், அசுவினிதேவர் - இருவராயிருக்கும் ஒரு வடிவினர்.

5 ஊன் ஆர் உடல் - தேவரான அவரை உலகிற் பிறக்கச்செய்து முத்தி உதவ இறைவன் எண்ணினார்.

6 மிகை பரிகலம் - பிரசாதமாக இருதரம் உதவினர், பானுச்செலவு - சூரியனால் ஏற்படும் கால எல்லை.

முந்துற்றது காலில்லது, முனிநேர்வலி யினதாய்ப்
பிந்துற்றது கண்ணில்லது, பெற்ருள்துயர் உற்ருள்,
வெந்துற்(று)அவள் கணவன்துயர் வேலைக்(கு)இறை யானுன்
இந்துற்ற சடைக்கோனருள் எவர்தாம்அறி வாரே 7

நலநேரொரு தீதும்,பெரு நவைநேரொரு நலமும்
உலவாதுள வாறேதிகழ் அவையும்செயும் ஒருவன்
அலரால்மெலி வுறும்அன்னவர் அகமாம்வெளி யிடைபோய்ச்
சிலஞாயமொ ழிந்தேநனி தேறும்படி செய்தான். 8

அச்சேய்கள் வளர்ந்தார்இளை யவன்மேல்அவன் அண்ணன்
உச்சேச்சர வத்தூர்மக பதிபோன்(று)உல வுற்ருன்
மெய்ச்சேதிகள் பலவாம்,அவை விள்ளற்கிது நூலன்(று)
இச்சேதிஇவ் வளவோதலும் இலகாமை நினைத்தே. 9

ஔவைக்கிவர் ஆரோஎன அகிலம்சொலு மாறே
செவ்வைப்படு கவியால்நனி சித்தாடல் விளைத்தார்
இவ்வைச்சகம் உற்ருேர்கள் இரட்டைப்புல வோர்என்(று)
சவ்வைப்பெயர் இட்டார்பலர் தாழ்ந்தார்சிலர் வாழ்ந்தார். 10

உணர்வோ(டு)அர சுற்ருர்பொருள் ஒருகோடிநல் கினும்,ஓர்
பணமல்லது கொள்ளாததொர் பண்பும்தலைக் கொண்டார்
குணமேசெயும் அமுதத்தொடு கோரஞ்செயும் விடமும்
அணவும்கவி பப்பாதிய தாயேமொழி வாரால். 11

மானம்பொலி வுறுசெம்பியன் மகிழும்படி ஒருநாள்
கூனன்கருந் தேன்உண்டமை கூறுந்திற முதலா
வானந்தெரி தருபல்புகழ் வாய்ந்தார்வினை தேய்ந்தார்
கானந்திகழ் தில்லைக்கலம் பகநூல்கழ றிப்பின். 12

---

7 முனிநேர்வலி - யானைக்கன்று போன்ற வலிமை, துயர்வேலைக்கு இறை – துன்பக் கடலுக்குத் தலைவர் (பிள்ளைகள் குருடரும், முடவருமானது பற்றிய கவலை)

8 சிலஞாயம் - தந்தை, தாயார் கவலைதீர இறைவன் அருளியது.

9 உச்சேச்சரவம் - இந்திரன் குதிரை. மகபதி – இந்திரன். (தம்பி குதிரைபோல் இருக்க, அண்ணன் அவன் தோளில் ஊர்ந்து சென்ருர்)

10 செவ்வைப்படுகவி – இனியபாடல், சித்து ஆடல் - பலிக்கும்படியான செயல். இ – ஐ – சகம் – இந்த அழகிய உலகம்; சவ்வைப்பெயர் – பிரிக்கமுடியாததான பெயர் இரட்டைப்புலவர்.

11 உணர்வோடு அரசு-புலவர், தவசிகள் முதலியவரை ஆதரிக்கும் அரசர், தீயபயன் தரும் கவியும், நற்பயன் தரும் கவியும் பாடியதுபற்றி விடமும் அமுதமும்போல என்ருர்.

12 கூனன் – நத்தை, செம்பியன் – சோழன். இவர்கள் அரசனிடம் போன சமயம் மன்னன் கருத்தைக் குறித்து "கால் நொந்தேன் – . –" என்ற பாடலைப் பாடினர். மன்னன் வியந்து உபசரித்தான்.

கச்சிக்கொர் உலாவும்,கலம் பகமும்,சொலிக் கருத்தூ(டு)
இச்சித்துள பயன்எய்திலர், யாவும்செய வல்ல
மெய்ச்சித்தர் பிரானல்லது வேறோர்பொருள் நாடார்
நச்சித்துயில் உறுபோதொரு நற்சொற்பனம் உற்றார். 13

### எழுசீர் விருத்தம்.

பொங்குநீர்க் கம்பைக் கரையில்வாழ் இரட்டைப்
புலவர்தம் மனவெளி யூடே
சங்குலாம் பம்பைக் கரைத்திரு வாமாத்
தூர்ச்சிவன் தனித்(து)இனி(து) ஏகி,
அங்குவந் தெமைபோற்(றி) இசைக்குதிர்! உமதுள்
ஆவல்ஈந் தருளுதும் என்றான்
எங்கும்வாழ் ஒருவற்(கு) இவ்வபி மானம்
இசைந்தவா(று) இசைக்கறி யேனே. 14

அவ்விரு வருக்கும் ஒருகண அளித்த(து)
அதியசம் ஆங்கொலோ! அளக்கர்
வெளவிய பவுத்தக் குரவர்வெண் ணீறும்
மணிவடங் களும்அணி தரற்கும்,
செவ்விழைப் பரவை நாவலூர்ப் புலவன்
திருமனை யாய்த்திகழ்ந் திடற்கும்
இவ்விதக் கதைஆ யிரந்திகழ் வதற்கும்,
எண்ணிலார் ஒன்றுகண் டனரே. 15

மக்கள்மே னியினும் குறையுறுப் பினரா
வயங்கும்அவ் வானவர், மகிழ்கூர்ந்(து)
அக்கணந் துவக்கி மால்துய ரந்தீர்த்
தருள்விநா யகன்றன்காப்(பு) அறைந்து
திக்கறி தமது புலமையின் தலையாய்த்
திகழ்தரு கலம்பகம் செப்பித்
தெக்கணம் நோக்கி நடந்தனர், அவ்வூர்
சேருமுன் அதுமுடிந் ததுவே, 16

---

13 இச்சித்துள பயன் - முத்திப் பேறு. சித்தர் பிரான் - சிவபிரான். வேறுஓர் பொருள் - வேறு தெய்வம் (போகப் பொருளை விரும்பிலர்)

14 கம்பைக்கரை - காஞ்சியிலுள்ள கம்பாநதி. அபிமானம் - மாதை வந்து எம்மைப் பாடுக என இறையருளியது.

15 பவுத்த குரவர் - மணிவாசகரால் சைவரானவர்கள். பரவையாரை சுந்தரர் மணத்தல் காரணமாகக் கனவில் ஆணையிட்டார். அதுபோல் இவர்கள் கனவிலும் ஆணையிட்டனர்

16 தேவராயிருந்தவர் மனிதராய்ப் பிறத்தல் இழிவு. அதிலும் அங்கம் குறைவுபடப் பிறந்தனர் இவர்கள். மால்துயரம் தீர்த்த கணபதி - மாதைத் தலத்து விநாயகர். தெக்கணம் - தென் திசை.

அந்தநாள் அவ்வூர் ஆளும்மன் னவனுக்(கு)
அழகனர் அருளிய வாற்ருல்
வந்தவர் அணையும் முன்,அவன் தனது
மந்திரி முதலின ரொடுபோய்
வந்தனை வணக்கம் இயற்றுபு, கொணர்ந்து
வளம்பட உபசரித்[து], அப்பாற்
செந்தமிழ்ப் பனுவல் ஆங்கரங் கேற்றும்
திறஞ்செய்தான் செப்புமோர் கவியில். 17

சேற்கணுள் பாகன் திரிபுரம் எரிப்பச்
சென்றநாள் கொண்டஓர் கணைக்குப்
பாற்கடல் முதலாம் இடம்பல வுடமை
பகர்கையிற், பம்பையா(று) அதற்கு
மேற்கரைக் கோயில் உளதெனச் சொன்ஞர்
விளம்பும்அந் நாளில்அந் நதிமேற்
காற்கவின் றதனுல், வினவினர், பலரும்
கல்லென நகைத்திவை புகன்ருர். 18

ஒருவர்கண் ணுடையார் அல்லரோ என்றும்
உரைக்கைகேட் டிலர்கொலோ,என்றும்
இருவரும் தெய்வப் புலவர்என் ருரே
என்றும்மாற் றிடில்நலம் என்றும்,
பருவமுற் றதற்குத் தக்கவா றுய
பலவிதம் பகர்ந்தனர், புலவோர்
திருவருள் செயலைத் தெரிந்தல(து) அப்பாற்
செப்பிடேம் எனஎழுந் தனரால். 19

அன்றிராப் பொழுதில் முகில்கள்ஓர் ஏழும்
ஆர்ப்பரித்(து)அதிமழை பெயலால்
முன்றிகழ் வழியைத் தணந்த(து)அதன் ஏனை
முரண்வழி செய்த(து),அந் நதிதான்

---

17 இவர்கள் வருகையை இறைவன் முன்னரே ஆணையிட்டவாறு மன்னன் வரவேற்று உபசரித்தான்

18 திரிபுர சம்மாரத்தில் திருமால் அம்பாயிருந்தார். அம்பான அவர் வசிக்குமிடம் பல. என ஓர் பாடல் இவ்வூர் கலம்பகத்தில் பாடினர். அதில் மாதை நாதர் பம்பையில் மேற்கரையில் கோயில் கொண்டார் எனக்குறித்தனர். கோயில் கீழ்க்கரையில் இருப்பதை அறிந்து மக்கள் கேலி செய்தனர் (பாடலை சேர்க்கை 2-ல் காண்க)

19 இயல்பிற்கேற்ப பாடலை மாற்றுமாறு மக்கள் கூறினர். "யாமும் அறியோம் எம் நாவிலுள்ள கலைமகளும் பொய் கூருள்" என்று கூறி இதன்முடிவறியாமல் நூலை அரங்கேற்ற மாட்டோம் என்றனர்.

தென்றிசை மருங்கில் நடந்துபோய் வடக்கில்
திரும்பலின், மேற்கரைக் கோயில்
என்றிசைத் திட்ட மொழிமெய்ஆ யதற்பின்
இரவிவந் துதித்தது மன்னே. 20

ஆயிர மெய்ம்மை திகழினும் மதியா(து)
அசத்தியம் ஒன்றுறில் அதையே
வானுற் பெரிது பேசல்இவ் வுலகர்
வழக்கம்என் பதும்,வெண்டா மரைப்பூ
மேயிருப் பவள்கண் அருள்பெறும் புலவோர்
விளம்புசொற் பழுதுரு[து] எனலும்,
தாயினும் இனிய ஞப்புவி புரப்பான்
தனைமுதற் பலரும்ஓர்ந் தனரே. 21

எத்தகைப் புலமைத் திறமைதோய்ந் துறினும்,
இசைத்தவா(று) இயற்றுமாண் பிலரேல்
அத்தனை புகழும் இகழ்ச்சியா முடியும்
ஆதலின், மாதையூர் அழகர்
பத்தர்தாம் உறுப்பிற் குறையுளார் எனினும்
பழுதுறுர், ஏனையோர் பழைய
சித்தசன் அனையார் ஆயினும் பலரும்
சீயெனச் சிரிக்கநா ணுவரே. 22

முன்னைநாள் இகழ்ந்தார் அனைவரும் மறுநாள்
முடவனும் குருடனு மாகி
என்னைகா ரணத்தால் இவருளார் கொல்லோ?
இக்கணம் ஒருகவி இயம்பில்
பொன்னைமார் பகத்திற் புனைந்துளான் வியந்து
புகல்உரு வமுங்கொள்வார் என்றுர்
தன்னைநேர் பரமன் அருள்பெறு மவர்க்குத்
தாழ்வுறில், அதுவுமோர் சால்பே. 23

தங்கமும் மணியும் இடைக்கிடை கொண்டு
தனைநிகர் தபதியாற் சமைத்த
சிங்கமா முகப்புத் தண்டிகை ஏறித்
திரியினும், சித்தியில் புலவோர்
பங்கனும் குருடன் தானுமா நிகழ்அப்
பாவலர் பதத்துகள் புரையார்
**எங்கள்சற் குருவாம் தமிழ்விர கனைப்போல்**
இருமையும் பொருந்தில்மிக் கினிதே. 24

---

20 இரவே இறையருளால் பெருமழை பெய்தது. இவர்பாடலில் உள்ளவாறு நதி திரும்பியது. பழைய நதியிலும், புதிய நதியிலும் வெள்ளம் போயிற்று. கோயில் மேற்கரையில் இன்றும் அமைந்துள்ளது. 21 மெய்ம்மை - உண்மை, புவிபுரப்பான் - மன்னன்.

22 அழகர்பத்தர் - இரட்டைப்புலவர்கள். ஏனையோர் - அழகிய நாதரைப் பாடாதவர்கள். சித்தசன் - மன்மதன். சீ என - இகழுமாறு. 24 தபதி - சிற்பி. தண்டிகை - பல்லக்கு. புரையார் - ஒப்பாகார் தமிழ் விரகன் - ஞானசம்பந்தர்.

சித்திவேட்[டு] அடைந்தோர் தேவரிற் பெரியார்,
தினமுயன்[று] இடைந்திறந் திட்டோர்
பத்தியோர் அளவிற் றிகழ்தரு புகழார்,
பலவகைப் பொய்கள்பா ராட்டிச்
சத்தியி னளவில் வாதமிட்[டு] இளைத்துச்
சாமவர் சகத்துளார் தம்முள்
உத்திசற் றுடையார், எதற்கும்ஆ மாத்தூர்
உடையவன் கருணைவேண் டுவதே. 25

அரசன்அவ் இரட்டைப் புலவர்தம் பதத்தில்
அன்பொடு பணிந்[து],எனல் ஆதல்
தரவிழை கின்றேன் எனச்சொனன், அவர்தாம்
தரணியோர் எமையெ[ள்]ளா நிமித்தம்
வரநதிச் செலவு மாற்றியாண்ட வர்,எம்
வாஞ்சையா வையும்செய்வார், வருந்தும்
இரவலர் விருப்பம் யாவும்நல் குதியேல்
அவையெமக் கீந்தவே என்றார். 26

அருள்பெற முயல்வார்க்[கு] உதவுகி லாராய்
அதுபொறுத் தாடுமே லவர்க்குப்
பொருளிடத் துணிகை மாந்தர்தம் இயல்பே
புகலும்அவ் விருபுல வோரும்
இருள்களத்[து] இறைவர் கருணையால் ஒருநாள்
எழுந்ததோர் சோதியி னிடைபோய்
மருள்படும் இறப்பும் பிறப்புமில் பொருளாய்
வயங்கினர் மறைமொழிப் படியே. 27

பூமிளங் கணுந்தோய்ந் தெறிக்கும்வான் புகழ்ச்சீர்ப்
பொலிவுறும் இரட்டைமெய்ப் புலவோர்
தாமினிப் பிறவாக் கதிபெற மாதைத்
தலைவரன்[று] அளித்தமை சொற்றும்;
ஆமிவர் அருணைச் சமணனைப் பழித்த[து]
ஆதிய கதைகள்சொற் றிலம்மேல்
நாமிகத் துணர்ந்த படிசதா னந்தர்
நற்சரித் திரஞ்சில நவில்வாம் 28

இரட்டைப்புலவர் முத்தியுற்றது முற்றிற்று.

ஆகக் கவி - 856.

---

25 இடைந்து – சித்திபெறுமல் வருந்தி உத்தி – யூகம். சித்திபெற்றவர் முதல். பத்தி செய்தவர் இடை, வாதமிடுபவர் கடைஎன்க. உத்தியுடையவர் மக்களில் உயர்ந்தோர்.

26 வரநதிச் செலவு – தெய்வநதியான பம்பையை மாற்றிய கடவுள்.

27 இருள்களத்து இறை - நீலகண்டன். சமணனை பழித்தது – அருணை நகரில் சம்பந்தாண்டானை பாடியது போன்ற நிகழ்ச்சிகளைக் கூறவில்லை.

# சதானந்தர் தன்மை.

கொச்சகக்கலிப்பா

முன்னுமொரு சதானந்தர் முத்திபெற்ருர் எனச்சொல்வார்
பின்னுமப்பேர் உடனெருவர் பிறந்ததன்சீர் பேசுகின்றேன்
இன்னுமவ்வா றெருவர்வந்தீண்(டு) இலங்கிடச்செய் யினும்செய்வான்
நன்னுதற்பார்ப் பதிகணவன் நாடகமார் அறிவாரே. 1

ஐதிகங்கள் நம்பிமிகும் அன்புசெய்வார்க்(கு) ஆதரமாம்
மெய்திகழும் ஆமாத்தூர் வேதியரிற் றலையாய
வைதிகன்,தன் மனைவியொடு மாதவஞ்செய் தலின்வந்தார்
செய்திகள்பற் பலவாகும், செப்பிமுடிக் கரியனவே. 2

கீர்த்திமலி அருள்மாதைக் கிழவரதே எனக்கிளரும்
மூர்த்தியிரு பதிற்றைந்துள் முயலகன்மேல் நடிப்பதனுக்(கு)
ஆர்த்திமிகச் செயும்பண்பார், ஆயிரத்தெட்(டு) அக்கணிந்து
பூர்த்தியதா வெண்ணீறும் பூசிமகிழ் பொற்புடையார். 3

எத்தேவும் தன்தேவின் இலீலைவடி வென்பதன்றிப்
பொய்த்தேவொன் றுள்ளதெனப் புழுக்கமுறு புன்மையிலார்
சித்தேதும் விழையாதார் சிவனடியார்க் கன்புசெயும்
மெய்த்தேவை ஒன்றலது வேறுவித வேட்கையுருர். 4

எவ்வுயிரும் சிவன்வடிவே எனக்கருதும் ஈடுறலால்
வெளவுபுலை மீமாஞ்சர் வழிச்சிறிதும் நடவாதார்
செவ்வுருவம் எப்போதும் சிந்தித்துப் பிரணவமும்
நவ்வுமுதல் ஐந்தெழுத்தும் நவில்வதற்குச் சோம்பாதார். 5

பத்தினி,சொல் தவருளாம் பாக்கியம்உற் ருர்அதனல்
புத்திரரும் புதல்வியரும் பொலபொலெனப் பலபெற்ருர்
எத்தினமும் பிறர்கரத்தில் ஏற்றேற்றே சீவித்தும்
அத்தியுரித் தாற்கருதி ஆனந்தம் உறல்ஓவார். 6

---

1 நாடகம் – இறைவன் திருவருளாடல், ஐதிகம் - செவிவழிச்செய்தி, வைதிகன் – ஒழுக்கமுடையவன்.

3 கிழவர் – தலைவரான அபிராமேசர், மூர்த்தி இருபத்தைந்து – சிவ வடிவங்கள் 25, முயலகன்மேல் நடிப்பது - நடராச வடிவம், ஆர்த்தி – அன்பு.

4 தேவை – விருப்பம், மீமாஞ்சர் – கொலை, புலையுடன் யாகஞ் செய்பவர், நவ்வுமுதல் – 'ந' எழுத்தை முதலாகவுடைய பஞ்சாட்சரம்

6 ஏற்று ஏற்று - இறையருட் செல்வம் தவிர, பொருட் செல்வம் அற்றவர். ஆதலின் பிறரிடம் யாசித்துண்பவர்.

ஆமாத்தூர் மேயசதா னந்தரால், அம்பொன்மகள்
தீமாந்தர் மனைப்புகலும், சிவன்செய்பத்தி சோதனையும்,
மாமாய வினைப்பேயின் வலியும்,விளங் கின,அன்றித்
தாமாகச் சிறிதேனும் சலித்(து)உவகை தாழ்ந்திலரே. 7

இன்னணம்பன் னாள்கழித்திட்(டு) இமயமகள் மணவாளன்
தன்னதருள் ஏவுதலில், தபனகுலத் தினனும்ஓர்
மன்னவன்வந் தவர்மனையில் மருவுகலி அறக்களைந்து
பொன்னணங்கு கூத்தாடும் பொலிவுறச்செய் தலும்கண்டார். 8

முன்னாளைக் கலிநோயில் முகவாட்டம் மருவார்தாம்
பின்னாளைத் திருவினிலும் பேரிறுமாப் படையாராய்ப்
பன்னாகம் அணிந்தாடும் பரமனருட் செயலேஎன்(று)
உன்னா,தன் பெயர்மாட்சி உலவாவா(று) ஒளிர்வுற்றார். 9

அக்காலம் அவர்தமைத்தன் அருகினில்வைத் தாண்டருள
எக்காலத் தினும்இறவா இறைவன்உளத் தெண்ணுதலும்,
மைக்காலன் சிவனடியார் வடிவுடன்உற் றினிதழைத்து
மெய்க்கால புரங்காட்டி வெள்ளிமலை யிடமுய்த்தான். 10

### அறுசீர் விருத்தம்.

11

வருசதா னந்தர் தம்எதிர் எழுந்துபோய் மரகதக் கொடிபாகர், அருமை வார்த்தைவந் தீர்கொல்என் றிடல்முதல் ஆயிரம் விதமாச் சொற்[று], ஒருக ணத்தினும் உமைமறந் தறிகிலேம், உம்மை யொத்தனம் உம்முட், கருதும் வேட்கையுண் டெனிற்சொல்வீர்! அதனைஇக் கணத்தில்நல் குவம்என்று.

12

தொகுத்துச் சொன்னதல் லாமல்எம் அரசிலோ தூநகை உமை மேலோ, செகுத்[து]இ ராக்கதர்க் கெடுக்குமால் உலகிலோ திசை முகன் தொழில்மீதோ, பகுத்து மிஞ்சும்இந் திரபதம் முதற்சொல்எப் பதத்திலோ விருப்பென்று, வகுத்தும் கேட்டனன், உடனவர் அனை வரும் மனக்கலக் கமதுற்றார்.

---

7 யாசிப்பதால் சோர்வடையாமல் அன்புபற்றி உவகைபெற்றார். ஆதலின் சதானந்தர் என்ற பெயர் பெற்றார்.

9 தபனகுலம் – சூரிய மரபு, கலி – வறுமை, அணங்கு – திருமகள்.

10 மைக்காலன் – எமன். காலபுரம் – எமனுலகு.

11 பாகர் – சிவன், உம்மை ஒத்தனம் – நீர் என்னை மறவாததுபோல நானும் உன்னை மறந்ததில்லை என்ற ஒருமைப்பாடு.

12 யாது விருப்பம் என வினவியது தொகுத்துக் கேட்டல். 'உமை மீதோ' என்பதின் மூலம் உமையவள் மீதுள்ள அன்பைவிட, அடியார் மீதுள்ள அன்பைக் காண்க.

13

அடியர் யாவரும் முனிவரும் தேவரும் அடற்கணத் தினராரும்,
பொடியும் அக்கமா மணியும்மிக் கணிதரு பொற்புறு புதுப்பார்ப்பான்,
கொடிய ஞகியிங்(கு) எவர்பெரு வாழ்வினைக் குலைக்குமோ எனப்பேசி,
நெடிய மூச்செறிந்(து) அதன்பெருங் கருணையின் நிலைமையை
வியந்தாரே.

14

அவைவி ஞவிய அந்தணக் கிழமுனி அகிலம்யா வையும்ஈன்ற,
சிவைமனோகரன் திருவடித் துணைமிசை தெண்டனிட்(டு) இனிதேத்தி,
இவையெல் லாம்எனக் கேன்உன(து) அடியவர்க் கினியதொண் டுகள்
செய்தார், சவையின் ஓர்கடைப் பாங்கரிற் சிறிதிடம் தருகெனப்
பணிந்தானே.

15

அதுவி ஞவலும், அம்பிகை முதலினர் ஆரும்நெஞ் சகம்நாணி
விதுவு லாஞ்சடைப் புங்கவன் திருவருள் வினோதம்ஈ தெனத்தேறிச்
சதுர ஞமிவன், நமதுவாழ் வனைத்தையும் தாழ்த்திடும் தகைத்தாய
மதுர ஞானம்உற் ருன்எனப் பேசினர் வானவர் மலர்பெய்தார்.

16

நீறு பூத்துள நெருப்பென மாதையில் நெடுந்தவம் புரிந்திந்தப்
பேறு பெற்றவன் அரன்திரு வடிகளைப் பேணி,எற் கொடுவந்தார்
ஊறு மிக்கயின்(று) எமபுரத் தழுந்தும்ஆ ருயிர்கள்காண் தரச்செய்தார்
ஈறு தீர்துயர் தவிர்ந்[து]அவை யாவும்ஈண் டெய்திடப் பணிஎன்ருன்

17

மணந்த வாமலர் இதழியான் அம்மொழி வார்செவிக் கொடு,நந்தி
கணங்க ளோடுசென் றங்ஙனம் கொடுவரக் கருணைசெய் தனன்.ஏகிப்
பிணங்கு ரு[து]எமன் தூதர்க ளொடுதொழப் பெற்(று)அவற் றினைச்
சேர்த்தாங்(கு), இணங்கும் முற்கதி யாயசா லோகமெய் திடும்படி
அமைத்தானே.

18

அதன்பின் அன்னவற்(கு) இனியசா மீபம்ஈந் தருளினன் அறவோ
ருக்(கு), இதஞ்செய்(து) ஏனையர்க்(கு) இடுக்கண்மிக் கிழைத்திடும்
எமன்தன்ஏ வலர்க்கெல்லாம், கதஞ்செய்(து) என்னைமுன் கொன்
றெழுப் பியபிரான் கழல்பணிந் தவர்தம்மை, நிதம்கொ ணர்ந்திஙன்
காட்டன்மின்! எனச்சொலி நெட்டுயிர்த் திருந்தானே.

19

நல்ல மாதையம் பதியினிற் பிறந்(து)அரன் நாடகப் பதம்பேணி
அல்லல் தீர்ந்தசா மீபமுற் றிடும்சதா னந்தர்போல் ஆரேனும்
கொல்ல லேதொழி லாம்எமன் உலகினிற் குலைவுறும் உயிர்எல்லாம்
வல்ல முத்தியின் முதற்பதம் உறும்படி வாழவைத் தவர்இன்றே.

---

14 இவை முழுதும் வேண்டா. சபையில் ஓர் சிறு இடம் தருக என்ருர்.

15 சதானந்தரின் மனத் தெளிவு இச்சையற்ற அடிமைப் பண்புபற்றி வியந்தனர்.

16 ஊறுமிக்கு அயின்று - பல இன்னல்களை அநுபவித்து, ஈறுதீர் – முடிவற்ற.

17 இதழியான் - கொன்றை சூடிய பரமன், நந்திதேவர் மூலமாக எமலோகத்துள்ள பல உயிர்களையும் தருவித்தார். 18 சாமீபம் - தனது பக்கமிருக்கும் பேறு.

20

தந்தை தாயிறந் திட்டநா ளினும்சிவ சாதனம் அணிவோராய்ப், பந்தை நேர்முலை அணங்கினர் மயல்கொடு பழிசெயத் துணியாராய்க், கந்தை சுற்றியேற்[று] அருந்தினும் செயத்தகாக் கடுந்தொழில் செய் யாராய்ச், சிந்தை யால்அரன் பதந்தொழும் வேதியர் தேவரிற் பெரியாரே.

21

பிரம பீசம்என் பதுபெரி தெனமறை பேசிடும் எனச்சொல்வார்
அரனை யேநிகர் அகத்தியன், வசிட்டன்,வி யாசன்ஆ தியர்சான்றும்
தரமல் லாக்குய மகள்வயிற் றுதித்ததோர் சாலிவா கன்தானும்
சுரர்தம் ஊர்வரை புகழ்பெறும் அரசனைத் துணித்துயர் வடைந்தானே

22

கச்சி யூரிலோர் வேதியன் கொலைமகக் கடைப்பிரா மணர்கண்முன்
இச்சி யாவதம் செயப்படு பசுவெலாம் எழுந்(து)இரி தரச்செய்தான்
அச்சி னுற்சிறுத்[து] அருளினிற் பெருத்[து]அரி வடகலைக் கரசானோன்
சிச்சி வேள்வியிற் கொலல்பிழை யெனுமொழி திடப்பட மொழிந்தானே.

23

"நலத்தின் கண்அதற் குரியதல் லாததோர் நாரின்மை வருமாயின்,
குலத்தின் கண்ஐயப் படு"மெனத் தமிழ்மறை கூறலுண்[டு] அதனாலே
நிலத்து ளீர்!சிலர் நிமித்தம்வே தியர்களை நிறையநிந் தனைசெய்து
பிலத்தெய் தேன்மினோ சிவம்அரி பிரமம்என் பெயர்ஒரு பொருட்பண்பே

24

கலியற் கிந்தநாள் ஒருவய தாய[து]அக் கடையன்நா லுண்டும்போய்
வலியிக் குள்ளகற் கியின்கரத் தாலவன் மாயும்நா ளினும்,வானோர்
கெலிபட் டஞ்சுறத் தகுபிரா மணக்குலம் கிளர்தரல் நிசம்கண்டீர்!
புலியைப் பூனையோ(டு) எண்ணல்போன்(று) இகழிலோர் புனிதனால்
[வரும்கேடே.

25

மாய னாதியர் வாழ்வையும் வெறுத்(து) எமன் வசத்தரைக் கதிசேர்ந்த
தூயர் தம்சரித் திரத்துடன் அவர்வருந் தொல்குலத்[து] உயர்வும்சற்(று)
ஏய வோதினன், இனிஒரு விசித்திரம், எழிற்றிரு ஆமாத்தூர்
மேய நாயகர் கன்னட நாட்டிடை விளைத்தவா(று) உரைப்பேனே.

சதானந்தர் தன்மை முற்றிற்று.

ஆகக் கவி – 881.

---

20 உற்றார் இறந்த காலத்தில் திருநீறு, திருமண் இவற்றை அணியார் என்பதை, 'அணிவோராய்' என்றும், பிறர்மனை விழைவு முதலியன தீமை' என்றும், கொலை புலையைக்குறிக்க 'கடுந்தொழில்' என்றும், உள்ள மொத்து வழிபடுவார் என்பதை "சிந்தையால் என்றும் சிறப்பித்துக் கூறினர்.

21 புகழ் பெறு அரசு, விக்கிரமாதித்தன்.

22 வேதியன் – அப்பைய தீட்சதர். அச்சினால் சிறுத்து – உடலில் சிறியவரான தேசிகர். இவரிருவரும் கொலை வேள்வியைக் கண்டித்தவர்.

23 சிலர் நிமித்தம் – அந்தணரில் சிலர் செய்த தவறு காரணமாக. பிலத்து – நரகத்தில்,

24 கற்கி – திருமால் அவதாரம். அவன் – கலிபுருடன், புனிதனால் – தூய அந்தணனால்.

# விநோத ஆடலின் விளக்கம்.

கலி விருத்தம்.

பாண்டி நாட்டிடை ஆலமும் நாணுறப் படர்ந்தன்(று)
ஈண்டி நின்றவெம் சமண்மதம் எனும்இருள், இறைவி
வேண்டி நல்குபால் அருந்துசே யாம்இர வியினால்
மாண்டி டாதுபோய்க் கன்னட தேயம்மன் னியதே. 1

மருட்டு தன்மையிற் சீரிய தாநிகழ் மழைக்கார்
இருட்டில் மின்னெனச் சிற்சில சைவரே யிருந்தார்
முருட்டு நீர்கொள்வீ ராகமர் ஆதலில், முற்றும்
குருட்டு நெஞ்சுடைச் சாரணர் குழியில்வீழ்ந் திலரே. 2

வளவன் மங்கையும், குலச்சிறை நாயனும், மானும்
உளமு ளாரலார் அனைவரும் மூழ்கினர், உமைகோன்
களவில் நந்தியை அதுகழித் திடும்படி விடுத்தான்,
அளவில் சீர்கொள்அன் னவனோர்வே தியன்மக வானன். 3

அந்த நாளில்அங் கியன்றபல் அதிசயங் களும்ஓர்
வெந்த கைக்கொடும் சமணன்அந் நாட்டின்மே வியதும்,
வந்த காரியம் மறந்தவர் போலவன் அமைச்சாய்ச்
சந்த லிங்கதா ரணத்துடன் அவர்அமைந் ததுவும். 4

தொண்டு ளார்பல நாட்டினும் இருந்துவந் ததுவும்,
கண்டு முட்டுக்கேட் டுமுட்டவர் இழந்ததும், கவியாய்ப்
பண்டு கன்னட நாட்டில்வாழ் பாவல ரன்றி
மண்டு செந்தமிழ்ப் புலவரும் சிற்சிலர் வகுத்தார். 5

பன்ன ரும்பல கற்பனைப் பொருள்மிகப் பரப்பிக்
கன்ன லின்சுவைப் பாகுறழ் பிரபுலிங் கலீலை
சொன்ன வாணி,இக் கதையினைச் சுருக்கிஓர் வரியில்
முன்னம் ஓதல்,என் னுற்சொல்வித் திடற்கெனல் முறையே. 6

வசவன் என்னும்நற் பெயர்கொள்அம் மந்திரி மாட்சி
அசம தாற்,சில பாவையால், இறுங்கினால், அகஞ்சால்,
பிசகர் வேடத்தால், புவிதரப் பெற்றபீ தகத்தால்
நிசம தாநடந் துளகதை பலவற்றால் நிகழும். 7

---

1 ஆலகாலம் - விஷம், சேய் - சம்பந்தர். சமண்மதத்தை இருள் என்றதற்கேற்ப சம்பந்தரைச் சூரியன் என்றார்.

2 மருட்டுத் தன்மை - மயங்கப்புரியும் செயல், முருட்டுநீர் - மிக்கவைராகக்குணம்.

3 வளவன் மங்கை - மங்கையர்க்கரசி, சமண சமயத்தை போக்கும்படி நந்தி தேவரிடத்தில் இறைவன் ஆணையிட்டான். 4 கொடுஞ்சமணன் - விச்சலன் என்ற சமண அரசன்

6 கன்னலின் பாகு - கருப்பஞ்சாற்றாலான பாகு.

7 வசவன் - நந்தியின் அவதாரமாக வந்தவர் வசவண்ணன்.

தினமும் ஒன்றரை இலக்கமாம் சிவகணத் தினருக்(கு)
அனமும், ஆடையும், கனகமும், மகளிரும், அவர்தம்
மனதில் நாடுவ பிறவும்நல் குபு,மக வானும்
தனத னுதியர் களும்மிக நாணவாழ்ந் தனரே. 8

வந்த மாதவர் அனைவரும் மனமிக மகிழ்ந்து
சொந்த மாம்பிர யோசனம் கொடுசுகந் துய்த்தார்
வெந்த சிந்தைகொள் விறன்மிண்டர் அனையவீ ரேசர்
அந்தண் சீர்க்கலி யாணமா புரத்திலுற் றன்றே. 9

அவர்தம் பத்தியும், ஞானமும், மகிமையும், அறிந்(து)ஈண்(டு)
இவர்வெண் ணீறணி யானிடம் சேவைசெய் திடல்,ஓர்
தவறென் றோதி,அன்(று) அவர்மனை தனில்உணு தவராய்ச்
சிவனை நொந்தய லூரில்மேய் இரந்தருந் தினரே. 10

அன்றங் கோர்அறச் சாலையின் திண்ணையில் அடற்பொற்
குன்ற வார்சிலை யாரைஎண் ணுபு துயில் கொண்டார்
மன்றல் ஆத்திஅப் பாவன மறைத்து,மால் விடையில்
தென்ற லானைவென் றுயர்ந்தசங் கமரெனத் திகழ்ந்தார். 11

கனவிற் கண்டசங் கமனை,வீ ரேசர்,கை குவித்து
நனவிற் கண்டஅக் கொடுமையைச் சொல்லிநைந் தழுதார்
அனக மாதவர் பலரைஆ தரிக்கும்அன் னவன்மேல்
உனது நெஞ்சம்இக் கடுப்புறல் ஞாயமோ எனலும். 12

அருளு ருக்கரந் தவிரும்அச் சிவனடி வணங்கி
இருளும் வன்சமண் தொடர்பவர்க் கெய்தும்ஆ(று) என்னப்
பொருளெ லாம்சொலி அஃதறப் போக்கிடு மாறும்
தெருளு றத்தெரிக் குதி!எனத் தீவிரத் திரந்தான். 13

பழுதில் காழியம் பதியிலோர் கிழப்பன வன்றுன்
வழுதி நாடுயத் தவம்செய்தான், அங்ஙனம் மன்னர்
தொழுத விச்சல் மன்முதற் சமணரைத் தொலைப்பான்
எழுதொ ணுமறை விதிவழி தவஞ்செய்நீ என்றும், 14

---

8 சிவனடியவருக்குதவிய பொருள் பலவற்றுள் 'மகளிரும்' என்றார். இக்கருத்தை சம்பந்தர் வரலாற்றுள் 25- வது கவியில் 'இது வசவ - - - - - பிறங்கும்' என்பதாலறிக.

9 வீரேசர் என்பவர் ஒருவர், அடியவராயினும் பிழை செய்யின் முனிவர் எனவே "வெந்த - - - - அனைய" என்றார்.

10 வெண்ணீறு அணியானிடம் - விச்சலன் என்ற சமண மன்னனிடம், ஓர்தவறு - அமைச்சராயிருப்பது தவறு என எண்ணினர். ஆதலின் இவரிடம் உணவு கொண்டிலர்.

11 குன்றவார் சிலையானை என்பது மாதையில் சம்பந்தர் பாடிய தேவாரத்தின் முதலடியின் முதற்சொல். 12 அனக மாதவர் - புண்ணியத்தினரான அடியார். கடுப்பு - வெறுப்பு.

13 சமண மன்னவன் தொடர்பு வசவருக்கு எப்படி எய்தியது, அதை எப்படி நீக்குவது என்று வினவினர். 14 கிழப்பனவன் - சிவபாத இருதயர். வழுதி - பாண்டியன்

தருமன், நந்திசொற் பெரு[து]அரன் சந்நிதி சார்கால்
வரும மிக்[கு]அவன் சமணமன் ஆகென்ருன், மறலி
அருகென் மந்திரி ஆகென எதிர்த்தறைந் தனனல்
இருவர் தாமும்அங் கெய்தினர், அறிகுதி! என்றும். 15

நந்தி யாதியர் அளவில்பல் கோடிபேர் நாடிப்
புந்தி யாற்கரு தியபயன் பெற்றது, புதுநீர்
வந்தி ரங்கொலி தருபம்பை யாறதன் வடபால்
அந்தி வான்மதிச் சடிலர்வாழ் மாதையாம் என்றும். 16

சொல்லி அக்கணம் மறைந்தனன், விழித்(து)அறச் சூழ்ந்து
வல்லி ருப்புறழ் மனங்கொள்வை ராகவீ ரேசன்
அல்லி னும்பக லினும்நடந் தந்தவூ ரினிற்சென்(று)
ஒல்லி டும்தகை கருதுபு தவஞ்செய லுற்ருன். 17

ஆம்பற் பொய்கையில் அந்தஅந் தணனென மூழ்கிச்
சோம்ப லின்றிஐந் தெழுத்தையும் மிகைபடச் சொல்லிப்
பாம்ப ணிந்தசெம் பவளமால் வரைபுரை படிவம்
காம்ப விர்ந்ததோட் டுணைப்பசுங் கொடியொடு கருதி 18

யாவ ளாயினும் ஒருமகள் வயிற்றில்நின் னிடம்வாழ்
சேவ லோன்மக வாவரும் படியருள் செய்து
தேவர் போற்றும்நந் தியும்பல கணத்தரும் சேர்க்கும்
பாவ வேர்களைந் தருள்எனப் பரதவித் தனனே. 19

அப்பெ ருங்கணத் தினரிடை யொருவனு னுலும்
தப்பெ னக்கரு திலன்இவன் ஒருவன்நெஞ் சகத்(து)இம்
மெய்ப்பெ ருந்தகை யுதித்த(து),எல் லாம்விடை யுகைக்கும்
கைப்பெம் மான்திருக் கூத்தெனக் காண்குநர் சிலரே. 20

யாதெத் தன்மைய தாயினும் ஆகுக இறைதாட்
போதற் கெடிதிடிற் போதும்என் பவனையாம் போற்றேம்;
தீதெற் சாரினும் சார்கமெய்ச் சிவகணத் தினர்வாழ்
ஏதெற் றேஎன இரங்குநன் எம(து)இறை யவனே. 21

---

15 தருமன் - எமன், நந்திசொல்பெருது - நந்தி தேவர் அநுமதியின்றி, வருமம் - பகை, மறலி - எமன்.

16 புதுநீர் - வெள்ளநீர், அந்திவான்மதி - மாலை நேரச் சந்திரன்,

18 ஆம்பற் பொய்கை - குமுதவதி என்ற குளம், அந்த அந்தணன் - சிவபாத இருதயர், காம்பவிர்தோள் - மூங்கில் முளைபோலும் தோளை உடைய உமை,

19 சேவலோன் - முருகன்,

20 பெருங்கணம் - வசவண்ணரிடம் வரும் கூட்டம், இவன் ஒருவன் - வீரேசர்.

21 ஏது எற்றே - வாழச் செய்யும் எத்தனம் யாது

அன்ன நற்குணம் அடியவர் உடற்றிரள் புரப்பான்
முன்னர் நந்திபால் அடைந்(து)அறம் முதிர்ந்துயிர் காப்பான்
பின்னர் ஈந்தவீ ரேசர்பா லுற்றதாம் பெருமை
நன்னர் ஓர்குநர் கலைமகள் அனையநா வலரே. 22

வருட மொன்றவர் மாதவஞ் செய்தலும், மாதைத்
திருட ளுரருள் சுரந்தொரு சித்தராத் தோன்றிக்
குருடர் போல்சமண் குண்டரை வெறுத்தநின் குறிப்பில்
அருட ரும்படி இசைந்தனன் அரனென அகன்ளுர். 23

தனது காரியம் குறித்தயர் தானவர் முதலோர்
மனநொந் தேங்குறக் கண்டுகண் டிருக்கு(ம்)மா தேவர்,
அனக நந்தியா தியருயத் தவஞ்செயும் அவருள்
சினமுண் டாகுமுன் தேற்றலால் அவர்திறம் திகழும். 24

அவர்முற் றேற்றினர், மறைந்தஅக் கணம்கலி யாண
நவபு ரத்தில்அந் நந்திமுன் அவிர்ந்தனர் அவர்தாம்
சிவனென் றேஉப சாரமிக் குளுற்றினர், தீக்கண்
பவள மேனிஒப் பனமறைத் தவர்,இது பகர்வார். 25

உனையொப் பாரைஇவ் வுலகினிற் கண்டிலம், ஒள்வேல்
அனைய பண்ணிபங் கனைத்தொழும் அடியவர்க் காம்நல்
வினைசெய் பண்பினிற் சீர்த்தனை! என்றலும், வெதும்பி
அனையர் வந்திகழ்ந்(து) அமுதுண[து] ஏகல்சொற் றயர்ந்தார். 26

கோடி கோடியில் ஒருவர்அக் குணத்தினர் இருப்பார்
ஈடி லார் அவர் பெருமையாம் இசைத்திடற் பாற்றன்(று)
ஊடி னுலவர்த் திருத்தரி(து), இனிஅவர் உன்றன்
மாடி யைந்திடற் காமருந் தளிக்குதும் மகிழ்வாய் 27

என்று சொற்றவன் அங்கமே இலிங்கமா மூர்த்திக்(கு)
அன்று பூசைசெய் திடும்நிவே தனத்தின்உள் ளதுபோல்
ஒன்று நல்கினன், வாங்கிய வசவர்,தாம் உண்ணு(து)
இன்று செய்கடன் முடித்தபின் அருந்தலாம் என்றே. 28

தனது தோட்கொள்பொற் றுனையின் மூலையில் முடிந்தார்
பனக பூடணம் மறைத்தவன் போயினன், பாரைத்
தினமும் காக்கு(ம்)மன் ஆள்விடுத் தழைத்திலில், திகைத்(து)அவ்
அனம றந்தனர், விரைந்தனர், போயினர் ஆங்கே 29

---

24 ஏங்குற - காட்சிகாணுது வருந்தும்படி. அவருள் - மனவெளியில்

27 உன்றன்மாடு - உன் பக்கம், மருந்து - அமுதம்,

28 ஒன்று - ஒருசோறு, செய்கடன் - வழிபாடு

29 பனக பூடணன் - பாம்பு அணியும் சிவன், அனம் மறந்தனர் - பிரசாதச் சோற்றை மறந்து விட்டான்.

பரமன் தன்னடித் தொழும்பினர், பணிபுரி வாருக்[கு]
அரசன் மாளிகைச் சேவகம் ஆதிய ஆகா;
சுரர்தம் உண்டிகைப் படில்உடன் அருந்தலே துணிவாம்
கரம்வி டாதுவைத் தொருகணங் கழித்தலும் கடையே. 30

கொச்சகக்கலிப்பா

அந்தவச வேசர்தங்கை அணிமடந்தைப் பருவத்தாள்
மைந்தன்ஒரு வன்கரத்து மங்கலநூல் புனைந்தில்லாள்
கந்தமலர்க் கணைக்காமன் கருதாநன் னிலைநின்றாள்
பைந்தகைய மயிற்சாயற் பார்ப்பதிநேர் படிவத்தாள். 31

அழுக்கெடுக்கும் வண்ணான்வந் ததன்நிமித்தம் அண்ணனது
விழுப்புடையெல் லாமொருங்கு விரித்தொருமுன் றானையினில்
முழுக்கருணைச் சிவஞான முனிதருசோற் றினைக்கண்ட(து)
இழுக்குடைய[து] எனிலவனால் இதில்முடியப் படாதென்றும் 32

எத்தகைய மகிமையதோ என்றென்றும் மிகஎண்ணி
வைத்தவற்கெய் தாதுதன்பால் வருநலமும் மதித்தோர்ந்து
கைத்தலத்தாற் களத்திலிங்கம் காணுறநீட் டுபுதுய்த்தாள்,
அத்தருணம் குகன்கலைஒன் றுய்வயிற்றுற் றதுமாதோ. 33

அம்மதியே மாதவிடாய் அகன்ற(து)உரோ மத்தொழுங்கும்
விம்மலும்ஆ லிலைவயிற்றில் விளங்கின,மேல் வெளிறியது,
கைம்மலையே போலுமுலைக் கண்கள்கறுத் தன,நாட்டில்
எம்மனிதர் தாமும்மெல்லென் றிதுபேசத் துணிந்தாரே 34

விச்சமலன் காதினும்இவ் விபரீத மொழிபுக்கு
மச்சமுள வென்கைபற்றி வசவண்ணர் தமைக்கேட்டான்,
அச்சமொரு சிறிதேனும் அணையாராய், ஆணைவழி
நச்சனைய விழியாளை நடத்துகென நவின்றாரே. 35

அவர்மனைக்[கு]அன் னவரொடுபோய், அம்மகளைப் பாரானாய்ச்
சுவர்நிகர்வன் றிரைக்கப்பால் தோழியர்க ளுடனிருத்தி
விவரமென்?இவ் அபவாதம் விளைவானேன்? எனக்கேட்டான்
கவலைஅணு வேனுமின்றிக் கனலனையாள் கழறலுற்றாள். 36

---

30 சுரர்தம் உண்டி, தெய்வப் பிரசாதம், கரம் - கை,

32 ஈது இழுக்குடையது எனில் இந்த ஒரு சோறு சாதாரணமாயிருந்தால் அண்ணன் முடிந்து வையார், ஏதோ மகிமையுடையது எனக் கருதினாள்.

33 களத்து ---- துய்த்தாள் - கழுத்திலணிந்துள்ள அங்கலிங்கத்தின் முன்காட்டி நிவேதித்து உண்டாள். முருகன் கலாமிசம் ஒன்றுடன் சேர்ந்தது.

35 ஆணைவழி - நேர்மைப்படி,

36 அவர் மனைக்கு - அமைச்சர் இல்லத்துக்கு,

என்வயிற்(று)ஓர் மகவிருக்கை யானுமறி கின்றேன்,என்
தன்வலக்கை தொட்டொருவன் தனித்தணைந்த தில்லையில்லை,
மின்வனச்செஞ் சடையான்இம் மெய்யறிவான் என்றிடலும்
மன்வருத்தம் எய்திஇச்சொல் மாநிலம்ஒப் பாதென்றான். 37

ஆயமொழி கேட்குமற்றோர் அதுவிதெனப் பேசாமுன்
தூயநகைக் குயிலனையாள், சுரருலகும் துணிக்கமுறத்
தாயறியாச் சூல்இதெனல் சத்தியமே யாமாகில்
நீயறிப் பேசும்இன்றேல் நீற்றறையிற் புகுவல்என்றாள். 38

என்றமொழி முற்றுறுமுன் எதிரொலியிட் டாங்(கு)அவளுள்
துன்றலுறு கருப்பத்துச் சுதன்சொல்வான், விச்சல!கேள்!
உன்றனமைச்(சு) ஒருநாளிங்(கு) ஒருசித்தர் உதவியசோ(று)
ஒன்றடைந்தான், இன்றுவரை உணர்ந்திலன்,அப் பிரசாதம் 39

மேற்றனை முடிந்தான்,நீ விரைந்தழைத்த தால்இழந்தான்
போற்றுஇக் கன்னி,அதைப் புசித்ததனால் உட்புகுந்தேன்
நீற்றன்கட் சேயருளில் நிகழ்கலைக ளிடையொன்(று)யான்,
தோற்றுஇங் கியற்றுவிதம் சொலும் நிமித்தம் இலை,காண்பாய்! 40

என்னும்மொழி முழுதும்வினை வினர்இதயந் தொறும்,அன்று
துன்னும்வியப் பிணைவிரித்துச் சொலத்துவக்கில் மிகையாகும்
மன்னுளத்தில் திடுக்கமது மருவியது, வசவேசன்
தன்னுணர்ச்சி யினைஎள்ளித் தலைகவிழ்ந்திட்(டு) அருள்வலியால் 41

யாமருந்தின் மாந்தாதா எனஉருக்கொள் ளினும்கொளுமால்
கோமளப்பொற் றொடிவயிற்றுட் குறுகியதே நலம்,வீணப்
போமதுநே ராதியன்ற புண்ணியமே உயர்வெல்லாம்
காமனைவென் றார்செயலே எனக்கருதிக் களிகூர்ந்தார் 42

அதிகருணை விளையாட்டாம் அந்தவியப்(பு) அகிலத்தின்
பதிகள்தொறும் நிலவிடலும் பைந்தமிழ்ச்சீர் ஆமாத்தூர்
நிதிகடுக்கும் வீரேசர் நினைத்தபடி முடிவதற்காம்
ததிகவின்ற தெனஆர்வச் சலதியிடை மூழ்கினரால். 43

அக்கருப்பம் உற்றாளை, அரனிடத்தாள் இவள்என்றே
மக்களினத்[து] அன்பரெலாம் வாழ்த்திமிக வணங்கினர்,வான்
செக்கர்நிகர் அழகேசர் தினமும்அவள் கனவினிடை
புக்கருட்பே ராடல்வகை, புயங்கமன்சொற் றிடலாமே. 44

---

38 தாய் அறியாத சூல் இது சத்தியமானால் சிசுவே பேசும் இன்றேல் உன் ஆணைக்கு முன் நீற்றறையுட்புக்கு உயிர் துறப்பேன் என்றாள்.

39 எதிரொலி - குழந்தையின் பேச்சு.

41 எள்ளி – இகழ்ந்து, மாந்தாதா – ஆணையிருந்து மகவுபெற்றவன்.

திங்களொரு பத்தும்அங்கு திகைத்தபின், அச் சேயிழையாள்
சங்கடமோர் சிறுமின்றித் தன்வாய்நீர் கொப்பளித்தாங்(கு)
அங்கசனை வென்றவிர்பேர் அழகும், அயிற் படைஒன்றும்,
மங்களம்சேர் இலிங்கமொன்றும் வாய்ந்துளதோர் மகவீன்றுள் 45

பிறந்தமகன் முகூர்த்தமொன்றிற் பெருஞ்சமர்செய் திடற்காய
திறந்தழைக்கும் சேவகனுத் திகழ்ந்தனன், தாய்க்[கு]அந்நேரம்
சிறந்தபதி ஞருண்டாய்த் திருத்தியளித் தது, சிவன்எண்
ணிறந்தவிளை யாடல்களில் இதுவும்ஒன்ரு யினதன்றே. 46

அம்மகள்சொற் கேட்டஞ்சி அரண்மனையில் அன்றுற்ற
மைம்மலைநேர் சமண்வேந்தன் மலியும்அவ சகுனத்தால்
நம்மரசு நீங்குறுமோ? நாம்அழிவோ மோ?அருகன்
சம்மதம்எற் றோ?எனவே தளர்வொடுநாட் கழித்திருந்தான். 47

புல்லருந்து கின்றனவும் பொன்றுறக்கொன் றுண்[டு]உவக்கும்
பொல்லரச ஞகில், அந்தப் பொற்கொடியைக் கொல்லநினைத்[து]
அல்லல்செயும் படிதுவக்கி, அக்கணமே அழிந்தொழிவான்
எல்லவனைப் பகைத்ததனுல் இருள்செயுமா றென்னுளதே. 48

சாரணர்தம் சொற்கேட்டுத், தவளநீற் றினைஇகழ்ந்து,
காரணன்முக் கண்ணன்எனக் கருதானும் குற்றமன்றிப்
பாரணங்கிற்[கு] இதம்செயலில், பல்லுயிரும் காப்பதனில்,
நாரணன்தொண் டரைப்போலும் நலத்தினன், விச் சலன்தானே. 49

அன்னமுட்போ யதும்உதியா(து) அத்தனைநாள் கருப்பத்தில்
என்னவிதத் தாற்றடைப்பட்[டு] இருந்தானே அறிகில்லேன்
மின்னல்நிகர் வேலேந்தும் வியன்கண்டு மேதினியோர்
சின்னவசு வேசனெனத் திருநாமம் தரித்தாரே. 50

காலனுயிர் குடித்தாற்கும் கவுரிக்கும் நடுவாழும்
பாலனிவன் தான், என்னப் படிவத்தால் திகழுமவன்
ஞாலமுழு துய்வதற்காம் நலங்கருதி, நந்தியைமுன்
சீலமறு சமணன்பாற் செல்லல்!எனத் தடைசெய்தான். 51

அங்கிருந்த சிவகணத்தார் அனைவோரும் ஆர்ப்பரித்தார்,
பொங்கியபே ரானந்தப் புணரிவிட்டுச் சமணரெலாம்
மங்கியழி தருகாலம் வந்ததுகொல்? எனமாழ்கித்
தங்கிளைக்கோர் அரசானுன் தன்னிடம்போய்ச் சாற்றினரால். 52

45 பிறந்த குழந்தை ஆணுயும், கையில் வேலாயுதத்துடன் சிவலிங்கம் பூண்டதாயும் இருந்தது. 46 அருகன் - சமண் சமயக் கடவுள்,

47 பொல் அரசன் - புலைமன்னன்.

49 நீற்றை இகழ்தல், சிவனை வணங்காதிருத்தல் இவைதவிர, விச்சமன் உலகமக்கட்கு பல நலமே செய்தான்.

வேலொடவன் தோன்றியதும், விரைந்துவளர்ந் தவிர்ந்ததுவும்,
மாலொடுறழ் வசவனைத்தன் வசமாக்கிக் கொண்டதுவும்,
காலொடுசேர் கனலென்னக் கனவீரம் காட்டுவதும்,
சேலொடுநேர் கண்ணாரும் செப்பிடக்கேட் டுளம்நொந்தான். 53

ஆதுநிகழ் வுறுகாலத்[து] அச்சின்ன வசவேசன்
தூதுபோர், முதலாய தொழில்பலவும் நனியாற்றி
யாதுமத்தே யத்திடைதன் இகலின்றிச் செயங்கொண்டான்
ஈதுநூல் அன்[று]அவைமுற் றெடுத்துவிரித் திசைப்பதற்கே. 54

கன்னடதே யத்தினிடை கனவீர சைவநெறி
நன்னலந்தோய்ந் தவராய நரரன்றிப் பிறரில்லார்,
அன்னதகை வாய்ந்ததற்பின், அல்லமனை, முதலோர்வந்[து]
உன்னதச்சித் தாடியவா[று] ஒருகோடி யுள்ளனவே. 55

அல்லமன்தன் திருவுருவில் அருந்தவத்து வீரேசர்
ஒல்லல்முத லியமுன்னோர் உரைத்தவற்றுள் ஒழுகியது,
பொல்லமண வேந்[து]அயில்வேள் போற்பவனி வரலாகச்
சொல்லல்உணர்ந்(து) உவப்பார்க்குத் தோற்றுத சூக்குமமே. 56

சங்கரனும் அல்லமனும், தக்கன்வேள் வியைத்தகர்த்த
புங்கவனும், செவ்வேளும், நந்தியுமாம் புண்ணியரும்,
துங்கமிகு சங்கமராய்த் தோன்றியும்,நீ றணியாதார்
தங்களர[சு] ஓங்கியதாச் சாற்றினரும் பலர்தாமே. 57

வீரேசர் தத்துவக்கா வியனுமாத் தூர்இறைவர்
சீரேய்ந்த கருநாட தேயம்உயச் செயல்சொற்றும்,
பாரேநம் தஞ்சமெனப் பரித்தாண்ட பலர்தாமும்
நீரேறு சடைகொளவர் நெடும்பணிசெய் தமைசொல்வாம் 58

வினோத ஆடலின் விளக்கம் முற்றிற்று.

ஆகக் கவி – 939.

---

54 ஈது நூல் அன்று - சின்ன வசவேர் திருவிளையாடலை இதில் கூறல் முறையன்று என்பதாம்.

57 அல்லமப் பிரபு, வீரபத்திரர் சிவ அமிசமாய் அவதரித்தவர், முருகனும், நந்தி தேவரும் வீர சைவ நெறியினராய் அவதரித்த காலத்திலும் சமணர்கள் அரசு வளர்ந்திருந்த தாக வரலாறு

# ஆளுகைச் சிறப்பு.

### அறுசீர் விருத்தம்.

ஈடில்பே ரழகர் மாதைக்[கு] இமையவர் முனிவர் மன்னர்
பாடியல் பணிசெய் துய்ந்த பண்புமுற் காண்டம் சொல்லும்,
மாடிவர் தருமன் னூர்தம் மலர்க்கண்மூன் றுளும் பெற்ற
பீடியைந் துற்ற மன்னர் பெருந்திரள் மறைந்த பின்னர். 1

வேதியன் ஒருவன் கற்ற வியன்கொள்சோ திடநூல் மாண்பால்
கோதில்கற் பெழில்வாய்ந் துற்ற குசப்பெண்ணோர் அரசற் பெற்றாள்
மாதிர முழுதும் வென்[று]அம் மன்சகாத் தமும்தோய்ந் தான்,அக்
காதியை மறைக்கும் வேந்தன் கவினும்நாள் அறிகி லேனே. 2

அவன்மர[பு] உள்ள போதே அரசுசிற் சிலகூ றுயிற்[று]
எவனஅச் சுததே வப்பேர் ஏய்ந்தவன் முதலா மன்னர்
நவமலி தருமம் தானம் நம்ம[து]ஆ மாத்தூர்க் கோயிற்
சுவரினில் தீட்டித் தீட்டித் தொகைபடச் செய்தா ரன்றே. 3

ஆவணி மாதத் தொன்றும், அரியபங் குனியில் ஒன்றும்
சேவண வியப தாகைத் திருவிழாப் பெருமை செய்து
காவணத் திடம்பங் காட்டாக் கனவிசே டமும்நாள் தோறும்
தூவண நீற்றார் ஆர்வம் துளித்திட நடத்தி னாரே. 4

அந்தணன் ஒருவன், வித்தை யாரணி யப்பேர் வாய்ந்தோன்
கந்தமா மலரோன் வேதக் கருத்தெலாம் விரித்துச் சொன்னோன்
இந்தநாள் யாமோர் வேந்தென்(று) இலங்கிட வேண்டும் என்னச்
சந்தமந் திரமாம் பஞ்ச தசாக்கரச் செபம்செய்[து] அன்பால். 5

திங்கள்நேர் முகமும், வேய்போல் திகழ்தரு தோள்கள் நான்கும்,
அங்கயி ரென்றும், தோட்டி யதுவும்,நல் அபயம் தானும்,
மங்கள வரதக் கையும், மலர்ப்பதத் துணையோ(டு) யாவும்
சிங்கவா கனத்திற் பைம்பொற் சிகிளனத் தியானம் செய்தான். 6

---

1 மாகு இவர்தரும் அன்னூர் - ரிஷபத்தில் அமரும் சிவன், மூன்றுளும் - மூன்றுகண்களாலும், மன்னர் - சந்திர, சூரிய, அக்கினிகுலம் வரிசையில் வரும் பாண்டியர், சோழர், சேரர்.

2 வேதியன் - வேதங்கற்றமுனி, அரசன் - சாலிவாகனன், சகாப்தம் - சாலிவாகன சகாப்தம் போல்வன, குசப்பெண் - சுமித்திரை,

3 அச்சுத தேவன் - பல்லவருள் ஒருவன், ஆமாத்துரை ஆண்ட மன்னன் சுவர்களில் தீட்டி - கல் வெட்டின் மூலம் விளக்கி.

4 சேவு அணவிய பதாகை - இடபம் எழுதிய கொடி, காணம் - பந்தல், தூவண்ண நீற்றார் - தூய நீறணிந்த அடியார்.

5 பஞ்ச - சத - அக்ரம் - ஐந்து நூறு கொண்ட மந்திரம்.

6 தேவியின் வடிவு கூறிய பாடல். சிகி - மயில்.

அன்னணம் வருடம் ஈரா[று] அம்பிகை தனைஉ பாசித்(து)
உன்னலிற் சிறிதும் எய்தா(து) உளமிகக் கலங்கி வாடி
இன்னதே வதையை யான்கொன் றிடுவலென்[று] ஈமந் தன்னில்
பொன்னதாற் சமைத்துப் பீசம் பொறித்தளந் திரத்தோ டேகி 7

எட்டிளியில், எருக்கில், கள்ளி யினிற்,சமித் தினம்,வேப் பெண்ணெய்
மட்டில்பல் கருக்க ளெல்லாம் வகைபடக் கூட்டி, முன்னர்
கொட்டியாங்(கு) அதற்காம் ஓம குண்டமும் சமைத்தான், தீயுள்
இட்டிலான், கவுரி ஆங்கோர் இடையனுல் இதுசொல் விப்பாள். 8

ஆடுமேய்த் துற்றேன் முன்வந்[து] ஐயரே! நீர்ஏ தேதோ
கேடுசெய் கின்றீ ராம்,அக் கிரியைமுற் றுறிற்சா வீராம்,
தேடும்நும் விருப்பம் இந்தச் செனனத்தில் முற்று ருதாம்
நீடும்வேல் விழிமான் நேரோர் நேரிழை உரைத்தாள் என்றான். 9

பகரும்அம் மாற்றம் கேட்(டு)அப் பனவனுட் பற்றெல் லாம்போய்
நிகரில்சீர் விரத்தி தோன்றி, நெடும்சிகை யொடுமுந் நூல்நீத்(து)
இகமொடு பரமும் வேண்டேன், எனப்பிர மாணம் செய்திட்(டு)
அகரஆ தியமூன்[று] ஒன்றும் அந்தமந் திரமே சொல்லி. 10

செய்யகல் லாடை சாத்தித். திகழ்வட திசையிற் சென்றான்
வையக முழுதும் ஈன்றாள், வந்தெதிர் சேவை ஈந்தாள்
ஐயகோ! இன்றேன் வந்தாய்? அன்றுவந் திலையே என்றும்,
நெய்யளா வியதீப் போலும் நிந்தையும் நிகழ்த்தி னுல். 11

அம்மொழி வினவிச் சற்றும் அவள்சினந் தில்லாள், யான்சொல்
செம்மொழிப் படிவந் தேன்,இச் சென்மம்வே றன்றே என்றாள்
மெய்ம்மொழிப் புலவர் போற்றும் வித்தையா ரணிய மூர்த்தி
கைம்மொழி உரைத்தான் தன்னைக் காவலன் ஆக்க உன்னி. 12

---

7 உன்னலில் – பன்னிரண்டாண்டு தியானித்து, வித்யாரண்யர் – தேவியை வழிபட்டார். தேவி காட்சி தராதலால் மந்திரம் எழுதி உமையை மாரணம் செய்ய முயன்றான். மாரணம்– கொல்லல்.

8 சமித்து – அக்கினியிலிடும் குச்சுகள், நெய்க்குப்பதில் வேப்பெண்ணையும், ஆல், அரசுக்குப் பதில் எருக்கு, எட்டி, கள்ளி சேகரித்தான். யாகம் செய்யுமிடம் மயானம். கரு - முட்டை.

10 அப்பற்று - அரசபதவி மோகம், விரத்தி – வெறுப்பு, முந்நூல் – முப்புரிப்பூணூல், மந்திரம் – தேவிமந்திரம்.

11 கல்லாடை - காவியுடை, ஈன்றாள் – அம்பிகை.

12 சினந்தில்லாள் – மனம் வருந்திலள் அம்பிகை. செம்மொழி – இப்பிறப்பில் உன் கருத்துப்படி அரசு பெற முடியாது என்ற மொழி.

அம்மைதன் பதத்தில் வீழ்ந்திட்(டு) அரியதோத் திரமும் செய்(து)யான்
இம்மையின் சுகம்வேட் டெய்த்தேன், இமையவர் தமக்கும் எய்தாச்
செம்மைமேல் நெறியில் உய்த்தாய்! திரும்பவோர் நினைவு(இ)டாய் அச்
சும்மைநீப் பதற்(கு)ஆ மாறு சொற்றருள் எனச்சொன் னனே 13

காசியில் ஈழன் போன்று கரியநாய் நான்கின் பின்னர்
ஆசில்சீர் வியாசன் தோற்றும், அவனிடம் நான்கேட் டங்கு
நீசில நாள்வை(கு) அன்பால் நினக்குவேண் டியபொன் முற்றோர்
தேசிகன் அளிப்பான், பெற்றுத் திருத்திளய் துக!என் றுளால். 14

அவ்வணம் பெற்றந் நாளில் அருந்தமிழ் தொண்டை நாட்டோர்
மைவணக் கோட்டை கட்டி மலைமகள் வடி(வு)என் மாண்பால்
செவ்வண வேலூர் என்னும் திருப்பெயர் தரித்(து)அன் னனை
மெய்வண மன்னன் ஆக்கி விருப்பொழிந்(து) அமல னனன் 15

கிடையிடை முடைப்பட் டாற்குக் கிருட்டிண ராயப் பேரும்.
படைகளும், அரசும், ஈந்த பார்ப்பன முனிவன். ஞானம்
அடையினும் சுபாவம் போகாது, ஆன்மகோ டிகளுக்(கு) என்ற
தடையில்சொற்(கு) அவனால் பஞ்ச தசப்பெயர் பெறலும் சான்றே. 16

அவ்வர சனுக்(கு)அப்பாசி யாம்பெயர்த் தெலுங்கப் பார்ப்பான்
செவ்வமைச் சாத லாலே தெவ்வராற் சிதையா துற்றன்
மெய்வரச் சகாத்தம் வேட்டான், வேதியர் மறுத்தார், வெள்கிப்
பௌவநஞ் சயின்றார் மாதைப் பதிமுதற் பலபல் கோயில். 17

முகப்பெலாம் சிகரி கட்டி, முற்றுரு வணமே விட்டும்
சகப்பிர சித்த மாதித் தன்பெயர் விளங்க வைத்தான்,
இகப்பெரும் புகழென்(று) ஓர்ந்திட்(டு) யாவையும் முடித்து, நெஞ்சம்
உகப்பவன் மன்னன் ஆம்நாள் உறுமென நினைக்கின் றேனே 18

அந்த மன்னவனும், முந்தி ஆண்டமன் னவரும் பிந்தி
வந்த மன்னவரும், செய்த வளம்படு தருமம் எல்லாம்
இந்தநாள் கதையாய்ப் போன, இராயகோ புரம்என் மாற்றம்
பந்தய மதுபோன்[று]இந்தப் பார்முழு தொலித்த தன்றே, 19

---

13 கைமொழி - நிந்தைச் சொல், காவலன் - அரசன் எய்த்தேன் - இளைத்தேன். மேல்நெறி - துறவுநெறி, சுமை - சும்மை, ஓர் நினைவு - மீண்டும் அரசபதவி

14 ஈழன் - இழிகுலத்தவன், தேசிகன் - அரசன்.

15 மலைமகள் வடிவு - பார்வதியின் உருவாகிய வேல், கோட்டை கட்டிய இடம் வேலூர், அம்பிகையருளால் அரசனாகி ஆட்சிபுரியும் தானத்திற்கு அவளது வடிவான வேலின் பெயரை இட்டான்.

16 கிடையிடை - ஆட்டுக்கூட்டத்தின் நடுவில், முடை - துன்பம், பார்ப்பனமுனி - வித்யாரண்யர். நூல் - பஞ்ச ரசம் என்ற நூல்.

17 தெவ்வர் - பகைவர், வெள்கி - நாணி, நஞ்சு - விடம்.

18 சகப்பிரசித்தம் - உலக வியாபகம், தன்பெயர் - இராயகோபுரம், யாவையும் - பாதி அளவில் விடப்பட்ட அக்கோபுரப்பணி.

19 அபிடேகம் - கும்பாபிஷேகம். வடுகர் - நாய்க்கமார்.

அச்சிக ரிகளுக் கெல்லாம், அவனடி படையிட் டாற்போல்
நச்சிஓர் இலக்கி னத்தில் நல் அபிடேகம் செய்வான்
முச்சிரச் சூலம் ஏந்தி முதற்றிரு வாமாத் தூர்வாழ்
மெய்ச்சிவ னருள்செய் தன்றி விளங்கிடான், மெய்சொன் னேனே. 20

### எண்சீர் விருத்தம்

அந்தஅர சாட்சியழிந் திட்ட பின்னர்
அடல்வடுகர் தங்கள்அர(சு) ஆய தன்னோர்
கந்தமலர்க் குழற்கவுரி குலத்தோர், மர்தர்
கைவளைவிற் றிடும்தொழிலோர், கபடம் இல்லோர்
நந்தணியும் திருநெடுமால் அடிமைப் பண்பால்
நாமமிட்டோ ராயிருந்தும்,நம(து)ஆ மாத்தூர்
வந்தழகர் பணிவேண மட்டும் செய்தார்
வாய்ந்தமுன்னைத் தருமமொன்றும் மாற்றில் லாரே. 21

அன்னவரில் திருமலைநா யகன்என் பான்பால்
அங்கயற்கண் ணம்மைசெய்த ஆடற் சீரும்
முன்னவனைப் பூமியிற்கண்(டு) எடுத்துப் போற்றி
மொழிவரிய பலதருமம் முடித்த வாறும்,
பின்னமறச் சைவவயி ணவங்கட் கன்பு
பெரிதுசெய்த சமரசமாம் பெற்றி தானும்,
என்னனையார் இதிற்பகரல் முறைமை யன்றன்(று)
இவ்வுலகம் எந்நாளும் இயம்பு மாதே. 22

### கொச்சகக்கலிப்பா

மொழியும்அந்த அரசுமுற்றி முரண்துலுக்கர் சிறிதாண்டார்
பழிதருபா வளங்களஞ்சார், பன்றிநிணம் ஒன்றும்உண்ணார்,
கழிவரிய மதக்குறும்பார், கனலனைய சினமுள்ளார்,
அழிவில்எம்ஆ மாத்தூர்கொண்(டு) அரன்பூசைப் பொருளீந்தார். 23

வீரமிக்கோ ராமிவர்தம் விறலரசு நீங்குங்காற்
பாரதம்போற் போர்நடந்து படிநடுங்கும் எனநாடிக்
கூரறிஞர் அனைவோரும் குலைந்திருந்தார், எவர்க்கேனும்
ஓரணுத்துன் பமும்இன்றி உரைவழிபோய் ஒழிந்ததன்றே. 24

---

21 முன்னவனை - விநாயகனை, வண்டியூர் தெப்பக்குளம் என்றும், அவ்விடத்தில் புதையுண்டு கிடைத்த விநாயகர் முக்குணிப் பிள்ளையார் என்றும் வழங்குவர்.

23 ஒன்றும் – அது ஒன்று மட்டும்.

அறுசீர்த்தாழிசை.

அவர்தம் அரசை வெள்ளை அங்கி லியர்கைக் கொண்டார்
இவணிந் நாள்அன் னவர்பேர் இறைமை நடக்கின் றமையால்
விவரம் பலவும் கவியால் விளம்பும் கடமை யில்லை,
உவரிக் கலைசூழ் இந்த வுலகோ ரொருங்கோர் குவரே. 25

பொருளே மிகச்சேர்ப் பவர்க்கும் பொய்யிற் பெரியார் தமக்கும்
மருளேய்ந் துழலும் பிழைதோய் மதவா தருக்கும் மகிழ்வாய்
அருளே கருதும் தவர்க்கும், அறங்கள் செயவேட் டவர்க்கும்,
தெருளே யுடைச்சீ ரியர்க்கும், சிந்தைச் சலிப்புற் றதுவே. 26

புள்ளிப் புலித்தோ லுடுக்கும் புனிதற் கெனமா தையினில்
வெள்ளிக் காசா யிரமே வேம னன்தன் குலத்தில்
உள்ளிட் டார்கைக் கொடுத்தே ஒவ்வோர் ஆண்டும் கழித்தார்
எள்ளித் தருகின் றிலம்யாம் எனிற்கேட் பவர்வே றிலரே. 27

இந்த அரசே உலகம் இறுமட் டுறுமோ வே(று)ஈண்டு
எந்த அரசா யினும்வந் திதனைச் செறுமோ அறியேன்
அந்த உண்மை முதலாம் அனைத்தும் அறியும் ஒருவன்
சந்த மலியும் மாதைத் தலத்தில் தழைக்கின் றவனே! 28

அன்ன மலியும் வயல்சூழ் ஆமா தையில்வாழ் அரற்கு
மன்னர் கலியில் இந்நாள் வரைசெய் பணிசற் றிசைத்தாம்,
இன்னல் தவிர்வான் பலரால் இயல்வூ தியமும் உளவாம்
தன்ன(து) அநுப வமுமோர் சற்றீண் டுரைக்கின் றனமே 29

ஆளுகைச் சிறப்பு முற்றிற்று.

ஆகக் கவி - 968.



---

25 அங்கிலியர் - ஆங்கிலேயர், இறைமை - அரசு.

27 வேமனன் குலம், இரெட்டியார் என்ற வகுப்பினர்.

# நூல் ஆசிரியர் தன் அனுபவம் கூறல்.

கலித்தாழிசை

என்ச ரித்திரம் எத்தனை யோவுள,
கொன்ச மைந்த குருபர தத்துவம்
முன்ச கத்தில் நடந்த மொழிந்திடும்
பின்ச ரிப்பன முற்றுறிற் பேசுவார். 1

மாதி ரத்தில் நடந்துள வாறெலாம்
ஈதி டத்தில் இயம்பிலன், எற்[கு] அரன்
நீதி மாதையில் நெஞ்சறி யச்செயும்
சேதி யிற்சிறப் பாவன செப்புவேன். 2

அந்த ரத்தர் அமுதுறழ் சொற்சொலும்
சுந்த ரத்தின் தொடர்ச்சியுண் டாயநாள்,
வந்த ரற்கும் மலைமடந் தைக்கும்வண்
செந்த மிழ்ப்பதி கத்துணை செப்பியே 3

குஞ்ச ரானனன் தாள்களிற் கோதில்சீர்ப்
பஞ்ச ரத்தினப் பாடலிட் டுக்,குகன்
செஞ்ச ரண்களில் வாரத் திருப்புகழ்
வஞ்ச மின்றி வனைந்தணிந் தேன்அரோ. 4

கூட வந்த குழாத்தினர் யாவரும்
வாட லின்றி மகிழ்வன செய்தனன்,
சேட ருளழிற் றேனுவைக் கொண்டன்[று],அந்
நாட திற்றிகழ் நல்லவர்க் கூட்டியே, 5

மற்றி ரண்டு தடவையில் மாதையூர்
உற்றி ரண்டு பதிகங்கள் ஓதினேன்
எற்றிற் கோஇத் தடவையொர் எண்ணம்யான்
பற்றிச் சென்றமை பாயிரம் கூறுமே. 6

அங்கு செல்லும்அந் நாளின்முன் னுள்இராப்
பொங்கு மும்மத மாமுப் புங்கவன்
கங்குல் நேர்களத் தான்தனைப் பூசைசெய்
யுங்கு ணங்கன விற்கண்ட துண்டரோ. 7

---

1 கொன்சமைந்த - அழகு பொருந்திய, சரிப்பன - நிகழ் செய்தி. பேசுவார்-தமக்குப் பின் வருவார் என் வரலாற்றைப் சொல்லுவர்.

3 சுந்தரம். தமது இல்வாழ்க்கைத் துணைவி.

4 குஞ்சரஆனனன் - விநாயகர், வாரத்திருப்புகழ் - ஏழு எண் கொண்ட சந்தக் கவி,

5 சேடுஅரு - இளமை மாறுத, தேனு - காமதேனு.

7 விநாயகர் கலியுகத்தில் அபிராமேசனைப் பூசித்தல்.

யானங்(கு) ஏகுதற்(கு) ஈரைந்து நாளின்முன்
ஆன லின்றிய ஐயன்தன் பேர்புனை
மானத் தொண்டன் ஒருவனுள் வாய்ந்தொர்சொல்
ஊன மின்றிய தாஉரைத் தான்மெயே. 8

அன்ன தொண்டான் அதை,எனக் கன்றியும்
பின்ன ருள்ளவர்க் குஞ்சொலிப் பேதியா(து)
என்ன திச்சை வழிநடந் திட்டன்பால்
இன்ன மும்செயற்[கு] எண்ணியுள் ளானரோ, 9

கவின்கொள் மாதைக் கணக்கன் கனவிற்சென்(று)
அவிர்ந்தொர் அந்தண னும்அழ கேசனுர்,
குவிந்த நெஞ்சமில் லேன்களி கூர்நலம்
நவின்ற வுண்மைமுன் நாட்கதை யன்றம்மா. 10

தாம வாவித் தனிஉரத் தூரில்வாழ்
வேம னன்குலத் தோர்இரு மெய்யன்பர்
நாம வாவுமுன் நன்மைசெய் கின்றபண்[பு]
ஊமர் போல்பவ ருந்தெரி உண்மையே. 11

புதிய தொண்டனுட் போதம் பொருந்திடக்
கதிர்கொள் வேலன் கனவினிற் சென்றுசென்[று]
அதிரும் அச்சமொ[டு] அன்பும் உறுத்தி,என்
மதிஉ வப்புறக் காண்பதொர் வண்மையே. 12

**அறுசீர் விருத்தம்.**

முன்னொருக்கால் வந்தபொழு[து] அழகேசன்
என்கனவில் முறையிற் றேன்றி
என்னுண[வு]உப் பின்றியமைக் கின்றனரால்
கறிகுழம்[பு]யான் இச்சித் துள்ளேன்
நின்னதுண[வு] அவையமைந்த தன்றுகொலோ?
எனக்கேட்டார், நிசிபோம் காலை
நன்னிலைத்தொண் டருக்கெல்லாம் விரித்துரைத்தேன்
அன்றிருந்த நம்பி யார்தாம். 13

---

8 ஐயன்தன்பேர் - அரிகரபுத்திரர், (இப்பெயருடைய அன்பர் கனவில் இறைவன் சுவாமிகட்குப் பணிபுரியக் கூறினர்)

9 இன்னமும் செயற்கு என்பது அவரன்பினைக் காட்டும் கருத்தாகும்.

10 கணக்கன் - இவ்வூரில் வாழ்ந்த முருகப்பிள்ளை என்ற கருணீகர்.

11 தாமவாவி - தாமரைக்குளம், வேமனன்குலம் - ரெட்டியார் மரபினர். இருமெய் யன்பர் உரத்தூர் சின்னு ரெட்டியார், முத்துசுப்புராய ரெட்டியார்.

13 என்உணவு- பெருமானுக்குப் படைக்கும் நிவேதனம், நின்னதுஉணவு-சுவாமிகள் உண்பது, நம்பியார் - குருக்கள்.

சிலநாளில் முன்னரொரு தொண்டனுக்[கு]ஈ[து]
இவர்சொலலால் செய்து வந்தார்,
புலமேம்பா(டு) அறுமொருபாத கன்தவிர்த்திட்
டான் எனவும், புகன்றார் அந்த
நலமாரப் பதிகத்தி னிடைபாடி
வெகுமுயல்வால் நாட்டப் பட்ட(து)
உலகீர்!அப் பணிக்கிடையூ றுஞற்றேன்மின்!
செய்தொருவன் உயிர்போ யிற்றே. 14

ஐந்தணிமா முகங்கரந்தோர் இலிங்கமதுள்
மாதையில்வாழ் அமலன் தன்பால்
செந்தமிழ்ப்பா டலின்பதிகம் ஒருநூறுன்
துதிவடிவாச் செப்பு கின்றேன்
முந்தஅருள் பெறுநால்வ ருடன்எனைச்சேர்
எனஇரந்தேன், மோகி யான்போன்[று]
அந்தநிலை வருவதற்காம் தவஞ்செய்திட்டப்
பால்அறைய லாமென் றனே. 15

அம்மாற்றம் எந்தவூர்த் தெய்வமும்என்
தன்னிடத்தில் அறைய வில்லை,
பொய்ம்மாற்றம் பலபேசிக் கவிகள்கவர்
கின்றனவே போதக் கண்டேன்,
செம்மாற்ற மாம்இதுசொல் லியதால்நற்
றெய்வமெனத் தெளிந்து கொண்டேன்
மெய்ம்மாற்றக் குருத்தெய்வ மாம்இதெனப்
பலரிடத்தில் விளம்பி னேனே. 16

அட்டஅமு தினையருந்த அழைத்தான்பால்
வேண்டாம்என்(று) அறைந்து விட்டோன்,
திட்டெனஅன் னவனுடன்போய் அடுக்களையிற்
சிறிதெடுத்துத் தின்றிட் டாற்போல்
இட்டமில்என் றனைமீறிப் பலகவிகள்
உதித்திடச்செய்(து) இன்பம் உற்றான்,
வெட்டெனப்பே சிடுங்கபட மோகமின்னாள்
இசைந்தாங்(கு)யான் விளம்பி னேனே. 17

---

14 புலம் - அறிவு, பாதகன் - குழம்புடன் படைப்பதை நிறுத்திய கோயில் அதிகாரி, வெகுமுயல்வால் - பலரிடமும் கூறி குழம்புடன் நிவேதிக்கச் செய்தனர் சுவாமிகள்.

15 ஐந்தணிமாமுகம் - இறைவனின் ஐந்து முகம். கரந்து - மறைத்து, மோகியான் - விரும்பாதவன், அந்தநிலை - சம்பந்தர் முதலியோர் நிலை,

16 அம்மாற்றம் - அந்த ஆணை மொழி, நல்லதெய்வம் - பாடலைப் பாடக் கேட்டிராமல் தவம் செய், பின்பாடு எனக்கூறிய அபிராமேசர்

17 திட்டென - திடீரென. பாடவெண்டாம் எனக்கூறி உடனேபாடுக என்றார். உவமை நலம் காண்க.

என்பாட்டின் மீதவன்கொள் ஆசைபெரி
தோ?அவனை ஏத்த வேண்டும்
அன்பால்என் மனம்,அயின்ற துயர்பெரிதோ?
ஆரறிவார்; அமல வாணி
தன்பாதத் துணையறியும், அவனறிவான்,
என்மனமும் சற்றே தேறும்
பின்[பு]ஆரா ரோஇந்தப் புராணம்பா
டுக!எனவே பெரிதேற் றுரே. 18

அதைக்குறித்துக் கேட்டதற்கும் அப்படியே
சீட்டுவந்த[து] அகத்தி னுள்ளே
இதைக்கவிக ளாப்புகன்றுல் பொருள்தருவேன்
என்றெருவன் இசைத்தான், நெஞ்சிற்
பதைப்பொருசற் றேனும்இன்றி இகழ்ந்துவிட்டேன்,
உண்மை,அப்பாற் பாயி ரத்தின்
கதைப்பொழிப்பிற் சொன்னதொரு காரணத்தால்
இவ்வாறு கழறுற் றேனே. 19

வந்தவுடன் துதிபாடத் துவக்காமல்
அதற்கும்ஒரு வரம்நல்[கு] என்ற
வெந்தகைப்புன் கோதொழிப்பான் ஒருமூவா
யிரம்பாடல் விளம்பல் வேட்டேன்,
இந்தநூல் ஆயிரம்பாட் டன்றியிரண்
டாயிரம்பாட்[டு] இசைக்க வேண்டும்,
எந்தவிதத் திருக்கூத்தும் சிவனருட்பாங்
கெனத்தெளிவ[து] எளிதன் றம்மா. 20

என்னதுசொற் பனத்தொன்று, சாக்கிரசொற்
பனத்தோற்றத்[து] இரண்[டு],ஓர் தொண்டன்
நன்னர்வெண்பாட் டெழுதியனுப் பியதொன்[று],ஓர்
பாகவதன் நன்கோர் மாற்றம்
பன்னஅவன் கனவினிடை பார்ப்பதியோர்
கன்னிகையாப் பகர்ந்த தொன்றும்,
இன்னவிதம் ஓரைந்தும் பிழைத்தாலும்
சிவன்தொழும்பெற்[கு] இனிதாம் அம்மா. 21

---

18 ஆராரோ - இந்நூலைப் பாடப் பலர் கூறியும், இறைவன் அவர்கள் மூலம் நூலைப் பாடத் தன்கருத்தை விளக்கினுர்

20 சாக்கிரசொப்பனம் - விழித்துள்ள போதே மனவெளியிற்காணும் காட்சி.

21 இன்னவகை - பலவகை நூல் பாடுக என்றனர்.

ஒருகனவில் ஆமாதை ஆண்டநா
யகன்,குருக்கள் உருவம் எய்தி
அருகினிலோர் ஆனைக்கன் றுதுதொடர
வந்தெனக்கோர் அருமை செய்தான்,
திருவருளும் நெஞ்சமுமே சாட்சி,அது
பிறரறியச் செப்பொண் ணாது.
குருவடிவாச் சாக்கிரத்தில் விளையாடப்
பெறின்அலது குளிர்ந்தி டேனே. 22

ஆமாத்தூர்க் கிழவரொரு நாட்கனவில்
எனைநீயேன் அலட்டு கின்றாய்!
நாமாக அருள்புரிவோம் எனும்குறிப்பால்
இக்கணமே நால்வே தத்தோர்
தீமார்க்கர் எனஇகழ்வார் புன்னெறியிற்
புகச்செயினும் செய்வோம் என்றார்,
பூமாதும் நடுநடுங்கப் பொன்னுலகும்
துயரமுறப் புழுங்கி னேனே. 23

திருவாமாத் தூர்வளர்முத் தாம்பிகையோர்
கனவினிடை சிகிஆண் புள்ளும்
பொருவாமென் சாயலுடைத் திருவுருவும்,
பூசனையும், பொலியக் காட்டி
உருவாரு யிரங்கோடி கொடுவிளையா
டிடுந்தகையும் உணர்த்தி யாண்டாள்
மருவார்க்கோர் கூற்றாகும் இளையமகன்
சொற்பலிதம் வழங்கில் நன்றே. 24

தவஞ்செயெனச் சொன்னசொல்லாற் கோடியுருச்
செபிக்களண்ணித் தண்ட பாணி
நவஞ்செய்அநு பூதிஎன இலக்கமொன்றிற்(கு)
ஒருகவியா நவின்றேன், அந்நாள்
பவஞ்செய்கொடுந் தேள்கொட்டிற்[று] ஆறுரு
முடித்[து]உணர்வாற் பற்றி நாடி
அவஞ்செயும்சங் கற்பவிகற் பங்களொடு
போராடி அலுக்கின் றேனே. 25

---

23 தீமார்க்கன் - புறச்சமயத்தவன். புன்நெறி - புலைச்சமயம்,

25 தண்டபாணிஅநுபூதி - சுவாமிகள் பாடிய நூலுள் ஒன்று கோடி உருச் செப்பி ஓர் பாடல் எழுதுவது என எண்ணி அது போல் எழுதும் காலத்து, செபமாலை எடுக்கும்போது தேள் கொட்ட அத்துடன் நிறுத்தினர். பாடிய பாடல் 36. போராடி - மனம்தியானத்தில் சொல் லும் போது வரும் இடையூறு.

**அறுசீர் விருத்தம்.**

26

மலர்க்கண் வாழ்வுறு பிரமனூல் வழிச்செலும் மன்னர்இன் மையி னூலே, அலக்கண் எய்திவே மனன்குலத் தினர்முத லாஞ்சிலர் கூண்டந்தத், தலத்தின் மூர்த்தியொன் றேடுசென் றார்தொறுந் தனம்இரந் தவைகொண்டு, கலக்கம் இன்றிஆ கமஞ்சொல் கும்பாபிடே கஞ்செயத் துணிந்தாரே.

27

அங்கு சிற்பரில் ஒருவன்சில் மூர்த்திகள் ஆடகம் கொடுவிற்பான்,
எங்குஞ் சென்றலைந் தலுத்துவந் துற்றனன் இயம்புமத் துணிவாளர்
செங்கு கேசனும் அவன்மனை வியருமாத் திகழும்மூன் றுருக்கொண்டார்
மங்குல் நேர்இரா கவன்செய்அம் மூர்த்திகள் வாழ்வொழிப் பதுவேட்டார்

28

இன்னம் எத்தனை கொள்ளினும் கொண்மின்முன் இருந்தவற் றினைநீக்கில், இன்னல் எய்துவீர்! எனச்சொனேன் அம்மொழி யினைப் பொருட் படுத்தாராய், அன்ன மூர்த்திகள் மூன்றையும் ஆயினும் அகற்றிடா தம்மூன்றுள், என்ன(து) அன்னைமார் உருக்கொளும் இரண் டைமாத் திரம்பிரித் தொழித்தாரே.

29

மூன்றுள் ஒன்றெனும் முருகவேள் வடிவினை முத்தமிழ்த் திருத் தொண்டில், ஏன்றுய்ந் தார்களாம் நால்வர்தம் திருவுரு இருக்கும் அவ் விடம்சேர்த்தார், கோன்று ணைப்புயச் சுமைகொள்பட் டவர்த் தனற் கூலிவே லைகள்செய்வார், போன்று நொந்திடும் படியவர் குழுவினுட் புகச்செயும் அதுபோன்மே.

30

அந்த மூர்த்தியோர் எளியதன்(று) எத்தனை ஆயிரம் வருடத்தோ
கந்த சட்டியிற் சூரசங் காரஞ்செய் காட்சிநல் கியதந்தோ!
இந்த ஆடலும் அதனதே பின்னடத் திடும்விதம் அறிகில்லேன்,
வந்த விர்ந்திடின் அல்ல(து)அக் கோயிலுள் வருகிலேன் எனச்சொன்
[னேன்

---

26 கூண்டு – ஒன்றுகூடி நூலாசிரியர் காலத்தில் நடந்த கும்பாபிஷேகம்

27 அலைந்து அலுத்து – ஊர் ஊராகச்சுற்றி அலுத்து, அப்போது கும்பாபிடேகம் செய்ய முயன்றவர்கள் இவனிடமுள்ள மூர்த்தியை வாங்கப் பழைய மூர்த்தியை விற்க முயன்றனர்.

28 இன்னல் எய்துவர் – பழைய மூர்த்தியை விற்பதால் துயர் அடைவீர்.

29 இருதேவியர்களை விற்று தனி முருகனை சமயக்குரவர்களோடு அமைத்தனர். இச் செயல் ஆட்சிப் பொறுப்பேற்கும் அரசகுமாரனை அரசனைப் பணியும் அடிமைகளோடு சேர்த்து வருந்தச் செய்தலோடு ஒப்பாகும் என்பது.

30 வந்து அவிர்ந்திடின் அல்லது - விற்றுப் போன அம்மையர் இருவர் மீண்டும் ஆல யத்தில் வந்தாலன்றி, ஆலயத்தினுட் போகேன் என்ற நியதியுடனிருந்தனர்.

31
நல்ல சொற்பனம் சிலர்க்கதன் நிமித்தமும் நல்கினன், உலத்தில்
வல்ல வாறுபல் விதமுயன் றிளைத்தனன், வகைபடச் சொல்வீணே
அல்ல டைந்தகண் டத்தழ கரைத்தொடும் அருச்சகன் தனைக்கோயில்
ஒல்ல லுற்றகோ புரந்தனை, அவரென உன்னுபு தொழுதுள்ளேன்.

32
என்னி மித்தமோர் இருவிசை மாதையில் இலங்கும்வேற் குகப்
பெம்மான், பன்னி ரண்டுதோள் மறைத்திரு புயத்தொடோர் பத்தன்
நெஞ் சகத்தேகி, இன்னி சைத்தமிழ் பாடும்இன் னுன்விருப் பியற்
றுதி! எனக்கூறித், தன்னி கற்கையிற் பிரம்பெடுத் துறுக்கிய சரதம்
ஒன் றுளதம்மா.

33
செய்ய வேள்விளை யாடலின் எனக்கருள் சேயிழை வயிற்றூடே
வைய முற்றும்நன் கறிதர வரும்சில மக்களின் முதலாளுட்(கு)
ஐயர் நூல்விதிப் படிசெயும் மணத்திடை அவன்செயும் அநுகூலம்
மெய்ய றிந்தன பலவுள, அவையெலாம் விளம்புநர் உள்ளாரே.

34
நெல்ல ளித்ததும், விறகுகொண் டுய்த்ததும், நிகர்பல விளையாட்டும்
சொல்ல நாடிடிற் பெருகிடும், அன்றியும் சுரரெனும்(பு) அணிந்தாட
வல்ல நாயகன் மாதையில் முன்செயும் மகத்துவங் களுக்(கு)ஈடன்(று)
எல்ல திற்றனி விடைமிசை உமையுடன் இலங்கல்என் விழைவாமே.

35
யாவும் வல்லவன், எண்பொரு ளாயவன், இமயமங் கையும்மாலும்
மேவும்'நாயகன், மெய்த்தவத் தினர்மன விருப்பமிக் கருள்வள்ளல்!
பூவும் வானமும் புகமும்ஆ மாதையிற் புனிதலிங் கமதானுன்;
ஏவு மாறுயிர்த் தொகையெலாம் இயங்குதல் ஈனநெஞ்(சு) உணராதே

**எழுசீர் விருத்தம்.**

முப்புரம் எரித்திட்(டு) உலகெலாம் புரக்கும்
மூதருள் ஆண்டநா யகர்தாம்
செப்புறும் மூலமுத் தாம்பிகை யுடன்வாழ்
திருவளர் மாதைமா நகர்ச்சீர்
இப்புரா ணத்திற் சிறிதுரைத் துள்ளேன்,
இன்னம்எத் தனைகதை உளவோ?
தப்புரைத் தனன்,என்(று) இவற்றையும் இகழ்வார்
தமிழ்ச்சுவை தானும்ஓர் கலரே. 36

31 முயன்று இளைத்தனர் - அரசாங்கத்துக்கு அறிவித்து விசாரனை நடத்தச் செய்தனர். பலவாறு முயன்றும் கையூட்டின் காரணமாகக் களவு வெளிப்பட்டிலது.

33 சேயிழை - மனைவி, முதலாளுள் - முதலிற் பிறந்த பெண்.

34 சுவாமிகள் வழிபாட்டிற்கு நெல் உதவியர் ஆரியூர் வரதராசுப் பிள்ளை, விறகு அனுப்பியவர் - வேட்டவலம் சக்கரையப்ப பண்டாரியார்.

## உண்மை உரைத்தல்

தெய்வவல் லபச்சீர் திகழ்தரற் காம்பொய்
செப்பினும் ஒப்பிநம் பியற்கை
சைவரா தியர்தம் பான்மையாம் தழலால்
தகிப்புருத் தமிழையும் பழிக்கும்
பொய்வழக் கமண ராதியர் குணமாம்,
புவியுளீர்! பொருவில்ஆ மாதை
உய்வகை தருமென் றதனில்வாழ் சிவனுக்(கு)
உரியதொண் டுஞற்றில்வாழ் வுறுமே, 37

## பயன் கூறல்

அந்தணன் இந்நூல் விருப்புறிற் பிரமன்
அனையனே ஆகுவன், அயில்வேல்
மந்தரப் புயத்திற் புனையும்வேந் திதனை
வெளவிடில் மாயனே ஆவான்,
செந்தகை வணிகன் விரும்பிடில் அளகைச்
செல்வனே போற்றிகழ்ந் திடுவான்,
பைந்தகைப் பயிர்பெய் வான்விருப் புறில்வான்
பதிபுரப் பவனைநேர் வானே. 38

நால்வகைக் குலத்தும் அமுதிரந் தருந்தி
நமனைவென் றவனைமால் விடையிற்
பால்வழிந் தனைய மொழியுமை யொடும்வேற்
பாலக னொடு(ம்)மிக நினைவான்
சேல்வளர் கழனி சூழும்ஆ மாதைச்
சிவபுரா ணத்தன்பு செய்யில்
மேல்வரு பிறவி யறும்,பயன் ஈரு
விளம்புபே றனைத்தும்எய் துவனே. 39

பழுதில்சீர் மலியும் மாதையம் பதியிற்
பரமர்தம் புராணநூல் முழுதும்
எழுதினோர், படித்தோர், கேட்டவர், வீட்டில்
ஏட்டைவைத் திருந்தவர் தாமும்
வழுதியும் வளவன் தானுமே போலும்
வாழ்வடைந் தருமைசால் மகப்பெற்(று)
இழுதிடும் படைக்கைக் காலதூ தரைவென்(று)
இமையவர் ஊர்புகு வாரே. 40

---

37 வாழ்வுறும் - வாழ்வீராக.

38 புராணப்பயன் கூறுதல்.

எந்தநன் மனையில் மாதைநா யகன்தன்
எழிற்சரித் திரத்தின்ஏ டுறுமோ
அந்தவீட் டினிற்பேய், பில்லி,சூ னியங்கள்
அணுத்துணை யேனும்வந் தணுகா,
கந்தநாள் மலர்கொண் டருச்சனை புரிந்தாற்
கயிலைதன் காணியாம் என்று
முந்தநூல் உரைந்த வியாசனும் சூத
முனிவனு தியரும்ஓ தினரே. 41

## வாழ்த்து

### எண்சீர் விருத்தம்

வண்மைமிகப் பெறுதிருவா மாத்தூர் வாழி!
மாதேவர் வாழி!அவர் மனையாள் வாழி!
திண்மையுடைக் கணபதியும் குகனு மான
செல்வர்இரு வரும்வாழி! திருநீ றக்கம்
உண்மைதரும் அஞ்செழுத்[து],ஆ தியவும் வாழி!
உயர்பசுக்கட் கினியசெய்வார் ஒருங்கு வாழி!
ஒண்மைதிகழ் செங்கோலும் உலகும் வாழி!
ஒழிக்கரிய திருவருள்நீ டுழி வாழி! 42

ஆசிரியர் தன் அனுபவம் கூறல் முற்றிற்று.

ஆகக் கவி – 1010

தெய்வமே துணை.

திருவாமாத்தூர்த் தலபுராணம் முற்றிற்று.

குருபாதமே கதி.



உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# திருவாமாத்தூர் தேவாரப் பதிகங்கள்

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியவை.

## இரண்டாம் திருமுறை.

திருச்சிற்றம்பலம்

பண் - சீகாமரம்

துன்னம்பெய் கோவணமும் தோலு முடையாடை
பின்னம் சடைமேலோர் பிள்ளை மதிசூடி
அன்னம்சேர் தண்கானல் ஆமாத்தூர் அம்மான்றன்
பொன்னங் கழல்பரவாப் பொக்கமும் பொக்கமே. 1

கைம்மாவின் தோல்போர்த்த காபாலி வானுலகின்
மூம்மா மதிலெய்தான் முக்கணன் பேர்பாடி
அம்மா மலர்ச்சோலை ஆமாத்தூர் அம்மான்எம்
பெம்மான்என்(று) ஏத்தாதார் பேயரிற் பேயரே. 2

பாம்பரைச் சாத்தியோர் பண்டரங்கன் விண்டதோர்
தேம்பல் இளமதியம் சூடிய சென்னியான்
ஆம்பலம் பூம்பொய்கை ஆமாத்தூர் அம்மான்றன்
சாம்பல் அகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே. 3

கோணாகப் பேரல்குற் கோல்வளைக்கை மாதராள்
பூணாகம் பாகமாப் புல்கி அவளோடும்
ஆணாகம் காதல்செய் ஆமாத்தூர் அம்மானைக்
காணாத கண்ணெல்லாம் காணாத கண்களே. 4

பாடல் நெறிநின்றான் பைங்கொன்றைத் தண்டாரே
சூடல் நெறிநின்றான் சூலம்சேர் கையினன்
ஆடல் நெறிநின்றான் ஆமாத்தூர் அம்மான்றன்
வேடம் நெறிநில்லா வேடமும் வேடமே? 5

சாமவரை வில்லாகச் சந்தித்த வெங்கணையாற்
காவல் மதிலெய்தான் கண்ணுடை நெற்றியான்
யாவரும் சென்றேத்தும் ஆமாத்தூர் அம்மானைத்
தேவர் தலைவணங்கும் தேவர்க்கும் தேவனே. 6

மாறுத வெங்கூற்றை மாற்றி மலைமகளை
வேறாக நில்லாத வேடமே காட்டினான்
ஆறாத தீயாடி ஆமாத்தூர் அம்மானைக்
கூறாத நாவெல்லாம் கூறாத நாக்களே. 7

தாளால் அரக்கன்தோள் சாய்த்த தலைமகன்றன்
நாளா திரையென்றே நம்பன்றன் நாமத்தால்
ஆளானார் சென்றேத்தும் ஆமாத்தூர் அம்மானைக்
கேளாச் செவியெல்லாம் கேளாச் செவிகளே. 8

புள்ளும் கமலமும் கைக்கொண்டார் தாம்இருவர்
உள்ளும் அவன்பெருமை ஒப்பளக்கும் தன்மையதே?
அள்ளல் விளைகழனி ஆமாத்தூர் அம்மான்எம்
வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே. 9

பிச்சை பிறர்பெய்யப் பின்சாரக் கோசாரக்
கொச்சைப் புலால்நாற ஈருரிவை போர்த்(து)உகந்தான்
அச்சம்தம் மாதேவிக்(கு) ஈந்தான்றன் ஆமாத்தூர்
நிச்சல் நினையாதார் நெஞ்சமும் நெஞ்சமே. 10

ஆடல் அர[வு]அசைத்த ஆமாத்தூர் அம்மானைக்
கோடல் இரும்புறவிற் கொச்சை வயத்தலைவன்
நாடல் அரியசீர் ஞானசம் பந்தன்றன்
பாடல் இவைவல்லார்க்[கு] இல்லையாம் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்



# இரண்டாம் திருமுறை.

திருச்சிற்றம்பலம்

**பண் - சீகாமரம்.**

குன்ற வார்சிலை நாண்அரா அரி வாளிகூரெரி காற்றின்மும்மதில்
வென்றவா(று) எங்ஙனே? விடையேறும் வேதியனே!
தென்ற லார்மணிமாட மாளிகை சூளி கைக்கெதிர் நீண்ட
அன்றில் வந்தணையும் ஆமாத்தூர் அம்மானே! [பெண்ணைமேல் 1

பரவி வானவர் தானவர்பல ரும்கலங்கிட வந்தகார்விடம்
வெருவ உண்டுகந்த அருள் என்கொல்? விண்ணவனே!
கரவில் மாமணி பொன்கொழித்திழி சந்துகாரகில் தந்துபம்பைநீர்
அருவி வந்தலைக்கும் ஆமாத்தூர் அம்மானே! 2

நீண்ட வார்சடை தாழநேரிழை பாடநீறுமெய் பூசிமால் அயன்
மாண்ட வார்சுடலை நடம்ஆடும் மாண்ப(து)என்?
பூண்ட கேழல் மருப்பராவிரி கொன்றைவாள் வரிஆமைபூண்என
ஆண்ட நாயகனே! ஆமாத்தூர் அம்மானே! 3

சேலி னேரன கண்ணி வெண்நகை மான்விழித் திரு மாதைப்
ஏலமா தவம்நீ முயல் கின்ற வேடம் இதென்? [பாகம்வைத்(து)
பாலி னேர்மொழி மங்கைமார் நடம் ஆடிஇன்னிசைபாட நீள்பதி
ஆலை சூழ்கழனி ஆமாத்தூர் அம்மானே! 4

தொண்டர் வந்துவணங்கி மாமலர் தூவிநின்கழல் ஏத்துவார் அவர்
உண்டியால் வருந்தல் இரங்காத(து) என்னைகொலாம்?
வண்டலார்கழ னிக்கலந்து மலர்ந்ததாமரை மாதர்வாண்முகம்
அண்டவாணர்தொழும் ஆமாத்தூர் அம்மானே! 5

ஓதி ஆரணமாய நுண்பொருள் அன்றுநால்வர் முன்கேட்க நன்னெறி
நீதி யாலநிழல் உரைக்கின்ற நீர்மைய(து) என்?
சோதியே! சுடரே! சுரும்பமர் கொன்றையாய்! திருநின்றியூர்உறை
ஆதியே! அரனே! ஆமாத்தூர் அம்மானே! 6

மங்கை வாணுதல் மான்மனத்திடை வாடியூட மணங்கமழ்சடைக்
கங்கையாள் இருந்த கருத்தாவ(து) என்னைகொலாம்?
பங்கய மது வுண்டு வண்டிசை பாட மாமயி லாட விண்முழ(வு)
அங்கையால் அதிர்க்கும் ஆமாத்தூர் அம்மானே! 7

நின்றடர்த்திடும் ஐம்புலன் நிலையாதவண்ணம் நினைந்(து) உளத்திடை
வென்ற டர்த்தொருபால் மட மாதை விரும்புதல்என்?
குன்றெ டுத்தநி சாசரன்திரள் தோளிருபது தான் நெரிதர
அன்ற டர்த்துகந்தாய்! ஆமாத்தூர் அம்மானே! 8

செய்ய தாமரை மேலிருந்தவ னோடுமாலடி தேடநீள்முடி
வெய்ய ஆரழலாய் விரிகின்ற வேற்றுமைஎன்?
தைய லாளொடு பிச்சைக் கிச்சைதயங்கு தோலரை யார்த்த
ஐய மேற்றுகந்தாய்! ஆமாத்தூர் அம்மானே! [வேடங்கொண்(டு)

புத்தர் புன்சமண் ஆதர்பொய்மொழி நூல்பிடித்தலர் தூற்றநின்னடி
பத்தர் பேண நின்ற பரம்ஆய பான்மைய(து)என்?
முத்தை வென்றமுறு வலாள் உமை பங்கன்என்றிமை யோர்பரா விடும்
அத்தனே! அரியாய்! ஆமாத்தூர் அம்மானே! 10

வாடல் வெண்டலை மாலையார்த்து மயங்கிருள் எரியேந்தி மாநடம்
ஆடல் மேயதென் என் றுமாத்தூர் அம்மானைக்
கோடல் நாகம் அரும்பு பைம்பொழிற் கொச்சையாரிறை **ஞானசம்பந்தன்**
பாடல் பத்தும் வல்லார் பரலோகம் சேர்வாரே! 11

திருச்சிற்றம்பலம்.

---

# திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியவை.

## ஐந்தாம் திருமுறை.

திருச்சிற்றம்பலம்

**திருக்குறுந்தொகை**

மாமாத் தாகிய மாலயன் மால்கொடு
தாமாத் தேடியும் காண்கிலர் தாள்முடி
ஆமாத் தூர்அர னே!அரு ளாய்என்(று)
ஏமாப் பெய்திக் கண்டார் இறை யானையே! 1

சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள்
புந்தி யானைப் புத்தேளிர் தொழப்படும்
அந்தி யானை ஆமாத்தூர் அழகனைச்
சிந்தி யாதவர் தீவினை யாளரே! 2

காமாத் தம்எனும் கார்வலைப் பட்டுநான்
போமாத் தையறி யாதுபுலம் பினேன்
ஆமாத் தூர்அர னே!என்(று) அழைத்தலும்
தேமாத் தீங்கனி போலத்தித் திக்குமே! 3

பஞ்ச பூத வலையிற் படுவதற்(கு)
அஞ்சி நானும் ஆமாத்தூர் அழகனை
நெஞ்சி னுள்நினைந் தேன்நினை(வு) எய்தலும்
வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே! 4

சூராம னும்குழ லாள்ஒரு கூறனர்
அராம னும்சடை யான்திரு ஆமாத்தூர்
இராம னும்வழி பாடுசெய் ஈசனை
நிராம யன்தனை நாளும் நினைமினே! 5

பித்த னைப்பெருந் தேவர் தொழப்படும்
அத்த னைஅணி ஆமாத்தூர் மேவிய
முத்தி னைஅடி யேன்உள் முயல்தலும்
பத்தி வெள்ளம் பரந்தது காண்மினே! 6

நீற்றி னார்திரு மேனியன் நேரிழை
கூற்றி னன்குழற் கோலச் சடையில்ஓர்
ஆற்றி னன் அணி ஆமாத்தூர் மேவிய
ஏற்றி னன்எமை ஆளுடை ஈசனே! 7

பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தர்க்[கு]
அண்ணித் தாகும் அமுதினை ஆமாத்தூர்
கண்ணிப் பானைத் தமர்க்(கு) அணித்தாயதோர்
கண்ணிற் பாவையன் னனவன் காண்மினே! 8

குண்டர் பீலிகைக் கொள்ளும் குணமிலா
மிண்ட ரோ(டு)எனை வேறு படுத்(து)உய்யக்
கொண்ட நாதன் குளிர்புனல் வீரட்டத்(து)
அண்ட னரிடம் ஆமாத்தூர் காண்மினே! 9

வானஞ் சாடும் மதிஅர வத்தொடு
தானஞ் சாதுடன் வைத்த சடையிடைத்
தேனஞ் சாடிய தெங்கிள நீரொடும்
ஆனஞ் சாடிய ஆமாத்தூர் ஐயனே! 10

விடலை யாய்விலங் கல்எடுத் தான்முடி
அடர ஓர்விர லூன்றிய ஆமாத்தூர்
இடம தாக்கொண்ட ஈசனுக்(கு) என்னுளம்
இடம தாகக்கொண்(டு) இன்புற் றிருப்பனே! 11

திருச்சிற்றம்பலம்.

---

ஷி

## ஆறும் திருமுறை.

திருச்சிற்றம்பலம்

**திருக்குறுந்தொகை**

வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று
வலிசெய்து வளைகவர்ந்தார் வகையால் நம்மைக்
கண்ணம்பால் நின்(று)எய்து கழலப் பேசிக்
கடியதோர் விடையேறிக் காபா லியார்
கண்ணங்கள் தாம்கொண்டு துதையப் பூசித்
தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோன்ற
அண்ணலார் போகின்றார் வந்து காணீர்!
அழகியரே! ஆமாத்தூர் ஐயனாரே! 1

வெந்தார்வெண் பொடிப்பூசி வெள்ளை மாலை
விரிசடைமேல் தான்சூடி வீணை யேந்திக்
கந்தாரம் தாம்முரலப் போகா நிற்கக்
கறைசேர் மணிமிடற்றீர் ஊர்ஏ(து) என்றேன்
தொந்தார்போல் வந்தென(து) இல்லே புக்கு
நுடங்(கு)ஏர் இடைமடவாய்! நம்மூர் கேட்கில்
அந்தா மரைமலர்மேல் அளிவண்(டு) யாழ்செய்
ஆமாத்தூர் என்றடிகள் போயி னாரே! 2

கட்டங்கம் தாம்ஒன்று கையில் ஏந்திக்
    கடிய விடையேறிக் காபா லியார்
இட்டங்கள் தாம்பேசி இல்லே புக்கு
    இடும்பலியும் இடக்கொள்ளார் போவார் அல்லார்
பட்டிமையும் படிறுமே பேசா நின்றார்
    பார்ப்பாரைப் பரிசழிப்பார் போல்கின் றார்தாம்
அட்டிய சில்பலியும் கொள்ளார் விள்ளார்
    அழகியரே! ஆமாத்தூர் ஐய னாரே! 3

பசைந்தபல பூதத்தர் பாடல் ஆடல்
    படநாகக் கச்சையார் பிச்சைக்கு என்றங்(கு)
இசைந்ததோர் இயல்பினர் எரியின் மேனி
    இமையாமுக் கண்ணினர் நால்வே தத்தர்
பிசைந்ததிரு நீற்றினர் பெண்ணோர் பாகம்
    பிரிவறியார் பிஞ்ஞகனார் தெண்ணீர்க் கங்கை
அசைந்த திருமுடியார் அங்கைத் தீயர்
    அழகியரே! ஆமாத்தூர் ஐய னாரே! 4

உருளுடைய தேர்புரவி ஓடும் யானை
    ஒன்றாலும் குறைவில்லை, ஊர்தி வெள்ளே(று)
இருளுடைய கண்டத்தர் செந்தீ வண்ணர்
    இமையவர்கள் தொழு(து)ஏத்தும் இறைவ னார்தாம்
பொருளுடையார் அல்லர், இலரும் அல்லர்
    புலித்தோல் உடையாகப் பூதம் சூழ
அருளுடைய அம்கோதை மாலை மார்பர்
    அழகியரே! ஆமாத்தூர் ஐய னாரே! 5

வீறுடைய ஏறேறி நீறு பூசி
    வெண்டோடு பெய்திடங்கை வீணை யேந்திக்
கூறுடைய மடவாளோர் பாகம் கொண்டு
    குழையாடக் கொடுகொட்டி கொட்டா வந்து
பாறுடைய படுதலையோர் கையில் ஏந்திப்
    பலிகொள்வார் அல்லர், படிறே பேசி
ஆறுடைய சடைமுடிஎம் அடிகள் போலும்
    அழகியரே! ஆமாத்தூர் ஐய னாரே! 6

கையோர் கபாலத்தர் மானின் தோலர்
    கருத்துடையர் நிருத்தராய்க் காண்பார் முன்னே
செய்ய திருமேனி வெண்ணீ றாடித்
    திகழ்புன் சடைமுடிமேல் திங்கள் சூடி

மெய்யொரு பாகத்(து) உமையை வைத்து
மேவார் திரிபுரங்கள் வேவச் செய்து
ஐயனார் போகின்றார் வந்து காணீர்!
அழகியரே! ஆமாத்தூர் ஐய னாரே! 7

ஒன்றாலும் குறைவில்லை ஊர்திவெள் ளே(று)
ஒற்றியூர் உம்மூரே உணரக் கூறீர்!
நின்றுதான் என்செய்வீர்! போவீ ராகில்
நெற்றிமேற் கண்காட்டி நிறையும் கொண்டீர்!
என்றுந்தான் இவ்வகையே இடர்செய் கின்றீர்!
இருக்குமூர் இனியறிந்தோம் ஏகம் பமோ?
அன்றித்தான் போகின்றீர்! அடிகள் எம்மோ(டு)
அழகியரே! ஆமாத்தூர் ஐய னாரே! 8

கல்லலகு தாம்கொண்டு காளத் தியார்
கடிய விடையேறிக் காணாக் காண
இல்லமே தாம்புகுதா, இடுமின் பிச்சை
என்றாருக்(கு) எதிரெழுந்தேன்; எங்கும் காணேன்
சொல்லாதே போகின்றீர்! உம்மூர் ஏது!
துருத்தியோ! பழனமோ! நெய்த்தா னமோ!
அல்லலே செய்(து)அடிகள் போகின் றீர்தாம்
அழகியரே! ஆமாத்தூர் ஐய னாரே! 9

மழுங்கலா நீறாடு மார்பர் போலும்
மணிமிழலை மேய மணாளர் போலும்
கொழுங்குவளைக் கோதைக்(கு) இறைவர் போலும்
கொடுகொட்டித் தாளம் உடையார் போலும்
செழுங்கயி லாயத்(து)எம் செல்வர் போலும்
தென்அதிகை வீரட்டம் சேர்ந்தார் போலும்
அழுங்கினார் ஐயுறவு தீர்ப்பார் போலும்
அழகியரே! ஆமாத்தூர் ஐய னாரே. 10

திருச்சிற்றம்பலம்.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியவை.

## ஏழாம் திருமுறை.

திருச்சிற்றம்பலம்

பண் - கொல்லிக் கௌவாணம்.

காண்டனன் காண்டனன் காரிகை யாள்தன் கருத்தனை
ஆண்டனன் ஆண்டனன் ஆமாத் தூர்எம் அடிகட்(கு)ஆட்
பூண்டனன் பூண்டனன் பொய்யன்று சொல்லுவன் கேண்மின்கள்
மீண்டனன் மீண்டனன் வேதவித் தல்லா தவர்கட்கே. 1

பாடுவன் பாடுவன் பார்ப்பதி தன்அடி பற்றிநான்
தேடுவன் தேடுவன் திண்ணெனப் பற்றிச் செறிதர
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூர்எம் அடிகளைக்
கூடுவன் கூடுவன் குற்றம தற்றென் குறிப்பொடே. 2

காய்ந்தவன் காய்ந்தவன் கண்ணழ லாலன்று காமனைப்
பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தி னாலன்று கூற்றத்தை
ஆய்ந்தவன் ஆய்ந்தவன் ஆமாத் தூர்எம் அடிகளார்
ஏய்ந்தவன் ஏய்ந்தவன் எம்பி ராட்டியைப் பாகமே. 3

ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத் துள்ளேநின்ற ஒண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருவொற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்தோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத் தூர்ஐயன் அருளதே! 4

வென்றவன் வென்றவன் வேள்வியில் விண்ணவர் தங்களைச்
சென்றவன் சென்றவன் சில்பலிக் கென்று தெருவிடை
நின்றவன் நின்றவன் நீதி நிறைந்தவர் தங்கள்பால்
அன்றவன் அன்றவன் செய்யருள் ஆமாத்தூர் ஐயனே! 5

காண்டனன் காண்டனன் காண்டற் கரிய கடவுளாய்
நீண்டவன் நீண்டவன் நாரணன் நான்முகன் நேடவே
ஆண்டவன் ஆண்டவன் ஆமாத் தூரையும் எனையும்ஆட்
பூண்டவன் பூண்டவன் மார்பிற் புரிநூல் புரளவே 6

எண்ணவன் எண்ணவன் ஏழுல கத்துயிர் தங்கட்கும்
கண்ணவன் கண்ணவன் காண்டுமென் பாரவர் தங்கட்குப்
பெண்ணவன் பெண்ணவன் மேனியொர் பாகமாம் பிஞ்ஞகன்
அண்ணவன் அண்ணவன் ஆமாத் தூர்எம் அடிகளே! 7

பொன்னவன் பொன்னவன் பொன்னைத் தந்தென்னைப் போகவிடா
மின்னவன் மின்னவன் வேதத்தின் உட்பொ ருளாகிய
அன்னவன் அன்னவன் ஆமாத்தூர் ஐயனை ஆர்வத்தால்
என்னவன் என்னவன் என்மனத்(து) இன்புற் றிருப்பனே! 8

தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துள்ளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூர்எம் அடிகட்கே. 9

உற்றனன் உற்றவர் தம்மை யொழித்துள்ளத் துள்பொருள்
பற்றினன் பற்றினன் பங்கயச் சேவடிக் கேசெல்ல
அற்றனன் அற்றனன் ஆமாத் தூர்மே யான்அடி யார்கட்காட்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவா மைக்கே 10

ஐயனை அத்தனை ஆளுடை ஆமாத்தூர் அண்ணலை
மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொரு ளான விமலனை
மையனை மையணி கண்டனை வன்தொண்ட னூரன் சொற்
பொய்யொன்று மின்றிப் புலம்புவார் பொற்கழல் சேர்வரே. 11

திருச்சிற்றம்பலம்

முற்றிற்று.



## அருணகிரிநாத சுவாமிகள் அருளிய

# திருப்புகழ்ப் பாக்கள்.

தனதன தான தானன – தனதான

அடல்வடி வேல்கள் வாளிகள்–அவைவிட ஓடல் நேர்படும்
அயில்விழி யாலு மாலெலும்–மதவேழத்(து)
அளவிய கோடு போல்வினை–அளவள வான கூர்முலை
அதின்முக மூடும் ஆடையின்–அழகாலும்
துடியிடை யாலும் வாலர்கள்–துயர்வுற மாய மாயொரு
துணிவுடன் ஊடு மாதர்கள்–துணையாகத்
தொழுதவர் பாதம் ஓதியுன்–வழிவழி யானெனா வுயர்
தலையலை மாறு போலுயிர்–சுழல்வேனோ
அடவியி னூடு வேடர்கள்–அரிவையொ டாசை பேசியும்
அடிதொழு தாடும் ஆண்மையும்–உடையோனே
அழகிய தோளி ராறுடை–அறுமுக வேளெனா வுனை
அறிவுட னோது மாதவர் – பெருவாழ்வே!
விடையெறும் ஈசர் நேசமும்-மிகநினை வார்கள் தீவினை
யுகநெடி தோட மேலணை–பஙர்மூதூர்
விரைசெறி கோதை மாதர்கள்-விரகுட னூடு மாதையில்
விறல்மயில் மீது மேவிய-பெருமாளே.

தந்தனத் தனதானதன - தனதான

கண்கயற் பிணைமானோடுற - வுண்டெனக் கழைதோளானது
நன்கமைக் கினமாமாமென - முகையான
கஞ்சமொத் தெழுகூர்மாமுலை - குஞ்சரத் திருகோடோடுற
விஞ்சுமைப் பொருகார்கோதைகொள் - துயர்காலன்
பெண்டெனக் குளகோலாகல - மின்றெடுத் திளையோராவிகள்
மண்பிடிப் பதுபோல்நீள்வடி - வுடைமாதர்
பின்பொழித் திடுமாமாயையில் - அன்புவைத் தழியாதேயுறு
கிஞ்சிலத் தனைதாள்பேணிட - அருள்தாராய்!
வீண்டனக் குறவானோனுடல் - கண்படைத் தவன்வேதாவொடு
விண்டுவித் தகன்வீழ்தாளினர் - விடையேறி
வெந்தனத் துமையாள்மேவிய - சந்தனப் புயமாதீசுரர்
வெங்கயத் துரியார்போர்வையர் - மிகுவாழ்வே!
தண்புடைப் பொழில்சூழ்மாதையில் - நண்புவைத் தருள்தாராதல
முங்கிளைத் திடவாளீள்திசை - யொடுதாவித்
தண்டரக் கர்கள்கோகோவென - வீண்டிடத் தடமா மீமிசை
சண்டவிக் ரமவேலேவிய - பெருமாளே!

தனதன தானத் தானன - தனதானு.

கருமுகில் போல்மட் டாகிய — அளகிகள் தேனிற் பாகொடு
கனியமு தூறித் தேறிய — மொழிமாதர்
கலவிகள் நேரொப் பாகிகள் — மதனிகள் காமக் ரோதிகள்
கனதன பாரக் காரிகள் — செயலோடே
பொருகயல் வாளைத் தாவிய — விழியினர் சூறைக் காரிகள்
பொருளள வாசைப் பாடிகள் — புவிமீதே
பொதுவிகள் போகப் பாவிகள் — வசமழி வேனுக் கோரருள்
புரிவது தானெப் போதது — புகல்வாயே!
தருவடு தீரச் சூரர்கள் — அவர்கிளை மாளத் தூளெழ
சமநிலை யேறப் பாரெடு — கொடிவீழத்
தனதன தானத் தானன - எனஇசை பாடிப் பேய்பல
தசையுண வேல்விட் டேவிய — தனிவீரா!
அரிதிரு மால்சக் ராயுதன் — அவனிளை யாள்முத் தார்நகை
அழகுடை யாள்மெய்ப் பாலுமை — அருள்பாலா!
அரவொடு பூளைத் தார்மதி — அறுகொடு வேணிச் சூடிய
அழகர்தென் மாதைக் கேயுறை — பெருமாளே! 3

தான தனதன தனதன தனதன — தனதானு.

கால முகிலென நினைவுகொ டுருவலி
காதி யமர்பொரு கணையென வடுவகிர்
காணு மிதுவென இளைஞர்கள் விதவிடு-கயலாலும்
கான மமர்குழ லரிவையர் சிலுகொடு
காசி னளவொடு தலையணு மனதினர்
காம மிவர்சில கபடிகள் படிறுசொல் - கலையாலும்
சால மயல்கொடு புளகித கனதன
பார முறவணை முருகவிழ் மலரணை
சாய தனில்மிகு கலவியி லழிவுறும் - அடியேனைச்
சாதி குலமுறு படியினின் முழுகிய
தாழ்வ தறஇடை தருவன வெளியுயர்
தாள தடைவது தவமிக நினைவது — தருவாயே!
சோலை தனில்விழி துயில்பவ னரவணை
வேயி னிசையது நிரைதனி லருள்பவன்
வீர துரகத நரபதி வனிதையர் - கரமீதே
வேறு வடிவுகொ டுறிவெணெய் தயிரது
வேடை கெடவமு தருளிய பொழுதினில்
வீசு கயிறுட னடிபடு சிறியவன் - அதிகோப
வாலி யுடனெழு மரமற நிசிசரன்
வாகு முடியொரு பதுகர மிருபது
மாள வொருசரம் விடுமொரு கரியவன் - மருகோனே!
வாச முறுமலர் விசிறிய பரிமள
மாதை நகர்தனி லுறையுமொ ரறுமுக
வானில் அடியவர் இடர்கெட அருளிய - பெருமாளே. 4

# இரட்டைப்புலவர் அருளிய கலம்பகம்.

(சில பாடல்கள்)

## முக்கண்ணின் இயல்பு.

வெண்பா

எனையளிக்கும் ஆமாதை யீசற்(கு) அனங்கா
உனையழிக்கும் வாள்நயனம் ஒன்று. – பனியின்
செருஅழிக்கும் வாள்நயனம் ஒன்றுசேர், மாதர்
உரு அழிக்கும் வாள்நயனம் ஒன்று. 1

## அடியவரிலக்கணம்

கட்டளைக்கலித்துறை.

மீளார் பிறப்பினில், வீழார் நரகினில், வேறெருநூல்
கேளார், உயிர்க்கொரு கேடுசெய் யார், கிளர் தீவினையில்
மூளார், திருநுதல் நீறிக ழார், பின்னை முத்தியல்ல(து)
ஆளார், தென்மாதை அழகிய நாத ரடியவரே. 2

## இறைவன் தன்மை

எழுசீர் விருத்தம்.

அளவிலாதோர் அறிவினாலும் அரியயோகப் பெருமையாலும்
எளியராயும் அரியராயும் யாரும்மெய்யே சேருவாரே
ஒளிகொள்மாதைப் பதியினூடே உருவுதங்கும் அருவுதன்னைத்
தெளிவிலாதார் அன்னமாயும் பன்றியாயும் சேர்கிலாரே. 3

## இறைவன் இன்ப நினைவு

கட்டளைக் கலித்துறை.

வந்திப் பவர்தம் மனக்கோவில் கொண்டவர், மாதையுள்ளார்
கந்தர்ப் பனைவென்ற கண்ணுதலார், கயிலைக் கருகே
இந்தச் சுனைமருங் கேயன்பர் வாழ்வித்த இன்பமெல்லாம்
சிந்திக் கினும்கொண்டல் காள்அண்டர் வானமும் தீப்படுமே. 4

## பார்வைநதி திரும்பிய வரலாறு

ஆற்குழை யோ, அரவோ, ஆயர்பாடி அருமனையோ
பாற்கடலோ, திங்களோ, தங்கும் ஆவம் பலபலவாம்
மார்க்கமும் ஆகிநின் றூர்மாதை நாதர் வலங்கொள்பம்பை
மேற்கரைக் கோயில்கொண்டார்புரம் சீறிய வெங்கணைக்கே. 5

## திருமால். சத்தி, சிவம் வேறு வேறல்ல எனல்

### கட்டளைக்கலித்துறை

வருக்கைத் தடம்பொழில் மாமாதை ஐயர்க்கு, மாசொன்றில்லா
முருக்கொத்த மேனி அழகிய நாதர்க்கு, மூச்சரவத்
திருக்கைக் கமல அரனூர்க்[கு] அரிதிருத் தேவியன்றேல்
அரிக்குப் பொருளுரை யீர்கெடு வீர்நும் அறிவின்மையே. 6

## அம்மானை.

தந்தை பிடித்தரியத் தாயா னவள் சமைக்க
வெந்த விடக்குய்ந்து மீண்டனதுகாண் அம்மானை
வெந்த விடக்குய்ந்து மீண்டதுவே யாமாகில்
மைந்தன் உறுப்பு மணத்ததோ அம்மானை
மாதையார் வல்லபத்தால் மணத்ததுகாண் அம்மானை. 7

## மூவரும் தானேயான நிலை

### வெண்பா

தேங்கமலம் நாறுவன, தீந்துழாய் நாறுவன
ஓங்கிதழி மாலைதனக் குள்மாலை – பூங்கடுக்கைத்
தெய்வப் பெருமான் திருவாமாத் தூருறையும்
சைவப் பெருமாள் சடை. 8

## தழை விருப்புரைத்தல்

### கட்டளைக்கலித்துறை

மேதிக் குலம்சொரி பால்கயல் மாந்தும் விரைப்பழன
மாதைக் கடவுள் சடாடவியோ, மணிப் பேரணியோ,
ஆதித் தனிவிழியோ, நகையோ, செங்கை அம்பின் அம்போ
போதுற்ற சேவடி யோ, ஐய நீதந்த பூந்தழையே. 9

## திருவடிச் சிறப்பு

### வெண்பா

பாவ வினைக்குறும்பு பற்றறுக்கும் கொற்றத்தாள்
தேவர் பாடம் திறக்குந்தாள் – ஆவிவிடாப்
பூமாத்தூ ராற்றுப் பொதிசோறுந் தண்ணீரும்
ஆமாத்தூர் அத்தர் அடி. 10

---

# அருள்மிகு - தண்டபாணி சுவாமிகள் அருளிய முருகப்பெருமான் வாரத் திருப்புகழ்.

காப்பு - வெண்பா.

ஆரப் பொழில்மலியும் ஆமாத்தூர்க்(கு) ஆதரமாம்
வீரத் தனிவேற்கை வித்தகனை – வாரத்
திருப்புகழாற் போற்றுதற்குத் திண்வரைகட் கெல்லாம்
மருப்புகட்டும் தாள்மலர்கா வல்.

நூல்

தனனதன தாத்தா தனதன – தனதான

திருவருள்மே லீட்டா லுனைமிக – வழிபடுவார் போற்பா ருலகினர்
சிலர்சொலவாழ் நாட்போ யழிவது – கருதாதே
திறல்மலிவேல் வாட்போ லிலகிய - விழிமடமா ஞர்க்கா கியபணி
செயுமவர்பா லேற்றார் தொறும்நிதம் – அலைதீயேன்

அருமறைநூ லோர்க்கா கமநுவல் - விதிதவரு தார்க்கா வியைநிகர்
அநுபவமா ருச்சீர் முழுமையும் - உறுமாறே
அழகினில்மே லாக்கூ றிடுமயில்-மிசையிருமா ஞர்க்கூட் டயிலுடன்
அநுதினம்நீ தோற்று(து) அயர்வுற – விடலாமோ?

குருபர!வா ளுட்டு டவுணர்கள் - புரிதுயர்நோய் தீர்த்தாய்! அளவறு
குவடுடையாய்! வேற்பூ சையின்மிக - மகிழ்வோனே!
குகுகுகுகூ கூக்கூ குகுகுகு - எனமுரலோர் போர்ச்சே வலையிகழ்
கொடியவர்சே ராப்பே ரருள்பொழி – விழியோனே!

எருதிவர்வார், பாட்டா லணிபகர் - சதுரர்கள்சேர் தாட்டா மரையினர்,
இணைதவிர்மா நீற்றார், தரவரு – புதல்வோனே!
எழில்முகிலார் தோப்பூ டுதிர்மலர் - தரவருதே ஹற்று லுயர்புகழ்
இசைதிருவா மாத்தூர் தனில்வளர் - பெருமாளே. 1

தான தானன தானன – தனதான

காம வேள்விடு சாயக - மோத மால்கொடு மாதர்கள்
காலின் மேல்விழு தீவினை - அணுகாதே
காதை நாடக மாதிய – பாடி ஆடிய நாவலர்
காணொ ணுஅநு பூதியை – இகழாதே

தூம வேள்வியில் ஆடுயிர் – கோற லாமென ஓதிய
சோர நூல்நல மாமென - உணராதே
சோக மாறிய ஞானவி – ளைத மேவிடு மாமெரு
தோகை மாமயில் மேல்நிதம் – வருவாயே!

தாம நாபியன், மாமுகில் - போலும் நாரணன், வானவர்
தாப மாறிட நாடொறும் - முயல்மாலோர்
தான வேசத தாணவம் – நாடி யோர்சிறு தூணிடை
தாவு கோளரி யானவன் – மருகோனே!

வாம மாதுடை யார்,திகழ் – பால லோசன நாயகர்,
மாய்வி லாதவர், மான்மழு – அணிதோளார்
வாதி டாமுனி வோருணர் – வூடு வாழ்சிவ ஞர்திரு
மாதை மா நகர் மேவிய – பெருமாளே! 2

தனதன தனன தானத் தனந்த — தனதான

குயிலென மொழிகள் பேசிச் சிணுங்கி
அணுகிய மகளிர் மோகத் தழுந்து
கொடுமையும் மிடியும் மேவிட் டுநொந்து – தவியாதே
குருதியும் நிணமும் ஆரத் துணிந்து
கெடுமவர் சமய நூலைப் புகழ்ந்து
கொளுமுழு மடையர் பாலுற் றிரந்து – மெலியாதே

வெயில்விடு நெடிய வேலைப் புனைந்து
மரகத மயிலின் மேலுற் றெனெஞ்சின்
மிளிர்தரு முனது கோலத்தி லொன்றும் – மறவாதே
விதரண வினய சூலத் தொழும்பர்
பலருற வொளிரும் ஓலக்கம் எங்கும்
மிகநித மொழியும் வாழ்வைக் கொடென்ப–துணராயோ

கயிலையில் இறைவன் யோகத் திருந்து
புரிதவ வடிவ மாகிச் சிவந்த
கனல்விழி யதனுள் மேவிப் பிறந்த – புதல்வோனே!
கனைதகர் தளர ஏறிப் பரந்த
உலகினை நொடியி லேசுற் றிவந்த
கருணையை நினைகு வாருக் கிரங்கும் – முருகோனே!

மயிலொடு நடனம் ஆடிப் பிறங்கும்
அருணையி லொருவன் நேருற்(று) அவன்சொல்
வனைதரு பெருமை மேவித் திகழ்ந்த - குமரேசா
மலரவன் அலற மோதிச் சகங்கொள்
உயிர்வகை உதவி ஆளற் கிசைந்து
வயல்வள மலியும் மாதைக் குள்வந்த – பெருமாளே, 3

தனனதான தானை – தனதான

கபடம்யாவு மேகூடி – வடிவமான மானுர்கள்
களபபூத ராகார – முலைதானே
கனவிலேயும் நேர்தோண – மெலியுமூட னேனேடு
கருணையோ(டு)அ நாள்கூறல் - பிழைதானே

சபதம்ஓதி ஓர்பாவி – விடுவதான மால்யானை
சதிசெயாத வாருள – வரலேனே
சகளகோடி யூடடில் – வளமைதோய்வ தாமேனி
தனையெனேரம் நான்நாட – வருவாயே!

அபரமான மாமாய – நெறியுளார்கள் ஓராத
அறிவினூடு வாழ்வான – குருநாதா!
அசலகோடி தோருடும் – முருகனே!வி ணோர்வாழ
அவுணர்தாழ நாடோறும் - முயல்வோனே!

தபனன்நாணும் வீருரும் – மணிகுலாவு மார்பூடு
தமிழைநீப மோடார – அணிவோனே!
சரதம்ஈகை நேரான – குணம்நிலாவு சீராளர்
தறுகுமாதை யூர்மேவு – பெருமானே. 4

தானதனத் தானன தானன – தனதான

காலபயத் தால்மிக வாடிய
தீமையொழித்[து] ஆதியில் நீபகர்
காரணநட் பால்நிலை கூடிட – மகிழேனே
காசுபடைத் தோர்கடை வாசல்கள்
தோறுமிகப் போயலை யாதருள்
காணுவதற் காகிய மாதவம் - முயலேனே

சீலமிகப் பேணுந ராகிய
ஆறுநெறிக் காரர்க ளால்இருள்
சேர்சமையத் தோர்குடி கேடுறல் – புரியேனே
சேணுலகத் தோர்தரு பேதையும்
வேடர்குலக் கோதையும் மேவிய
சீர்குலவத் தோகையில் நீழலில் – வருவாயே!

ஆலமிடற் றுதிம யேசுரர்
மால்விடையுற் றார்வல மாமவர்
ஆலடியிற் றேசிகர் பேணிய – கழலோனே!
ஆரணவித் தாவளர் கோமள
மேனியுடைப் பார்வதி நாரணி
ஆனவள்கைப் பாலக னுவளர் – முருகோனே!

வாலறிவிற் சீரியர் பேணிய
சீர்மலிபொற் பார்பொதி யாசல
மாமுனிவர்க் கோதிய தாரகம் – உடையோனே!
வாழைமரச் சோலையில் வாவியில்
ஈனுமணிச் சூல்வளை யோலிடும்
மாதைநகர்க் கோயிலில் மேவிய – பெருமானே! 5.

தனதன தனதன தனதன தனதன
தானன தானன தானன – தனதானா

அறிவினை அறிவது பரசுகம் எனவுணர்
ஆர்வமு ளாரொடு கூடிய தூயரும்
உயிர்வதை புரிவதில் முயல்பவர் குடிகெட
ஓர்பெரி யோன்வர நாடிய சீலரும்
அமுதினும் உயர்சுவை பெருகிய தமிழ்நயம்
ஆர்அறி வாரென மாழ்கிய பேர்களும்
– மெலியாதே

அவனவ ளதுபொரு ளெனஇக லியபிழை
ஆயிர மேவிய தீநெறி யோர்களும்
முழுமதி எனஅணி பொடியுடன் இலகிய
மோனிகள் வீறுண ராதிகழ் வார்களும்,
அதிவித நயமொழி பகர்விலை மகளிரை
ஆவியெ னநினை வார்களும், நாடொறும்
– மகிழாதே

கிறிமொழி பகர்தொழி லுடன்உல கதனிடை
கீழொடு மேலறி யா(து)அலை வார்களும்,
மிடியினர் வரிலவர் வெருளுற முனிவுறு
வீணரும், வேள்வியில் ஊனுகர் வாரது
கெடுதியை நலமென இசைபவர் களும்.முதிர்
கீசக மேநிக ராம்நடை யோர்களும்
– உயராதே.

கிளிபகர் பனுவலில் உளபடி நடம்நவில்
கேகய வாகன மீதிரு மாதர்கள்
அருகுற அயில்முத லியபல படையணி
ஆறிரு தோள்,முகம் ஆறுகு லாவெழில்
கிளர்தர இருசிறை அறைதரு பறவைகொள்
கேதனம் ஓலிட நீவர நாடுதல்
– பிழையாமோ?

மறியினை மழுவுடன் அணிபுய முடையவர்
வால்வளை சேரிரு காதுடை யார்,வளர்
இமகிரி உதவிய வனிதையை மருவிடும்
ஈசர்,ம யேசுரர், நால்வரை ஆள்பவர்,
மதனுடல் பொடிபட விழிகொடு முனிபவர்,
வாரண ஈருரி போர்வைய தாமென
– இடுசீரார்

வரியளி யினமுரல் இதழியை அறுகுடன்
வார்சடை மீதணி தூயவர், மூவெயில்
உடையவர் குடியற வருகுறு நகையினர்.
ஊறுப டாதுயர் வீடருள் காரணர்,
வழிபட; ஒருவரும் உணர்வரி தெனமுழு
மாமறை கூறிய தாரக வாழ்வருள்
– குருநாதா!

உறியிடை உறுதயிர் திருடிய நெடியவன்,
ஒகையி னுல்அடி யார்விடு தூதுசொல்
குணதரன், முரகரி, இரணியன் எதிரொரு
கோளரி யாவரும் நாரணன், மூலமென்
உரையினில் மகிழ்கரி வரதன்,என் உரிமையன்
ஓர்புளி நீழலு ளான்உணர் மாதவன்
—மருகோனே!
உமையவள் கரதல மலர்மிசை வளர்குக!
ஓர்வரி தாயவி நாயக சோதர!
சரவண பவ!மணி மரகத மயில்வல!
தானவ! நாசகு மார!ம காரத!
உரமரு ளெனமொழி பவர்புடை பெருகலின்
ஊனமி லாதுயர் மாதையி லாடிய
—பெருமானே! 6

தானத்தா னதந்த — தனதான

போகாப்பேய் போல்வளைந்த — மயலாலே
போர்வாட்கூர் நாணும்உண்கண் — மடமாதர்
கூகாக்கீ கோவெனும்புள் — ஒலியோடே
கூடாக்கால் வாடும்வம்பு — தொலையாதோ
சோகார்ப்போ டாடியுண்டு — தொழமேனாள்
சூர்மாக்கூ ருகவென்று — வரும்வேலா
ஆகார்க்கா காதவிஞ்சை — முருகோனே
ஆமாத்தூர் வாழவந்த — பெருமாளே! 7

நூற்பயன் — வெண்பா.

மருப்புடைய செந்தகர்ச்சேய் மாதையினிற் கேட்ட
திருப்புகழ்ப்பாட் டேழுந் தெரிந்தால் - கருப்புவில்லி
கெஞ்சுவான், வேதன்விதி கிட்டாது, துட்டநமன்
அஞ்சுவான், உண்டாம் அருள்.

வேலும் மயிலுந் துணை.



# அருள்மிகு - தண்டபாணி சுவாமிகள் அருளிய
# ஸ்ரீ அபிராமேசுவரப் பெருமான்
# நவரத்தினத் திருப்புகழ்.

காப்பு – வெண்பா

சிவனுக்(கு)ஆ மாத்தூர்த் திருப்புகழ்ப் பாடல்
நவரத்தி னப்பெயரால் நாட்டப் – பவள
நிறத்தானை மாமுகனும் நெட்டிலைவேற் சேயும்
திறத்தாற் புரந்திடலுண் டே.

நூல்

தனனாதாத் தாத்தன தானன – தனதான

அடியார்தாட் பூத்திர ளோகமழ்
துகளால்மாற் றேற்றம தாயவிர்
அணிமாருச் சீர்த்தலை பாழ்பட – விடலாமோ
அயில்வேல்போற் போர்க்கெழு கார்விழி
மடவார்வேய்த் தோட்புணர் ஆசையில்
அமிழ்வார்பாட் டேற்றரு ளீகுவ – திலையேயோ
கொடியார்பாற் பார்ச்சுமை தோய்வது
தவிர்வான்வேட் டேக்கம தாய்நனி
குலைவேனிற் றுற்றின மூழ்கிடல் - அவமேயோ
குருகூகூக் கூத்தொனி சால்கொடி
புனைசேய்போற் சீர்த்தினி வேறுடல்
கொளல்தீர்வீட் டார்த்தர்க ளோடுற – அருள்வாயே
மடியார்சாக் காட்டுடல் நீறிய
பொடிசேர்தீப் போற்றிகழ் வாய்!கையில்
மழுமான்ஏற் றுற்றல்கொள் மால்விடை - இவர்வானே
வயமாவாய்த் தூர்த்தகு ஞாலயம்
அனையான்மேற் பாய்ச்சல்கொள் மாயனை
வதையார்மேற் றேற்கவ ராடலும்–உடையானே.
செடியார்காட் டீக்கம தோடுறை
பவரேபோற் போய்ச்சம ராடிய
தினம்வானூர்க் கோச்சுத னைலடி – படுவோனே
கிவனே!போற் றூர்க்குள மாதர்கள்
தொழவோர்ஓட் டாற்பலி தேர்பவ!
திருவாமாத் தூர்க்கர சாகிய – பெருமானே. 1

தந்தன தத்தனத் தானத் — தனதான

அஞ்சன வெற்பெனத் தோணிக்
கண்கள்சி வத்திடக் கோபித்
தந்தகன் எற்பிடித் தேகிச் — சிதையாதே
ஐங்கணை யைத்தொடுத் தேவிப்
பெண்களை விட்டுருக் கார்வத்
தங்கச னிக்குவீற் போர்மிக் — கழியாதே

கஞ்சம லர்ப்பொகுட் டோனெட்
டங்கையெ டுத்தினிப் பாரிற்
கண்டவை யிற்றினுட் போகப் — படையாதே
கந்தம கப்பெருக் கார்பொற்
குஞ்சர வத்திரத் தானைக்
கந்தனை யொக்குமெய்ச் சீரிட் — டருள்வாயே

கொஞ்சமும் வெட்கம்வைக் காமற்
பைங்கிளி யொப்பெனப் பேசிக்
கொஞ்சுமொ ருத்திபிற் போமத் — தினம்வானோர்
கும்பிட மற்றையர்ச் சாடச்
செண்டுபி டித்தகைப் பாலற்
குன்றமெ னக்கொடுத் தாளத் - துணிவோனே

பஞ்சவ னுக்குவப் பாகச்
சென்றப ரித்திரட் காதற்
பண்புறும் விப்பிரற் கோர்சொற் — பகர்வோனே
பண்டைந லத்தினாக் கேமிக்
கின்பம ளிக்கும்வித் தாரப்
பம்பைந திக்கரைக் கோயிற் — பெருமானே. 2

தனனதனந் தானதத்தத் — தனதான

அருணையில்அன் போடெனக்கைக்
கிளியெனநன் கோதியிச்சித்
தளைதருபண் பேதுமற்றுத் — துயராலே
அழ விடும்நின் பாலனுக்குப்
பலகவிமுன் பாடிஎய்ப்புற்
றருள்பெறநின் சீர்சொல்பெட்பைத் - தெரியாயோ

கருணமிதன் ரேவுனட்பிற்
பெரியவரின் ரேசகத்திற்
சகலரும்நொந் தேதவிக்கச் — செயலேனே
தவளநெடுங் காளையிற்பச்
செனவுமைநின் பாலிருக்கச்
சரவணனங் கூடுவக்கத் — திகழ்வாயே

பொருள்நசையும் காமவெப்பிற்
றலைமையுமொன் றோர்தமிழ்ச்சொற்
புலவன்விடுந் தூதுரைக்கைக் - கிசைவோனே
புடவைகவர்ந் தோர்மரத்திற்
பலர்தொழ அன் றேறுபச்சைப்
புயலொருபெண் பாலுருப்பெற் - றணைதோளா

கருணையில்சண் டாளரைச்செற்
றிடுநமன்என் றுடுமிச்சைக்
கனமருள்நம் பா!நடிக்கச் - சலியானே
கரிபுலிசிங் காதிதத்தப்
புனல்வரும்பம் பாநதிப்பொற்
கரையிலுறுங் கோவிலுக்குட் - பெருமானே. 3

தனனா தாத்தாத் - தனதானா

கணைபோல் வாட்போற் - றிகழ்கூர் நோக்காற்
கடிவார் தாட்கீழ்ப் - பணியாதே
கலிநோ யாற்றீக் - குணர்நேர் போய்ப்போய்க்
கதைநூல் வாய்ப்பாட்(டு) - உரையாதே
இணைசே ராக்கூற் - றுவனூர் வேற்றுக்
கினில்மாய் வாய்போய்ப் - பிறவாதே
இமையா தார்க்காத் - தருள்கூர் மாற்றேட்(டு)
எழிலார் தாட்பூத் - தருவாயே.

துணையா னட்போற் - றிலன்வீழ் காற்காற்
றுணைசே ராக்காற் - கடிதீவாய்
துடிமான், ஆற்றுக் - கனல்,சேர் நாற்றோட்
சுடராய் ஆர்த்தார்த் - துதைவோனே
திணைதோ றேற்றேற் - றயில்வாய் போற்றுச்
சிறியோர் பார்க்காப் - பொருளானாய்
தெளிநீ ராற்றூற் - கவினூர் நாற்பாற்
றிருவா மாத்தூர்ப் - பெருமானே. 4

தானாத்தாத் தானன தானன - தனதானா

வேல்போற்கூர்த் தேதிகழ் சீர்விழி
யார்பாற்போய்க் காமவி டாய்கொடு
வீணாட்போக் காதுனை யேமிக - நினையேனோ
வீறுப்பாற் றேவர்தம் வாழ்வையும்
நாய்வாய்ச்சோற் றேடிணை யாவுணர்
மேலோர்ப்போற் றுதிகழ் தீவினை - தவிரேனோ.

மால்போற்போர்த் தானவர் வேரற
வேதாக்(கு) ஆட்(டு) ஆயிரம் ஆடிடல்
மாருச்சீர்க் காசைகொள் மாதவ-முயலேனே
வாணுட்கூற் றுலொழி யாமலும்
வேளாற்றீக் காதல்நல் காமலும்
வான்மாட்டேற் றேறியெ னேர்தினம் – வருவாயே

கால்போற்சீர்த் தேதிரி மூவெயில்
நீருய்ப்போய்ப் பார்களி கூரஒர்
காலாற்கோட் டாடக வார்சிலை – உடையானே
காயாப்பூப் போலொளிர் மாயவன்
நால்வாய்ப்பார்ப் பான்தனி தேடுபு
காணுப்பீட் டோடுயர் தீமலை – வடிவானாய்

ஆல்போற்சீர்த் தோர்மரம் வேறின்மை
தேர்வார்காத் தேசிக னுகிஅ
ராஆர்பூக தாரறு காதியோ – டவிர்வோனே
ஆசாற்றுப் பாவல ராமவர்
தாமாப்போற் றீடுகு லாவிய
ஆமாத்தூர்க் கோயிலின் மேவிய – பெருமானே 5

தானா தானன தய்யன – தனதானா.

தீயே யாமெனும் வெய்யசொல்
ஓயா தேபகர் புல்லர்கை
சேர்சோ றுதிய வெளவிடல்-ஒழியேனே
தேனே ராகிய நல்லிசை
பாடா தார்பலர் கொள்சில
சீர்மே லாசைகொ(டு) ஒல்கியும்–மெலிவேனே

பேயே போல்நிகழ் தையலர்
மோகா வேசம தொல்லுபு
பீடார் மாதவ வல்லபம் – அழிவேனே
பேதா பேதமல் இல்சுக
ஞான சாரமும் எள்ளலில்
பேறு நீடருள் வெள்ளமும் – அருள்வாயே

நாயே நேர்வெகு சள்ளிடும்
வர்தே மேலிடு கல்வியர்
நாவா லோதரும் வைபவம் – உடையோனே
நாடா தேயிகழ் கைதவ
ருவாழ் நாளுயர் தில்லையில்
நான்ஆ ளாம்வகை செய்திடும் – இறையோனே

ஆயே யாய்உல குய்வகை
தேரார் தீயெதிர் கொல்லலும்
ஆகா தேயெனும் ஒள்ளியர்—துணையாவாய்!
ஆரு தாரமும் உள்ளுணர்
தூயோர் சேகர மல்கிய
ஆமா தாபுரம் வைகிய—பெருமானே 6

தானா தனதன தாந்தன தன்னன—தனதானா

ஆகா நெறியிடை போந்தறம் நண்ணுநர்
சீசீ யெனவுயிர் சோர்ந்தழும் என்மனம்
ஆறா முறைசெய வேண்டிடல் நின்னுளம்
ஆடா தியின்நிணை மாந்திடு புன்மையர் [அறியாதோ
மேனாள் சிலவரம் வாங்கின ரென்னவும்
ஆழா ழியின்நடு மாந்தர்கள் சொன்மொழி —
[நிசமேயோ

பாகா கியருசி தோய்ந்தசில் வண்ணமிந்
நாள்பா டினும்அடி தேய்ந்துயர் முன்னையர்
பாவால் மகிழ்தகை வாய்ந்திலை இண்ணம் —
பாழாய் உலகழி வாம்படி வன்மைசெய் [உறலேனோ
தீயோர் அடியொடு மாய்ந்திட என்னெதிர்
பால்நேர் விடைமிசை ஊர்ந்துமை தன்னொடு
[—வருவாயே

நாகா பரணபு ராந்தக! விண்ணவர்
மேல்நீ றியபொடி ஆர்ந்தவிர் வெண்ணிய
நாதா! மலைமகள் காந்த! ஒ ரைம்முகம் —
[உடையானே
ஞானா கரமறை நான்குணர் நுண்மையர்
ஆனார் தலைபணி பூண்டவ! பொன்மகிழ்
நாரா யணர்பலர் தாம்புனை கண்மலர் — கமழ்பாதா

கூகா வெனஅழு தேங்குற இன்முறை
யோர்பால் விழுபிண மாம்பிழை யின்மகர்
கோடா துறுகதி யாஞ்சிவ சண்மத—முடிவானாய்
கோலா கலமலி வேந்தர்கள் தம்மிறை
ஆமோர் தயரதன் மாண்சுதன் நன்மைகொள்
கோமா துருபுரம் வாழ்ந்திட மன்னிய—பெருமானே 7

தானதன தானதந்த — தனதான

காரணமெ னுவுன்மைந்தன்
ஓதுமொழி நாடிநொந்து
காயுமென்வி சாரமொன்றும் — அறியாயோ
காதலறி வீனமென்று
தேறியுமென் மீதெதிர்ந்து
காமன்அம ராடுகின்ற — விதம்யாதோ

பூரணமதா நிறைந்த
நீயெனள வேமறைந்து
போதன்முறை யோஇரங்கி — விடைமீதே
போககவு மாரியுங்கு
கேசனுமொர் பாலிருந்து
போதமகிழ் கூரவந்துன் — அருள்தாராய்

நாரணனும் வேதம்நன்கு
தேர்பிரம தேவனும்பொன்
நாகநக ரோனுநம்பும் — இருபாதா
நாலுமுனி வோர்களுங்கல்
ஆலடியி லேவணங்கும்
நாளிலொரு ஞானவிஞ்சை — மொழிவோனே.

வாரணம தோடுசெங்கண்
வீறுபுலி கோரசிங்க
மாயமுனை நாள்வதஞ்செய் — வலியோனே
வானநதி யோடுகங்கை
காவிரியு மானுபம்பை
மாதைநகர் வாழவந்த — பெருமானே. 8

தானன தானன தானன — தனதான

நானுத வேசியர் மாயையி
லேமூழ்கி ஆடக மால்கொடு
நாய்போல வூர்தொறு மேகவும் — இசைவேனோ
நானேது நீயென லேதன
வீண்வாது பேசிடு மூடரை
ஞானநு பூதியு ளாரென — நினைவேனோ

சேனுடர் கோவென வேமுனம்
வாழ்சாரு வேயென தாமொரு
தேகாபி மானியெ னுவுணர் — தலும்வீனோ
சீராடும் நாள்புலி யூரிலென்
வாயோது மாறது நீசெயல்
தீதாய்வி டாதடி யாரிடை — விடுவாயே

கோணை பூடண னேயடி
யார்தூதும் ஆனவ னேபல
கோடாநு கோடிந லாடல்கள் – உடையானே
கோபாலர் சேகர ஞவரு
மாயோனை யாளும காமுனி
கோடாது நீடிட வேவிரல் – அமுதீவாய்

ஆணை பாதியும் மாதுரு
வேயான பாதியும் ஆர்தரும்
ஆகார னேமழு மானுடன் – அணிதோளா
ஆசாப சாசைவெல் சீர்முனி
வோர்கோடி பேர்வழி பாடுசெய்
ஆமாதை மாநகர் மேவிய – பெருமானே. 9

தெய்வமே துணை.

நூற்பயன்

தனனத் தனத் தனத்தன – தானத்தான

அலமற் றிகற்றி ரட்கெம – னமீட் டார்வார்
அறமிக் கஉத் தமர்க்கொரு – தாய்போற் சூழ்வார்
தலமுற் றமுத் தமிழ்ப்புல – வோர்கோப் போல்வார்
சலசத் தணைச் செயித்துமெ – யாம்வீட் டேய்வார்
இலகற் புதக் கதைப்பொலி – வால்வேற் சேய்தாள்
இணைவைத் தநற் சிரத்தெனை–ஆள்பீட் டால்ஆன்
நலமிக் கபொற் புடைத்திரு – ஆமாத் தூரான்
நவரத் தினத் திருப்புகழ் – நூல்கேட் போரே.

முற்றிற்று.



# திருஆமாத்தூர்க் கல்வெட்டுகள்

திரு. டாக்டர் M. இராசமாணிக்கனார் M. A. M. O. L. Ph. D. சென்னை.

கோவில்:

இது பாடல்பெற்ற நடுநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று. இவ்வூர் விழுப்புரம் புகைவண்டி நிலையத்துக்கு வடமேற்கு நான்குகல் தொலைவில் இருக்கிறது. பம்பை என்னும் சிறிய ஆற்றின் வடகரையில் உள்ளது. கோவிலில் வன்னி மரமும், கொன்றை மரமும், இருக்கின்றன. அம்மன் கோவிலுக்குப்பெரிய கோபுரம் இருக்கின்றது. இவ்வூருக்குத் தலபுராணம் அச்சிடப்பட்டிருக்கிறது. இவ்வூரின் ஒரு புறத்தில் புலவர்புராணம்பாடிய தண்டபாணி சுவாமிகள் சமாதிக்கோயில் இருக்கிறது. இவ்வூர்க்கோவில் இறைவன்மீது திருநாவுக்கரசர் இரண்டு பதிகங்களையும், திருஞானசம்பந்தர் இரண்டு பதிகங்களையும், சுந்தரர் ஒரு பதிகத்தையும் பாடியுள்ளார். இதனால் இக்கோவில் திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் காலத்திற்கு (கி. பி. 7–ம் நூற்றாண்டுக்கு) முன்பே இருந்தது என்பது தெளிவாகும்.

கல்வெட்டுகள்:

இக்கோவிலில் எழுபதுக்கு மேற்பட்ட கல்வெட்டுக்கள் இருக்கின்றன. முதல் இராசராச சோழன் காலமுதல். (கி. பி. 985–1012) சீரங்கதேவ மகாராயர் (கி.பி. 1584) காலம்வரையில், பேரரசர்–சிற்றரசர் காலத்துக்கல்வெட்டுக்கள் இக்கோவிலில் இடம்பெற்றுள்ளன. எனவே இக்கோவில் அப்பர்–சம்பந்தர் காலமான கி. பி. 7–ம் நூற்றாண்டு முதல் கி பி. 16-ம் நூற்றாண்டு முடிய உயர்ந்த நிலையில் இருந்தது என்று கூறுதல் பொருத்தமாகும்.

இக்கோவில் கல்வெட்டுகளிலிருந்து தமிழகத்தை ஆண்ட அரசர்களையும், அவர்தம் போர்ச்செயல்களையும் அறியலாம். கோயிலாட்சி, நிலதானம், பிறதானங்கள், மடங்கள், விளக்குத்தானம், அரசாங்க அலுவலர் பெயர்கள், மக்கட் பெயர்கள், அக்காலத்து நாட்டுப் பிரிவுகள், பூசை, விழாக்கள், சுவாமி - அம்மன் பெயர்கள், சமுதாய நிலைமை என்பன போன்ற பல செய்திகளை அறியலாம். அவற்றைக் கீழே காண்க.

## திருஆமாத்தூர்க் கல்வெட்டுகள்.

அரசர்கள்:

| | | | |
|---|---|---|---|
| இராசராசன் I | ... | கி. பி. | 985–1012 |
| இராசேந்திரன் I | ... | ,, | 1012–1044 |
| இராசாதிராசன் I | ... | ,, | 1018–1054 |
| வீர இராசேந்திரன், | ... | ,, | 1063–1070 |
| குலோத்துங்கன் I | ... | ,, | 1070–1122 |
| விக்கிரமசோழன் | ... | ,, | 1118–1135 |
| இராசராசன் II | ... | ,, | 1146–1173 |
| இராசாதிராசன் II | ... | ,, | 1163–1179 |
| கோப்பெருஞ்சிங்கன் | ... | | 1216–1250 |
| சடையவர்மன், விக்ரமபாண்டியன் | | ,, | 1249–1258 |
| திரிபுவனச்சக்ரவர்த்தி. கோனேரின்மைகொண்டான் விக்கிரம பாண்டியன். | | | 1263–1276 |
| மாறவர்மன், வீரபாண்டியன் (சடையவர்மன், சுந்தரபாண்டியன் காலம்) | | | 1268–1281 |
| கோனேரின்மைகொண்டான், பராக்கிரம பாண்டியன் | | ,, | 1315–1357 |
| இராசநாராயண சம்புவராயன் | | ,, | 1337 |
| கம்பண உடையார் II (புக்கராயர் மகன்) | | ,, | 1372 |
| வீரப்பிரதாப தேவராயர் | ... | ,, | 1445 |
| நரசிங்க உடையார் | ... | ,, | 1471 |
| கிருஷ்ணதேவராயர் | ... | ,, | 1513 |
| அச்சுத ராயர் | ... | ,, | 1532 |
| சதாசிவ ராயர் | ... | ,, | 1556 |
| சீரங்கதேவ மகாராயர் | ... | ,, | 1584 |

கோவிலாட்சி:

சோழர்காலத்தில் கோவிலாட்சியை உள்ளூர்ப் பெருமக்கள் குழுவினர் கவனித்துவந்தனர். வருமானம் மிகுதியாகவரும் கோவில்களில் கோவில்பண்டாரம் இருந்தது. அதனைக்கவனிக்கும் கோவிலதிகாரிகள் (கோவில்பண்டாரிகள்) இருந்தனர். திருஆமாத்தூர்க் கோவிலில் ஆட்சிக்குழுவினர் இருந்தனர் கோவிலாட்சி செம்மையாக நடைபெறுகின்றதா என்பதைப்பார்க்கவும், குறைகளை நீக்கவும், அறிவுரை கூறவும், அரசாங்க உயர்அலுவலர் இருந்தனர். இந்த முன்னுரையை நினைவிற்கொண்டு, கீழ்வருவனவற்றைக் காண்க.

முதலாம் இராசராசன் காலத்தில், தாமுளான் கொற்றன் அங்கி என்னும் உயர் அலுவலன், கோவிலாட்சி பற்றி ஆராய்ந்தான். ஸ்ரீபலி [அன்னம் படைத்தல்] சடங்கிற்காக, நாளும் மூன்றுவேளை. சந்திரசேகரப்பெருமானை வாத்தியம்கொட்டுவோர் ஊர்வலமாகஎடுத்துச்செல்ல

வேண்டும். அதற்காக ஓரளவு நெல்லைப்பெறவேண்டும் என்று ஏற்பாடு செய்தான். கிராமத்தாரிடமிருந்து கோவிலுக்கு வரவேண்டிய நெல்லை, அமைக்கும்பணியாளர், தங்களுக்குரிய நெல் முழுமையையும் எடுத்துக்கொள்ளாமல், குறிப்பிட்ட ஒரு பகுதியை வாத்தியம் கொட்டு வாருக்கு அளிக்கவேண்டும் என்றும்ஏற்பாடு செய்தான். திருஆமாத்தூர் கோயிலில், அதிகாரியாகவும் இராசராசனது முதலி [ஏஜண்ட்] யாகவும் இருந்தான். அவன் கிராமத்தாரையும், கிராம சபையாரையும் ஒருங்கே அழைத்து கோவில் நடைமுறையை விசாரித்தான் கோவில் நெல் இராசகேசரி மரக்காலால் அளப்பதைவிட்டு வீதிவிடங்கன் மரக்காலால் அளந்த தனல், சிறிதளவு மிகுதி இருந்தது. அதனை நாளும் அக்காரவடிசில் சர்க்கரைப்பொங்கல் படையலுக்குப்பயன்படுத்தும்படி ஏற்பாடுசெய்தான்.

அதே அதிகாரி, கோவில் செய்திகளை விசாரித்து, சிலப் படையல் பொருள்களை 21-கோவிற் பணியாளர்கட்கும் பங்கிடும்படி ஏற்படுத்தினன். இராசராசனது 27-ம் ஆட்சி ஆண்டில் அரசனது பெருந்தரம் அதிகாரியான புதுக்குடிவேளான் ஆரூரன் என்பவன் இந்த ஏற்பாட்டைச் சாத்திரங்களுக்கு மாருனவை என்று தடைசெய்தான். முதற் குலோத்துங்கசோழன் காலத்தில், நந்தன் அரசன், இராசநாராயணன் என்ற இராசராசமூவேந்தரையன் கோவில் நகைகளைபார்வையிட்டான். இராசராச சதுர்வேதிமங்கலம், ஜனநாதசதுர்வேதி மங்கலம் ஆகிய இரு கிராமங்களில், சபையார் முன்னிலையிலும் அந்த நகைகளை உருக்கிப் புதிய நகைகளைச் செய்தான்.

இன்று பம்பையாறு என்று சொல்லப்படுகிற நதி. சோழர் காலத்தில் முஞ்சி ஆறு எனப் பெயர்பெற்றிருந்தது என்று கல்வெட்டுக்களால் தெரிகிறது. முஞ்சியாற்று வடகரையிலுள்ள வயமணிநல்லூரின் கோவில் நிலங்கள் சில குத்தகைக்கு விடப்பட்டன. அவற்றின் வருவாய்கொண்டு விளக்குகள், விழா சங்கராந்தி என்பனவை கொண்டாடப்பட்டன.

கோவில்நிலங்களில் பலவகைமரங்களைப் பயிரிட்டவர் கோயிலுக் குரிய வரிகளைச் செலுத்தினர்.

கி. பி. 1383-ல் விட்டலா ஓபுல் நாதரும் பிறரும் சோளிக்கநல்லூர் என்ற இராஜநாராயண நல்லூரில் அம்மனுக்குரிய நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு, கோவில் பண்டாரத்துக்கு ஆண்டு தோறும் நிலவாட்கை கொடுப்பதாக ஒப்புக்கொண்டனர்.

திருஆமாத்தூர் நீண்டகாலம் குடிகள் இல்லாமல் இருந்தது கோவில் மண்டபங்களும், கோபுரங்களும் அழிக்கப்பட்டன. ஏரி, உடைபட்டுக்கிடந்தது. அரசர் நரசிங்கஉடையார் கி. பி. 1471-ல் சில வரிகளைத்தந்து அவற்றைக்கொண்டு கோவிலையும், ஏரியையும் பழுது

பழுதுபார்க்கக் கட்டளையிட்டார். கோவிலில் தமது பெயரால் சிறப்புப் பூசையும், ஏற்பாடுசெய்தார். இக்கட்டளையை அவசரம் அண்ணமரசர் என்பவர் கோவில் அதிகாரிகளிடம் ஒப்படைத்தார்.

கிருஷ்ணதேவராயர் காலத்தில் (கி.பி. 1513-ல்) கோவில்பண்டார அதிகாரிகள் காரணிகம் மங்களசையர், சாளுவ அரியவநாயகர் என்னும் இருவர் மூலமாக அரசனுக்கு விண்ணப்பம் விடுத்தனர். சிற்றூர், தேவதான கிராமம் அது முன்னதாகவே, இருநூறு கலம் நெல் குத்த கைக்குவிடப்பட்டது. அது மீண்டும் கோவிலுக்கே உரிமையாக்கப்பட வேண்டும் என்றும். இரண்டு மனைகளும், 8 மா நிலமும் வரியிலியாகக் கோவில் பண்டாரிகள் இருவருக்கும் கொடுக்க வேண்டுமென்றும் விண்ணப்பம் செய்தனர்.

இராச நாராயண சம்புவராயர் காலத்தில் பழையதேவதான நிலங்களில் வரியை மிகுதியாகக் குறைக்கவும் சில கிராமங்களைத் தேவ தானமாக வாங்கவும் பேருதவி செய்த திரு. அம்பலப்பெருமாள் என்பவருக்குக் கோவிலதிகாரிகள், இரு மாநிலமும், கோவில் உரிமைகள் சிலவும் அளித்தனர்.

கி பி. 1584-ல், சீரங்கதேவமகாராயர் காலத்தில், திருஆமாத்தூர்க் கோவிலதிகாரிகளுக்கும் பண்டாரத்தாருக்கும் பெரும்பாக்கம் கிராமத்தின் சிவ – விஷ்ணு கோவில் ஆட்சியாளருக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. முன்னவர் வேடம்பட்டுக் கிராமத்தில் முந்நூறு குழி நிலத்தைப் பின்னவருக்கு வழங்கினர். அதற்காகப் பின்னவர் திருஆமாத்தூர் ஏரிக்குத் தண்ணீர் கொண்டுவரத்தக்க கால் ஒன்றைப் பெரும்பாக்கம் ஊர் எல்லைக்குள் வெட்டும் உரிமை பெற்றனர். அச்சுதப்பநாயக்கர் ஜபான் முதலியாரான (ஏஜெண்ட்) பொம்மு ரெட்டியார் முன்னிலையில் இவ்வொப்பந்தம் ஏற்பட்டது.

கி.பி. 1596-ல் கொண்டம நாயக்கர் கோவிலைப் பார்த்து, பங்குனி விழாவிற்கும், கோபுரத்தைப் பழுதுபார்க்கவும் 1600 பொன் வழங்கினர். அப்போது கோவிலுக்கு 2000 கலம் நெல்லும், 450 பொன்னும் வருமானமாயிருந்தன-

நில தானம்.

இராசநாராயணசம்புவராயர் காலத்தில் திருஆமாத்தூரில் இருந்த ஒரு நம்பி (குருக்கள்) திருவண்ணாமலையுடைய நாயனார் என்ற பெயரில் ஒரு சிவலிங்கத்தை வைத்தான். அதன் பூசைக்கும், படையலுக்கும் கோவிலைப்பழுதுபார்க்கவும் உண்டாகும் செலவுக்காக ஒருவேலி நிலத்தை வரியிலியாகவும் விட்டான் இதே சம்புவராயர் காலத்தில் முஞ்சியாற்று வடகரை தாவணிப்பாக்கத்தில் நான்குவேலி நிலம்வரியிலி

தேவதானமாகச் சம்பந்தப்பெருமாள் வழிபாட்டுக்கு விடப்பட்டது. முஞ்சியாற்று வடகரை கீழ்ப்புள்ளூரில் 12 மா நிலம் வரியிலியாகச் சோழகுலவல்லிநல்லூர் திருவட்டாறு உடையநாயனுர்க்குப் படையலுக்கும், கோவில் பழுதுபார்க்கவும் இராசநாராயணன் சந்திக்கும் விடப்பட்டது. இதே சம்புவராயர் காலத்தில் அவர் பெயரால் ஒரு சந்தி நடத்தவும், படையலுக்கும் பூசைக்குமாகக் குளத்தூர் வரியிலி தேவதானமாக விடப்பட்டது.

மாறவர்மன். விக்கிரமபாண்டியன் இராசாக்கள் நாயன் என்னும் விருதுப் பெயர் பெற்றவன். அவன் காலத்தில் உரத்தூர் இராசாக்கள் நாயன்நல்லூர், திருஆமாத்தூர்க் கோவிலுக்குத் தேவதானமாக விடப்பட்டது. அங்கிருந்த குடிகள், அதிகாரிகள் விருப்பப்படி வெளியேற வேண்டியவர். ஆமாத்தூர்க் கோவில் அதிகாரிகள் உரத்தூர் நிலங்களைப் பயிரிடச் சீலசிந்தாமணிநல்லூர் மக்களுக்கு உரிமையளித்தனர்.

இதே பாண்டியன் காலத்தில் விக்கிரமபாண்டிய மகாபலிபாணராயர் வேண்டுதல்படி பனையூர்நாட்டுச் சோழமான்பூண்டி தலைவார் நல்லூர் என்பது, விரதம்முடித்த பாண்டிய சதுர்வேதிமங்கலம் என்று விக்கிரமபாண்டியன் பெயரால் வழங்கப்பெற்றது. அதிலிருந்து 28 பங்குகள் (1 பங்கு 4 மா நிலம் வீதம்) 24 பிராமணர்க்கும். ஒரு மருத்துவருக்கும் விடப்பட்டது அப்பிராமணர் சாத்திரம் படித்தவர். கோவிலில் வேதம் ஓத நிலம் விடப்பட்டது. இதே பாண்டியன் கி. பி. 1296-ல் கோவிலைப் பழுதுபார்க்கவும், இராசாக்கள் நாயன் சந்திக்கும் உரத்தூர்க் கிராமத்தை வரியிலி தேவதானமாக வழங்கினுன்.

பராக்கிரம பாண்டியன் சந்திக்கும் சில விழாக்களுக்கும் கோவிலைப் பழுது பார்க்கவும், காட்டில் வேடன்பட்டு என்னும் சிற்றூரை வரியிலி தேவதானமாகக் கோனேரின்மைகொண்டான் என்ற பராக்கிரம பாண்டியன் விட்டான்.

சடையவர்மன் விக்கிரம பாண்டியன் காலத்தில் பாண்டி மண்டலத்துக் கப்பலூரைச் சேர்ந்த அந்த தேவன் என்ற காலிங்கன் பத்து நந்தா விளக்குகள் எரிக்க அவ்வியூரில் 10-மா நிலத்தை வரியிலியாக வழங்கினுன்.

கம்பண உடையார் காலத்தில் வயலணி நல்லூரில் இருந்த சில நிலங்கள் 130 வீர சம்பன் குளிகைக்குப் பார்ப்பனர் இருவருக்கு விற்கப்பட்டன. அவ்வூர் நிலங்கள் குடி நீங்காத தேவதானமாக முன்பே கோவிலுக்கு விடப்பட்டவை.

கிருஷ்ண தேவராயர் காலத்தில் முஞ்சியாற்றிலிருந்து ஒரு கால்வாய் வெட்ட உண்டாகும் செலவிற்காக நிலம் ஒதுக்கப்பட்டது. அச்சுதராயர் விழாக்கள், பூசை, தயிர்ச்சோறு, படையல் இவற்றிற்காகச்

சுரைப்பட்டு என்னும் கிராமத்தைத் தேவதானமாகவிட்டார். இவர் காலத்திலேயே இடையாற்றுப் பற்றுச் சிற்ருமாமூர் வரியிலிதேவதான மாக விடப்பட்டது. கி. பி. 1686 ல் பல கிராமத்தார் சிலதுண்டு நிலங்களைக் கோவில் பண்டாரத்திற்கு விற்றனர். திருஆமாத்தூர் ஏரிக்கு ஆற்றில் இருந்து ஒருகால்வாய் வெட்டுவதற்கு அப் பணம் செலவிடப்பட்டது

முதலாம் இராசராசன் காலத்தில் குணசேகரன் என்பவன் இறைவனது திருமஞ்சனத்திற்குப் பொன் பாத்திரம் ஒன்றை வழங்கினன். கற்கள் பதித்த இரண்டு கடகங்களை அளித்தான். கொற்றன் அங்கி என்ற அரசாங்க அலுவலன் ஒரு வெள்ளிப் பாத்திரத்தையும், ஒரு வெள்ளித் தட்டையும் கொடுத்தான். மாதவன் என்ற சிற்றரசன் ஒருவன் பொன் நெற்றிப் பட்டத்தை உதவினன். முதலாம் இராசேந்திர சோழன் காலத்தில் இறைவனது திருமஞ்சனத்திற்கு "இராசேந்திர சோழன்" என்று பெயரிடப்பட்ட பொன் பாத்திரம் கொடுக்கப்பட்டது

பிறதானம்.

திருஆமாத்தூரிலிருந்து சில வரிகளை வசூலிக்கும்படி தொண்டைமானர் என்பவர் அரச மணவாள காங்கேயர் என்பவருக்குக் கட்டளை பிறப்பித்தார். இத்த வரிகளைத் தொண்டைமானர் கோவிலுக்கே விட்டார் கிருஷ்ணதேவராயர் காலத்தில் குறிப்பிட்ட 16-சிற்றூர்களிலிருந்து நெல்லும் பணமும் வசூலிக்கப்பட்டன. அவை வழிபாட்டுக்கும் படையலுக்கும் கோவிலைப் பழுதுபார்க்கவும் செலவிடப்பட்டன. ஆண்டுக்கு 12 பொன் விகிதம் வரிகொடுக்கப்பட்டு வந்த ஆலாற்றூர்க் கிராம நிலங்கள் கோவிலுக்குத் தானமாக விடப்பட்டன. அப் பொன் பகல் படையலுக்குப் பயன்படுத்தப்பட்டது. ஓர் அதிகாரியின் பணியாள் தன்னொடு பணியாற்றி வந்த மற்றொருவனைக் காயப்படுத்திய குற்றத்திற்காகக் கோவிலில் ஒரு நந்தா விளக்கு எரிக்க 32 பசுக்களை விட்டான். இறந்த தன் மகளின் நலனுக்காகக் கச்சி ஏகாம்பரத்தைச் சேர்ந்த தேவரடியாள் ஒருத்தி சில நகைகளையும், பாத்திரங்களையும், பசுக்களையும் கோவிலுக்குத் தானம் கொடுத்தாள். கோப்பெரும் சிங்கன் நலனுக்காகப் பாதிரி மரத்தூர் குன்ற மடுத்தான் வாணதிராயன் உடையான் வைராதராயன் என்பவன் முருகர் சிலையை வைத்தான். கோப்பெரும் சிங்கன் அச்சிலைக்குத் தங்க நகைகளை உதவினன்.

அணியன் சூழவேந்தரையன் கோப்பெருஞ்சிங்கனிடம் இருந்து இருபது மாகாணி நிலத்துக்கு வரிநீக்கம் பெற்றான் மேலே கூறப்பெற்ற முருகன் சிலைக்கு வழிபாடுசெய்யவும், படையல் இடவும் அந்த வரிகள் பயன்படுத்தப்பட்டன. இராச நாராயண சம்புவராயன் கோயில் நிலங்கள் சிலவற்றிற்கிருந்த வரியை நீக்கினன் அந்த வரியைப் படையலுக்கும் பூசைக்கும் செலவிட ஏற்பாடு செய்தான். தனது ஆட்சியில் முதல் ஐந்து ஆண்டுகள் சேர்ந்திருந்த நூறு பொன்னைக் கோயிலைப் பழுதுபார்க்க உதவினன்.

சிறப்புச் செய்திகள்:

அணியன் மூவேந்தரையன் என்பவன் கோப்பெருஞ்சிங்கனிட மிருந்த அரசாங்க உயர் அலுவலன், 'அணியன்' என்பது அவனது அலுவற் பெயர். இப்பொழுது மாவட்டத் தண்டலாளர் முதலிய உயர் அலுவலர்க்கு உறுதுணைவராக இருப்பவர் (P. A. Personal Assistants) அக்காலத்தில் அணியர் (அணியர் – நெருக்கத்தில் இருப்பவர்) எனப் பட்டனர் என்று கொள்வது பொருத்தமாகும். சோழர்காலத்து அணியன் விசயநகரவேந்தர் காலத்தில் இராயசம் என்று பெயர் பெற்றான்.

கிருஷ்ணதேவராயர் காலத்தில் ஒவ்வொரு ஊரிலும் காரணிகன் ஒருவன் இருந்தான். அவன் அரசாங்க உயர் அலுவலன், நீதிபதி (மத்தியஸ்தன்). காரணிகன் என்னும் சொல் முதன்முதலில் இறையனார் களவியலுரையில் காணப்படுகின்றது. அவ்வுரையின் காலம் கி. பி. 11 அல்லது 12–ஆம் நூற்றாண்டு என்னலாம்.

சதாசிவ ராயரின் முதலியான [ஏஜெண்டான] சூரப்பநாயகர் திருவதிராச்சியத்தை ஆண்டுவந்தார். ஊர்இலைவாணிகர், முன்புஇருந்த கல்வெட்டுப்படி கைக்கோளர்க்கு இருந்த உரிமைகளை வழங்க ஒருப் பட்டனர். அக்கல்வெட்டு அழிந்துவிட்டதால் புதிய கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது

சீரங்கராயர் காலத்தில் [கி. பி. 17-ம் நூற்றாண்டில்] ஆமாத்தூர் ஊரார்–தச்சர், கொல்லர், தட்டார் ஆகிய மூவருக்கும் படைவீடு செஞ்சி திருவண்ணாமலை, காஞ்சீபுரம் ஆகிய இடங்களில் முன்பு கொடுத்திருந்த உரிமைகளைப்போலவே இனியும்கொடுப்பதாகவும், தவறினால் 12 பொன் தண்டம் கொடுப்பதாகவும் ஒப்புக்கொண்டனர். இவ்விரு செய்திகளும் சாதித்தொல்லையைக் குறிப்பனவாகும்.

திருஆமாத்தூர் அருவாநாட்டு – வாவலூர் நாட்டைச் சேர்ந்தது என்று கல்வெட்டுக்கூறுகின்றது. இது கவனிக்கத்தக்கது. அருவாநாடு என்பது தொண்டை நாட்டுத் தென்பகுதியின் பெயராகப் பண்டைக் காலத்தில் வழங்கிவந்தது.

விளக்கு அறம்:

சந்தி விளக்கு, நந்தா விளக்கு எனக் கோவில் விளக்குகளில் பலவகை உண்டு. திருஆமாத்தூரில் சந்தி விளக்குகளும், நந்தாவிளக்கு களும் எரிக்கப்பலர், பொன், ஆடுகள், பசுக்கள், எருமைகள், நிலம் முதலியவற்றை அளித்தனர் ஒரு நந்தாவிளக்கு எரிக்க 96 ஆடுகள் அல்லது 32 பசுக்கள் கோவிலுக்கு விடப்பட்டன. இதனால் ஒரு பசு 3 ஆடுகளுக்கு நேராகக் கருதப்பட்டது என்பது தெரிகிறது.

மக்கள் பெயர்கள்:

பேராளன், கற்றளி கங்கரையன், கங்கதரையன், திருவன், காலிங்கராயன், செங்காடன் என்ற இராசேந்திர வைராகரச் சோழன், சிறிய மாராயன். காளிஎன்ற மீனவன் மாராயன், சொக்கஞானசம்பந்தர் செய்யதிருமேனி, திருக்காளத்தி உடையான், பெரியான், முரிவன், நாதன் பொன்னம்பலக்கூத்தன், நாராயணப் பிள்ளை, சின்னரைப்பிள்ளை வீரப்பன் முதலியன.

சுவாமி-அம்மன் பெயர்கள்:

திருஆமாத்தூர் ஆளுடையார், அழகியநாயனர், அபிராமேசுவரர் என்பன இறைவன் திருப்பெயர்கள், "திருஆமாத்தூர் அழகியரே" என்பது தேவாரம், இத்தொடரைக்கொண்டு "அழகிய நாயனர்" என்றும் பெயர் எழுந்தது போலும்! "நாச்சியார், முத்தை வென்ற முறுவலார்" என்பது அம்மன் பெயர்.

பூசை விழாக்கள்:

ஒவ்வொரு வாரத்திலும், ஞாயிற்றுக்கிழமை சிறப்பு விழா நடைபெற்றது. திருவாதிரை விழா. பங்குனி விழா முதலியன நடைபெற்றன. விஷு சங்கராந்தி கொண்டாடப்பட்டது. கம்பண உடையார் காலத்தில், சோமப்பதண்ட நாயகர் நினைவாகச் சிறப்புப் பூசை (சந்தி) நடைபெற்றது.

மடங்கள்:

திருஆமாத்தூரில் மூன்று மடங்கள் இருந்தனஎன்று கல்வெட்டுகள் கூறுகின்றன. அவற்றுள் ஒன்று திருவேடம் அழகியான்மடம் என்பது மற்றொன்று ஆண்டார் திருவநாயகம் மடம் என்பது. மூன்றும் மடம் இராசநாராயண சம்புவராயர் காலத்தில் ஏற்பட்டது.

தேவதான கிராமங்கள்:

திருஆமாத்தூர். உரத்தூர், வேடம்பட்டு. சிற்றுசூர், காட்டில் வேடன்பட்டு, குளத்தூர், சிற்றூர், என்பன கோவிலுக்கு விடப்பட்ட சிற்றூர்கள்.

ஊர் மருத்துவர்:

ஊரில் இரண்டு நந்தவனங்கள் கோவிலுக்காக எழுந்தன. கிராம மருத்துவருக்காக நிலம் தானமாக விடப்பட்டது. இவ்வாறே சேக்கிழார் பிறந்த குன்றத்தூரிலும் மருத்துவருக்கு நிலம் தானமாக விடப்பட்டது என்று அவ்வூர்க் கல்வெட்டுக் குறிக்கின்றது. குடிகளின் நலத்தைக் கருதி அக்காலத்தில் ஒவ்வோர் ஊரிலும் மருத்துவர் நியமனம் பெற்றிருந்தனர் என்பது இக் கல்வெட்டுக்களால் அறியலாம்

---

* இது 1922-ம் கல்வெட்டு ஆண்டு அறிக்கையின் துணையைக்கொண்டு எழுதப்பட்டது. "திருக்கோவில்," மாலை 6, மணி 8, 9 இதழில் இருந்து ஆசிரியர் அனுமதியுடன் பதித்தது.

௳

திருச்சிற்றம்பலம்

# திருவாமாத்தூர் கல்வெட்டுக்கள்

## No. 719

(A. R. No. 403 of 1903)

On the West wall of the Central Shrine

1. கொப்பரகெசரி [ப*]ன்மற் [கு*]யாண்டு மூன்ருவது அ—
2. ருவாநாட்டு மிய்வழி வாவலூர் நாட்டு தெவதா—
3. னம் திருவாமத்தூர் உடையப் பெரு—
4. மானடிகளுக்கு அறிவாளன் கெணி ஆகி—
5. ய செம்பின் கட்டிமானடிகள் வைத்—
6. த (த) நந்தாவிளக்கு இரண்டு இவ்விரண்டு—
7. க்கும் வைத்த பொன் ஊற்கற்செம்மை இ—
8. ருபதின் கழஞ்சு இவ்விருபதின் கழ—
9. [ஞ்சு*] பொன்னுங் கொண்டு நிசதம் உரிய்
10. விளக்குநெய் அட்டி திருவிளக்கு எரிக்கக்கடவா—
11. ர் திருவாமத்தூர் சபையாரும் ஊராரும் [1*] இ—
12. நந்தாவிளக்கு இரண்டும் ரக்ஷித்து எரிக்[க]—
13. கடவார் கட்டிமான்களும் கட்டிமாப்பாத்திநாட்—
14. டாரும் வாவலூர் நாட்டாரும் பந்மஹே[ெ]ஸ்வ[ர]—
15. ரும் ரக்ஷை [1*] இச்செம்பியன் கட்டிம[ான்*]
16. இத்தெவர்க்கு திருச்சுற்றுமண்டபம் எடுப்பி......றிவநாரும்
17. தனிமெய்ப்பெறுெ............
18. ல்லாக கொண்டுவரும் பாடிகாவற்—
19. கூலி இக்கொயில் திருஅலகு திருமெழுக்கு [இடுவார்க்கு நிவந்தமா
20. க இறுத்து இது சந்திராதித்தவற பந்மஹேஸ்வரர் [ரக்ஷை [11*]

—S. I. I. Vol VIII p. 371

இது சோழமன்னன் பரகேசரிவர்மனின் (905—47) 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு. இதில் செம்பியன் கட்டிமானடிகள் என்பார் கோயிலுக்கு இரு நந்தாவிளக்கினை அளித்ததும் திருச்சுற்று மண்டபம் எடுப்பித்ததும் குறிக்கப்பட்டுள்ளது.

## No. 740

(A. R. No. 424 of 1903)

On the North wall

1. ஸ்வஸ்தி ஸ்ரீ [11*] கொப்பர[கெ*] சரிபன் மற்கு யாண்டு [மூன்று—
2. வது அருவாநாட்டு மிவழி வாவலூர் நாட்டு தெவதான—
3. ம் திருவாமத்தூர் மகாதேவர்க்கு வடகரை நல்வய—
4. லூர்க் கூற்றத்து தெவதானம் உறுமூர் ஆதன் க—
5. ண்ணன் கண்ணன் திருவா[மா*]த்தூர் ஊருடையப்—
6. பெருமானடிகளுக்கு வைய்த்த நந்தாவிளக்கு
7. ஒன்று இதனுக்கு நிசதம்உழக்கு விளக்கெண்—
8. ணை கொண்டு விளக்கெரிய்ப்பத[ற்]க்கு [க்கு*]டுத்—
9. த செம்பொன் பதின்கழஞ்சு [1*] இப்பொன்
10. கொண்டு இவ்வி[ள*]க்கு சிந்திராதி[த்*]தவல் [எரிக்க[க்*]கட—
11. வார் இத்திருக்கொயி லூவாசிக்கும் திருக்
12. கொயிலுடையார் [1*] இவ்விளக்கு ஆராய்—
13. ந்து எரிய்ப்பிக்க[க்*] கடவ[ர்*] திருவாமத்தூ[ர்]
14. சபையாரும் ஊராரும் கட்டிமாபாத்—
15. திநாட்டாரும் [1*] பன்மஹேஸ்வ*ரரும்
16. இரக்ஷை [11]

—S. I. I. Vol VII p. 378

இது பரகேசரிவர்மனின் 3ஆம் ஆண்டுக் கல்வெட்டு. ஆதன் கண்ணன் கண்ணன் என்பான் வைத்த நந்தா விளக்கைப்பற்றிக் குறிப்பிடுவது.

## No. 720

(A. R. No. 404 of 1903)

On the West wall

1. ஸ்வஸ்திஸ்ரீ [11*] கொ[ப்*] பரகெசரி பன்மர்க்கு
2. யியாண்டு 4ஆவது அருவாநாட்டு [மி]—
3. ய்வழி வாவலூர் நாட்டு தெவதானத் திரு—
4. வாமாத்தூர் ஊருடைய மகாதெவர்க்கு வா—
5. ணகப்பாடி கண்டராதித்த நான வாநவ[ன்]—

6. மகாராஜன் திருவாமாத்தூர் ஆள்வா—
7. ர்க்கு சந்திராதிதவலமாக வைத்த நொ—
8. ந்தா விளக்கு ஒன்று [1*] இதனுக்கு நிசதம் உழ—
9. க்கு நெய் யட்[டக்*]கடவார் திருவாமத்தூர் ச—
10. பையாரும் ஊராரும் பாகமும் இத்திரு—
11. க்கொயிலுடையார்கள் பாதியும் இன்நெ—
12. ய்க்கு இவ்விரண்டு திறவர் வழியும் வைய்—
13. [த்*]த பொலியூட்டுக்கு வைய்[த்*]த பொன் பன்னி—
14. [ரு கழ]ஞ்சு [11*]

—S. I. I. Vol VIII p. 372

இது பரகேசரிவர்மனின் 4ஆம் ஆண்டுக் கல்வெட்டு. வாணகப்பாடி கண்டராதித்தனை வானவன் மகாராஜன் வைத்த ஒரு நந்தா விளக்கைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

## No. 723

(A. R. No. 407 of 1903)

On the North wall

1. ஸ்வத் ஸ்ரீ [11*] கொப்பர கேசரிபங்மர்
2. க்கு யாண்டு 5ஆவது வாவலூர் நா—
3. ட்டுத் தெவதானந் திருவாமாத்—
4. தூர் உடைய பரமஸ்வாமிகளுக்கு
5. த் திருமுனைப்பாடிக் கிழான்முர் நாட்டு
6. ......சத்துப் பனைப்பாக்கத்து [இ]ரு—
7. ந்த நந்தி புத்தனை [ெ*] சம்பியன்மு—
8. வெந்தவெளான் வைத்த நந்தாவிளக்கு ஒன்
9. றெகால் இவ்வொன்றெகாலுக்கு இத்தெவதான[ம்*]
10. திருவாமாத்தூர் ஆரிதன் நந்தி நாராயணன் பிரா
11. ம்மணி பெருமான்(ங்) கைச்சானி தனக்கு அதியாச—
12. [ன்] மன்தியை முதுகண்ணாக விற்ற பூமி தன் பிரா
13. மணனை எக்கிற எப்பெர்ப்பட்ட பூமியிலு பிலுங்கா—
14. மடமான பு[ல]த்திலுங்களம்ம...........
15. றறித்தம் புளியங்கொல்லையிலும் அழிஞ்சில்—
16. க்[கொல்லையி[லு]ம் வடவெள்ளை [செ]வி[லு]ம் முத—
17. ாத்தத்தி[லு]ம் புறத்திலுங் குட்டி எரியிலு—

18. ங க[ா] ரி[லு]ங் குளச்செ[வ்வி லுங்]க் காட்டகத்தி[லு]ம்[1]
19. பாக்க[ங்] க[ாணி]யிலுங் குள[நெ]ல்லுமாத்தியிலும்ப
20. [ழை] புதியிலும் மற்(று)ம் இவ்வூர்க்கு வந்த நிலம்ளப்
21. பெர்ப்பட்ட பூமியும் இவளு(க்)குச் சொ(று) கூற்றுக்கு
22. இது[இக்]குடி [ஆ]ரி[த]ன் நந்தி [சா]த்த[னு]ம் [வடுகன் தி......
23. தெவ......ரியும் தெவன் கொவிந்தனுந் தெவன்வ......
24. யனுமாக இவ்வனைவர் வச்ச விளக்கு ஒன்றெகா
25. ......நெய்த்துக் குறித்தாகவிட்ட......
26. நந்திநாராயணன் பிராம்மணி பெருமானங்கை
27. ச்சானி சங்மன் [தி]யை முதுகண்ணுக விற்—
28. றவி...நந்தி புத்தனுகிய செம்பியன் முவெ—
29. நதவெளானெ நா[ன்] விலைகொண்டவண்ணமெ [இப்பூமிகொண்டு இ[த்]தெவதான ந்திர—
30. ருவாமத்தூர்த் திருவுண்ணுழி[கை] சபையெ[ாம்] இவ்வொன்றெகால் விளக்குச் சந்திரா[தி]த்தவல் [எரிக்கக் கட—
31. வாராக [க்குடு]த்தென நந்தி புத்தனுகி—
32. ய செம்பியன் முவெ[ந்*]தவெளான் வச்ச
33. விளக்கு பந்ம மாஹேஸ்வர ரக்ஷை[2][11*]

—S. I. I. Vol VIII p. p 373

பரகேசரி வர்மனின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு நந்திபுத்தனுகிய செம்பியன் மூவேந்த வேளான் வைத்த நந்தா விளக்கினைப் பற்றிக் குறிப்பிடுவது.

## No. 729

(A. R. No. 413 of 1903)

On the West base

1. ஸ்வத் ஸ்ரீ (11*) கொப்பரகெசரி பன்மக்கி யாண்டு ஆறுவது அருவா நாட்டு மிய்வழி வாவலூர் நாட்டு.........
2. இத்தளி செய்த அருகூர் தச்சன் நாரணன் வெகந்தனுகிய திருவாமத்தூர் ஆச்சாரிய......

—S. I. I. Vol VIII p. 375

இது பரகேசரிவர்மனின் 6ஆம் ஆண்டுக் கல்வெட்டு. கோயில் அமைத்த அருகூர் தச்சன் நாரணன் வெகந்தன் பெயர் குறிக்கப் பெற்றுள்ளது.

# No. 739

(A. R. No. 423 of 1903)

On the South wall of the Mandapa

1. [ம] திரைகொ[ண்]ட கொப்பரகெசரி பன்ம[ற்*]கு [யாண்டுபதி . . . . .
2. வது அருவாநாட்டு மிய்வழி வாவலூர் [நா*]ட்டுத் [தெவத்தானந்திரு
3. வாமத்தூர்ப் பெருமா[ன*]டிகளுக்கு பண்டு ஆணை மெற்றிருப்
4. பலிபொந்தகாலத்துத் திருப்பலி சுமக்கும் ஆனை[கெ]காண்டுய
5. [கு]ம் மகாமாத்ரனுக்கு வைத்த பூமி இவ்வாண்டு [முட்டிப் பெ[ர]—
6. கப் பநாஹெஸ்வர[ர்*] சென்று பரகேசரி பந்தரான ஸ்ரீ பராந்தகதே
7. வர்க்குச் சென்[று]ப் பட்டா[ங்]க்கு விண்ணப்ப[ஞ்*] செய என்றும் நிவ [ந்தம்]
8. பணி க்குடு[க்*]கவென்று இந்நாடு பெற்று சொழசிகாமணிப் பல்[லவ]—
9. ரையர்க்கு ஸ்ரீமுகம் வர இவரும் இஸ்ரீமுக [ப்ப*]டி [இபூமியை இதெவர்[க்கு]—
10. ச்[ச]ண்டை கொட்டுவதாக வைத்தமையில் இதெவர்க்குச் [சண்டை கொ[ட்டு]—
11. வதாக சந்திராதித்த ருள்ள அளவுஞ் சண்டை [கொட்டுவத [ா*]க இ[நி]—
12. லம் ஸ்ரீமுகப்படி சொழசிகாமணிப் பல்லவரையர் குடுத்தமை
13. யில்இ . . . பண்டு ஆ ண்ட மகாமாத்ரன் நிலம் கொடுந்துறை [கொட்டத்
14. [து]க்கு கிழ்பாற்கெல்லை நம்பன் மணிகண்ட விலங்கள்ளிக்குரு-
15. மெற்குந் தெ(ற்)ன்பாற் கெல்லைபரசக்திர தட்டவாய்[க்*] [காலின் வட[க்கு]
16. மெல்பா[ற்]கெல்லை அகழிகிழார்கள் வண்ண[க்*]கன் [கொல்லையின் [கிழ]—
17. [க்கும்] வடபாற்கெல்லை தூம்பினின்றும் பொந்தவா[ய்][க்*] [காலின் [தெற்க்கு]
18. . . . ந்த பெருநான் கெல்லையிலு மகப்பட்ட இந்நிலங் [கொடுத்

—S. I. I. Vol. VIII p. 37[?]

இது பரகேசரிவர்மனின் 10ஆம் ஆண்டுக் கல்வெட்டு. நிலத்தைக் கொடையாக அளித்தமை குறிக்கப்பட்டுள்ளது. அரசனுக்கு ஸ்ரீபராந்தகன் என்ற மற்றொரு பெயர் இருந்தமையும் அவன் கீழ் அலுவல் பார்த்தவன் பெயர் சோழசிகாமணிப் பல்லவரையர் என்பதும் தெரிகிறது.

## No **724**

(A. R. No 408 of 1903)

On the North wall

1. *[ஸ்வத்] ஸ்ரீ [11*] கொப்பர—*
2. *கெசரி பந்ம[க்]கு யாண்டு [15]—*
3. *ஆவது அருவாநாட்டு மிவழி*
4. *வாவலூர் நாட்டுய தெவதாநந்*
5. *திருவாமாத்தூர் ஊ[ரு]டைய பர—*
6. *மஸ்வாமிகளுக்குச் சிக்கலுடை—*
7. *யான் நக்கன் கணிச்சஞகிய சொழ—*
8. *முவெந்தவெளான வைத்த நந்தா—*
9. *விளக்கு ஒன்று ஒன்றினு[க்கு] வைத்த*
10. *பொன் செம்பொன் பதினகழைஞ்சு—*
11. *இப்பொன் பதின் கழைஞ்சுங் கொண்—*
12. *டு நிசதம் உழக்கு நெயட்டி ஒரு நந்தா—*
13. *விளக் கெரிப்பதற்கு வைத்தான் [11*] இது...*
14. *சந்திராதித்தவத் பந்மாஹேஸ்வரர் [ர*] க்ஷை*

—S. I. I. Vol VIII p. 374

பரகேசரிவர்மனின் 15 ஆம் ஆண்டுக் கல்வெட்டு.

## No **733**

(A. R. No 417 of 1903)

On the North base

1. *ஸ்வத்ஸ்ரீ [11*] கொப்பரகெசரி மன்ம[ர்*]க்கு யாண்டு 1ரு ஆவது வா—*
2. *வலூர்நாட்டுத் தெவதான[ம்*] திருவாமாத்தூர் உடைய பரமஸ்வாமி—*
3. *களுக்குக் கழுமாப் பல்லவ விசையமங்கலங்கிழான் அறத்து—*

4. ணமாரயன் திருசந்திக்குத் திருச்சந்திணத்துக்கு [ம்] சிதாரிக்கும் இ—

5. வ்வூரத் திருவுண்ணாழிகை சபையார்வசங் குடுத்த பொன் பதி—

6. ன்கழ[ஞ்]சு தன்மகட்டளையாற் பதின்கழது இப்பதின் கழதுபொ—

7. ன்னா[ல்] வந்தி பொலிசைக்குந் திருச்சந்தண[ம்*] மூன்று சந்திக்கு [பா]—

8. [கி]ருக்கப்பால் முக்கழஞ்செய் காலும் மூன்று சந்திக்குச் சிதாரி நெரியா

9. ச முப்பி[டி*] சந்தனமு[ம்] [தெனு] முட்பட இக்கல்லா [ல்*] முக்கழஞ்சும் ஆக ஙிச—

10. தமிப்படி (அ) அறுகழஞ்செய் காலு[ம்] சந்திராதித்தவல் இது திருவுண்ணாழிகை

11. சபைய[ர] டக்கடவர் [1*] பரமேஸ்வரர் ரக்ஷை [11*]

பரிகேசவர்மனின் 16 ஆம் ஆண்டுக் கல்வெட்டு.

## No 730

(A. R. No 414 of 1903)

On the west base

1. மதிரை கொண்ட கொப்பரகெசரி பன்மர்க்கு யாண்டு இருபத்து ஆறுவது [திரு] வாமாத்தூர் ஊர் உடைய......

## No 727

(A. R. No 411 of 1903)

On the South base

1. மதிரைகொண்ட கொப்பர கெசரிபன்மற்கு யாண்டு இருபத்து [ஒன்பதாவது] கிழார் கூற்றத்து கிளி நல்லூர்க் கிழவனுகிய பாகன்......

—S. I. I. Vol VIII p 375

## No 728

(A. R. No 412 of 1903)

On the South base

1. மதிரைகொண்ட கொப்பர கெசரிபன்மற்கு யாண்டு முப்பத்திரண்டாவது அருவாநாட்டு மிவழி வாவலூர் நாட்டுத் தெவதான

—S. I. I. Vol VIII p 374

## No 725

(A. R. No 409 of 1903)

On the South base

1. ஸ்வத்ஸ்ரீ [11*] மதிரை கொண்ட கொப்பரகெசரி பன்மற்கு யாண்டு 15 வது அருவா......

2. தானத் திருவாமாத்தூர் மகாதெவர்க்கு அருவாநாட்டு அரும்புலியூர் புலியூர் கிழவன் சொழசி......

3. யன் வைய்த்த நொன்தா விளக்கொன்றுக்கு ஆடு நூறு இ[வ்*]வூர் சபையாரு முராரு [ன்சி]......

4. யெ அடுக்கவும் புணைக்கொள்[ள*]வுங் குடுத்தென் [1*] இ[வ்*] விளக்குச் சந்திராதித்தவ[ரி] வதாக[வு]......

—S. I. I. Vol VIII p 374

## No 726

(A. R. No 410 of 1903)

On the South base

1. ஸ்வத்ஸ்ரீ [11*] மதிரைகொண்ட கொப்பரகெசரி பன்மர்க்கு யாண்டு பதினெழாவது அருவ[ா] நாட்டு மிய்வழிவாவ......

2. ஆடு [அ]டுக்கவும் புணைக்கொள்ளவுங் குடுத்தென் சொழசிகாமணி......[இ]வ்விளக்கு சந்திரா......

—S. I. I. Vol VIII p 374

## No 743

(A. R. No 427 of 1903)

On the North wall

1. மதிரைகொண்ட கொப்பரகெசரி பன்மர்க்கு யாண்டு பதிெ[னழா] (ஆ) வது அருவாநாட்டு மிவழி வாவலூ[ர்]

2. ...ளவுங்கடவார் இவ்வூர் சபையாரு[ம்] முராரும் திருக்கொயிலுடையா[ரு]ம் இம்மூவ[ரு]......

—S. I. I. Vol VIII p 379

## No 732

(A. R. No 416 of 1903)

On the North base

1. மதிரைகொண்ட கொப்பரகெசரி பன்மர்க்குய[ா]—

2. ண்டு 26 ஆவது வாவலூர் நாட்டுத் தெவ—

3. தாநத் திருவாமாத்தூர் உடைய பெரு......

4. டிகளுக்கு பெரும்[மணலூ]ர் கிழவ......

5. ப்பத் தெண்ணுயிரத்தி வைத்த......

6. ஒரு விளக்கு சந்திராதித்தவல் எரிய [1*] இது பன்ம......

—S. I. I. Vol VIII p 375

## No **734**

(A. R. No 418 of 1903)

On the North base

1. மதிரை கொண்ட கொப்பரகெசரி பன்மர்க்கு யாண்டு இருபத்தொன்பதாவது அருவாநாட்டு மிவழி வாவலூர் நாட்டு தெவதானம் திருவாமாத்தூருடைய பெருமானடிகளுக்கு பாண்டி—

2. நாட்டு திருக்கொட்டியூர் சங்கரப் பாடியா[ன்*] திருபூதனி [யக்கன்] திருவாமாத்தூர் பெருமானடிகளுக்கு நொந்தா விளக் கொன்றுக்கு [ை*] வச்ச பொன் பதின் கழஞ்சு [வா]வு மடு [வும்]......1

—S. I. I. Vol VIII p 376

## No **731**

(A. R. No 415 of 1903)

On the West base

1. ஸ்வத்ஸ்ரீ [11*] மதிரை......

2. வது அருவா நாட்டு மிய்வழி வா......

3. டிகளுக்கு கட்டியமாபாத்தியா......

4. ...[வ]ர் பூமிய் வைய்த்த தரா......

5. [95] ஆடு தொண்ணூற்றஞ்சு

—S. I. I. Vol VIII p 375

## No **735**

(A. R. No 419 of 1903)

On the North base

1. ஸ்வத்ஸ்ரீ [11*] மதிரையும் ஈழமும் கொண்ட கொப்பர[ெ] கசரிபந்மற்கி யாண்டு 41—

2. ஆவது அருவா நாட்டு மிவழி வாவலூர் நாட்டு தெவதானம் திருவாமாத்தூர் ஊருடைய மகாதேவ—

3. ர்க்கு தஞ்சாவூர்க் கூற்[ற*]த்து தஞ்சாவூர் ஆனை நடையங் பூதஞ் சிலையங் மகன் சிலையங்வடுகங் வைய்—

4. த்த நொந்தாவிளக்கு ஒன்றுக்கு பொன் பதின் கழஞ்சு யிது சந்திராதித்தவல் எரிப்பதாக சபையாரும் ஊராரும் தெவ—

5. ன் சொற்றுணை அகமுடையாள் செட்டங்கை வைத்த திரு நொந்தாவிளக்கு ஒன்றுக்கு வைத்த பொன்பதின்கழஞ்சு இப்பொன் பதின்கழஞ்சுங் கொண்டு இத்திரு விளக்கு ஒன்றும் சந்திராதித்தவல் எரிக்க[க்*] கடவார் [11*]

—S. I. I. Vol VIII p 376

## No 721

(A. R. No 405 of 1903)

On the West wall

1. ஸ்வஸ்த்ஸ்ரீ [11*] கொராஜகெசரிவன்மர்க்கு யாண்டு
2. 3-வது வாவலூர் நாட்டுத் தெவதா.
3. னங் திருவாமாத்தூருடைய பர—
4. மசுவாமிகளுக்கு அம்பலவன் பழு—
5. வூர் நக்கிய[ன்][1] விக்ரமசொழ மாராய(ன) நெ[ன்]
6. [வை*] வத்த நொந்தா விளக்கு ஒன்றினுக்குவை—
7. த்த ஆடு தொண்ணூற்ரு [1*] சந்திராதித்தவ
8. பரமேஸ்வரர் ரக்ஷை

—S. I. I. Vol VIII p 372

இது ராஜகேசரிவர்மனின் 3 ஆம் ஆண்டுக் கல்வெட்டு.

## No 748

(A. R. No 432 of 1903)

On the North base

1. ஸ்வஸ்த்ஸ்ரீ [11*] காந்தளூர்ச்சாலை கலமறுத்த கொராஜ ராஜ ராஜகெஸரி. வங்மர்[க்*]கு யாண்டு 13 ஆவது வாவலூர் நாட்டுத் தெவதானங் திருவாமாத்தூருடைய பரமஸ்வாமிகளு—

2. க்கு சொழநாட்டு வடகரை நல்லாற்றூர் நாட்டு பிரம்மதேயம் விடெல்விடுகு சதுர்வே[தி*]தி மங்கலமாகிய வல்லிய நல்லூர் யாளுங்க[ண]த்தாருள் அவிசாகை மகாதே பட்டர் மகன் பொவத்த—

3. னக்கிரமவித்த[ன்] இத்திருவா மாத்தூர் ஆழ்வார்க்கு சிறு காலை ஸந்தியி லாடியருள னிர்படா தரது[ப்பால்] நித்தப்படி நாழி உழக்குப் பாலா......

4. ஸபையொமும் [ஊரொ]மும் திருவுண்ணாழிகையுடையொமும் கொண்ட பொன்முக்கழஞ்சு [1*] இது சந்திராதித்தவற் பன்மஹேஸ்வர ரக்ஷை [11*]

—S. I. I. Vol VIII p 380

## No. 747

(A. R. No. 431 of 1903)

On the North base

1. ஸ்வத் ஸ்ரீ [11*] திருமகள் பொலப் பெருநிலச் செல்வியுந் தனக்கெ உரிமை பூண்டமை மனக்கொளக் காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளி வெங்கைநாடுங் கங்கபாடியு நுளம்பாடியுந் தடிகைபாடியு [ங்*] குடமலை நாடுங்கொல்—

2. லமும் கலிங்கமு மிரட்டபாடி ஏழரை இலக்கமும் எண்டிசை புகழ்தர ஈழமண்டலமும் ந்திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டு தந்னெழில் வளர் ஊழியுள் எ [ல்*] லாயாண்டு ந்தொழுதகை விளங்கும் யாண்டெ செழியரைத் தெசுகொள் ஸ்ரீகொ—

3. ராஜ கெசரி பன்மரான ஸ்ரீ ராஜராஜ தெவர்க்கு யாண்டு 24 ஆவது வாவலூர் நாட்டுத் தெவதானந் திருவாமாத்தூர் உடைய பரமஸ்வாமிகளுக்கு நரவதொங்கச் சயந்தாங்கி சதுர்வேதி திமங்கலத்து வடபிடாகை - அ—

4. வ்வியூர் இருக்கும் வெள்ளாளந் ஆதிகயிறூர் வைத்த திருநொந்தாவிளக்கு ஒன்றுக்கு ஆடு 96 இவ்வாட்டுக்குப் புகல் இவ்வூர் மன்றாடி நிலன்வடுகன் 48-ம் வெண்காடன் குப்பை கொண்ட ஆடு 48 ஆக 96 [11*].

—S. I. I. Vol VIII P 380.

## No. 718

(A. R. No. 402 of 1903)

On the West wall

1. இத் திருவாமாத்துருடைய பரமஸ்வாமிகளுக்கு ஸ்ரீ ராஜராஜ தெவர்க்கு யாண்டு 25.........

2. லூர் வியாபாரி வண்ணக்கன் மலையன் கற்றளி வைத்த தி [ருநொந்தா] விளக்கு இதனுக்கு......இவ்வூர் சிவபிராமண.........

3. பிரம்மசெட்டி பிராம்மணி திருவெண் காட்டுச்சானி பக்கல் விலைகொண்டு வைத்த நிலம் இவூர் செங்கழு.........

4. றெ முக்காலெ அரைக்காலும் காஞ்சி எத்ததில் காலே அரைக் காலும் ஆக [வெளி] கவ-ம் பொன்கழ.........

5. வலெரிக்க [க்*] கடவார் திருவுண்ணாழிகை உடைய சிவபிரா.........

—S. I. I. Vol VIII p 371.

## No. 745

(A. R. No. 429 of 1903)

On the South wall

1. ஸ்வத் ஸ்ரீ [11*] கொப்பர கெசரி பங்மரான ஸ்ரீ ராஜெந்திர சொழ தெவர்க்கு யாண்டு 3ஆவது ஜயங்கொண்ட சொழமண்டலத்து பனையூர் நாட்டு.

2. வாவலூர் நாட்டுத் தெவதாந ந்திருவாமாத்தூருடைய பரமஸ்வாமிகளுக்கு உடையார் ஸ்ரீ ராஜெந்திர சொழ தெவர் பெருநதரத்து ஸெநாபதி.

3. ராஜெந்திர சொழ பிரம்மமகாரா ஹாராயர் கர்மி திருமுனைப் பாடி கிழான்முர் நாட்டுச் சிறுபுத்தூர்ப் புதுவையுடையான் கந்தன் அடைக்கல ந்திரு—

4. வாமாத்தூருடையார்க்கு வைத்த திருநொந்தா விளக் கொன்றினுக்கு வைத்த சாவாமுவாப் பெராடு தொண்ணூற்ரு [1*] இவ்வாடு தொண்ணூ—

5. ற்ருறுங் கொண்டு பாட்டஞ் செய்து நிசதம் உழக்கு நெய் யட்டக்கடவான் இவ்வூர் மன்ருடி அங்கி செந்தன் [1*] இவனுக்குப் புனை இத்திருவாமா—

6. த்தூருடையார்க்கு முன் பாட்டஞ் செய்து வருகின்ற இவ்வூர் மன்ருடிகளெ [1*] இது சந்திராதித்தவல் பங்மாஹெஸ்வர ரக்ஷை 11.

—S. I. I. Vol VIII p 379.

## No. 746

(A. R. No. 430 of 1903)

On the South wall

1. ஸ்வத் ஸ்ரீ [11*] கொப்பர கெசரி பங்மரான ஸ்ரீ ராஜெந்திர சொழ தெவர்க்கு யாண்டு 3 ஆவது [ஜ] யங்கொண்ட—

2. சொழ மண்டலத்துப் பனையூர் நாட்டு வாவலூர் நாட்டுத் தெவதான ந்திருவாமாத்தூரு - ருடைய ப—

3. ரமஸ்வாமிகளுக்கு உடையார் ஸ்ரீ ராஜெந்திர சொழ தெவர் பணிமகன் சொழமண்டலத்து அருமொழி தெவவள நாட்டு.

4. மங்கல நாட்டுப் புதுக்குடிப் புதுக்குடையான் வெளான் ஆருரன் இத்திருவாமா[த்தூ] ரு • ருடையார் பணாய.

5. ரத்து இருந்தகாசில் காசு ஒன்றுக்கு ஆடு எட்டாக காசு [நூ]ற்று முப்பத்திரண் டட்டிக்கொண்டு முதலான ஆடு

6. ஆயிரத் தைம்பத்தாறு இவையிற் திருநொந்தா விளக் கொன்றினுக்கு ஆடு தொண்ணூற்றூறுகத் திருநொந்தாவி—

7. ளக்குப் பதினொன்றினுக்கு இத்திருவாமாத் தூருடையா[ர்க்கு னிவந்த]ஞ் செதுவருகின்ற இத் திருவாமாத்தூர் மன்றாடி சிங்கப்புலி.

8. நம்பெறனுங் நக்க னூரும் பிச்சுவா னப்பியு மிச்சுவரங் தாகி[யு]ம் வடதளி திருமாலுங் நிலன் வெங்கியுஞ் சிவதென் புத்த—

9. னுஞ் சிற்றிகெசனுமாக இவ்வனைவரு முள்ளிட்ட பன் மன்றாடிகள் வசங் திருநொந்தா விளக்கொன்றினுக்கு நெய் உழக்குக்கு இத்திருநெ[ா]—

10. ந்தா விளக்குப் பதினொன்றினுக்கு நிசதப்படி நெய் இருநாழி [முவுழ]க் கா[க]ச் சந்திராதி [தவ] வல்[லட்]டக் கடவார் களாக விட்ட [ஆடு] சாவா மூவாப் பெரா—

11. டு. ஆயிரத் தைம்பத்த[ா]று [1*] இவை பநமா [ெ]ஹஸ் வரர் ரக்ஷை [11*].

—S. I. I. Vol VIII p 380

## No. 736

(A. R. No. 420 of 1903)

On the North base.

1. ஸ்வத் ஸ்ரீ [11*] திருமன்னி வளர இருநிலமடந்தையும் பொற்சயப் பாவையுஞ் சிரத்தனிச் செல்வியுந்தன் பெருந் தேவி யரா(க்)கி யின்—

2. புற நெடிதிய லூழியு ளிடைதுறைநாடு ந்துடர்வன வெலிபடர் வனவாசியுஞ் கள்ளிசூழ் மதிட் கொள்ளிப் பாக்கை[யும்*] ந—

3. ண்ணற் கருமுரண் ம[ண்*]ணைக் கடக்கமும் பொருகட லிழத் தரைசர் முடியு மாங்கவர் தெவிய ரொங்கெழில் முடியு முன்னவர் பக் கற்றெ—

4. ன்னவர் வைத்த சந்திர முடியு மிந்திரனா முந்தெண டிரையிழ மண்டல முழுவது மெறி ப[டை]க் கெரளர் முறைமையிற் சூடுங்கு-

5. லதனமாகிய பலர்புகழ் முடியுஞ் செங்கதிர் மா[லை] [யு*]ஞ் சங்கதிர் வேலைத் தொல் பெருங்காவல் [ப]ல் பழ[ந்திவு]ஞ் செருவிற் சினவி.

6. ல் இருபத்தொ[ரு*]கா லரசுகளை கட்ட பரசுராமன் மெவரு [ஞ்*] சாந்திமற் றிவரண் கருதியிருத்திய செம்பொற்[றிருத்தகு] முடியும் [பயங்]கொ—

7. டு பழிமிக முசங்கியில் முதுகிட்டொளிச்ச ஜயசிங்கன் அளப் பெரும் [பிடிய*] யிரட்டபாடி ஏழரையிலக்கமு[ம்] நவநெதிக்கு[ப்] பெ—

8. [ருமலைக]ளும் விக்கிர[ம*] வீரர் சக்கரகொட்டமும் முதிர் படவல்லை மதுரமண்டல[ம்] முங்காமிட [வள] நாமணைக்கொணையும் வெஞ்சிலைவிரப்—

9. ப[ஞ்]சப்பள்ளியும் பா[ா] சடப்பழன மாசுணிதெசமும் அயர் வி[ல்] வண்கிர்]த்து யாதி-[நகரவை]யில் சந்திரன்றொ[ல்] குலத் திந்திராதனை விளையமர்க்க.

10. ளத்துக் கிளையொடும் பிடித்துப் பலதனத்தொடு நிறைகுல தனக் குவை[யு]ங் கிட்டருஞ் செறிமிளை வொட்ட விஷயமும் பூசுர[ர்*] செர் நல்கொ—

11. சலைநாடு ந்தன்[ம*] பாலனை வெம்முனையழித்து வண்டுறை சொலை தண்டபுத்தியும் இரணசூரனை முரண்ணுறத் தாக்கி திக்கனை கிந்தித்த—

12. க்கனலாடமும் கொவிந்தசந்தன் மாவிழத்தொட தங்கா தசரரல் வங்காளதெசமும் தொடுகழற்சங்கொட்ட[ல்*] மயிபாளனை வெ[ஞ்]சமர் விளாகத்தஞ்சு.

13. வித்தருளி ஒண்டிரல் யானையும் பெண்டிர் பண்டாரமும் நித்தில நெடுங்கடல் உத்திரலாடமும் வெறிமலர்த்தித்[தத்*] தெறிபுனற் கங்கையும் அலைகடல்

14. நடுவுட் பலகலஞ் செலுத்திச் சங்கிராம விஜையொத் துங்கப[ன்ம]நான கடாரத்ரயனை வாகையம் பொருகடற்கும் பக்கரி யொடு மகப்படுத் தரிமையிற்பி—

15. றக்கிய பெருநெதிப் பிறக்கமும் ஆர்த்தவந கனக[ர்*] பொர்த்தொழிற் வாசலில் விஜாதிரத் தொரணமும் மொய்த்தொளிப் பு[னை] மணிப் புதவமுங் கநம ணிக்கத[வ].

—S. I. I. Vol VIII p 376

## No. 737

(A. R. No. 421 of 1903)

On the North base

1. .........இரட்டபாடி எழரையிலக்கமுங் கொண்டு கொல்லா புரத்து ஜயஸ்தம் பநாட்டிப் பெராற்றங்கரைக் கொப்பத்து ஆஹவம-

2. .........[அ]ஞ்சுவித்தவன் ஆனையுங் கு[தி]ரையும் பெண்டிர் பண்டாரமுங் கைக்கொண்ட கொப்பர கெசரிவன் மரான உடையார் ஸ்ரீ ராஜராஜ தெவர்க்கு யாண்டு 2-ஆ-3.........ந்தர சொழவளநாட்டுப் ப[று]ஹை[ம] நாட்டு வாவலூர் நாட்டுத் தெவதானத் திருவாமாத்தூர்

உடைய பரமசுவாமிகளுக்கு உடையார் ஸ்ரீ ராஜ ராஜதெவர்பணி மகன் சொழ மண்ட[ல*]த்து.

4. .........காலவளநாட்டுத் தென்கவிர நாட்டுத் திருவெழ்ப்பூருடையான் தெவனை ந்தக் கூத்தனை சிவபாத செகர மூவெந்த வெளான் உடையார்க்கு வைத்த.

5. .........ஒன்றினுக்கு பொன் பதிநறு கழஞ்சுக்கு வைத்த காசு 32 இக் காசு முப்பத்திரண்டும் கை[க்*] கொண்டு இத்திருநுந்தாவிளக்கொன்றும் சந்திராதித்தவற் எரிக்க கடவொம[ா*]ெறு—

6. .........ழிகை சபையொம் [1*] இதுபந்ம ஹேஸ்வரர் ரக்ஷை [11*].

—S. I. I. Vol VIII p 377.

## No. 722

(A. R. No. 406 of 1903)

On the North wall

1. ஸ்வத்ஸ்ரீ [11*] வீரமெய் துணையாக தியாகமெய் [அ]ணையாகச் செ(செ)ங்கொ லொச்சிக் கருங்கலி கடிந்து வெண்கு[2]...........

2. காசநத்து விற்றி ருந்தருளிந கொராஜகெ[ச*]ரிபன் மராந உடையார் ஸ்ரீ வீரராஜெந்திர தெவர்க்கு யாண்டு 3 ஆவது ராஜெ(ந்)திர(ா) சொழவ ............

3. ட்டு வாவலூ[ர்] நாட்டு தெவதாநம் திருவாமாத்தூர் உடைய பரமஸ்வாமிகளுக்கு சொழமண்டலத்துக் கெரளாந்தக வளநா........

4. ஜாஸ்ரய சதுர்வேதி மங்கலத்து பெண்டாட்டி......[க]ச்சாநியாந புலொககற்ப [கம்]வைத்த திரு[நு]ந்தாவிளக்கு ஒன்றுக்கு வை......... .....

5. ல் துலைநிறை செம்பொன் பதிந் கழிஞ்சு இப்பொன் பதிந் கழஞ்சுங்கொண்டு இத்திருநுந்தா விளக்கு முட்டாமை எரிக்க[க்*] கட வொமா..............

6. ணுழிகை சபையொமு இவனெய் இக்கொயில் ஆடவ[ல்*]லாற்கு சாந்த இட்டபொற்காறை இரண்டிநால் முத்தும் கொத்து து......ள் கொத்தநால்...........

7. லா செம்பொந் முப்பத்தெழு கழஞ்செய் காலெய் முந்று மாவும் திருக்கைக் காறை இரண்டினால் முத்தும் முத்துக் கொத்த நாலு............

8. [நாலு]ம் அரக்கும் உட்பட செம்பொந் மெற்படி கல்லால் நிறை முப்பது நாற்கழஞ்செய் முக்காலெய் இரண்டு மஞ்சாடியு...... :

9. நிறை எழுபத்திரு கழஞ்செய் இரண்டு மஞ்சாடியும் [நா][ன்*] மாவரையும் இவனெ வைத்த நிலைவிளக்கு நாற்சாணரை உசரத்து நிறைஇ............

—S. I. I. Vol VIII p 372.

## No. 744

(A. R. No. 428 of 1903)

On the South wall

1. ஸ்வத்ஸ்ரீ - ஸ்ரீ குலொத்துங்க சொழ[தெவற்கு யாண்]டு 45 - [ஆவது]............

2. கங்கை கொண்ட சொழவளநாட்டுப் பனையூர் நாட்டுத் தெவதானந் திருவாமாத்தூர் அபிமான பூஷணத்தெ—

3. ரிந்த கைக் கொளர்க்கு தண்டநாயகம். அரயந் பூமாங் கழலான குலொத்துங்க சொழப் பல்லவரையந்

4. ஆளுடையார் அழகிய தெவர்க்கு வைத்த திருநந்தாவிளக்[கு] ஒ, றுக்கும். வெண்டுஞ் சாவா

5. முவாப் பெராடு தொண்ணூற்ருறுங் கொண்டுவிட இக் கொயிலில் திருவுண்ணாழிகை ஸபையார் வசம் இட்ட காசு

6. 11 இக்காசு பதினொன்றுங் கொண்டு ஆடு கொண்டு இத்திரு நந்தா விளக்கு ஒந்றுஞ் சந்திராதித்தவற் எரிக்கக் கடவொ—

7. மானொம் திருவுண்ணாழிகை சபையொம் [1*]

பந்தமாஹேஸ்வரர் ரக்ஷை 2

—S. I. I. Vol VIII p 379

## No. 749

(A. R. No 433 of 1903)

On the East wall

1. ஸ்வத்ஸ்ரீ [11*] பூமெவுவளர் திருப்பொந் மார்வு புணர நாமெவு கலைமகள் நிலம் பெரிது சிறப்ப விஜ[ச*]ய மாமகள் [தன்னிரு] புயந்திருப்ப இசை—

2. யின் செல்வி எண்டிசை விளங்க நிருபர் வந்திறைஞ்ச நீணில மடந்தை[யை]யத் திருமணம் புணர்ந்து சிர்வளர்—

3. தருமணிமுடி கவித்தந அணிமுடி சூடி மல்லை ஞால[த்து]ப் பல்லுயிர் [2*] கெல்லாம் எல்லையிலின்பம் யியல வி நில்லெ—

4. ய்த வெண்குடை நிழற்றச் செங்கொலொச்சி வாழி பல்லூழி அ...ப்ப செம்பொந் வி[ர*] சிம்மாசனத்து புவநமுழு துடையா

5. ளொடும் வீற்றிருந்தருளிய கொவிராஜ கெசரி பந்மரா திரிபுவந சக்ரவர்த்திகள் ஸ்ரீ கொலொத்துங்க சொழ தெவற்கு இயாண்டு இரண்

6. டாவது இராஜ இராஜவள நாட்டுப் பணையூர் நாட்டு வாவலூர் நாட்டுத் தெவதானம் திருவாமாத்தூர் ஆளுடைய [அ]ழகிய தெவர்

7. கொயிலில் திருப்பதியம் பாடிவரும் குருட[ர்]களைத் தவித்து நம் தெவாரத்து திருப்பதியம் பாடும் பொய்யாத செவடி தெவகணுத நாந

8. இராஜ [ரா]ஜப் பிச்சனுகும் இவர் வற்கத்தார்க்கு இக் கொயிற் திருப்பதியக் காணியா[ன] இவ்வூர் முதல் காணியாக குடுத்தொம்

9. இவந் வற்கத்தாரையுமெய் இட்டுத் திருப்பதியம் பாடு வித்துக் கொண்டு முன்பிலாண்டுகள் குருட[ர்*]களுக்கு விட்டுவரும் நிவந்த—

10. ப்படி இவர்களுக்கும் விட்டுக் கல்வெட்டுக வெந்று திருவாய் மொழிந்து திருமுகம் பிரஸாதஞ் செய்து வந்தமையிற் இ[க் குருட]ர்—

11. கள் முன்பிலாண்டுகள் அநுபவத்தின்படி பாடிவருங் குருட[ர்*] கள் பெர் பதிநறுவரும் இவர்களுக்கு கண்காட்டுவார் இருவரும் ஆ—

12. கப் பெர் பதிநெண்மர்க்கு பெரால் நெல்லுபதக்காக நாளொன்றுக்கு நெல்லு முக்கலமாக நாள் முந்நூற்றறுபதுக்கு நெல்லு.

13. ஏத்தென்பதின் கலமும் புடவை முதலுக்கு பெரால் காசு ஒன்ருக காசு பதிநெட்டுக்கு காசு ஒன்றுக்கு நெல்லு இருபதிந் கலமாகவ

14. ந்த நெல்லு ஆயிரத்து நானூற்று நாற்பதின் கலத்துக்கு வெலி ஒன்றுக்கு நெல்லு நூற்றிரு—

15. பதின் கலமாக இத்தெவர் தெவதாநம் கடுவநூரில் விட்ட நிலம் பந்நிருவெலி இந்நிலம் பந்நிருவெலியும் காணியாக இவ்வூர் நில

16. ங்கலந்தபடி யேகைக்கொண்டு இத்திருப்பதியம் பாடுவார் பெர் பதிநெண்மரும் மூன்று ஸந்தியும் வந்து திருப்பதியம்

17. விண்ணப்பஞ் செய்து முந்பிலாண்டுகள் இக்குருட[ர்*]கள் நிலங் கைக்கொண்டு செய்து வரும்படியெ இத்திருப்பதிகம்.

18 விண்ணப்பஞ் செய்வாரும் செய்துவரக் கடவார்கள இப்பொய்யாத செவடி தெவர்களுதை நாந ராஜராஜப் பிச்சனுக்கு இவந் வற்—

19. [கத்தார்க்குங் காணியாக குடுத்தொம்] [11* ]

—S. I. I Vol VIII p 38

## No 751

(A. R. No 435 of 1903)

On the West wall

1. ஸ்வத்ஸ்ரீ [11*] ஸ்வத்......ராஜாதி ராஜ பரமேஸ்வ ஸ்ரீவிக்ரம பாணியதெவ நடுவில் மண்டலத்து உடையார் அழகி நாயனுர் கொயில் தான[த்*]தா[ர்க்*]கு [1*] உடையார் திருவாமா தூருடையார் அழகிய நாயனுர்க்கு நம்பெரால் கட்டிய விக்கிர பாண்டியன் சந்திக்கு அமுது—

2. படி சாத்துப்படி உள்ளிட்ட நித்த நிமந்தக்களுக்கும் புரட்டா மாத[த்*]தில் நம் பிறந்த நாளிலெ தி[ர்*]த்தம் பிரசாதம் எழு தருளும் விக்கிரம பண்டியன் [திரு]நாளுக்கு தெவதான இறையில் யாகச் செந்தமங்கலப் பற்று காடவராதித்தன் பெருவழிக்கு கிழக்கு முஞ்சியாற்றுக்கு வடக்குபட்ட பற்றில் விழுப்புரமான சனுததச்ச—

3. ருப்பெதி மங்கலத்து ஐஞ்சாவது வரையும் அடைப் நிங்கலான தரிசு நிலத்துவிட்ட திருவாமாத்தூர் எல்லைக்கு கிழக்குச் செ[ய]த்தாங்கி காலுக்கு வடக்குபட்ட [நில]த்திலெ த செ[ரி] என்பது மா[னி]லம் கடமை பொன்வ[ரி] காசாயவர்[க்* கம்கார் புன்பயிர் [சி]த்தரைக்கார் வெட்டினிலை ஆள்காத்—

4 திகைப் பொன்வரி பணக்கொத்துப் பாடிகாவல் கணக்க பெறு வாசல் வினியொகம் எவல் எழுத்து வினிவொகம்...செக்[கு* காணிக்கை [து]லாபர ரவரி கூற்றிலக்கை கடைக்கூட்டு இலக்[கை தண்டல் இலக்கை விடைப்பெர் மாதப்படி உள்ளிட்ட அனைத்தா வற்[க்*]கமும் உட்பட்ட இன்னிலம் எண்பதுமாவும் ஆறுவது ஆவன மாதமு

5. தல் இறையிலியாகத் தந்தொம் [11*] இப்படிக்கு இவ்வொ பிடிபாடாக கொண்டு சந்திராதித்தவற் செல்வதாக கல்லிலு செம்பிலும் வெட்டிக் கொள்க [1*] இப்படிக்குத் திருவெழுத்து [1

6. இவை பாண்டிமண்டலத்துச் செ[ம்]பி நாட்டு மருங்கூருடை யான் வடகொபுரமுடையான்.

7. கரபுரமுடை......எழுத்து [1*] பழந்திபராயன் எழுத்து [1 தச்சாழ்வான் ஆன...ராயன் எழுத்து [11*]

—S. I. I. Vol VIII p 3

# No 750

## (A. R. No 434 of 1903)

ı the South wall

வ 1. ஸ்வத் ஸ்ரீ[11*] தண்டெசுரன் ஓலை [1*] தாபரஞ் சூழ்வைய்ட
[· து கண்டிசன் கருமம் ஆராய்க பண்டெ அறஞ்செய்தான
ஙகாத்தான் பாதம் [திற]ம்பாமல்

நம் 2. சென்னிமெல் வைத்து [11*] அருளாற் ஆதி சண்டீசுரன்
நாயகன்மி கொயில் கணக்கரொம் முன்னாள் துருக்கர் வந்து திருவாசல்
ம் நிரையல் குலை[ந்து] தெசமும் அழிந்து

ெ 3. கிடக்கையிற், வென்று மண் கொண்ட சம்புவராசர்க்கு
குண்டு பதினாலாவது திருவாமாத்தூர் உடையார் அழகிய நாயனார்
ாயில் பாரசிவரில் சிருப்[ப]ரமுடை—.

வி 4. யார் மகன் அய்யுறதித்தான் பல்லவராயர் [இவர்] தம்பிரா
நிரை செவித்து நிற்க்கையில், இத்திருவாசலுக்கு உரிய மனிதர்கள்
ாத்துக்கள் பல...செல்கையில்...

5. ய தம்பிரானார்க்கு விண்ணப்பஞ் செய்து திருமுகம் வாங்கி
ல ெ...த்தானிகரையும் குவித்து உடையார் திருவகம்படியில் உள்ள
ரிதகளையும் குவித்து கொத்துக்கு வெண்டும் பல—

6 கொத்தில் உள்ளவர்களையும் குவித்து தம்பிரானார் திரு
கு ாபாக காட்டி திருவாசலை நொக்கி அழிய வெண்டுமவையும் அழிந்து
இ த நாயனார் திருநாமத்துக்காணி தெவமண்டலம் முன்

7. நடந்தபடி திருமுகமும் வாங்கி இப்படி இத்திருவாசலுக்கு
நா ண்டும் நிலப்பாடு செய்[த*]படியாலெ இவர்க்கு காணி ஆட்சியாக
ெ ளிச் செயல்படி குடுத்த மண்டபக் கொத்துக்கு சாமுத[ா]—

8. ய[நி]லை காணி ஆட்சியாக நடத்திக் கொள்ளக் கடவராகவும்
ஓ இந்நிலைக்கு அழகிய தெவப் பெருந் தெருவில் தென்சிரகில்
க பாற்கெல்லை கண்ணுடைய பெருமாள் க[ட்டி] இருந்த மனைக்கு
*]—

ெ9. க்கும் கிழ்பாற் கெல்லை இன்னயனார் மனைக்கு மெற்க்கும்
ாக்] கொலால் [ால்] மனைமுக் கொலும் இவர்க்கு இலக்கைக்கு
விட ஒன்றுக்கு தூணி நெல்லு கொயிலில் பெ[று]—

நில10. ம் சொறு நாழிக்கு நெல்லு குறுணி இருநாழி நிக்கி நின்ற
லுக்கு கார்பசானம் உட்பட அடைத்த திருவெண்காடி உள்ளிட்ட
பெ ரண்டுமா

11. முன் திரிகையும் கொயிலில் பெறும் சொறும் மனைகொல்
ாலும் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொண்டு சந்திராதித்த
நில நடத்திக் கொள்வதெ

12. அருளால் ஆதிதண்டேசுர தெவகன்மி கொயில் கணக்க ரொம்[1*] இவை கொயில் கணக்கு விடுருடையன் குருகுலத்த[ய]ன் எழுத்து [1*] அழகிய தெவபட்டன் எழுத்து [1*] இவை பொற் கொயில் நம்பி உத்தராப—

13. திருயகன் அனங்கதெவன் எழுத்து [1*] எகாம்[பர*] பட்டன் எழுத்து [1*] திருத்தொண்ட நம்பியெழுத்து [1*] இவை வித்தகத் தெவர் எழுத்து [1*] திருவுணயகர் எழுத்து [1*] இவைவெட நின்ருர் எழுத்து [11*]

—S. I. I. Vol VIII p 382

## No 742

(A. R. No 426 of 1903)

On the North wall

1. ஸ்வஸ்த்ஸ்ரீ [11*] சக—
2. ரையாண்டு எண்ணூற்று
3. எழுபத்து ஒன்ப
4. தாவது வாவலூர்நாட்டுத்தெவதானத்திருவாமாத்தூருடை—
5. ய [மகாதெவர்க்கு] முட்ட நாட்டுக் கற்பூண்டி நாடுடையாந பரபூமிகந்—
6. நவனுய கண்டராதித்தப் பல்லவரையன் றன்ம—
7. கள் மாதெவடிகளுக்குப் பராவி வைத்த நந்தா விள—
8. க்கு [இரண்டினு]க்கு வைத்த பொன்னிருபதின் கழஞ்சும் கொண்டு [வி]ளக்கு எரிக்கக் கட
9. … …பன்மஹேஸ்வரர் ரக்ஷை [11*]

—S. I. I. Vol VIII p 378

---